# காலம்

(மலையாள நாவல்)

*மலையாள மூலம்:*

**எம். டி. வாசுதேவன் நாயர்**

தமிழாக்கம்:

**மணவை முஸ்தபா**



சாகித்திய அக்காதெமி

*Kaalam*—Tamil translation by Manavai Mustafa of M. T. Vasudevan Nair's novel in Malayalam Sahitya Akademi, New Delhi (1985) Rs. 35.

© Sahitya Akademi
First Published : 1985

சாகித்திய அக்காதெமி

*தலைமை அலுவலகம்:*

*ரவீந்திரபவன், 35, பெரோஸ்ஷா சாலை, புது தில்லி 110 001*

*கிளை அலுவலகங்கள்:*

*29, எல்டாம்ஸ் சாலை, தேனும்பேட்டை, சென்னை 600 018*

*பிளாக் V–B, ரவீந்திர சரோபர் ஸ்டேடியம், கல்கத்தா 700 029*

*172, பம்பாய் மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை,*
*தாதர், பம்பாய் 400 014*

ரூ. 35.

அச்சிட்டோர்: டயோசிசன் அச்சகம், சென்னை 600 007

# காலம்

## I

இரவு.

ஈர வயல் வரப்பில் புது மழைக்கு உயிர்பிடித்திருந்த அருகம் புல்மீது உறங்கிக் கிடந்த சின்னஞ்சிறு பச்சை வெட்டுக்கிளிகள் காலடி ஓசை கேட்டு உறக்கம் கலைந்தது. குதிகாலை ஊன்றி அப்பால் எம்பித் தாண்டிச் செல்லும்போது அவை மெல்லிய ஓசை எழுப்பின. அது எதையோ நினைவூட்டுவதாக இருந்தது.

எது எனத் தெளிவாகச் சொல்ல இயலவில்லை. காரணம் மனம் ஒரு நிலையில் இல்லாததுதான். வழக்கமாக மனதுக்கு மிகவும் மகிழ்ச்சி தரும் இவ்வோசையை எப்போது கேட்டேன்? இருட்டில் ஈர மண்ணின் வாடை, இருட்டுக்கும் இரவுக்கும் மணம் உண்டென்பது தெரியாமல் ஒரு நிமிஷம் நினைத்துப் பார்க்கும்படியாயிற்று. மீன்பிடி வலைகளை மீனவர்கள் மீன் பிடிப் பதற்காக எடுத்துச் சென்றபோது வழியில் உள்ள கலங்கள் நீர் பாதைபோல் இருந்தது. மழை நின்றபோதிலும் வானம் இருண் டிருந்தது. அவ்வானத்தில் வெள்ளைக் கோடுகள் ஆங்காங்கே தென்பட்டன.

ஓலைத் தீப்பந்தம் வெளிச்சம் காட்டிக் கொண்டிருந்தது.

இரும்பு டிரங்கு பெட்டியையும் போர்த்தியிருந்த போர்வையை யும் சுமந்துகொண்டு பின்னால் நடந்துவரும் வயதான செருமனின் மூச்சிரைக்கும் சத்தம் பின்னால் கேட்டுக் கொண்டிருந்தது. வயல் வரப்புகளை விட்டு ஊருக்குப் போகும் பாதையை அடைந்தபோது ஆற்றின் சலசலப்பு அடுத்தடுத்துக் கேட்கத் தொடங்கியது. முளைத் தண்டில் கட்டப்பட்டிருந்த தோணியின் அடிப் பகுதியில் முட்டி மோதித் திரும்பும் நீரின் சலசலப்புக் கேட்க, நாம் நிற்கிறோம்; இருள் நிறைந்த ஆறு. மங்கலான வெளிச்சம். சற்று தூரத்தில் உள்ள மறு கரையில் இரும்புப் பாலத்தை அதிரச் செய்தவண்ணம் வண்டிச் சக்கரங்கள் சத்தமிட்டு உருண்டு கொண்டிருக் கின்றனவோ?

காவலுக்கெனப் போடப்பட்டிருந்த குடிசையினுள்ளே இருந்த பெஞ்சியிலிருந்து தூக்கக் கலக்கத்தோட நிழல்போல் வந்த தோணிக்காரனுக்கு வண்டி நேரம் தெரியும்.

நாலரை மணி வண்டி இதுதானே?

கேட்கத் தைரியமில்லை. காரணம், நீ ஒன்றும் தெரியாத பையனில்லை. ஐம்பத்தி மூன்று மைல்களுக்கப்பால் உள்ள பண்டைய சுல்தான் கோட்டை கட்டியுள்ள நகரத்திற்கு பெரிய வகுப்பில் படிக்கப் போகும் பதினாறு வயது இளைஞனாக இருக்கிறாய். ஓரிரவிலேயே வளர்ந்துள்ளாய்.

ஓரிரவு, வருடங்களுக்குப் பிறகு ரத்தமின்றி வெளிறிப் போகாத, அந்த இரவு, மனதில் மிதைத்திருந்தது. கரி பிடித்திருந்த கண்ணாடிப் போத்தலில் ஒளி குன்றிய ராந்தல் விளக்கைத் தோணிக் கொம்பில் தூக்கித் தொங்கவிட்டு கமுகுக் கொட்டானைக் கொண்டு, தோணியில் தேங்கியிருந்த தண்ணீரை மொண்டு வெளியே கொட்டும்போது, நெஞ்சுக்குள், மாலை நேரத்தில் ஓட்டினருகில் பறந்து வந்து தனியே இறங்கும் கோயில் புறு சத்தம் கேட்டது.

ஆறு,

தோணி.

கோயிலுக்கும் கண்ணு வைத்தியர் வீட்டிற்கும் வெள்ளரித் தோட்டம் போடுவதற்கும் பல முறை கடந்து சென்ற ஆறு. பல வருடங்களுக்குப் பிறகு காத்து நிற்கும் தோணி.

தோணிப்படியில் வைத்திருந்த இரும்புப் பெட்டியின் மேல் பகுதியை செருமன் கெட்டியாகப் பிடித்துக்கொண்டுள்ளானோ? தோணி ஆடும்போது சரிந்து கீழே விழக்கூடாதே 'சாத்தப்பா, பெட்டியை விழாமல் பிடித்துக்கொள்' எனக் கூறுவதற்கு தைரியமில்லை.

கஞ்சிப்பாடம் போட்டு உலர்த்தி சுருக்கம் விழாது மடித்து வைத்த வேட்டி நனையாதிருக்க, பின்னால் தோணிப்படி மேல் இரண்டு கையையும் சேர்த்து வைத்து மெதுவாகப் பிடித்துக் கொண்டிருக்கும்போது மறு கரையில் காணப்பட்ட மர வீடுகளின் கரிய வடிவங்கள் தெரிந்தன.

ஈர மணல்.

காலடி பதியும்போது குளிர்ந்த நீரில் கால் மரத்துப் போவது போல் இருந்தது. வேகமாக நடக்க வேண்டும்போல் இருந்தது. இரும்புப் பாலத்தின் சத்தம் கேட்கிறதோ? ஓலைத் தீப்பந்த நெருப்பை மணலினுள் குத்தி அணைத்தான். கடும் இருட்டிலும் வண்டிச் சக்கரங்கள் உராய்ந்ததனால் ஏற்பட்ட கோடுகள் வெள்ளி ரிப்பன்போல் மின்னிக் கொண்டிருந்தன.

வேகத்தைக் கூட்டும்போது, தனக்குத்தானே கடிந்துகொண்டான். எதனால் இதையெல்லாம் முன்னதாகவே நினைத்துப் பார்க்கவில்லை.

# I

## [1]

பிரிமனைக் கல்லின்மீது வைக்கப்பட்டிருந்த செப்புக்குடத்தில் மீதமிருந்த தண்ணீரை கெண்டியில் ஊற்றிய சேது, மேலும் ஒரு முறை காலையும் முகத்தையும் கழுவினன். கடைசி ஒரு குடங்கைத் தண்ணீரைக் கழுத்திலும் மார்பிலும் தெளித்து, மீண்டும் கிழக்கு வெளி வராந்தாவிலுள்ள தூணுக்கருகில் வந்து நின்றான்.

வெளியே மதிய வெயில் கொளுத்திக் கொண்டிருந்தது. கமுகுத் தோட்டத்தினூடே எப்போதாவது கடந்துவரும் வெப்பக் காற்றில் தீக்கங்குகள் இருப்பதுபோல் தோன்றியது. கூட்டிப் பெருக்கி, ஈரத் துணிகொண்டு துடைத்துச் சுத்தப்படுத்தியிருந் தால் தரையில் படுக்கலாம். ஆனல், தரையோ துண்டு துக்காணி யாக உடைந்தும் புழுதி படிந்தும் கிடந்தது.

அஞ்சலகத்துக்குப் போகும் சமயம் வர இன்னும் அதிக நேரம் இருந்தது. ஒருவேளை, இன்று அப்பாவின் கடிதம் வரலாம். மாதம் முப்பது ரூபாய் அனுப்பித் தருவதாக பரமேஸ்வர அண்ணன் சொல்லியிருந்தார். பாக்கிப் பணத்தை அப்பா அனுப்பித் தந்தால் கல்லூரிக்குப் போகலாம். அண்ணன் எழுத வில்லை, அம்மா கடிதம் எழுதினள். அப் பதில் கடிதத்தில் உடல் நலம் சரியில்லையென்றும் முன்புபோல தோட்ட வேலையில் வருமானம் இல்லையென்றும் மற்ற பிரச்சினைகளைப்பற்றியும் எழுதினள். எழுதிய கடிதத்தை அம்மாவுக்குப் படித்துக் காட்டியபின் மீண்டும் ஒரு முறை கடிதத்தைக் கண்ணோட்டம் விட்டான். சேதுவைப் பற்றி அதில் எதுவுமில்லை. அம்மாவின் பதிலோடு கூடவே சொந்தமாக கடிதம் எழுதிவைத்தனுப்பி ஒன்பது நாட்களாகிறது. பதில் கடிதத்துக்காகக் காத்திருக்கிறன்.

ஆனைமலையிலிருந்து கடிதம் வர இரண்டு நாட்கள் போதும்.

குன்றின் சரிவிலிருந்து பார்த்தால் இரயில் வண்டி பாலத்தைக் கடப்பது தெரியும். சிவப்புச் சாயம் பூசிய தபால் பெட்டியைப் பார்த்து மெயில் வண்டிதானு என்பதை உறுதிப்படுத்திய பிறகு அஞ்சலகம் போனல் போதும்; எனினும், குட்டிப்புரத்திலிருந்து ஆணிப்புண்ணுள்ள தன் கால்களை மெதுவாக எடுத்துவைத்து தபால்காரன் அஞ்சலகம் போய்ச் சேர மேலும் தாமதமாகும்.

நாலு மணி வரை படுத்துத் தூங்கலாம். கீழேயுள்ள சாளரத்துக்கு நேராகத் தலை வைத்துப் படுத்தால் சுகமாக இருக்கும். ஆனால், வெயிற் காலம் தொடங்கிவிட்டால் அங்கேதான் அம்மா இரவும் பகலும் படுப்பது வழக்கம்.

வெளியே பார்த்தால் கண்கள் கூசிப்போகும். கட்டை வெட்டிப் போட்டிருக்கும் வயல்களின் மேல் நெருப்பு எறிவது போல் தோன்றும். அதற்கு அப்பால் அரசமரம் விழுந்து கிடக்கும் தோட்ட வயலுக்குக் கீழே உள்ள வரண்ட மணற் பரப்பை ஒரு நிமிஷ நேரமே பார்க்க முடியும். கண்கள் மஞ்சப் பூத்துப்போகும்.

விஷு சமயத்தில் மழை பெய்யும் என்று நினைத்தார்கள். பெய்யவில்லை. விசேஷ தினமான செரங்கா தாலப்பொலி நாளன்று மழை பெய்வது வழக்கம். இந்தத் தடவை அதுவும் பெய்யவில்லை. 'என்னுடைய ஆயுளில் இப்படியொரு வேனல் ஏற்பட்டதே இல்லை' என்பது சின்னம்மா வாக்கு. எல்லா கோடைக் காலத்திலும் சின்னம்மா இப்படித்தான் சொல்லுவது வழக்கம். ஒவ்வொரு கோடை காலத்திலும் சின்னம்மா சொல் வதைக் கொண்டு பார்த்தால் ஆட்களெல்லாம் இந்நேரம் பொரிந்து செத்திருக்க வேண்டும்! யாரும் சாகவில்லை.

''சேது! பத்மூவை எங்காவது பார்த்தியா?'' வெளி வராந் தாவிலிருந்து வந்த சின்னம்மா கேட்டாள்.

''பார்க்கலே.''

''நடுப்பகல் நேரத்தில் இந்தத் துப்புக்கெட்டது கெணத் தையோ கொளத்தையோ தூர்க்கப் போயிருக்கோ என்னவோ. சின்னஞ் சிறுசுகள் சொல்வதைக் கேட்க வேண்டாமா? என் கையில் மட்டும் கிடைக்கட்டும்!''

இனி அவளைத் தண்டிக்கப்போகும் விதத்தை சின்னம்மா வர்ணிக்கத் தொடங்கிவிட்டாள். எனவே, சேது கூறினான்:

''அவள் வடக்குத் தெருவில் எங்கேயாவது விளையாடிக்கிட் டிருப்பாள்.''

சின்னம்மா தொட்டதற்கும் பிடித்ததற்குமெல்லாம் பத்மூவை அடிப்பாள். கைக்குக் கிடைத்ததையெல்லாம் எடுத்து அடிப் பாள். அம்மாவோடு ஏதேனும் தகராறு ஏற்பட்டால் முதலில் விசாரிக்கப்படுவது பத்மூதான், அம்மா ஏதும் பேசமாட்டாள்.

அழுது அழுது பேச்சு முட்டி துடிக்கும்போது கூட அடிப்பதை சின்னம்மா நிறுத்துவதில்லை. கடைசியில் அம்மா சேதுவைக் கூப்பிடுவாள்.

''அந்தப் பெண்ணை எங்கேயாவது கொண்டு போடா. செத்துப் போனா தூக்கிப்போட நான் இருக்கேன்.''

கொஞ்ச நேரங் கழித்து கோபம் அடங்கியபின் பத்மூவுக்கு எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டி விபூதியிட்டு மடியில் தூக்கி வைத்துக் கொஞ்சுவாள், அழுவாள்.

கோடைகாலம் தொடங்கினால் சின்னம்மா ரவிக்கை போடுவதில்லை. கசங்கிய அழுக்குப் படிந்த பெரிய கச்சையை அணிந்து, அதன் ஒரு பகுதியை மட்டும் மறைக்கக்கூடிய ஒரு மேல் துண்டை அதன் மேல் சுற்றி, பிறகு வாசலில் உலாத்திக் கொண்டிருப்பாள். பெருங்காய வியாபாரிகளோ மாதவ மாமாவைத் தேடிக் கொண்டு வருபவர்களோ யாராயிருந்தாலும் அவர்கள் வரும்போதும் இதே போக்குத்தான் தொடரும். ஆத்திரத்தோடு சேது பல சமயங்களில் இதைப் பற்றி சிந்தித்ததுண்டு. 'கேவலம், இவங்க இந்த வேஷத்திலே வாசலில் உலவலாமோ?' என்று தனக்குள் கூறிக் கொள்வான்.

இதை எடுத்துச் சொல்ல மாதவ மாமாவுக்கு தைரியம் போதாது. அம்மாவுக்கும் சின்னம்மாவுக்கும் இளைய தம்பி மாதவ மாமா.

''இந்த எரவாணத்தில் நான் ஒரு பாளை விசிறி வச்சிருந்தேன். காலையிலே இங்கே இருந்ததைப் பார்த்தேன். இப்பக் காணோமே?''

அவனிடம் இல்லை, அதனால் சேது பதில் பேசாதிருந்தான். அடுத்து, பேருக்காயினும் வேறு யாராவது அங்கே இருந்தால் போதும். சின்னம்மா நூறாயிரம் விஷயங்களைப் பேசத் தொடங்கி விடுவாள்.

''உபகாரத்துக்கு ஒருவரும் இல்லை, உபத்திரவத்துக்கு எல்லாரும் உண்டு.''

சின்னம்மா வராந்தாவில் நடந்தபடி, உதட்டில் இருந்த வெள்ளைப் பொருக்குகளை இடையிடையே துடைத்துக் கொண்டு முற்றத்தில் காரித் துப்பி, உடலை ஒருமுறை சரிப்படுத்திக் கொண்டாள்.

''நூறு ஆளுங்க பின்னாலே நடந்து, சாத்தப்பனுடைய பையன் ஒரு பாளையை எடுத்துக்கிட்டு வந்து தந்தான். இப்போ அதுவும் போச்சு.''

சேது கோபத்தோடு பேசாதிருந்தான். உள்ளேயிருந்து அம்மா யாரோடோ பேசுவது கேட்டது.

''உச்சிப் பொழுதாகும்போது ஒரு பக்கத்திலே தலே சாய்க்கலாம்'னு நெனச்சா அதுக்கும் விடறதில்லே.''

மடியிலிருந்த சிறிய குப்பியை எடுத்து உள்ளங்கையில் வைத்துக் கொட்டியபோது கிடைத்த மூக்குப் பொடியை வழித்து எடுத்து மூக்கினுள் தள்ளி துடைத்த சின்னம்மா, பின்புறத்தில் வெயிலேப் பார்த்து ஏளனமாகச் சிரித்தாள்.

''பேச முடியலே. வாயைத்திறந்து நான் ஒரு வார்த்தை சொன்னு தப்பா போயிடுது. கல்யாணி ஒருத்தரும் இல்லாதவள் இல்லேயா? போக்கில்லாதவள் இல்லேயா? என்ன சொன்னுலும் தப்பு. இல்லாட்டி நீ சொல்லுடா. நான் என்ன சொல்லிட்டேன்? ஒரு பாளே விசிறி இங்கே வச்சிருந்ததைப் பார்த்தியா'ன்னு கேட்டேன். அது தப்பா போயிடுச்சு!''

சேது சாட்சியாக ஆகத் தயாரில்லாததால் முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

மனதுக்கு வெறுப்பாக இருந்தது. இங்கிருந்து, எப்ப எப்படித் தப்பிப் போவது?

அம்மா விடுவதாக இல்லே. அவன் முற்றத்திற்குச் சென்முன்.

முற்றத்தின் ஓரத்தில் போய் நின்முன். வீட்டுத் தோட்டத்திலிருந்து தேவு கூவினுள்.

''அங்கே மாதவண்ணன் இருக்காரா சேது?''

''இல்லே.''

''வந்தால் குஞ்சாத்தலு தேடிவந்ததா சொல்லு.''

குஞ்சு நம்பூதிரி இறந்தது முதலே வீட்டுக்காரியமெல்லாம் பார்ப்பது மாதவ மாமாதான். பாக்கு பறித்து விற்பது, குத்தகைக்காரன் கோவிந்தனிடமிருந்து வாரம் பிரிப்பது, எல்லாமே மாதவ மாமாதான். குஞ்சாத்தலுக்கு மாதவ மாமா மீது ரொம்பவும் விசுவாசம். ஒரு காசைக்கூட வீணுக்குவதில்லே. எப்போதாவது குஞ்சாத்தலு ஏதாவது கொடுத்தால் மட்டுமே வாங்கிக் கொள்வார்.

நேந்திர வாழை விவசாயமும் வீட்டுக் காரியஸ்தன் என்ற பதவியும் இருந்தும் கூட பொடி வாங்கக்கூட ஒரு காசு மாதவ மாமா கொடுப்பதில்லே என்ற குறை சின்னம்மாவுக்கு எப்போதும் உண்டு.

''அவனொரு ஆம்பிளே, நூறு வகைச் செலவிருக்கும்'' என்று அம்மா அதை நியாயப்படுத்துவாள்.

வழக்குத் தீர்ந்து விட்டதா என்பதை உற்றுக் கேட்டான். இல்லே, போருக்குத் தயாராக அம்மா முற்றத்திற்கு வந்திருந் தாள்.

வீட்டு முடக்கைத் தாண்டிச் சென்றால், கீழே விழுந்து கிடக்கும் பாளைகள் எத்தனை வேண்டுமானாலும் கிடைக்கும். ஒரு பாளையை எடுத்துச் சீவி விசிறி செய்து முற்றத்தில் வீசியெறிந்தால் என்ன?

இல்லே. அப்பவுங்கூட தகராறு நிற்காது. இரண்டு பேருக்குமே காரணம் வேண்டியதில்லே. இறுதியில் அம்மாவுக்குத்தான் வெற்றி. காரணம், வீட்டுச் செலவு செய்வது அம்மாதானே?

சித்தப்பா இருந்த காலத்தில் எப்போதுமே சண்டை சித்தப்பா வோடு தான். மிகுந்த மனக் கஷ்டத்தோடு மேல் துணியை இழுத்துப் போர்த்திக்கொண்டு நரைத்த தாடி மயிர்களை நீவிய வண்ணம் எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டு, ஒரு முனிவரைப் போல உட்கார்ந்திருப்பார், சித்தப்பா.

அவர் சின்னம்மாவின் இரண்டாவது கணவராக இருந்தார். முதல் கணவர் குண்டுளிக்காரன் கிருஷ்ணன் நாயர். இரண்டு ஆண்டு கழித்து ஓடிப் போய் விட்டார்.

''பொம்பளைங்க ஆம்பிளைங்களுக்கு அடங்கிப் போகணும்'' என்று அம்மா சொல்வது சின்னம்மாவைக் குற்றஞ்சாட்டியே யாகும்.

''அடங்கிப்போற திறமைசாலிங்களுக்கு இப்ப கூடை கூடை யால்லே கிடைக்குது? எனக் கொண்ணும் கிடைக்க வேண்டாம்'' இது சின்னம்மா. அப்பாவுக்குக் கிடைக்கிறதெல்லாவற்றையும் மருமகளுக்குக் கொடுக்கிறார்'ங்கிறதுதான் தகராறுக்கே காரணம்.

அப்போது கிருஷ்ணன் நாயரிடத்திலே பணமேதும் இருக்க வில்லே. முதல் உழவடை முடிந்தவுடன், வெறுமனே கிடக்கும் ஏதாவது நிலங்களைக் குத்தகைக்கு எடுப்பார். விதைப்பார். ஆற்றோரமுள்ள புறம்போக்கு நிலங்களை ஏலத்தில் எடுத்து வெள்ளரி நடுவார். அம்மாவுக்கு அவரைப் பற்றி நல்ல அபிப் பிராயம். குடும்பப் போங்குள்ளவராகவே இருந்தார். பரமேஸ்வர அண்ணன் அப்போ சிறுவனாகவே இருந்தார். ஒரு சமயம் வலிப்பு வந்தபோது இறந்தே போய்விடுவார் என்று எல்லோரும் ஒரு முடிவுக்கே வந்து விட்டார்கள். கொடுமுண்டக்காரன் வைத்தியரும் கை விரித்துவிட்டார். அண்ணன் நினைவற்ற நிலேயில் மூச்சுத்

திணறிக் கொண்டிருந்தார். எல்லோரும் மரணத்தை எதிர் நோக்கிக் காத்திருந்தார்கள். கிருஷ்ணன் நாயர் இரவோடு இரவாக ஆற்றைக் கடந்து ஐந்து மைல் தூரமுள்ள ஓரிடத்திலிருந்த வேலக் கிழவியை அழைத்து வந்தார். கண் தெரியாத, நடக்க முடியாத, அக்கிழவி வெளியேறி வருவதேயில்லை. நள்ளிரவுக்கு முன்பே கிருஷ்ணன் நாயர் எப்படியோ கிழவியைக் கொண்டு வந்து சேர்த்துவிட்டார். கிழவி பச்சை மூலிகை மருந்தை உள்ளங் கையிலும் மார்பிலும் தேய்த்து ஜெபிக்க அண்ணன் கண்களைத் திறந்தார்.

உறவு மாறிப்போனதிலிருந்து அவரைப்பற்றி எதுவுமே தெரிய வரவில்லை. ஊரைவிட்டு எங்கேயோ போய்விட்டார் என்பது மட்டும்தான் தெரியும். சித்தப்பா மருமகனுக்கு அதிகாரத்தை மாற்றிக்கொடுத்து வீட்டில் வந்து தங்கச் செய்தார். பிறகு ஒரு சமயம், கிருஷ்ணன் நாயர் பழனியில் வியாபாரம் செய்வதாகக் கேள்வி. பெண்களுக்கு ஐந்நூறு ரூபாய் வந்திருந்தது. கிருஷ்ணன் நாயர் பெரிய வியாபாரம் செய்து வருவதாக தைப்பூசத்துக்குப் போயிருந்த ஓடயன் பூசாரி வந்து சொன்னான். பணத்தை வாரு கிறார். மனைவியும் மக்களும் இருக்கிறார்கள் என்றெல்லாம் சொன்னான்.

ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு கிருஷ்ணன் நாயர் ஊருக்கு வந்திருந்தார். பரமேஸ்வர அண்ணனின் திருமணத்திற்கு நாலைந்து நாட்களுக்கு முன்பு. அப்பா வீட்டிலேதான் இருந்தார். துணி வாங்க அண்ணனும் மாதவ மாமாவும் சேர்ந்து குன்னங் குளத்துக்குப்போய் அதிக நேரமாகவில்லை. நீலச்சட்டையும் ஜரிகை வேட்டியும் அணிந்த ஓராள் படியேறி வந்தார். கிருஷ்ணன் நாயர்தான் அது.

அப்போதுதான் கிருஷ்ணன் நாயரைப் பார்க்க நேர்ந்தது. காதில் வெள்ளைக்கல் பதித்த கடுக்கண். கழுத்திலும் இடது கையிலும் தங்கச்சங்கிலி. கையில் பெரிய பெரிய மோதிரங்கள். கையில் குழலூதும் ஸ்ரீ கிருஷ்ணனின் உருவத்தைப் பச்சைக் குத்தியிருந்தார். சங்கடம் முழுவதும் அம்மாவுக்குத்தான். தேனீர், பலகாரத் தயாரிப்பு மும்முரமாக இருந்தது.

அப்பாவும் கிருஷ்ணன் நாயரும் தங்களுக்கிடையே பேசிக் கொண்டிருந்தார்கள். அம்மா இடையிடையே அவ்வப்போது வராந்தாவுக்கு வந்து பேச்சினிடையே பங்கெடுத்துக் கொள்வாள்.

''எங்கே, அப்பு நாயரில்லையா?''

''கொஞ்ச நேரத்துக்கு முன்னாலே இங்கேதான் இருந்தார்.

சித்தப்பா வடக்குப்புற வேலியைக் கடந்து வடக்கே போவதை சேது மட்டும் பார்த்தான்.

போகும்போது கிருஷ்ணன் நாயர் அம்மாவிடம் கேட்டார்:

''கல்யாணியம்மா எங்கே?''

சேதுவுக்குத் தெரியும், சின்னம்மா வராதென்று. பத்மூவுக்கு பால் கொடுத்துக்கொண்டு உள்ளே எங்கேயோ அரவமில்லாமல் இருந்தாள்.

ஆனுல், சின்னம்மா இடுப்பில் பத்மூவை தூக்கி வைத்துக் கொண்டு, இடது காதின் முன்பகுதியில் விழுந்து கிடக்கும் நரைத்த தலைமுடியை தடவி ஒழுங்கு செய்தபடி பதுங்கிப் பதுங்கி அம்மாவை அடுத்து வந்தாள். சின்னம்மா சிரிக்க முயல்வதை சேது கண்டான்.

''என்ன, சுகந்தானே?''

காவி படிந்த முன்புறப் பற்களைக் காட்டிச் சிரித்துக்கொண்டு கிருஷ்ணன் நாயர் வாசற்படியின் நிலைக்கட்டைமேல் கையை வைத்துக்கொண்டு நின்றுர்.

சின்னம்மா அழகற்ற மூளியாகத் தோற்றமளித்தாள். காலையில் கூட்டிப் பெருக்கிக் குப்பையில் போடப்பட்ட காய்ந்த ஓலைப் பூவைப்போன்ற அந்தச் சிரிப்பு அப்போதும் சின்னம்மாவின் முகத்தில் ஏற்பட்டிருந்தது.

''நான் நாளைக்குப் போறேன். போறதுக்கு முன்னுடி எல்லாரையும் பார்த்திட்டுப் போகணும்'னு தோணிச்சு. அதான் வந்தேன்.''

மூக்கு ஒழுகியபடி இடுப்பில் அமர்ந்திருந்த பத்மூவின் கையில் கிருஷ்ணன் நாயர் எதையோ வைத்துத் திணித்துக் கொடுத்தது தெரிந்தது. ஐந்து ரூபாய் நோட்டு அது.

அப்பாவிடம் பயணம் கூறி படியை விட்டுக் கீழே இறங்கும் போது சேதுவின் தலையைத் தடவியபடி கேட்டார்.

''எந்த வகுப்பு?''

''ஆறும் வகுப்பு.''

அவர் தந்த புதிய, கசங்காத ஐந்து ரூபாய் நோட்டில் இருந்த ஒருவித மணம் இன்னும் நினைவில் இருந்தது.

கிருஷ்ணன் நாயர் வாசற்படி கடந்து செல்லும்வரை அம்மா வெற்றிலைப் பெட்டியை இறுகப் பற்றியபடி நின்றுவிட்டு, பிறகு கூறினுள்:

''எவ்வளவுதான் பணமிருந்தாலும் தான் இருந்துபோன இடத்தை அவர் மறக்கவேயில்லே. அவ்வளவு தரமுள்ளவர்.''

வடக்கு வேலிகளுக்கிடையே தடித்த சரீரத்தை தூக்கிக் கொண்டு சித்தப்பா நிலத்தை பார்த்தபடி பதைபதைப்போடு நடந்துவருவது தெரிந்தது.

''எல்லாத்துக்கும் யோகம் வேணும். இப்பத் தெரியுதா? எனது தங்கையைச் சொல்லி என்ன செய்வது? அவளோட எண்ணத் துக்கு அவளுக்குக் கெடச்சது இது. இப்ப அவன் ராஜயோகத்தி லிருக்கான், ராஜயோகத்தில்?''

அதைக் கேட்டுக்கொண்டு நிலைப்படிக்கு அப்பால் ஏதோ நினை விலாழ்ந்தவளாகத் தலையைத் தடவிக்கொண்டு நின்ற சின்னம்மா ஆத்திரப்படவில்லை. அம்மாவையும் ஏறிட்டுப் பார்க்கவில்லை.

அப்பா உத்தரவிட்டார்.

''பேசாதே. அவன் வர்ருன்.''

''சேது!''

சின்னம்மா கூப்பிடுவது கேட்டது.

வெளி வராந்தா அமைதியாக இருந்தது. தகராறில் அம்மா தோல்வியடைந்திருப்பதுபோல் தோன்றியது. சின்னம்மா நடக்க லானுள்.

சின்னம்மா ஏதோ சொந்த விஷயம் பேசும் பாவனையில் அடுத்து வந்து நின்ருள்.

''நீ தபாலுக்குப் போகலியா?''

''போகணும்.''

''போகும்போது அறையணுவுக்குப் புகையிலைப் பொடி வாங்கி வா, சின்னம்மா கையிலே காசில்லே.'' அம்மா அதைக் கேட்டிடக் கூடாதே என்று மனசுக்குள் வேண்டிக்கொண்டாள். கேட்டால் அது மற்ஞெரு தகராறுக்கு ஆரம்பமாக அமைந்துவிடும். பெண் கள் பொடி போடறது மற்ஞெரு கெட்ட பழக்கம். அம்மாவுக்கு அதைப் பார்க்கிறபோது வெறுப்புண்டாகும்.

''அரையணுவுக்கு நான் எங்கே போவது?''

சின்னம்மாவிடம் ஏதும் பேசவில்லை.

தாழ இருந்த நடைவழியில் சின்னம்மா கையை மடக்கி அதன் மேல் தலையை வைத்துப் படுத்தபடி முற்றத்தில் காரித் துப்பினுள்.

வாசலுக்கு வெளியே பார்த்துக் கொண்டிருக்கும்போது யாரோ இரண்டுபேர், வயல் வரப்புகள் வழியே நடந்து நெருங்கி

வருவது தெரிந்தது. யாரது இந்த நேரத்தில்? பரமேஸ்வர அண்ணாக இருக்குமோ? படியேறி வந்தபோது ஒருவிதத் திகைப்புடன் விஷயம் தெளிவாகிவிட்டது. ஹரிதாஸ்! கடவுளே, ஹரிதாஸ்!

மார்பகத்தில் ரவிக்கையில்லாமல் அரைகுறையாக வெளியே காட்டியபடி படுத்திருக்கும் சின்னம்மாவின் நிலைதான் முதலில் அவன் மனதில் உரைத்தது.

''சின்னம்மா! யாரோ வர்றாங்க.''

''யாரு?''

''என்கூடப் படிச்ச ஒருவனும் வேறொருத்தனும்.''

''வரட்டும்.''

'சின்னம்மா எழுந்து உள்ளே போ' என்று சொல்லக்கூடிய தைரியம் இல்லை. வேதனையை மென்று விழுங்கிக்கொண்டிருக்கும் போது ஹரிதாஸன் படியேறி முற்றத்துக்கே வந்துவிட்டான்.

சேது கிழிந்த ஒரு வேட்டியைக் கட்டிக்கொண்டிருந்தான். இந்த அவலநிலையை நினைத்துக் கொண்டிருந்ததால் அவனைப் பார்த்து சிரிக்க மறந்து போச்சு.

''சேது, உன் வீட்டைக் கண்டுபிடிக்கிறது ரொம்பக் கஷ்டமாப் போச்சு.''

''ஒரு கடிதம் போட்டிருக்கக் கூடாதா?''

''இது சந்திர அண்ணன். சந்திர அண்ணனும் நானும் சேர்ந்து கோபிமேனன் வீட்டுக்கு வந்தோம். அப்படியே உன்னையும் பார்க்கலாமென்று இங்கே வந்தோம்.''

உட்காரச்சொல்ல ஒரு வசதியுமில்லை. நாற்காலிகள் ஏதுமில்லை.

ஹரிதாஸனின் வெள்ளை பாப்லின் சட்டையினுள்ளேயிருந்து வியர்வை நாற்றம் வெளி வந்துகொண்டிருந்தது. பிடறியில் கையை வைத்தபடி தலையை ஒரு பக்கமாகச் சாய்த்துக் கொண்டு நின்றிருந்த ஹரிதாஸன் சிரித்தபடி கூறினான்:

''நான் சொல்லலே? ஒரு நாளைக்கு திடீர்'னு வருவேன்'னு.''

''வா, மாடிக்குப் போகலாம்.''

வராந்தா நடைவழியில் படுத்திருக்கும் சின்னம்மா சப்தம் கேட்டு தலையைத் தூக்கிப் பார்த்தாள். பிறகு மீண்டும் பழைய படியே படுத்துக்கொண்டாள்.

வராந்தாவின் பக்கமிருந்து மாடி அறைக்குச் செல்லும் மரப்படி ஏறி உள்ளே சென்றார்கள். வெளியே வராந்தாவில்

சாய்வு நாற்காலி மடக்கி வைக்கப்பட்டிருந்தது. உள்ளே சென்று சேது வேண்டினன்:

''உட்காருங்க.''

வெளிச்சம் குறைந்த அறையிலிருந்த சாய்வுநாற்காலிமீது அவர்கள் அமர்ந்தனர். கீழே பழுப்பு வைக்கோல் பரவியது போல் வைக்கோல் தூசும் காகிதத் துண்டுகளும் கிடந்தன.

உடல் அரிப்பதுபோலத் தோன்றியது.

செருமிப் பாட்டியோடும் ஆசாரி நாணியோடும் அம்மா சொல்வதுண்டு: ''கோட்டைபோல இருக்கிற இந்த வீட்டைக் கூட்டிப் பெருக்கிச் சுத்தப்படுத்தறது சுலபமான வேலையா என்ன?''

கோட்டை போன்ற வீடு!

இரும்புக்கேட்டைத் திறந்தால் இருபக்கமுமுள்ள மேடைகளில் உள்ள மண் சட்டிகளில் குதிரைவால் செடிகள், முற்றத்தில் முல்லைப் பந்தல், சிறியதாக இருந்தாலும் ஓடு போட்ட அழகான வீடு தாஸனுடைய வீடு.

நடு ஹாலில் வட்டமான மேசையைச் சுற்றிலும் நாற்காலிகள்; 'லேஸ்' வண்ண நூல்களால் பின்னல் வேலை செய்யப்பட்ட அழகிய மேசை விரிப்பு. ஹரிதாஸன் தன் அம்மாவை அழைத்து என்னை அறிமுகப்படுத்தினன். கஞ்சி போடப்பட்ட தூய வெள்ளை உடைகள். அகலமான கருப்புக் கரைபோட்ட மேலுடை. ஹரிதாஸனின் தங்கை தேநீர் கொண்டு வந்தாள். வெள்ளைப்பீங்கான் தட்டில் மாம்பழத்துண்டுகள் நறுக்கி வைக்கப்பட்டிருந்தன.

நூலகத்தில் நடைபெற்ற பேச்சுப்போட்டி முடிந்து வீடு திரும்பும்போதுதான் ஹரிதாஸனுடைய வீட்டைப் பார்த்தான். யாரோ காட்டினர்கள்.

பேச்சுப் போட்டியில் பரிசு கிடைக்கவில்லை யென்றாலும் அந்த நிகழ்ச்சி நெஞ்சத்தில் என்றும் பசுமையானதாகப் படிந்திருக்கிறது.

''இப்ப வர்றேன்''னு சொல்லிவிட்டு கீழிறங்கிச் சென்றான்.

வெட்கம், வெட்கம், அபத்தமாக என்னவெல்லாம் சொல்லியிருக்கோம்! அப்பா பெரிய உத்தியோகஸ்தர், மாதாமாதம் பணம் அனுப்பி வைக்கிறார், நாலுபக்கமும் அறைகளுள்ள பெரிய வீடு, எனக்கென்று தனியாக அறையுண்டு!

நடைவழியில் படுத்திருந்த சின்னம்மா எழுந்து எங்கோ போயிருந்தாள். அந்த நல்ல நேரத்தை எதிர்பார்த்துத்தான் அவன் இருந்தான்.

அம்மாவைக் காணோம். தேங்காய் மூடி துளை வழியே கயிறைக் கட்டி, தூக்கிப் பிடித்தபடி நடக்கும் பத்மூவைக் கேட்டான்.

''பெரியம்மா எங்கேடீ?''

''இச்சிக்கி.''

''இச்சிக்கி!''

அவசியமில்லாமலே அவள் கொங்காணி காட்டினாள்.

''சின்னம்மா, எங்கேம்மா?''

''அடுப்பங்கரையிலே இருப்பாங்க.''

''அடுப்பங்கரையிலே அம்மாவைக் காணோம். சின்னம்மா, அவங்களுக்குக் கொஞ்சம் டீ கொடுக்கணும்.''

''அடடா, இங்கே குடும்பப் பொறுப்பு முழுசும் உன் அம்மா தானே? முன்பே சொல்லியிருந்தால் செய்யலாம். நாங்க இங்கே ரெண்டாம் தட்டுதானே?''

''சின்னம்மா, அதையும் இதையும் இப்பப் பேசவேண்டாம். கொஞ்சம் டீ போட்டுத் தரமுடியுமா?''

''எதைக்கொண்டு போட? டீ பொடி, சர்க்கரை எல்லாமே உங்கம்மாவோட பூட்டு சாவிக்கு உள்ளேயல்ல இருக்கு?''

சின்னம்மாவோடு பேசுவதனாலே எந்தப் பிரயோசனமும் ஏற்படப் போவதில்லை என்பது மனதிலே பட்டவுடன் வடக்குப் பக்கமாக வெளியே ஓடி கூவினான்:

''அம்மா!''

கடவுளே, ஹரிதாஸன் இதைக் கேட்பானே!

''என்னடா?''

ஹரிதாஸனிடம் குணாதிசயங்களைப்பற்றி பெரிதும் வர்ணித்துக் கூறப்பட்டிருந்த, 'மதரி'ன் பதிலை அவன் கேட்கவேண்டாம். வேலிக்கருகிலிருந்தபடி அடுத்த வீட்டுக் கிழவியிடம் பஞ்சாயத்துச் சொல்லிக்கொண்டிருந்தாள் அம்மா.

''அம்மா ரெண்டு பேர் வந்திருக்காங்க. என்னோட வகுப்பில் படிக்கிற ஹரிதாஸனும் அவன் அண்ணனும். சீக்கிரம் கொஞ்சம் டீ போடு.''

''பால் இல்லே.''

''அம்மா!''

அவன் குரல் அழுகுரலைப் போலிருந்தது.

''பாலில்லேன்னு நான் எங்கே போவேன்?''

வடக்குப் பக்கமாகப் போனுன். சுமித்திரையிடம் விஷயத்தைச் சொன்னுன். மேயவிட்ட ஆட்டை ஓடிப்பிடிக்க வேண்டி அவள் புறப்பட்டுப் போனவுடன் திரும்பி ஓடி வந்தான். அடுப்பங்கரையைத் தாண்டிச் செல்லும்போது அம்மாவிடம் கேட்டான்.

''சாப்பிட ஏதாவது கொடும்மா?''

''உலக்கை. மடையா, போடா. மூணு நேரம் பட்டினி கெடக்காம சாப்பிடற செலவே மூச்சு முட்டிப் போவுது. இங்கே பலகாரம் வேறே ரெடி ரெடியா வச்சிருக்கணுமோ?''

அம்மா அவசியமில்லாம பெருஞ்சத்தம் போடறது ஏன்?

மீண்டும் ஓடி மரப்படி ஏறி மாடி அறையை அடைந்தபோது ஹரிதாஸனும் சந்திர அண்ணனும் வாசற்படியில் நின்றுகொண்டிருந்தார்கள்.

''ஹரி, போகலாமா?''

''நாங்க வர்றோம்.''

அப்போது பிரயாசையோடு கூறினுன்.

''நீங்க டீ குடுச்சிட்டுப் போகலாம்.''

ஹரிதாஸனின் அண்ணன் கூறினுன்:

''வேண்டாம். இன்னும் ஓரிரண்டு இடங்களுக்குப் போக வேண்டி இருக்கு.''

வற்புறுத்தும் முறையில் சேதுவின் நிலேயும் இல்லே.

முற்றத்தில் ஒரு நிமிடம் அவர்கள் நின்ருர்கள். வராந்த நடை வழியில் பத்மூ கொட்டாங்கச்சியில் மண்ணேப்போட்டு அதில் சித்திரம் வரைந்து கொண்டிருந்தாள்.

''சேதுவின் 'மதர்' எங்கே?''

''அடுப்பங்கரையில் இருப்பாங்க. கூப்பிடறேன்.''

சந்திரண்ணன் தடுத்தார்.

''வா. சொன்னுல் போதும்''

அவர்கள் கூடவே சேது நடந்தான்.

வயல் கடந்து, சாலேயில் கொஞ்ச தூரம் ஹரிதாஸனுடன் கூடவே நடந்தான். சட்டைபோடாமல் இதற்குமுன் ரோட்டில் சென்றதில்லே. சந்திரண்ணன் சற்று முன்னுக நடந்துகொண்டிருந்தார்.

''வெக்கேஷனில் நீ என்ன செய்யறே?''

ஹரிதாஸன் கேட்டான்.

''என்ன செய்யறது?''

''நான் டி. கே. பியின் வீட்டுக்கு ஒருநாள் போயிருந்தேன்.

சேது சிரிக்க முயன்முன்.

''எந்த காலேஜுக்குப் போகப் போறே?''

''ரிஸல்ட் வரட்டும்.''

''உன்னோடு பாஸாகாமே எங்கே போறது? பாஸானலும் நான் படிப்பை நிறுத்திடுவேன். காலேஜிலே படிக்க எனக்குப் பணவசதி இல்லே.''

வளைவை அடைந்தபோது சேது நின்முன்.

''நான் போறேன் தாஸா, நான் கடிதம் எழுதறேன்.''

''எழுது. டி. கே. பியைப் பார்த்தால் உன்னைப் பார்த்த தாகச் சொல்றேன்.''

சேது திரும்பி நடந்தான்.

வயல் வரப்புகளிலுள்ள பொடி மணல்கள் ரொம்பச் சூடாகக் கிடந்தன.

திரும்பி வந்து சேர்ந்தபோது உலகத்தின்மீதே வெறுப்புத் தோன்றியது. நறுக்கிய கட்டுகளைக் கொண்டு மேய்ந்த அந்த நைந்துபோன வைக்கோல் கூரை வீட்டை இடித்துத் தகர்க்க வேண்டும்போல் தோன்றியது. 'பெரிய வீடு!'

ஹரிதாஸன் மற்ற பையன்களிடம் சேதுவினுடைய வீட்டிற்குப் போன விஷயத்தை விவரிக்கும் காட்சி அவன் மனதில் நிழலாடியது.

''சேது!''

அம்மா கூப்பிட்டாள்.

''பத்மூ, போய் சேது அண்ணனே பெரியம்மா கூப்பிடுதுன்னு சொல்லு.''

கூப்பிடுவது காதில் விழுந்தபோதிலும் மனம் ஒருப்படவில்லே.

கொஞ்ச நேரம் கழித்து இரண்டு ஒட்டுக் கிளாஸில் டீயைத் தூக்கிப் பிடித்தபடி அம்மாவே வந்தாள்.

''இந்தா டீ!''

கோபத்தையும் வேதனையையும் வெளிக்காட்டிக்கொள்ளாமல் கூறினன்:

''அவங்க போயிட்டாங்க!''

ஒரு கிளாஸை நடைவழி அருகில் வைத்துவிட்டு அம்மா உள்ளே சென்றுவிட்டாள். அதை எடுத்து குப்பையிலே கொட்டி விட்டான்.

இனியொரு முறை எப்படி ஹரிதாஸனை முகத்துக்கு முகம் பார்க்க முடியும்?

* • *

பத்தாம் வகுப்பிலே இரண்டு வருடமாகப் படிப்போரில் ஒருவனுன ஹரிதாஸனோடு திடீர் என்று மிகுந்த நெருக்கம் ஏற் பட்டது. சுருண்ட முடியும் எப்போதும் புன்சிரிப்புமாயுள்ள ஹரி தாஸன் தாமதமாகவே வகுப்புக்கு வருவான். பொடி போடு வான். ஆசிரியர்களை கேலி செய்வான். சில பீரியடுகளில் வெளியே சென்றுவிடுவான். ஒரு சமயம் சேதுவின் அருகில் வந்து அமர்ந்தான். அவனுடைய புஸ்தகங்களுக்கிடையே சங்ஙம்புழயி னுடைய ஒரு கவிதைத் தொகுப்பு இருப்பதை சேது பார்த்தான். அதைப் படிக்கக் கேட்டான். அது முதலாக அவனோடு பழக்கம் ஏற்பட்டது.

கல்லடுத்தூர் உற்சவத்திற்கு அவர்கள் சேர்ந்தே போனுர்கள். மூன்று மைல் தூரத்தில் சுபாஸ் போஸோடு சேர்ந்து போரிட்ட கர்னல் லட்சுமி ஒரு கூட்டத்திற்கு வரப்போவதாக செய்தி கொண்டுவந்ததே ஹரிதாஸ்தான். பார்க்கப் போகவேண்டு மென்று தீர்மானித்ததும் ஹரிதாஸ்தான். வகுப்பில் மிகவும் நன்ருகப் படிக்கும் பையனும், பெரும் அந்தஸ்துள்ளவனும், தங்களுக்குள் திடீர் என்று நட்பு ஏற்படுத்திக்கொண்டார்கள். சேதுவைவிட இரண்டோ மூன்றே வயது கூடுதலாகவுள்ள ஹரி தாஸனுடைய முகத்தில் அரும்பு மீசை துளிர்த்திருப்பதை உற்றுப் பார்த்தால் நன்கு தெரியும்.

மிகவும் நல்ல வழிகளை சொல்லும் பையன் ஹரிதாஸ்தான். பெண் பிள்ளைகளில் பாருக்குட்டி. பெரிய கருத்த பொட்டு வைத் திருக்கும் பாருக்குட்டி பள்ளிக்கு வரும் பெண்கள் கூட்டத்தின் தலைவியாகவே வருவாள். அந்தக் கூட்டத்தில் மிகவும் அழகியாகக் காணப்படுவதும் அவள்தான்.

ஒரு சமயம் ஹரிதாஸன் ஒரு கடிதத்தைக் காண்பித்தான்.

''யாருடையது'ன்னு தெரியுதா?''

''யாருடையது?''

''டி. கே. பி.''

''எந்த டி. கே. பி.''

''பாரு!''

நாலைந்து பக்கங்களுள்ள அந்தக் கடிதத்தின் இறுதியில் 'டி.கே. பாருக்குட்டி' என்று கையொப்பமிடப்பட்டிருந்தது.

ஹரிதாஸன் வகுப்புக்கு சரியான நேரத்திற்கு வரத் தொடங்கினன். நான்கு மைல் நடந்து வரவேண்டிய சேதுவும் சரியான நேரத்திற்கு வர முயற்சிப்பான். ஹரிதாஸ் அவசியத்தை முன்னிட்டு அவசரப்படுத்த, நேரத்தில் கஞ்சியை வாங்கி குடித்து விட்டு, வேக வேகமாக நடந்து ஒன்பது மணிக்குள் வந்து சேர்ந்து விடுவான். மேலே புதிதாகக் கட்டிய இரண்டு வகுப்பறைகளில் ஒன்றுதான் பத்தாம் வகுப்பு 'பி'.

வகுப்பறையின் முன்பு காத்து நிற்கும்போது அடுத்துள்ள ஹாலின் இறுதியில் பெண்கள் அறையில் சென்று புத்தகத்தை வைத்துவிட்டு பாருக்குட்டி வருவதைக் காணலாம். கட்டிடத்தின் தலைப்பகுதியிலுள்ள நாவல் மரங்களுக்கிடையே கருத்த துத்த நாகத் தகடுகளைக் கொண்டு கட்டிய சிறுநீர் கழிப்பிடத்துக்குப் போவதுபோல் பாவனை செய்து நடந்து வந்து, வகுப்பறைக்கு வெளியிலிருக்கும் ஹரிதாஸனேடு பேசுவாள். அப்போது ஹாலின் வராந்தாவிலிருந்து யாராவது வருகிறுர்களா என்று பார்க்க வேண்டியது சேதுவின் வேலையாகும்.

பாருக்குட்டிப் பேசும்போது 'ச' என்ற எழுத்தை குழைவாக 'ஸ' என்று உச்சரிப்பதைக் கேட்கலாம்.

''யேசு மகேசன் போசன வேளையில்

வீசினன் மந்த மாருதம்''

என்று சொல்லும்போதுதான் அது மிகவும் தெளிவாக வெளிப்படும். ஆனல், பையன்கள் யாரும் அதைக் கேலி செய்வதில்லை. காரணம் அதைச் சொல்வது பாருக்குட்டி என்பதுதான்.

ஒருநாள் ஹரிதாஸனில்லாமல் சேது மட்டும் பெண்கள் அறையைக் கடந்து செல்லும்போது யாரோ கூப்பிடுவது கேட்டது.

''சேது.''

பாருக்குட்டிதான். முன்பு எப்போதும் ஏற்பட்டிராத புளகாங்கிதம் அவனுக்கு அப்போது ஏற்பட்டது.

''ஸி. ஃபிஸிக்ஸ் நோட்டு எனக்கு வேணும்.''

தன்னிடம் நோட்டுக் கேட்டதில் அதிசயமில்லை. மிக அதிகமாக மார்க்கு வாங்கும், வகுப்பிலே மிகவும் சிறியவனன பையன் அவன்தான்.

ஆனல், அன்று இரவு சிம்னி விளக்கு வெளிச்சத்தில் தூக்கத்தைத் துறந்தவனக அமர்ந்து புதிய நோட்டுப் புத்தகமொன்றில்

எடுத்து எழுதினான். மேலும் ரொம்ப காலமாகச் சுவரில் தொங்கிக் கொண்டிருந்த விஜேலியா சோப் காலண்டரைக் கொண்டு அட்டை போட்டான். அதை மறுநாள் பாருக்குட்டியிடம் கொடுத்தபோது ஏதோ ஒரு பெரிய காரியத்தைச் சாதித்துவிட்டதுபோல அவனுக்குத் தோன்றியது.

அடுத்த திங்கட்கிழமை ஹரிதாஸன் வந்தபோது சொல்லலாமா என யோசித்தான். சொல்லவில்லை. அவ்வாறு ஹரிதாஸனுக்குத் தெரியாத, பாருக்குட்டி சம்பந்தப்பட்ட ஒரு ரகசியத்தை தான் பாதுகாத்து வருவதைப் பெருமையாக எண்ணி நடந்து வந்தான்.

வகுப்பறையில் அடிக்கடி பாருக்குட்டியை அதைரியத்துடன் பார்ப்பான். தரையைத் தழுவும் பாவாடையோடு பாருக்குட்டி நடந்து போவதைப் பார்க்க அழகாக இருப்பதுபோல் அவனுக்குத் தோன்றியது.

ஒரு சமயம் ஹரிதாஸன் வந்தபோது சொன்னான்.

''டி. கே. பி.க்கு காய்ச்சல்.''

டைப்பாய்டுக் காய்ச்சல். இரண்டு மாதம் கடந்து ஹரிதாஸன் தெரியப்படுத்தினான். டி. கே. பி. இனி பள்ளிக்கு வரமாட்டாள். ஆனாலும், வந்தாள், சர்ட்டிபிகேட்டுகளை வாங்கிக்கொண்டு போக. தூரத்திலிருந்து பார்த்தாள். சிவந்த செண்டு மல்லிப்பூ தொங்க ஆடியலையும் நீண்டமுடி வெட்டப்பட்டு ஆண்பிள்ளைகளின் கிராப்பு போல, ஆக்கப்பட்டிருந்தது. மனதில் ஒருவித எரிப்பு உண்டாகியது. பார்க்காமலே முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

அன்று ஹரிதாஸனிடம் கூறினான்:

''அந்தப் பெண் என்னுடை ஃபிஸிக்ஸ் நோட்டை வாங்கியிருக்காள். பார்க்கறப்போ அதைக் கொஞ்சம் கேட்டு வாங்கிடு.''

''அவள் அதை என் கையிலே கொடுத்து கொஞ்ச நாளாச்சு. மறந்து போயிட்டேன்.''

''அவளோட முடி மீண்டும் வளருமா?''

கேட்கத் தைரியமில்லை.

* * *

''யார்ரு டீயை ஊத்தியது?''

அம்மாவின் கேள்வி.

பேசாமல் மாடி அறையில் போய் சட்டையை எடுத்துப் போட்டுக்கொண்டான்.

கீழேயிருந்து கூச்சலைக் கேட்க முடிந்தது.

''வேண்டாம்னு கீழே ஊத்தணுமா? யாரோடுடா நீ மூஞ்சியையும் மொகரையையும் காட்றது? நீ சொல்ற போதெல்லாம் டீயும் பலகாரமும் செஞ்சுதர இங்கே கொட்டியா கிடக்குது? உங்கப்பா அனுப்பிச்சது அறுபது ரூபா. அதை எது எதுக்கெல்லாம் ஒதுக்க வேண்டியிருக்கு? நான் ஒருத்தி இல்லே'ன்னு எதையும் பார்க்க முடியாது.''

இனி தன்னுடைய செயல், பெருமை, வைபவம், ஊரிலுள்ள கஷ்டப்படும் குடும்பங்களிலுள்ள பெண்களிடையே தனக்குள்ள மதிப்பு எல்லாத்தையும் விவரிக்க தொடங்கிவிடுவாள். அதற்கு முன்பு தப்பிவிடும் மனவெதும்பலுடன் படியிறங்கினான்.

[ 2 ]

''நேத்து நான் சொன்னதை நீ மறந்துட்டியே?''

''எதை?''

''அறையணுவுக்குப் பொடி.''

பதிலேதும் பேசவில்லை. இரண்டணா பெறுவதைப்பற்றிச் சிந்தித்துக்கொண்டிருக்கும்போதுதான் சின்னம்மா மீண்டும் நினைவு படுத்தினாள்.

சின்னம்மா பெருமூச்செறிந்தாள்.

''அவங்கவங்க கையிலேயிருந்தாத்தான் எல்லாமே உண்டு.''

அதிகாரத்தை மாற்றிக் கொடுத்துவிட்டுப் போகும்வரை சின்னம்மா நல்ல நிலையில் இருந்ததாகத்தான் கேள்வி. சேது பார்க்கத் தொடங்கியது முதலே சித்தப்பா கஷ்ட நிலையில் உள்ளவராகவே இருந்தார். அம்மாவும் சின்னம்மாவும் சொல்லுவதையெல்லாம் பதில் கூறாமலே கேட்டுக்கொண்டிருப்பார்.

இதே போன்ற ஒரு கோடை காலத்தில்தான் சித்தப்பா இறந்தது.

எட்டாம் வகுப்புத் தேர்வு முடிந்து வீட்டிலிருக்கும் சமயம். அன்று பக்கத்திலேயே இருக்கும்போதுதான் மரணம் ஏற்பட்டது.

அதற்கு முன்பு சின்னம்மா பெற்றெடுத்த இரண்டு குழந்தைகளும் இறந்துபோயிருந்தன. அப்போது சேது வீட்டில் இல்லை. பள்ளியிலிருந்தான். ஒரு சமயம் காலையில் எழும்போது பத்துமாத கர்ப்பிணியாகயிருந்த சின்னம்மா அறையிலிருந்து முணகுவதும் அழுவதும் கேட்டது. அம்முக்குட்டியம்மாவை அழைத்துக் கொண்டு வந்தது சேதுதான். அப்போது அம்மாவும் வடக்கு

வீட்டு பாரு அம்மாவும் சின்னம்மாவை கண்டித்துக்கொண்டிருந் தார்கள். காரணம், சின்னம்மா படுக்காமல் உச்சந்தலைமேல் இரண்டு கையையும் வைத்துக்கொண்டு ஏணிப்படி அறையில் அங்குமிங்குமாக நடந்துகொண்டிருந்ததுதான்.

''ஆடாம ஓரிடத்திலே படு. நானும் பெத்தவதான்.''

வடக்கு வீட்டு அத்தைதான் அன்றைக்கு கஞ்சி பரிமாறியது. கஞ்சியைக் குடித்துவிட்டு புஸ்தகப் பையை எடுக்கப் போனபோது, ஏணிப்படி அறை முழுவதும் நிறைகுடத்தைச் சாய்த்துவிட்டது போல ஈரமாயிருந்தது.

''பனிக்குடம் உடைஞ்சிருச்சு. இந்த மருத்துவச்சி ஏன் இன்னும் வரலை?''

சேது வேகமாக அவ்விடத்தைவிட்டு அகன்றான்.

சின்னம்மா பெற்ற குழந்தையின் அழுகுரல் கேட்குதா என்று உற்றுக் கேட்டபடி சாயந்திரம் வீடுவந்து சேர்ந்தான். அம்மாவும் வடக்கு வீட்டு அத்தையும் பேசாமலிருந்தார்கள். வீட்டில் கஞ்சி ஏதும் சமைத்திருப்பதாகத் தெரியவில்லை. சித்தப்பா கூப்பிட்டார்.

''சேது, வா.''

சித்தப்பாவுடன் ரோட்டுக்குப் போனான். அவர் மடியில் நோட்டும் சில்லரையுமாக இருந்தது. இரும்பிலியத்துக்காரர் என்பவரோடு நடந்த கேசில் சித்தப்பாவுக்கு வட்டியாகக் கிடைத் திருக்கலாம் அது. டீயும் பலகாரமும் வாங்கித் தந்தார். திருப்பத் தில் கண்டுண்ணியினுடைய வீட்டின் முன்பாகச் சென்றபோது, சித்தப்பா இதோ வந்துடறேன்'னு சொல்லிவிட்டு வீட்டுக்குள்ளே சென்றார். சேது வேலிப்படப்பில் இருந்த கடலாமணக்குச் செடி யின் இலைகளைப் பறித்து பிழிந்தபோது கொட்டிய திரவத்தை ஊதி முட்டையுண்டாக்கி காற்றில் பறக்கவிட்டுக்கொண்டு கொஞ்ச நேரம் நின்றான். சிறிது நேரம் கழித்து சித்தப்பா வாயைத் துடைத்துக்கொண்டும் இடையிடையே துப்பிக்கொண்டும் வந்தார். நரைத்த குறுமயிர் உள்ள பெரிய முகம் சிவந்திருந்தது. சாராய வாடை.

'நட!'

சித்தப்பா தள்ளாடித் தள்ளாடி நடப்பதுபோல் தோன்றியது. வயலில் இறங்கும்போது சித்தப்பா சொன்னார்:

''உன் சின்னம்மா குழந்தை பெத்தாள், ஆனால், குழந்தை போயிடுச்சு.''

சித்தப்பாவிடம் எல்லோருக்கும் பிரியம் உண்டு. ஐம்பதாவது வயதில் மூன்றாவது திருமணமாக சின்னம்மாவை மணப்பதென்ற

ஆலோசனையை யாரும் எதிர்க்கவில்லை. அன்று ஆரியம் பாடத்து அம்பலத்தின் முன்புறத்தில் வியாபாரம் நடந்துவந்தது. வீட்டின் குடும்பத் தலைவராக இருந்தார். வியாபாரம் நொடித்துவிட்டது. மருமக்கள் பங்கு பிரிக்கலானார்கள். வீட்டில் கலகம் ஏற்பட்ட போது மூவாயிரம் ரூபாய்க்கு தன் பங்கை விற்றுவிட்டு இங்கு வந்து தங்கலானார். அந்தப் பணத்தை இரும்பிலியத்து மாப்பிள்ளை மார்களுக்கு வட்டிக்குக் கொடுத்தார்.

வட்டியும் முதலும் கிடைக்காமல் போனபோது கேஸ்போட் டார். சின்னம்மாவினுடைய பண்டங்கள் எல்லாம் தீர்ந்தபோது, கேஸ் நடத்தவேண்டி அம்மாவினுடைய பண்டங்களை அடகு வைத்தார். கேஸ் வெற்றியடைந்து பணம் கிடைத்தபோது கடனைத் தீர்க்க பணம் போதவில்லை.

பரமேஸ்வர அண்ணன் வீட்டுக்கு வரும்போதெல்லாம் சித்தப் பாவுக்கு வெற்றிலை, பாக்கு, புகையிலை வாங்கிக்கொள்வதற் கென்று ஒன்றிரண்டு ரூபாய்களைக் கொடுப்பார். சின்னம்மாவினு டைய ஏச்சுப் பேச்சை கேட்காமலிருக்க வேண்டி சித்தப்பா பொழுது புலரும்போது எழுந்து ஆற்றை நோக்கி போய்விடுவார். வெயில் சூடேறும்வரை விபூதியைப் பூசிக்கொண்டு ஜபிப்பார். மணலில் விரித்து உலர்த்திய வேட்டியை எடுத்துக்கொண்டு நெற்றியிலும் மார்பிலும் விபூதியை வாரிப் பூசிக்கொண்டு வீடு வந்து கஞ்சி குடிக்கக் கூப்பிடும்வரை நடையில் வெறுமனே நடந்து கொண்டிருப்பார். பிறகு நேராக வடக்கு வீடுதான்.

நீண்ட கால உறவாலும், நட்பாலும் பக்கத்து வீட்டு பாரு அம்மாவை அத்தை என்றேதான் எல்லோரும் அழைத்துவந்தார் கள். அம்மாவைவிட வயதில் சற்று இளையவளானாலும்கூட அம்மாவும் அத்தை என்றேதான் அழைப்பாள். அங்கே தேவுவோ சுமித்திராவோ கோரைப்பாயை எடுத்துப் போடுவார்கள். சாப்பாட்டுக்காக யாராவது வடக்கு வேலிப்பக்கமிருந்து கூப்பிடும் வரை அங்கேயேதான் இருப்பார்.

இடையிலே வடக்கு வீட்டு அத்தை டீ போட்டு கொடுப்பாள். வீட்டின் முன்பகுதியில் ஒரு குடும்பத் தலைவன் இருப்பதில் அத்தைக்கு மகிழ்ச்சியாகத்தான் இருந்தது. ஆண்களில்லாத வீடாயிற்றே.

சின்னம்மா அதற்குத் திட்டுவாள்: ''அவங்கவங்க வீட்டு முன் புறம் இருக்கக்கூடாதோ? அடுத்த வீட்டு கோழியையும் காக்கையை யும் விரட்டறதுக்காக இருக்காரா?'' வடக்கு வீட்டு முற்றத்தில் தான் விளையாட்டுக்களெல்லாம். தேவும் சுமித்திராவும் உண்ணி நம்பூதிரியும் இருப்பார்கள். சித்தப்பா எல்லாவற்றையும்

பார்த்துக்கொண்டு ரசித்துக்கொண்டிருப்பார். எதுவும் பேச மாட்டார். ஒரு அந்தி நேரத்தில்தான் மரணம் ஏற்பட்டது. சித்தப்பா ஒரு மாதமாகப் படுத்த படுக்கையிலிருந்தார். அந்தியில் வீட்டுக்குள்ளிலிருந்து அழுகைச் சத்தம் கேட்டது. முன்னால் இருந்த மாடியறையில் இலவமர முள்ளால் பெயர் செதுக்கிக்கொண்டிருந்த போது—

ஓடிச் சென்றபோது—கண்கள், எதையுமே காணமுடியாதபடி வட்டமாக மலர்ந்திருந்தன. முகத்தில் இருந்த மலர்ச்சி மறைந்து விட்டதுபோல் தோன்றியது.

அம்மா கூறினாள்: ''சேது, என் குழந்தை பத்மூவை நீ வீட்டுக்கோ வடக்கு வீட்டுக்கோ கொண்டுபோ.''

வட்டமாக அசையாமல் ஒரே இடத்தில் நிலையாக நிற்கும் அந்தக் கண்களைப் பார்த்துக்கொண்டே போகாமல் நின்றுகொண்டிருந்தேன். அடங்கிவரும் மூச்சு ஒலி பெரிதாகக் கேட்டது.

''நீ போறியாடா?''

ஏதும் புரியாமல் நிற்கும் பத்மூவை இழுத்துக்கொண்டு நடந்தான். கமுகுத் தோட்டத்தைக் கடப்பதற்கு முன்பே சின்னம்மாவினுடைய துக்கமிகுந்த கூக்குரல் கேட்டது. பத்மூவை வாரியெடுத்தபடி விறைப்பாக நின்றான். திடீரென அவள் அழத் தொடங்கினாள்.

இறந்த துக்க விவரத்தைச் சொல்ல ஆரியம்பாடத்துக்கு ஆள் அனுப்பியும்கூட யாரும் வரவில்லை என்பது மறுநாள்தான் தெரிந்தது. நடுநிசியாகியும்கூட யாரும் வராததால், மாதவ மாமா பிணத்தைப் புதைக்குமாறு கூறினார். வயதானவர்களை மாமரம் வெட்டி தகனம் செய்துவிடவேண்டும். ஆனால், தோட்டத்திலுள்ள மாமரம் காய்ப்புள்ளது. அதை வெட்டவேண்டும் என்று யாரும் சொல்லவில்லை.

அன்று வடக்கு வீட்டில்தான் படுக்கை. சாப்பாடும் அங்கேயே தான். சுமித்திரா பத்மூவுக்கு சோறு ஊட்டி தூங்கவைத்தாள். பிறகு சேதுவுக்கும் சோறுபோட்டாள்.

''இந்த அக்கா எதைப் பார்க்க அங்கேயே நிற்கிறாள்?'' தேவு, பாரு அத்தையின் கூடவே சேதுவின் வீட்டிலிருந்தாள்.

சிம்னி விளக்கின் அருகிலிருந்தபடி, முடியை அவிழ்த்துக் கோதி, அவற்றைப் பிரித்து உச்சந்தலையில் கட்டுக் குடுமியாகக் கட்டிக்கொண்டு சுமித்திரா கூறினாள்:

''சேது! படுத்துக்கோ.''

கார்த்தியாயினியோடு பத்மூவைப் படுக்கவைத்தாள். கார்த்தி யாயினிக்கு பத்மூவைவிட ஒரு வயது அதிகம்.

சுமித்திராவுக்கு சேது வயதுதான் இருக்கும் என்ருலும் அவள் திடீரென குடும்பப் பெண்ணுக மாறிவிட்டாள்.

கூடத்தில் மெத்தைப் பாய் விரிக்கப்பட்டிருந்தது. நிலைகுத்தி நின்ற அசையாத வட்டமான கண்களைப்பற்றிய பயம் நீங்கி விட்டது. தேவுவின் மேற்பார்வையில் சுமித்திராவும் சேதுவும் சேர்ந்து குன்றுமேலேறி பள்ளிக்கூடம் சென்ற நாட்கள் இப்போது நினைவிற்கு வந்தன. ஐந்தாம் வகுப்பில் படிக்கும்போதும்கூட சுமித்திரா ஜாக்கெட் போட்டிருக்கவில்லை. ஐந்தாவதோடு சுமித்திரா படிப்பை நிறுத்திவிட்டாள்.

பள்ளிக்கூடம் விட்டு வீட்டுத் தோட்டத்தின் நடைவழியை அடைந்தால் சிலேட்டையும் புஸ்தகத்தையும் கடலாமணக்கு செடிக்கு அடியில் வைப்பாள். வேலியை ஒடித்து உண்டாக்கிய சிறிய சந்தின் வழியே ஊர்ந்துசென்று கடப்பாள். உருண்டை மாங்காய் மரத்தின் அடியில் ஏதாவது வீழ்ந்து கிடக்கிறதா என்று பார்க்கத் தான் அவள் அவ்வாறு செல்வது வழக்கம். மூங்கில் மரங்களும் அயினி மரங்களும் அடர்த்தியாக வளர்ந்திருந்த அந்த இடம் மத்தி யான வேளையில்கூட இருட்டாக இருக்கும். உண்ணி நம்பூதிரி மட்டுமே மாங்காய் பொறுக்க அங்கு வருவான். உண்ணி நம்பூதிரிக்கு அதிக மாங்காய் கிடைத்த நாளன்று சேதுவுக்கும் சுமித்திராவுக்கும் பங்கு தருவான். மாங்காய் பொறுக்கி கொட்டைப் பலாமரத்தின் அடியில் காய்கள் வீழ்ந்திருக்கிறதா என்று பார்ப்பான். பின், குஞ்சு நம்பூதிரி தென்படாததால் கமுகுத் தோட்டத்தின் வழியாக இறங்கி, தெற்குப் படியேறி வேலிக் கருகில் போகும்போது தேவு முகம் சோர்ந்து நிற்பதுண்டு.

எட்டாம் வகுப்பு முடிந்து, நான்கு மைல் தூரமுள்ள உயர் நிலைப் பள்ளியில் சேர்ந்த பிறகும் வீட்டின் தென்புறத் தோட்டத் திற்கு போவதுண்டு. ஆனல், மாங்காய் பொறுக்குவது அவ்வளவு சுவையாக இல்லை. முள்ளில மரத்திலிருந்து பெரிய பட்டைகளைத் திரட்டிச் செல்லும்போது சில சமயம் மாங்காய் விழுந்து கிடப் பதைப் பார்ப்பதுண்டு. முள்ளைச் செதுக்கி குடைக் கம்பியைக் கொண்டு அடையாளக் குறிகளை உருவாக்குவதுதான் அதைவிட முக்கிய வேலை.

உருண்ட மாமரத்தின் அடியில் மாங்காய் பொறுக்க பிள்ளை கள் இப்போது வருவதில்லை. அதற்குப் பக்கத்தில் குஞ்சு நம்பூதிரியை தகனம் செய்ததன் காரணமாக அந்தப் பகுதியில் நடக்கக்கூட மனம் வருவதில்லை.

இலவை முள்ளேக்கொண்டு அடையாளக் குறி செதுக்குவதை நிறுத்தியபோதிலும், ஒரு சமயம் குஞ்சாத்தாவுக்கு அம்மா தந்த பணத்தைக் கேட்டுவிட்டு வரும்போது தெற்கேயுள்ள நிலப் பகுதிக்குப் போனுன். குஞ்சு நம்பூதிரியைத் தகனம் செய்த இடமது. தொட்டால் சுருங்கிச் செடியும் ஆனேத் தும்பைச் செடியும் அங்கு அடர்த்தியாக வளர்ந்திருந்தன.

பல இரவுகளில் குஞ்சு நம்பூதிரியைத் தகனம் செய்யும் கனவைக் கண்டு திடுக்கிட்டு எழுந்ததுண்டு.

பகலில் நாவல் தோப்பின் வழியே போகும்போதுகூட குஞ்சு நம்பூதிரியை நினைத்துக்கொண்டால் பயம் உண்டாகும். சித்தப்பாவின் கண்கள் நினைவிலிருந்து விரைவிலேயே மறைந்துவிட்டன.

தகனம் செய்வதைப் பார்க்கப் போகவேண்டுமென்று சொன்னது சுமித்திராதான். நாவல்மரத் தோப்புக்கிடையே இருந்த பாறையின் முகப்பில் நின்று பார்த்தபோது, புகையினுலும் ஆள் கூட்டத்தினுலும் ஒன்றுமே தெரியவில்லை. காற்றில் புகை மறைந்தபோது வேட்டியை மடித்துக் கட்டியபடி கெண்டியில் தீர்த்த நீரை வைத்துக்கொண்டு நின்ற உண்ணி நம்பூதிரியை ஒரு முறை பார்த்தான்.

''உண்ணி நம்பூதிரி அழுதிருப்பானு?'' சுமித்திரா கேட்டாள்.

''தகப்பனுர் இறந்தால் யாராவது அழாமல் இருப்பார்களா?''

''உண்ணி நம்பூதிரி அழமாட்டான்.''

சுமித்திராவுக்கு அது நன்கு தெரியும்.

குஞ்சு நம்பூதிரி அடிக்காத நாளில்லே. வேதம் கற்றுக் கொடுப்பது குளத்துக்கருகிலுள்ள அறையில்தான். அடிக்கும் சத்தத்தை வீட்டிலிருந்தே கேட்கலாம். கமுகுப் பாளேயினுல் கோவணம் கட்டிவிடப்பட்ட உண்ணி நம்பூதிரி, தடித்த தன் சரீரத்தைக் குலுக்கிக்கொண்டு நடந்துவருவதைப் பார்த்தால் அழுதபாவமே தெரியாது.

''இடும்பன் மாதிரி வரான்,'' மாதவ மாமா அவனேப் பார்க்கும்போது சொல்வார்.

''இன்றைக்கு எவ்வளவு?''

அடிபட்ட அடையாளங்கள் உடலில் காணப்படும். ஆயினும் பெரிய தட்டைப் பற்களே வெளியே காட்டிச் சிரித்துக்கொண்டு நிற்பான்.

மாதவ மாமா கேலி செய்வார். ''கரும்பூனே சாப்பிடனும், திருமேனி, அடிபட்டாலும் வேதனே உண்டாகாது.''

தகப்பனுர் இறந்ததனுல் உண்ணி நம்பூதிரி அழுவதாகத் தோன்றவில்லை. வீட்டுத் தோட்டத்தில் கமுகு மரம் விழுந்து கிடந்தபோது பையன்களெல்லாம் கூடியாடுவதுண்டு. ஒரு சமயம் கமுகு திடீரென நிலத்தில் வீழ்ந்தது. மரத்துக்கடியில் மாட்டிக் கொண்ட உண்ணி நம்பூதிரியை வலிந்து இழுத்துப் பார்த்தபோது நசுங்கிய விரல் நுனியிலிருந்து இரண்டு நகங்கள் தொங்கிக்கொண் டிருந்தன. அப்போதும் உண்ணி நம்பூதிரி தன் தட்டைப் பற்களைக் காட்டிச் சிரித்துக்கொண்டுதான் இருந்தான்.

''உண்ணி நம்பூதிரி தண்ணீர் தெளிக்கிருன், சுற்றி நடக்கின்ருன் . . .''

நீண்ட மரத்துண்டுகளையும் பனைமரத் துண்டுகளையும் கொண்டு ஆட்கள் நெம்புகிருர்கள். சிறிய பையனுயிருந்த காலத்தில் கேட்ட நரகத்தின் ஓவியமே சட்டென்று மனதில் தோன்றியது. எம தூதர்கள் வறுக்கிருர்கள், பொரிக்கிருர்கள், தீயில் இட்டுச் சுடுகின் ருர்கள்.

''பார் சேது, பார்.''

சுமித்திரா கழுத்தைப் பிடித்து அழுத்திச் சுட்டிக் காட்டினுள். வெட்டி நட்டு வைத்த மரத் துண்டில் கருங்குரங்கு தொங்கு வதுபோல் ஏதோ ஒன்று தொங்கிக்கொண்டிருந்தது. ஒரு நிமிஷமே பார்த்தான்.

''கொடல் மாலை.''

கூப்பாடு போட்டுக்கொண்டு சுமித்திராவை விட்டு ஓடினுன்.

சுமித்திரா பார்க்கும்போதெல்லாம் இதைச் சொல்லிக் கேலி செய்வாள். தூக்கம் கண்களை மயக்கி மூடவைக்கும் நேரம் பார்த்து, கருங்குரங்கைப் போன்ற அந்தப் பொருளின் உருவம் மனதில் தோன்றும். உடனே திடுக்கிட்டு விழித்துக் கொள்வான்.

மெயில் வண்டி பாலத்தில் ஓடியது. சேதுவுக்கு மனச் சமா தானம் ஏற்பட்டது. மற்றெரு பகல், வேக வைக்கும் பகல், முடிவடைகிறது.

* * *

காலையும் முகத்தையும் கழுவுவதற்கான பாவனையில் குளத்தை நோக்கி நடந்தான். உண்ணி நம்பூதிரியைக் காணும் பாக்கியம் கிடைத்ததால் இரண்டணு கேட்கலாம். உற்சவ காலம் தொடங்கியதால், உண்ணி நம்பூதிரி எப்போதும் எங்கேயாவது போவான். உற்சவம் நடக்கும் இடங்களுக்குப் போவது யானை மீது ஏறுவதற்காகத்தான். எட்டணு கிடைக்கும். அதிலும் பெரிய காரியம் யானையின் மேல் இஷ்டம்போல் இருக்க முடியும் என்பது

தான். அவர்களை அண்டி நின்றால் சில சமயம் இரண்டணா கிடைக்க லாம். மூணு கார்டு எழுதலாம்.

எண்ணைச் சட்டியைக் கழுவ தேவு வந்தபோது, உண்ணி நம்பூதிரி அங்கே இல்லையென்பது தெரிந்தது. எப்போது வருவான் என்பதும் யாருக்கும் தெரியாது. உசிதம்போல வருவான், போவான்.

''ஆட்டைப் பார்க்க வந்தப்போ குஞ்சாத்தால் எண்ணெய் காய்ச்சிக்கிட்டிருந்தாள். கொஞ்சம் உதவி செய்யணும்'னு கேட் டால் முடியாதுன்'னு சொல்ல முடியுமா?''

தேவு பேசுவது வயது வந்தவர்களைப் போலவே இருக்கும். கிழக்கு வீட்டு ராமன் நாயருடைய மனைவியை அரிசி திருடியதனால் வேலையிலிருந்து வெளியேற்றிய அன்று முதல், பகலில் வந்து பசுவை அவிழ்த்து மாற்றிக் கட்டுவது, சாணிக் குப்பைகளைக் கூட்டிப் பெருக்கி அள்ளிக் கொட்டுவது, பாத்திரங்களைத் தேய்த்துக் கழுவுவது தேவுதான். நம்பூதிரி இல்லத்திற்கு வேலைக்குப் போவ தாக தேவும் அத்தையும் சொல்வதில்லை. வயதான காலத்தில் குஞ்சாத்தாலுக்கு உதவியாகப் போய் வருவதாகத்தான் சொல்லிக் கொள்வார்கள்.

கிணற்றின் கைப்பிடிச் சுவரைச் சுற்றியுள்ள செடி கொடிகளுக் கிடையிலே, வேலியோரமாக நடந்தபோது உருளையும் கயிறும் சத்தம் எழுப்பின. பெரிய காதில் உள்ள காதணி ஆடியலையும் மெல்லிய ஓசையும், கண்ணுக்குக் கீழே கருத்த மருவுள்ள குஞ்சாத் தாலு, ராமாயண புஸ்தகத்தில் அசோகவனத்தில் சீதையுடன் இருக்கும் அரக்கியின் ஓவியத்தை நினைவுபடுத்துவாள். வெளுப் பாக மெலிந்திருப்பாள். எனினும் முகம் அச்சமூட்டுவது போலிருக்கும்.

''சேது! மாதவன் எங்கே போயிருக்கான்?''

''தெரியலே.''

''நேத்தும் இந்தப் பக்கம் பார்க்கலே.''

பையன்களுக்கு எட்டு பத்து வயதானால் வீட்டிலே இருக்கிற பெண்கள், பையன்களைப் பார்க்கக்கூடாது என்று சொல்லுவார் கள். குஞ்சாத்தாலுக்கு அப்படியொன்றுமில்லை. மாதவ மாமா வோடு சேர்ந்து நேருக்கு நேராக நின்று பேசுவாள்.

''பரீட்சையிலே பாசாயிட்டியா?''

சேது நின்றான்.

''தெரியலே.''

நாலாம் வகுப்பில் மூன்றுவது வருஷமாக உண்ணி நம்பூதிரியை அனுப்பும்போது சேதுவைத்தான் குஞ்சாத்தாலு ஏற்பாடு செய்தாள். குஞ்சாத்தாலு ஒவ்வொரு தேர்வு முடியும்போதும் விவரங்களைக் கேட்டுத் தெரிந்துகொள்வாள். மூன்று மாதம் கழிந்தபோது உண்ணி நம்பூதிரியை நிறுத்திவிட்டாள். லட்சுமியினுடைய மகனுக்கு புத்தி இருக்கிறது, நன்ருக வருவான்!

அவன் நடந்து போகும்போது குஞ்சாத்தாலு கூப்பிட்டுச் சொன்னுள்:

''சேது! அந்தப் பாட்டுப் பெட்டியைக் கொண்டாரச் சொல்லி எத்தனை நாளாச்சு.''

''கெட்டுப் போய்க் கிடக்கு. கேட்டுட்டு வர்றேன். நல்லாக் கிட்டா கொண்டாறேன்.''

ஆலூர்காரன் கருவான்தான் முன்பொரு தடவை பழுதான போது சரிப்படுத்தித் தந்தான்.

மாதவ மாமாவுக்கு ஒரு பரிசுக் குலுக்கலில் கிடைத்த கிராமபோன் அது. எங்கிருந்தோ சில பழைய ரிக்கார்டு பிளேட்டுகளும் கொண்டு வந்திருந்தார். ஆரம்பத்தில் அதைப் பாடவைக்கும் அனுமதி வேறு யாருக்குமே தரப்படவில்லை. குஞ்சாத்தாலுக்கு ''கலயாமீசுமதே, பூஸீரமௌலே . . .'' என்ற பாட்டு மட்டுமே கேட்கப் பிடிக்கும். ''லட்சுமீ தல்பே முராரே''யும் பிடிக்கும். பாட்டு கேட்கப்போகும் நாட்களிளெல்லாம் டீ தருவாள். வருத்த பலாச்சுளையும் தருவாள். கிளாசை கழுவக்கூடக் குஞ்சாத்தாலு ஒப்புக்கொள்ளமாட்டாள். ''அந்தப் பெண் வரும்போது கழுவிக் கொள்வாள்.''

பெட்டியைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு போகும்போது ஒரு சமயம் திரும்பிப்பார்த்தான். குஞ்சாத்தாலுவே கிளாஸை எடுப்பதைப் பார்த்தான்.

ஐந்து பேர் இறந்தபிறகு ஆயுளோடு இருந்த உண்ணி நம்பூதிரியைப் பற்றிச் சொல்லும்போது எல்லோரும் சங்கடப்படுவது வழக்கம். ''அதுக்கு இப்படியொரு யோகம் வந்திருக்க வேண்டாம்.'' எல்லாருக்கும் அரிசியும் காசும் கடன் கொடுக்கிற குஞ்சாத்தாலுவின் 'தலையெழுத்து' தான் உண்ணி நம்பூதிரியைக் காணும்போது பெண்கள் பேசும் விஷயம்.

செவிடன் என்றுதான் உண்ணி நம்பூதிரியைப் பற்றி ஆட்கள் பேசுவது வழக்கம். ஆனுல், சேதுவுக்கு அதில் நம்பிக்கையில்லை. ஒரு அணு கிடைக்க வேண்டுமென்றுல் ரொம்ப நேரம் கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும். குஞ்சு நம்பூதிரி இறக்கும்வரை

வீட்டில் டீ போடுவதில்லே. தனக்கு வேண்டுமென்ருல் யாருக்கும் தெரியாமல் இடையில் வீட்டுக்கு வந்து டீ குடிப்பான். சின்னம்மா வுக்கு யாருக்கும் தெரியாமல் நீரிலிட்ட முழுப்பாக்குகளைக் கொண்டு வந்து கொடுத்ததற்குப் பதிலாகத்தான் டீ தருவாள். வேலேக் காரப் பையன் கையில், நீரிலிட்ட அந்த முழுப்பாக்குகளை கொடுத்து விற்று வர சின்னம்மா கொடுத்தனுப்புவாள். அந்தக் காசுக்கு சின்னம்மா பொடி வாங்கிக் கொள்வாள்.

சட்டை அணிந்து தலே சீவி கைகளால் முகத்தை துடைத்து வெளியே போகும்போது சந்தேகப்பட்டு அம்மாவிடம் கேட்டான்:

''இரண்டணு கொடுக்க முடியுமா, அம்மா?''

''எதுக்கு?''

''கடிதம் எழுதணும்.''

''யாருக்கு?''

பதில் சொல்லவில்லே. அம்மாவைக் கேட்பதில் பயனில்லே என்பதை அறிந்த பின்பு கேட்ட தன்னேத்தானே சபித்துக் கொண் டான்.

''கடிதம் எழுத உனக்கு எத்தனே பேர் இருக்காங்க? மடையா உன்பாட்டுக்கு போ?''

தொண்டையில் ஏதோ அடைத்துக்கொண்டிருப்பது போல் தோன்றியது. தண்ணீரைக் குடித்துவிட்டு ஏதும் பேசாமல் வயல் வரப்புகளின் வழியே நடந்தான்.

## [ 3 ]

தபாலாபீசுக்குச் சென்றபோது அங்குக் கடிதம் ஏதுமில்லே. தபால்காரன் வந்தபிறகு போஸ்ட்மாஸ்டர் கடிதங்களேப் பிரித்து முத்திரை குத்தும்வரை ஆள் கூட்டத்தினிடையே காத்து நிற்பான். இப்போது பேரு கூப்பிடுவார்கள் என்று எதிர்பார்த்துக்கொண் டிருந்தான். இறுதியில் போஸ்ட்மாஸ்டர் வாசற்படிக்கு வந்து வெள்ளிப் பிரேம் போட்ட மூக்குக் கண்ணுடி வழியே பார்த்த வண்ணம் பெயர்களேக் கூப்பிடத் தொடங்கிஞர். பெரும்பாலான கடிதங்கள் பட்டாளத்திலிருந்து வந்திருப்பவைகளாகும்.

மணியார்டர் உண்டா என்று கேட்கவில்லே. எல்லோரும் கலேந்து சென்ற பின்னர் போஸ்ட்மாஸ்டர் பார்க்கும்படியாக அவ்விடத்தைச் சுற்றிச் சுற்றி வந்தான். இருந்திருந்தால் அதைச் சொல்லவேண்டிய நேரமும் கடந்துபோய்விட்டது.

தினந்தோறும் வெறுங்கையோடு திரும்பும்போதெல்லாம் வெட்கமாக இருக்கும். ஒரு சமயம் அம்மாவினுடைய பெட்டியிலிருந்து அவருக்குத் தெரியாமல் கால் ரூபாய் எடுத்தான். முன்பு பரமேஸ்வர அண்ணன் கொண்டுவந்திருந்த வார இதழ்களைப் பார்த்து 'கேட்லாக்கு எழுதுக' என்று குறிப்பிட்டிருந்தவர்களுக்கெல்லாம் கார்டுகள் எழுதியனுப்பினான். ஒரு வாரம் சுகமாக இருந்தான். 'பி. கே. சேதுமாதவன், மேற்குப்புற வீடு' என்ற விலாசத்திற்கு தினந்தோறும் கேட்லாக்குகள் வந்தன. நகை விவரங்களுக்கான கேட்லாக்குகளும் மருந்து சோப்பு விவரங்களுக்கான கேட்லாக்குகளாகும் அவை. தனது முகவரி டைப் செய்யப்பட்ட உறைகளை பத்திரமாகப் பாதுகாத்து வைத்துக்கொண்டான்.

ஒரு மைல் தூரமிருக்கிறது வீட்டுக்கு. குறுக்கு வழியில் மணலின் வெப்பம் குறையவில்லை. பாதையிலிருந்த கோரை முள் மரங்களினிடையே நடந்தான். சாலையிலிருந்து பெரிய வரப்பைக் கடந்தபோது வடக்கு வீட்டின் வாசற்படியின்மீது உண்ணி நம்பூதிரி உட்கார்ந்திருப்பதைப் பார்த்தான். பெரிய ஐந்து செல் டார்ச் லைட்டின் மூடியைக் கழற்றுவதும் திரும்ப மூடுவதுமாக இருந்தான். கீழே பார்த்துக்கொண்டு யாரோடு என்றில்லாமல் அசட்டுத்தனமாகச் சிரித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான்.

மனதில் தொடக்கத்தில் ஒரு நடுக்கம் ஏற்பட்டது. பொட்டையன் என்று சொல்லிச் சொல்லி கடைசியில் உண்ணி நம்பூதிரி சரியான பொட்டையனாகவே மாறிவிட்டான்! மகனுடைய புத்தி சரியாவதற்காக துப்பரங்கோட்டைக்கு வழிபாடு நடத்தும் குஞ்சாத்தாலுவின் விஷயம்தான் நினைவுக்கு வந்தது.

அவனை அடுத்துச் சென்றபோது யாரோ சிரிப்பது கேட்டது. வேலிக்கருகில் உள்ள ஊற்றுக்கு அப்பால் சுமித்திரா அருகம்புல் பறித்துக்கொண்டிருந்தாள்.

''உற்சவமெல்லாம் முடிஞ்சுபோச்சா உண்ணி நம்பூதிரி?''

உண்ணி நம்பூதிரி சிரித்தான்.

''ஆனைமேலே ஏறி காசு நெறைய கிடைச்சுதா?''

''உண்ணி நம்பூதிரி டார்ச்சை நீட்டினான். உற்சவம் நடந்த இடத்தில் வாங்கியதுதான் அது.''

''ஆறு ரூபா! லைட் அடிச்சா ரொம்ப தூரம் தெரியும்.''

உண்ணி நம்பூதிரி பேசும்போது வார்த்தைகள் திக்குவதுபோல காதில் விழும்.

''உண்ணி நம்பூதிரியை கல்லடுத்தூருக்கு தாலப்பொறி உற்சவத்துக்கு அழைச்சுட்டுப்போகப் போறாங்க, சேது!''

சுமித்திரா கூறினுள்.

வெட்கத்துடன் சிரித்துக்கொண்டு உண்ணி நம்பூதிரி எழுந்து டார்ச்சைக் கக்கத்தில் வைத்துக்கொண்டு நடந்தான். சேதுவுக்குப் புரியவில்லே.

''கிழக்கு வீட்டு ஆயம்மையை வேலேக்கு வரவேண்டாம்'னு குஞ்சாத்தாலு சொல்லியனுப்பிச்சது எதுக்காகவாம்?''

''அரிசி திருடியதுக்காக.''

அருகம்புல்லே தென்னம்மட்டை மேலடித்து, மண்ணே நீக்கிக் கொண்டு சுமித்திரா உரக்கச் சிரித்தாள்.

''உண்ணி நம்பூதிரி ஒண்ணும் சின்னப்பிள்ளே இல்லேயே!''

தெளிவில்லாத சந்தேகத்தோடு சேது திரும்பி நடந்தான். வீட்டையடைந்தபோது அம்மா உள் வராந்தாவில் காலே நீட்டி வைத்துக்கொண்டு வெற்றிலே போட்டுக்கொண்டிருந்தாள். நம்பூதிரி வீட்டிலிருந்து வந்திருந்த தேவுவை குப்பை கூளங்களே கூட்டிப் பெருக்கி வாரிகொட்டச் செய்தாள்.

''கடிதமெதுவும் இல்லேயாடா?''

''இல்லே.''

''உம்!''

அம்மா வேகமாக வெற்றிலேயைக் குதப்பிக்கொண்டு சிறிது நேரம் எதுவும் பேசாமலே இருந்தாள்.

''ரெண்டு மாசமாவே ஒரு காசும் அனுப்பலே. எங்கேயிருந்து நான் கொண்டுவந்து அவசியமான செலவையெல்லாம் நிறை வேத்தமுடியும்? தகப்பன் அப்படியிருந்தால் மகனுக்காவது அக்கறை இருக்கணும். பரமேஸ்வரனுக்கு அப்படியொரு மனநிலே யுண்டா?''

"பரமேஸ்வர அண்ணனும் அவர் சம்சாரமும் வர்றதில்லேயா?" தேவு கேட்டாள்.

''நம்முடைய இல்லாததையும் பொல்லாததையும் அன்னியர் அறியணுமா?'' என்று கேட்டவாறே சேது மாடி அறைக்குப்போய் சட்டையைக் கழற்றி வைத்துவிட்டு இருக்கைப்படிமீது ஏறிப் படுத் தான்.

வெளியே ஆகாயம் செந்நிறமாயிருந்தது. முற்றத்திற்கு நேரே மஞ்சள் வெளிச்சம் பரவிக் கிடந்ததுபோல் தோன்றியது. இடையிடையே இடி இடிக்கத் தொடங்கியது. மேற்கு மலேப் பக்கமிருந்து ஒருவித குளிர்காற்று வீசத் தொடங்கியது.

ஏப்ரல் இருபது. இரண்டு மாதம் கழிக்கவேண்டும். இரண்டு மாதம் கழித்துக் கிடைத்தால் நல்லது.

பரமேஸ்வர அண்ணன் படிப்பை முடித்து வந்திருந்தபோது ஆளே மாறிப்போயிருந்தார். பரமேஸ்வரண்ணனின் பெட்டியைத் திறந்தபோது சேது ஆச்சரியப்பட்டான். எவ்வளவு சட்டைகள்! இஸ்திரி போட்டதனுல் ஏற்பட்ட லேசான மணமுள்ள சட்டைகள் அவை.

ஒருபோதும் சேது இஸ்திரி போட்ட சட்டைகளைப் போட்ட தில்லை. கடை வீதியில் இருக்கும் பொன்னனின் தையற் கடைக்கு அடுத்திருக்கும் அறைக்குப் புதிதாக வந்துள்ள மாப்பிள்ளையிடம் இஸ்திரிப்பெட்டி இருக்கிறது. கஞ்சி போட்ட சட்டையைக் கொண்டுபோய் கொடுத்தால் அரையணுவுக்கு இஸ்திரிபோட்டுத் தருவான். இதை அம்மாவிடம் சொன்னபோது அவள் சொன்ன பதில்:

''இப்போ இருக்கிற இவ்வளவு 'பவரே' போதும்.''

தேவு பயணம் சொல்லிக்கொண்டு போவது கேட்டது. போகும்போது அம்மா சொன்னுள்:

''இரவு இங்கே வந்து தூங்கணும்'னு அம்மாகிட்ட சொல்லு.''

வடக்கு வீட்டு அத்தையும் பிள்ளைகளும் சில சமயம் இரவில் இங்கே படுக்க வருவார்கள். அம்மாவுக்கு இரவு ரொம்ப நேரம் கழித்துத்தான் தூக்கம் வரும். அதுவரை பேசிக்கொண்டிருக்க யாராவது வேண்டும். வெளியே யாரோ நெருங்கி வந்துகொண் டிருக்கும் காலடிச் சத்தம் கேட்டது. சின்னம்மாதான் அது.

வாசற்படியில் நின்றபடி கேட்டாள்:

''கொண்டுவரலையா? தலைவலி தாங்கமுடியலே.''

''சாயபு கடையிலே பொடி தீர்ந்துபோச்சாம்.'' அதில் சின்னம்மாவுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. சிறிது நேரம் ஆச்சரியத் தோடு பார்த்த வண்ணம் பேசாமல் நின்றுள்.

''நாளைக்கு வருமாம். எனக்கு ஜாடியைத் தட்டிக் கவிழ்த்துக் காட்டினுர்.''

ஒன்றும் பேசாமல் சின்னம்மா திரும்பிப் போய்விட்டாள்.

பத்மூ நாமாவளி சொல்வதைக் கேட்டபோது, மாலை நேரம் வந்துவிட்டது என்பதை உணர்ந்தான்.

கீழே இறங்கி முற்றத்தில் அங்குமிங்குமாக நடந்துகொண் டிருந்தான்.

''நீ குளிக்கலேயாடா?''

''இல்லே.''

''இந்த உஷ்ண காலத்திலே ராத்திரியில் குளிக்காட்டி எப்படிடா தூக்கம் வரும்.''

வேனல் காலம் தொடங்கியது முதலே வீட்டின் முற்றத்தில் தான் படுப்பது வழக்கம். உட்கார வெளியே போடப்பட்டுள்ள பலகைமீது மாதவ மாமா படுத்துக்கொள்வார். சேது கீழே தரையில் படுத்துக்கொள்வான்.

மாதவ மாமா குளித்துவிட்டுத் திரும்ப நேரமாகிவிட்டது. சாயந்தரமே குத்தகைக்காரன் கோவிந்தன் நெல் கொண்டுவந்து விட்டான். கோவிந்தனுடைய இறுமாப்பு அதிகமாவதைப்பற்றி மாதவ மாமா அவ்வப்போது முணுமுணுப்பதுண்டு.

கோவிந்தனுடைய இரண்டு மகன்களும் பட்டாளத்தில் இருக்கிறார்கள். குத்தகைக்கு எடுத்த நிலங்கள் ஏராளமாக இருக்கின்றன. நல்ல புத்தி ஏற்பட்டு கோவிந்தன் தானாக கொடுத்தனுப்பினால் வாங்கிக்கொள்வார்கள். பணமும் வயது முதிர்ந்த மகன்களுள்ள கோவிந்தனோடு பயங்காட்டிப் பேசுவதில் பயனில்லை என்பதுதான் மாதவ மாமாவுக்குள்ள சங்கடம்.

மாதவ மாமா வரும்வரை வீட்டின் முற்றத்தில் ஒரே ரகளையாக இருந்தது. அம்மாவும் சின்னம்மாவும் வடக்கு வீட்டு அத்தையும் இரவில் ஒன்று கூடிவிட்டால் சிரிப்பும் கோலாகலமுமாக இருக்கும். பகல் முழுவதும் ஒருவரையொருவர் குற்றஞ்சாட்டியும் ஏசிப் பேசிக்கொண்டபோதிலும் அவை எதுவும் இரவிலே இந்தப் பஞ்சாயத்துக் கூட்டத்தில் இருக்கும்போது மனதில் தோன்றுவதில்லை. பத்மூவுக்குத் தூக்கம் வந்தாலும்கூட, விளக்குக்கருகில் வீம்பாக விழித்துக்கொண்டிருப்பாள்.

சாப்பிட்டு முடிந்தபின் நனைந்த மேல்வேட்டியைப் போர்த்திக் கொண்டு மாதவ மாமா பீடியை பற்றவைத்துக்கொண்டு, முற்றத்தில் நடக்கத் தொடங்கினால் சத்தத்தைக் குறைத்துப் பேசத் தொடங்குவார்கள்.

''பத்மூ கொஞ்சம் தண்ணி கொண்டுவாடி,'' கேட்டது பத்மூவை என்றாலும் தண்ணீர் கொண்டுவர ஓடுவது தேவுதான். உச்சந்தலையில் குடுமியைக் கட்டிக்கொண்டு சிம்னி விளக்கோடு உள்ளேயிருந்து வந்த சுமித்திரா, அம்மாவின் அருகில் அமர்ந்தாள். இருட்டில் உள் வராந்தாத் தூணில் சாய்ந்துகொண்டு சேது அமர்ந்திருந்தான்.

சுமித்திராவுக்கு, பாரு அத்தையினுடைய நிறம். வெள்ளை நிறம். தேவு, இறந்துபோன ராமுண்ணி மாமாவை அப்படியே உரித்துக்கொண்டு வந்திருப்பதாகச் சொல்வதைக் கேட்கலாம். அதைக்கொண்டே தேவுவைப் பார்க்கும்போது சிரிப்பு வரும். எடுப்பாக இருக்கும் பெரிய காதுகள் பேசும்போது மெதுவாக ஆடுகிறதோ என்ற ஐயம் தோன்றும். கருத்த உயரம், எலும்புத் தாக்குள்ள கையில் நிறைய ரோமமுள்ள தேவுவைக் கண்டால், மழைக் காலத்தில் வாய்க்காலில் விழுந்து செத்த பசுவே நினைவுக்கு வரும்.

சுமித்திராவைவிட செயல்திறமை தேவுவுக்கே உண்டு என்று பாரு அத்தை எப்போதும் கூறுவதுண்டு. காய்க் கணக்கும் மரக் கணக்கும் கூட்டத் தெரியும்.

வடக்கு வீட்டில் எந்தக் காரியத்தையும் அம்மாவிடம் கேட்டே செய்வாள் என்பதில் அம்மாவுக்கு எப்போதுமே ஒரு தனி அபிமானம் உண்டு. வடக்குப்புற வேலியில் வேலியை வளைத்து வைத்து வழியுண்டாக்கியதுகூட அம்மா சொல்லித்தான்.

முற்றத்திலிருந்து விளக்கு ஒன்று வீட்டிற்குள் சஞ்சாரம் செய்யத் தொடங்கியபோது அம்மா கூறியது கேட்டது:

''பிள்ளைகளா, சேதுவோட பாயை விரிச்சுக் கொடுங்க.''

பாயைக் கொண்டுவந்த தேவு படியிறங்கும் இடத்தில் பீடி குடித்துக்கொண்டிருக்கும் மாதவ மாமாவிடம் கேட்டாள்:

''மாதவ அத்தான் இன்னும் படுக்கலையா?''

படுப்பதா இல்லையா என்று விளங்காதவண்ணம் படி நிழல் போல உட்கார்ந்திருக்கும் மாதவ மாமா எதையோ முணு முணுத்தார்.

சத்தமில்லாத ஒரு இடி மின்னல் முற்றத்தையும் உள் வராந்தாவையும் வெளிச்சத்தால் குளிப்பாட்டியது.

மாதவ மாமா உள் வராந்தாவுக்குச் சென்றார்.

''நான் கொஞ்சம் வெளியே போறேன்க்கா. அந்தப் தொப்பிக் கொடையை எடு.''

''இப்போ எங்கிட்டுடா?''

''மழை பெய்யும். காலையிலே விதைக்கணும்'னு மாமுண்ணியின் கன்று தேவை. இப்போ சொல்லி வைக்கலேன்'னு கிடைக்காது. எல்லாருக்குமே விதைக்கவேண்டியிருக்கும்.''

இருட்டில் மாதவ மாமா இறங்கிப்போகும்போது அம்மா மாதவ மாமாவின் காரியத் திறமையையும் குடும்பப் பாசத்தையும் விவரிக்கத் தொடங்கினுள்.

நாற்பது வயதான மாதவ மாமா நல்லபடி வேலே செய்வார். வெற்றிலே போடுவதில்லே. குடிப்பதில்லே. இதுவரை ஒரு கெட்ட பெயரும் எடுத்ததில்லே. அப்பா கடந்த முறை வந்தபோது, அம்மா மாதவ மாமாவின் திருமண விஷயத்தை எடுத்தார். மாதவ மாமா அம்மாவிடம் சொன்ஞர்:

''எனக்கொன்றும் கல்யாணம் இப்போ அவசியமில்லே.''

அம்மா வருவோரிடமும் போவோரிடமும் அதைச் சொல்வாள்.

''பத்து நாற்பது வயசான ஒரு ஆம்பிளே இல்லேயா? சொன்ஞ கேட்கவேண்டாமா?''

ஆஞல், அம்மாவுக்கு உள்ளூர மகிழ்ச்சிதான் என்பது எல்லோருக்கும் தெரியும். அம்மா யாருக்கும் தெரியாமல் கூட்டிச் சேர்த்துப் பேசுவாள்.

''குடும்பப் பாசம் குடும்பப் பாசம்'னு சொல்றது அந்நிய வீட்லே போய்ச் சேரும்வரைக்குந்தான்.''

தூசியைப் பரப்பிக்கொண்டு உள் வராந்தாவினிடையே காற்றடித்துச் சென்றது.

உள் வராந்தாவில் விரிக்கப்பட்டிருந்த படுக்கையில் படுத்த வண்ணம் கமுகுத் தோட்டத்தினிடையே தெரிந்த வெள்ளிய ஆகாயத்தில் சேர்ந்துவரும் கருத்த மழை மேகங்களேப் பார்த்துக் கொண்டிருந்தார். மின்னல் பளிச்சிட்டது. மழை பெய்யும்.

கமுகுத் தோப்பினூடே வீசும் காற்றில் மழைச் சாரல் எழுப்பும் மெல்லிய ஓசை கலந்திருந்தது.

உள்ளேயிருந்து சிம்னி விளக்கும் கையுமாக சுமித்திரா முற்றத்துக்கு வந்தாள்.

''சேது தூங்கியச்சா?''

சேது எழுந்திருந்தான்.

''மழை வருது. உள்ளே பாய் விரிச்சுத் தரட்டுமா'ன்னு அண்ணி கேட்கச் சொன்ஞங்க.''

''வேண்டாம். இடியும் மழையும் வெளியே வைக்கோல் கூரைமீது ஓசையோடு விழும்போது எழும் ஒலியில் உறங்குவது சுவையா இருக்கும்.''

சிம்னியின் வெளிச்சத்தில் புகையுடன் கூடிய தீ நாக்குக் கிடையே புன்னகை செய்துகொண்டு சுமித்திரா நின்றபோது, சட்டென்று சேது நினைத்தான், 'சுமித்திராவை பார்க்க எவ்வளவு அழகாயிருக்கிருள்! இதுவரையில் காணுத ஒரு அற்புதம் இதோ அவன்முன்!'

சிம்னி விளக்கை முற்றத்துப் படிமேல் வைத்து, வாடை வீசும் மண்ணெண்ணெய் பட்ட விரல்களை தலையில் துடைத்துவிட்டு சுமித்திரா பாய் விரித்த பின் நிலைப்படிமேல் இருந்தாள்.

நிழலாக இருக்கும் அவளுடைய உருவத்தை ஆர்வத்தோடு கவனித்துக்கொண்டிருந்த சேது என்னவோபோல் இருந்தான்.

சிவந்த கை வளையல்கள் ஒலிக்க மழைச்சாரலை பார்த்துக் கொண்டிருந்த சுமித்திரா கேட்டாள்:

''இனி என்னிக்கி சேது குமரநெல்லூர் போறது?''

''சர்ட்டிபிகேட்டு வாங்கப் போகணும்.''

அதைச் சொல்லும்போது அவனது நெஞ்சுத்துடிப்பு அதிக மாகியது.

(தேர்வில் வெற்றி கிடைத்துவிடும் என்ற தைரியத்தில் அவ் வாறு அகங்காரமாகச் சொல்லக்கூடாது. பகவதி காப் பாற்றணும்.)

''நாலணுவுக்கு சிவப்புச் சாந்து கிடைக்குமா?''

''தெரியலே.''

வடக்கு அறையிலிருந்து தேவு சிரிப்பது கேட்டது.

''மெதுவாச் சிரிடி.''

இது பாரு அத்தையின் கட்டளை.

முற்றத்திலிருந்து வீசிய காற்றில் சிம்னி விளக்கு அணைந்து விட்டது. இருட்டில் சேது விலகியிருந்தான். சுமித்திரா அருகில் இருந்தாள். கண்ணுடி வளையல்கள் அணிந்த கைகளைத் தொட வேண்டுமென்று சேதுவுக்குத் தோன்றியது. பார்சோப்புப் போட்ட ஜாக்கெட்டின், முண்டின் நல்ல மணம். சுமித்திரா பேசிக்கொண் டிருந்தாள். சேது கேட்கவில்லை. ஏதோ ஒருவித பயத்தோடு இருக்கும்போது எல்லாமே அற்புதமாகத் தோன்றின. சுமித்திரா எவ்வளவு பெரியவளாக இருக்கிருள். ஒரே வகுப்பில் ஐந்துவரை படித்த சுமித்திராவின்முன் செல்லும்போது பத்தாம் வகுப்புக் காரனுகிய சேது சிறியவனுகிப் போகிருன்.

இறுதியில் தைரியம் வரப்பெற்ற ஒரு நிமிஷத்தில் சுமித்திரா வின் விரல்களைப் பிடித்தான். அவள் கையைப் பின்னிழுத்துத்

திட்டிக்கொண்டு எழுந்துபோவாள் என்று பயந்துகொண்டிருக்கும் போது சுமித்திரா சிரித்தாள்.

''மோதிரம் இரும்பிலே செஞ்சது. செட்டிச்சி வந்தபோது வாங்கியது இது.''

விரல்களை விடாமலே சேது சிரிக்க முயற்சித்தான்.

''தங்கத்தாலே வாங்க நம்மலாலே முடியுமா, சேது?''

எழுந்து முற்றத்துப் படிமேல் வைத்த விளக்கை குனிந்தெடுத்து இருட்டில் சுமித்திரா உள்ளே போனபோது, வியர்வை பொங்க, நெஞ்சத் துடிப்போடு தலைகுனிந்தபடி இருந்தான்.

புது மழையின் இரைச்சலைக் கேட்கத் துவங்கியவுடன் மனது ஒரு நிலையில் சாவதானமடையலாயிற்று. ஓலைக்கீற்றுகளிலும் வைக்கோல் வேய்ந்த மேற்கூரையிலும் சட்டென்று கனமான துளிகள் விழத் தொடங்கின. ஆயிரம் சிறிய ஒலிகள் ஒன்றுக இணைந்து ஒரு இசையாகின்றது. ஓசையிடும் மழை நீரோட்டத்திஞல் எழும் ஒரு போக்கான இசையுடன் நீர்த்திவலைகளின் சப்தம் கேட்டது. தூரயிருந்து உருண்டுருண்டு வரும் இடி முழக்கம் நேராக எதிரில் வந்து முட்டி மோதிச் சிதறியபோது பழைய சுவர்கள் அதிரலாயின.

ஒரு மழையில் செம்மண் தேய்த்த சுவர்கள் கரைந்து விழும் போது அம்மா என்ன செய்வாள்?

—கோட்டை போன்ற வீடு.

முட்டுக்கொடுத்து நிறுத்திய உடைந்த உத்திரம். வைக்கோலால் வேயப்பட்ட மேற்கூரை. ஆவி நடமாடக்கூடிய, நடுப்பகலிலேயே அறைகள் இருட்டாக உள்ள இந்த வீட்டைத்தான் அம்மா கோட்டை என்று அழைக்கிருள்.

புகை படிந்த சிம்னியின் மங்கலான செந்நிற வெளிச்சத்தில் கண்ட சுமித்திராவின் முகத்தை மீண்டும் மனக் கண்முன் கொண்டு வருவதற்காகக் கண்ணை மூடிக்கொண்டு படுத்தான்.

[ 4 ]

கோயஸ்ஸன் மாப்பிளாவினுடைய ரேஷன் கடையில் பத்திரிகை வரவழைப்பதுண்டு. மத்தியானம் ஆணைக்கரையிலிருந்து சைக்கிளில் வரும் நீலம் சோப்புக்காரன்தான் அதைக் கொண்டு வந்து தருவது வழக்கம்.

தேர்வு முடிவுவரும் என்று சொல்லப்பட்ட தினத்தன்று சற்று முன்னதாகவே கடையில்போய் நின்முன். நீலம் சோப்புக்காரன் வழக்கத்திற்கும் சற்று தாமதமாகவே அன்று வந்தான். கடைக் காரன் பத்திரிகையை எடுத்து மேசைக்கு உள்ளே வைப்பதற்கு முன்னதாகவே சற்று தைரியமாகவே எடுத்துப் பிரித்துப் பார்த்தான். சமுத்திரம்போல எண்கள். விரைந்து ஓடிக்கொண் டிருந்த கண்கள் இறுதியில் கண்டுபிடித்துவிட்டன. 51931. சந்தேகத்தைப் போக்கிக்கொள்ள நினைத்து மீண்டும் நோக்கினுன். 51931-ன்னேதான். ஹரிதாஸனின் நெம்பர் மட்டுமே ஞாபக மிருக்கு. பலபேருடைய நெம்பர்களை எழுதிவைத்திருக்கிறுன். ஹரிதாஸனுடைய நெம்பர் தெளிவாக ஞாபகத்தில் இருக்கு. ஹரிதாஸன் தோல்வியடைந்திருக்கிறுன்.

மகிழ்ச்சியாக விசிலடித்துக்கொண்டு திரும்பி நடக்கும்போது உலகத்தையே வெற்றிகொண்ட பெருமிதம் மனதில் நிறைந்திருந் தது. வழியில் யாரும் கேட்கவில்லையே? யாரிடமாவது சொல்ல வேண்டும் என்று தோன்றியது. வீட்டை அடைந்தபோது பரமேஸ்வரண்ணன் வந்திருப்பது தெரிந்தது. உள் வராண்டாவில் அம்மா இருக்கிறுள். குன்னின் புறத்தில் பப்படச் செட்டிகள் குடியிருந்த வீட்டை வாங்கி அதில் குடியிருந்துவரும் அப்பநாயரும் இருக்கிறுர்.

உள்ளே சென்றபோது படிப்பைவிடப் பெரியது அதிர்ஷ்டமும் ஜாதகப் பலனுமேயாகும் என்பதை நிரூபிக்கும் வகையில் கதை களைச் சொல்லிக்கொண்டிருந்தார் அப்பநாயர்.

''நம்ம சிப்பாய் பங்குன்ன நாயரோடே மகன் ராமுட்டி பத்தாம் வகுப்பிலும் தோல்வியடையலையா? இப்போ என்ன சம்பாத்தியம் தெரியுமா? ரெண்டு கையாலும் வாரலையா? தலை யெழுத்து நல்லா இருந்தா ஒரு படிப்பும் வேண்டாம், பாஸும் வேண்டாம்.''

இண்டர்மீடியட் தேர்வை மூன்று தடவை எழுதி நிறுத்திய பரமேஸ்வரண்ணன் மனைவி வீட்டிற்கடுத்துள்ள வங்கியில் வேலை செய்து வருகிறுர். படிப்பில்லையென்றுலும் பணத்தை வாரலாம் என்ற அப்பநாயருடைய தத்துவத்தில் பிடிப்பேதும் இல்லாதவ ஞக முற்றத்தின் மேற்கு ஓரம் சென்று மூக்கைச்சிந்தி கனைத்து விட்டு உள் வராந்தாவைப் பார்த்தவண்ணம் நின்றுகொண்டிருந் தான்.

ரிஸல்ட் பார்க்கப் போயிருப்பது அம்மாவுக்குத் தெரியும். சின்னம்மாவுக்கும் தெரியும். வரும்போதே எல்லோரும் வந்து

சூழ்ந்துகொள்வார்கள் என்ற மனப் பிரமையோடு பெருமிதத்தை அடக்கிக்கொண்டு ஒதுங்கியபடி உள்ளே நுழைந்தான்.

''விடிகாலையிலேயே நீ எங்கேடா போயிருந்தே'' அப்பாடா! அப்பநாயராவது கேட்டாரே!

''ரிஸல்ட் தெரிஞ்சுக்க.''

''பாஸாயிட்டியா?''

மகிழ்ச்சியை அடக்கிக்கொண்டு கூறினான்.

''உம்.''

''முதல் வகுப்பிலா?''

''அது தெரியலே. மார்க் லிஸ்ட் வரவேண்டாமா?''

மேற்குப்புற முற்றத்திலிருந்து மாவிலையைக் கிழித்துக்கொண்டு சாவதானமாகத் திரும்பிவந்த பரமேஸ்வரண்ணன் எல்லாம் கேட்டபடி முதலில் எதுவும் பேசாமல் நின்றார்.

''காலேஜுக்கு ஃபாரம் வரவழைச்சிருக்கியா?''

பரமேஸ்வரண்ணன் முகத்தைப் பார்க்காமலே கேட்டார். பரமேஸ்வரண்ணன் இண்டர்மீடியட்டில் இரண்டுமுறை தோல்வியடைந்தபோதும் வீட்டில் அதொரு முக்கிய சம்பவமாக இருந்தது. ''அவனுக்கு மூளையில்லாமலில்லை; படிக்காமலும் இல்லை. ஜாதகத்தில் அவனுக்குப் போதாத காலம்.''—இவ்வாறு கேட்டவர்களிடமெல்லாம் அம்மா சொன்னாள்:

மேற்குப்புற உள்வராந்தாவிலிருந்து மாடி அறைக்குப் போக மாடிப்படிகளில் ஏறி உள்ளேபோய் சட்டையைக் கழற்றி வைத்துவிட்டு அருகிலிருந்த குன்றின்மேலே ஏறினான் பள்ளிப் பரீட்சையில் சேது மாதவன் பாஸானது ஒரு சாதாரண சம்பவம் மட்டுமே!

குன்றிலிருந்து இறங்கி கால்வாய்ப் பக்கமாக சென்றபோது புலையப் பிள்ளைகள் நண்டு பிடித்துக்கொண்டிருந்தார்கள். அதைப் பார்த்துக்கொண்டு நின்றான். கால்வாய் ஓரமுள்ள இல்லத்து வயல்களுக்கு அருகில் உள்ள மாமரத்தின் அடிமண் சரிந்து கரைந்து போனதால் மரமே வயலில் விழத் தயாராயிருந்தது. முன்பு அதன் அடியில் மாட்டுக்காரப் பிள்ளைகளை விரட்டுவதற்காக உண்ணி நம்பூதிரியும் சுமித்திராவும் சேதுவும் கூவிக்கொண்டு காவலிருந்ததுண்டு. நிறைய நாறு இருந்தபோதிலும் நல்ல இனிப்புள்ள பெரிய மாங்காய்களாகும் அவை. மாங்காய்கள் விழுவது கீழே இருந்த நாற்றங்கால்களில்தான். வேலியைத் தாண்டி ஓடி மாங்காய்களைக் கைப்பற்றி மீண்டும் வேலி தாண்டி இங்கே ஓடிவர

வேண்டும். நாற்றங்கால்களின் சொந்தக்காரன் கிழவன் ராகவக் குறுப்போ, பணிக்கரோ கண்டால் பயங்கரமாகத் திட்டுவார்கள்.

''என்ன, சேது இங்கே?''

சுமித்திராதான் கேட்டாள்.

புதிய முண்டு வேட்டியும் சில்க்கிலான சிவப்பு ஜாக்கெட்டும் சட்டென்று அவனது கவனத்தைக் கவர்ந்துவிட்டன என்பதை அறிந்தவளாக சுமித்திரா கூறினாள்:

''காலே, விடியலில் போனே. இப்ப வந்திருக்கே.'' நெற்றியில் வாரிப்பூசியிருந்த சந்தனக்குறி வியர்வையில் அழிந்து மறைந்து இல்லாததுபோல் ஆகியிருந்தது.

''சுமித்திரா நீ எப்படி எங்கே?''

ஆசாரி ராமன்கிட்டே ஒரு கோடலிக் காம்பு கேட்கப் போனேன். ராமன் இல்லே. மற்ற மூதேவியிடம் கேட்டுப் பயனில்லே.''

கணுக்கால் மறைய கொசவம் வைத்து உடுத்தியதனால் சுமித்திரா திடீரென்று உயரமாகி விட்டவள்போல் தோன்றினாள். சேது நடந்தான். கோயில் கூட்டத்தையும் பச்சை விறகை வைத்து ஊதி ஊதி சர்க்கரைச் சாதம் பொங்கியதால் கண்கள் வேதனையடைந்ததையும் சொல்லிக்கொண்டு சுமித்திரா கூடவே நடந்தாள்.

''பரமேஸ்வர அத்தான் வந்திருக்கார், இல்லையா?''

''உம்.''

''இன்னிக்கே போவாரா?''

இப்போது அம்மாவும் பரமேஸ்வரண்ணனும் சேர்ந்து படிப்பு விஷயமாக பேசிக் கொண்டிருப்பார்கள்.

''போவும்.''

திருமணம் நடந்த பிறகு எ ப் போ தா வ து மட்டுமே பரமேஸ்வரண்ணன் வருவார். மாலையிலே போயும் விடுவார்.

சுமித்திராவுடன் சேர்ந்து நடக்கும்போது, கைக்கும் கழுத்துக்கும் இடையே எவ்வளவு அழகான நிறம் என்று தோன்றியது. சேது தன்னையறியாமலேயே தனது கைகளைப் பார்த்துக் கொண்டான். கருப்பென்றே அழைக்கும்படியான மாநிறம். சுமித்திராவின் முன்பாக வாய் திறந்து சிரிக்கக்கூட சோம்பலாக இருப்பது போல் தோன்றியது. அகன்று நிற்கும் தட்டைப் பற்களைக் கண்ணாடியில் பார்க்கும்போது வருத்தமாக இருக்கும். எவ்வளவு

தான் சீவினாலும் உச்சிச் சுழியிலுள்ள மயிர் சிலிர்த்துக்கொண்டு முள்ளம்பன்றியின் குத்து மயிர்போல் நிற்கும்.

சுமித்திரா வழியிலுள்ள படர்ப்பிலிருந்த கொங்கினிக் காயைப் பறித்துக் கொறித்துக்கொண்டு நடந்தாள்.

அவள், சேதுவுடன் நடப்பதைப்பற்றி அக்கறை காட்ட வில்லை. ஒற்றை வேட்டியை மடித்துக் கட்டிக்கொண்டு வெளியேறி இனி நடக்கப் போவதில்லை. பத்தாம் வகுப்பு பாஸான ஒரு ஆண் மகன் சேது என்பதை அவள் அறியவில்லை. ஏன் யாருமே அதை அறியவில்லை.

''அடுத்து நான் பாலக்காடு போகிறேன், காலேஜில் சேர.'' பாதை மாற வேண்டிய இடத்தை அடைந்தபோது சுமித்திரா கூறினாள்:

''நான் என்னோட ஆ டு க ளை எங்கேயிருக்குன்னு பார்க் கிறேன்'' என்று கூறியபடி நீரோலிப் பூச்செடியை எட்டிப் பிடித்து மேலேறி, நாவல் மரத் தோப்பினிடையே அவள் நடந்துபோனாள்.

ஒரு நிமிஷம் சந்தேகத்தோடு நின்றான். கல்லூரிக்குப் போகும் விஷயத்தைக் கூறியும் கூட சுமித்திரா அதில் அக்கறைக் காட்டா மல் போவதேன்?

சுமித்திரா போன வழியே அவனும் புதர்களிடையே கடந்து சென்றபோது முட்கள் காலில் குத்த, காலில் கடுப்புண்டாகியது. கால்களைத் தேய்த்துவிட்டு அவளோடு சேர்ந்து போகவேண்டி நடக்கும்போதுதான் காலில் நெடுநீளத்தில் ஒரு கீறல் விழுந் திருப்பது தெரிந்தது.

நாவல் தோப்பைக் கடந்தால், கரிய பாறைகள் குவிந்து கிடக்கும் பெரிய குன்றைக் காணலாம். அங்கிருந்து பார்த்தால் ஊர் முழுவதையும் பார்க்கலாம்.

குன்றின் உச்சியை அடைந்தும் கூட முன்னதாகச் சென்ற சுமித்திராவைப் பார்க்க முடியவில்லை. திரும்பி வரும்போது தூரத்திலிருந்து ஆடுகளை ஓட்டுகின்ற சப்தம் கேட்டது.

மழைத்துளி விழத் தொடங்கும்போது குன்றிலிருந்து இறங்கி னான். அடிவாரப் பாதையை அடைந்தபோது மழை வலுக்கத் தொடங்கியது. குறுக்கு வழியாக ஓடி மூங்கில் புதரின் அடியில் நின்றான். பயனில்லை. வேகமாக தேக்கமரத்தடிக்கு ஓடினான். மழை 'சோ' வெனக் கொட்டத் தொடங்கியது. வாய்க்கால் வழியே ஒருங்கு திரண்டு ஓடத் தொடங்கிய புழுதி புரண்ட மழை நீரை கால்களால் தள்ளிக்கொண்டு ஓடி வரும் சத்தம் கேட்டது. பூச்சி அரிக்காத இலையடர்ந்த மரக்கிளையின் கீழே மழை நீர் விழாத

சிறிதளவு இடமே இருந்தது. சுமித்திரா மழையை திட்டிக் கொண்டு அங்கே ஓடிவந்து நின்ருள்.

தலையிலும் முகத்திலுமிருந்த தண்ணீரைத் துடைத்துக் கொண்டு சுமித்திரா சொன்ஞள்:

''அடங்காப் பிடாரி மழை. துணியெல்லாம் சேருப் போச்சு.''

அவள் மொத்தத்தில் நனேந்திருந்தாள். மழை நீரில் நனேந்த புள்ளிகளுள்ள ஜாக்கெட் சரீரத்தோடு ஒட்டிக் கிடந்தது. அவ ளுடைய நனேந்த முழங்கை, விலாப்புறமாக உராய்ந்தபோது அதைக் கவனியாதவன் போன்ற பாவத்தில் நின்று கொண்டிருந் தான்.

ஒரு சிறு காற்று அடித்தபோது மேலேயிருந்த இலேகள் அசைந் தன. குடத்தைச் சாய்த்ததுபோல நீர் கொட்டியது.

மழை வலுக்கத் தொடங்கியது.

''வா, மண் குடஞ்செடுத்த பொந்துலே போய் நின்ஞ நனேயமாட்டோம்.'' அவள் காத்திருக்காது அங்கு ஓடிவிட்டாள்.

குன்றின் சரிவிலிருந்த நிலத்தைச் சீர்ப்படுத்த செங்கல் மண் வெட்டியெடுக்கப்பட்ட பகுதி ஒரு சிறிய குகையைப்போல இருந் தது. சுமித்திராவின் ஆடுகள் அங்கே சென்று நின்றிருந்தன. ஆடுகளே வெளியே உந்தித் தள்ளிவிட்டு அவள் அதில் இடம் பிடித் துக் கொண்டாள். ஆட்டுப் புழுக்கையை மிதிக்காமல் சேது ஒதுங்கியிருந்தான். நிமிர்ந்து நின்ருல் தலே தட்டும். செம்மண் கலந்த நீர் குன்றின் சரிவிலிருந்து ஓடிவந்து பொந்தின் மேல் பகுதியிலிருந்து ஒழுகிக் கொண்டிருந்தது.

வீட்டின் அடுப்பங்கரையை யடுத்த அவரைப் பந்தலேயும் உரல் வைக்கும் இடத்தையும் அங்கேயிருந்து பார்க்கலாம்.

ஒன்றும் பேசாமல் நெஞ்சத் துடிப்புடன் இருந்தான்.

''குஞ்சு நம்பூதிரியை எரியூட்டியதைக் கண்டு பயந்தது நினே விருக்கா?''

சேது சிரித்தான்.

சுமித்திராவுக்கு அது ஏன் இப்போது நினேவுக்கு வந்தது? உட் கார்ந்தபடி நனேந்த மண்ணில் செங்கனக்குச்சியைக் கொண்டு மண்ணேக் கிழித்து வரையும் சுமித்திராவை அவளறியாவண்ணம் ஓரக் கண்ஞல் பார்த்தான்.

சற்று நெருக்கமாகவே இருந்தபோது உணர்ச்சிவசப்பட்ட வளாக இருந்த சுமித்திரா கேட்டாள்:

''நீ என்னை நினைக்கிறதுண்டா?''

சேது, பதில் சொல்லவில்லை.

''சுமித்திரா முழுக்க நனைஞ்சாச்சு.''

மிகவும் மெதுவாகச் சொன்னான். வெளியுடம்பில் ஒட்டிக் கிடக்கும் ஜாக்கெட்டில் மெதுவாக விரலால் வரைந்தபோது அவள் அசையவில்லை. தோளில் கை வைத்தபோது உடல் விரைப்பது போல் தோன்றியது. எனினும் இடது கையை கழுத்தினிடையே வைத்து கட்டிப்பிடிக்க முயன்றபோது சுமித்திரா எழுந்தாள்.

''சேது! என்ன இது?''

உருவற்ற ஏதோ சில வார்த்தைகளை முணுமுணுத்துக் கொண்டு பிடி விடாமல் வைராக்கியத்துடனே எழுந்தான். அவனுடைய முகத்தை நேரே பார்க்க தைரியமில்லை. நனைந்த மேற்கூரையில் தலை உராய்ந்தது. ஈரமுள்ள சந்தனத்துடையவும் வியர்வையினுடையவும் மணம் கமழ்ந்தது. வெற்றிகரமான நிமிடம் அது.

துடிக்கும் சரீரம் சட்டென்று சக்தியேறிய கைகளுக்குள் ஒதுங்கி நின்றபோது மொத்தத்தில் புல்லரித்தது. அவளுடைய முகம் கழுத்தில் முட்டியது. பிடியைத் தளர்த்தியபோது குளிர்ச்சியினுடையவும் வெப்பத்தினுடையவும் அலைகள் சரீரத்தினிடையே பாய்ந்து ஓடின.

பழைய சேதுவாகி விட்டான். பயத்தோடு சுமித்திராவின் முகத்தை நோக்கியபோது அவனால் நம்ப முடியவில்லை. அனலுமிழும் கண்களில் குளிர்ந்த நேர்த்தியான சிரிப்பு மயங்கி நின்றது. சினங்கொண்டு முறைப்பதற்குப் பதிலாக உதடுகள் நாணுவதைக் கண்டான்.

மரங்களின்மீது விழும் மழைத்துளிகளின் சப்தம் இடைவிட்டு குறையத் தொடங்குவதைக் கேட்டுக்கொண்டு நின்றான்.

''மழை நின்று விட்டது.''

அவள் ஒற்றையடிப் பாதை வழியே துள்ளிக்குதித்து ஓடிய போதும் சேது அசையவில்லை. சந்தனத்தின் வாடையை முழுக்க அனுபவிக்க எண்ணி முயன்றவனாகப் பொந்தில் நின்று கொண்டிருந்தான்.

கீழே இறங்கினான். குளிர்மிக்க மழைச்சாரலிடையே நடந்து போகும்போது, வடகிழக்குப் பருவமழை முடிந்த காலத்தில், குட்டநாட்டு வயல்கள் நிறைந்து ததும்பிக் கிடப்பதுபோல் உள்ளம் நிறைந்து துளும்பிக் கொண்டிருந்தது.

வீட்டை அடைந்தபோது அம்மா கேட்டாள்: ''நீ இந்த மழையிலே எங்கிருந்துடா வர்றே?''

பதிலேதும் சொல்லவில்லே.

உலகத்தோடு பேச வேண்டும்போல இருந்தது: ''நான் தான் சேது! நான் சுமித்திராவைக் கட்டிப் பிடித்தேன்.'' வீட்டின் மாடி அறைக்குச் சென்றபோது பரமேஸ்வர அண்ணனின் தோல் பையை அங்கே காணவில்லே. ஒருவேளே போயிருப்பார்.

'இன்டர்வியூ' கார்டுக்காகக் காத்திருந்த நாட்களில் பகற் பொழுதைப் போக்குவதில் சிரமம் ஏதும் தோன்றவில்லே. மாடி அறையில் இருந்தபடி ஜன்னல் கம்பிகளுக்குப் பின்புறத்திலிருந்து சுமித்திராவின் சப்தத்தைக்கேட்க வேண்டி காத்திருக்கத் தொடங்கிஞன். முற்றத்துக்கிடையே அவள் போவதைக் கண்டால் ஜன்னல் கம்பிகளில் ஓசையுண்டாக்குவான். முற்றத்தில் யாருமில்லேயென்ருல் சுமித்திரா மாடியை நோக்கி நிற்பாள்.

எல்லோருக்கும் முன்பாக சுமித்திராவோடு பேச என்னவோ போல் இருந்தது.

பயண நாள்.

மண்ணெண்ணெயில் நனேத்த சேலேத் துணியைக் கொண்டு நன்கு தேய்த்துத் துருவையெல்லாம் துடைத்துச் சுத்தப்படுத்திய பழைய தகரப் பெட்டியில் சாமான்களேயெல்லாம் அடுக்கி வைத்துக்கொண்டிருந்தான்.

நான்கு சர்ட்டும் நான்கு வேஷ்டியும் மட்டுமே இருந்தன. எட்டாம் வகுப்பு படித்துக்கொண்டிருந்த காலத்தில் தைக்கப்பட்ட சாக்கு போன்ற கெட்டித் துணியாலான கோடு போட்ட இரண்டு சட்டைகள் இருக்கின்றன. கிழியவில்லே. ஒருபோதும் கிழியாது என்றே தோன்றுகிறது. பார்த்தால் தலேயணே உறைத் துணி என்றே சொல்லுவார்கள்.

பரமேஸ்வர அண்ணன் முதல் நாளே வந்து போய்விட்டார். உடன் வர லீவு இல்லே என்று கூறிவிட்டார். மாதவ மாமாவே போதும். பரமேஸ்வர அண்ணன் கல்லூரியில் சேர தனியாகவே சென்றது நினேவுக்கு வந்தது.

அப்பா அனுப்பியிருந்த பணம் நூறு ரூபாயாகும். பரமேஸ்வர அண்ணன் கணக்குக் கூட்டிப் பார்த்து இன்னும் அறுபது ரூபாய் தேவைப்படும் என்று கூறியிருந்தார். குஞ்சாத்தாலின் கையில் நெல் விற்ற பணம் இருக்கும் விபரத்தை மாதவ மாமா தான் கூறியிருந்தார். கேட்டால் தருவாள்.

வட புறத்திலிருந்து சுமித்திராவின் சத்தம் கேட்டது. பெட்டியை மூடிவிட்டு ஜன்னல் வழியாகப் பார்த்துக்கொண்டு நிற்கும்போது சுமித்திராவின் சத்தம் முற்றத்தைக் கடந்து போய்க்கொண்டிருந்தது. களத்தின் மூலையிலிருந்த வெள்ளிலை யைப் பறிக்க வந்திருந்தாள். தாளி இலைகளை அடுக்கிப் பிடித்துக் கொண்டு நடந்து வரும்போது சத்தம் உண்டாகியது.

'ஸ் ஸ் ஸ். . .'

அவள் வெயிலிலிருந்து தன் கண்களை மறைக்க இடது கையை நெற்றியில் வைத்து மேல் பகுதியை நோக்கினாள்.

''வா.''

''எதுக்கு?''

மெதுவாக அவன் சொன்னாலும் அவள் சொன்னபோது குரலில் பயம் கலந்திருப்பதுபோல் தோன்றியது.

''வா'ன்னு''

அவள் வாழை மரத்தடியில் தாளி இலைக் கட்டை வைத்து விட்டு முற்றத்தில் சந்தேகத்தோடு நின்றாள்.

''அந்த மதில்மேல் போட்ட போர்வை காய்ந்துபோச்சா, பாரு சுமித்திரா''.

அடுப்பங்கரை வரை கேட்கக்கூடிய அளவில் உரக்கக் கேட்டான்.

''காய்ஞ்சிருச்சு.''

கீழேயிருந்து பதில் சொல்லும் அவளுடைய சத்தத்தில் ஒருவித நடுக்கம் இருந்தது.

''இங்கே எடுத்து வா''

மாடிப் படிகள் ஒலியுண்டாக்கியபோது உடல் நடுங்கியது. அவள் அறைக்குள் வந்தபோது உள் நடுக்கத்தோடு நின்றாள்.

''சேது, எப்பப் போறே?''

''விடியற்கால வண்டிக்கு.''

அவளுடைய தோளில் கையை வைத்துக்கொண்டு கூறினான்:

''உட்காரு.''

''நின்னு போதும்.''

''உட்காருன்னு.''

கையைப் பிடித்து, தரையில் உட்காரவைத்தபோது சுமித்திரா நடுங்குவதுபோல் தோன்றியது.

தலைக்குள் சூறாவளி அடித்துக்கொண்டிருந்தது.

''வேண்டாம், வேண்டாம்''

கேட்கவில்லை.

''சேதூ!.''

வெட்கத்தை வாழ்வில் முதல் முறையாக மறக்கும்படியாயிற்று. வாழைத்தண்டு போன்ற குளிர்ந்த அடிவயிற்றினிடையே வெப்பமிக்க நரம்புகள் ஓடி நடந்தபோது சுமித்திரா துவண்டாள்.

காலடி ஓசைகள் மறைந்து, அடுக்களை முற்றத்திலிருந்து மீண்டும் அவளுடைய சப்தம் கேட்டபோது மெதுவாக எழுந்தான். தலை முடியிலிருந்த எண்ணெய் மினுமினுப்பு காவி நிற நிலத்தில் உண்டாக்கிய உருவமற்ற ஓவியத்தின்மீது விரல்கள் 'பி.கே.எஸ்' என்று கையெழுத்திட்டது.

அவளுடைய சத்தம் அகன்றுபோனபோது ஜன்னல் அருகே வந்து நின்றான்.

யாருக்கும் இனி சுமித்திராவைத் தொட அதிகாரமில்லை.

உனக்கு நான் மட்டுமே.

சேது.

# II

## [ 1 ]

மேலும் கீழும் பதினறு அறைகளுள்ள சிறிய கட்டிடத்தைக் கல்லூரிக்கான ஹாஸ்டலாக மாற்றி அதிக காலமாகிவிடவில்லே. மெயின் ஹாஸ்டலில் சீனியர்களே மட்டுமே சேர்ப்பார்கள். தூரத்தில் வேறு இரண்டு ஹாஸ்டல்களும் உண்டு. 'பிரேம் குமாரி'ல் இடம் தருகிறேன் என்று வார்டன் கூறியபோது அது போதும், அதுவே போதுமென்று தோன்றியது. விரிசல் விழுந்த ஓட்டை உடைசல் சுவர்களும் இரு'புறங்களிலும் உறுமிக்கொண்டு ஓடும் வாகனங்கள் காற்றில் எழுப்பும் தூசி படிந்த செங்கல் தரையும் உள்ளதாக அக் கட்டிடம் இருந்தபோதிலும், அந்தப் பெயர் சேதுவின் மனதில் ஒரு அழகான எண்ணம்போல பல நிமிஷங்கள் மணம் பரப்பிக்கொண்டிருந்தது.

'பிரேம்குமார்' யாராக இருக்கும்?

யாருக்கும் தெரியாது. கட்டிடத்தின் உரிமையாளர் வெகு தூரத்தில் எங்கேயோ இருக்கிருர். வயதான வாட்ச்மேன் நாகுவுக்கும் தெரியாது. பிரேம்குமார் யார்?

மன்னுர்க்காட்டிலிருந்து மரம் ஏற்றி வரும் லாரிகள் வளேவைக் கடக்கும்போது டயர்கள் உராயும் சத்தமும் பிரேக்குகள் சீறியெழுப்பும் ஒலியும் கேட்டு அவ்வப்போது திடுக்கிட்டு எழுவதுண்டு. முன்பு இஃதொரு வீடாக இருந்தது. வீட்டுக்காரரின் மகனுக இருக்கவேண்டும் பிரேம்குமார். லாரிகளின் இரைச்சல் கேட்டு இருட்டில் திடுக்கிட்டு எழுந்து, வியர்வைத் துளிகள் கொட்டும் ஒரு பெண்ணின் முகம் காண முயன்றுகொண்டு அவர் படுத்திருந்திருப்பாரோ?

மாலேயில் வராந்தாவில் சாலேயைப் பார்த்துக்கொண்டு நின்றிருக்கலாம். நகரத்தின் துடிக்கின்ற ரத்த நாளம், வீட்டில் படுக்கைப் பலகையின்மேல் படுத்துத் தூங்கும்போது கனவு கண்ட நகரம் இதாக இருக்குமோ? ஆட்களின் ஆரவாரம் அடங்கியது. கம்பிகளேச் சுற்றிலும் மஞ்சள் வெளிச்ச ஒளிவட்டம் மயங்கி வீழ்ந்து நடுநிசியில் தெளிவற்ற கனவுபோல கிடக்கும் நாற்சந்தியை நோக்கி நிற்பதுண்டு.

கல்லூரி விடும் நேரத்தில் வராந்தாவில் நிற்கக்கூடாது என்பது தான் விதி. ஆனால், அவ்வழியே கடந்து செல்லும் பெண்களைப் பார்க்கப் பலரும் அங்கே வந்து நிற்பார்கள். எங்கும் சைக்கிளின், குதிரை வண்டிகளின் வர்ண மயம். உருண்டைத் தூண் களின் மறைவில் சிகரெட் பிடித்துக்கொண்டு காத்து நிற்பவர்கள் ஒரு நிமிடத்துக்காகத் தவம் செய்துகொண்டிருப்பார்கள்.

மேலே பார்த்தபடி ஒரு நிமிஷம்—ஒரே நிமிஷம்—

வராந்தா காலியான பின்புதான் சேது அறையிலிருந்து வெளியே வருவான். வெளியே இருக்கும் மாணவர்கள் தெரிந்த வர்களே. அவர்கள் முன்பாகத் தானாகவே வெட்கத்தால் குறுகிப் போவான்.

இரண்டு மாதத்துக்கு முன்பு ஹாஸ்டலில் சேர்ந்தவுடனேயே அவனுக்குப் பட்டப் பெயர் கிடைத்துவிட்டது.

'கடுக்கன்!'

கடுக்கன் அணிந்த பையன் அவன் ஒருவன் மட்டுமே. நினைவுக் கெட்டிய காலம் முதலே சிவப்புக் கல் பதித்த கடுக்கன் காதில் இருந்து வருகிறது. ஆனால் அது ஆபத்தாக மாறும் என்று அங்கு வந்தபோது அவன் எண்ணவில்லை. ஒரு ஞாயிற்றுக்கிழமை; மெயின் ஹாஸ்டலிலிருந்து கரி கலக்கப்பட்ட தண்ணீரும் டப்பாக் களும் செப்புப் பாத்திரங்களுமாக பையன்களின் ஒரு கூட்டம் ஓடி வரும்போது யாரோ ஒருவன் கூறினான்: ''சீனியர்கள் வர்றாங்க, ராக்கிங் இருக்கு.'' கிணற்றடிக்குப் பலபேரை இழுத்துக்கொண்டு போனார்கள். சாத்தியிருக்கும் அறைக் கதவுகளை அடித்து உதைக்கும் சத்தம் கேட்டது. ஒன்றுமே புரியவில்லை. விசாரித்த படியே பெரும் பீதியோடு ஓடினான். கும்பலுக்கிடையே வார்டனின் வீட்டை அடைந்து, பதைபதைப்போடு சொன்னான்: ''சீனியர்கள் 'பிரேம் குமாரை' ஆக்கிரமிச்சிருக்காங்க.'' வார்டன் கேட்ட போது பெயர்களையெல்லாம் சொன்னான். விசாரித்துப் பார்க் கிறேன் என்று அவர் சாவதானமாகக் கூறியபோது தனக்கேற் பட்ட விசனத்தை அவன் வெளிக்காட்டிக் கொள்ளவில்லை.

பலவிடங்களில் தங்கி நின்று பயந்து பயந்து இறுதியாக ஹாஸ்டலை அடைந்தபோது போர் முன்னணி அமைதியடைந் திருந்தது.

அறையின் சக மாணவன் சுவாமி சொன்னான்: ''அவங்களுக்கு எல்லாம் தெரிந்திருக்கு.''

சிவப்புக் கல்லுப் பதித்த கடுக்கன் அணிந்த பையன்தான் காட்டிக்கொடுத்திருக்கான். சுவாமியின் உதவியோடு கடுக்கனை

கழற்றிவிட்டான். அதை ஒரு காகிதத்தில் வைத்து மடித்துப் பொட்டலமாக்கிப் பெட்டியின் அடிப் பகுதியில் பத்திரமாக வைத்துவிட்டான்.

இனி யாருமே தன்னை அடையாளம் கண்டுகொள்ளமுடியாது என்று மனதுக்குள் அவன் நம்பிக்கொண்டிருக்கும்போதே, இரவில் அவர்கள் வந்துவிட்டார்கள். நிர்வாணமாக்கினார்கள்; செருப்பு மாலை போட்டு எல்லா அறைகளின் முன்பிலும் வெளிச்சத்தில் காட்சியளிக்கும்படி செய்தார்கள். இறுதியில், விடுதலை செய்யப் படும்வரை அழவில்லை. அடக்கிக்கொண்டு வந்துவிட்டான். தொண்டையில் வேதனை ஒரு கனமுள்ள பொருளாக மாறி தங்கி யிருந்தது.

வராந்தாவில் மாலை நேரங்களில் காத்து நிற்க வருபவர்கள் தன்னை மறந்து போயிருப்பார்கள் எனினும் அவர்கள் பார்க்கும்படி யாக வெளியே வர அவனுக்கு மனம் வரவில்லை.

மூலையில் மூன்று உருண்டைத் தூண்களை அடுத்து நின்று பார்த் தால் ஒரு பர்லாங் தூரத்துக்கப்பால் இருக்கும் பெண்கள் ஹாஸ் டலின் மேல் பகுதியில் இரண்டு ஜன்னல்கள் இருப்பதைக் காண லாம். இரவில் மஞ்சள் திரைச் சீலைகளுக்குப் பின்னால் நிழல்கள் நடமாடுவதைக் காணமுடியும். அதைப் பார்ப்பதற்காக 'வார்ட னின் சுற்று' முடிந்தவுடன் சேதுவின் அறைக்கு அருகில் உள்ள வராந்தாவில் பலரும் வந்து சேருவார்கள். பெண்ணின் நிழல்.

—அது மாலினி அல்ல, லீலாவதி. மாலினியேதான். பந்தயம்?

எப்படிக் கண்டுபிடிப்பது?

பையனூர் பாலகிருஷ்ணன் ஒரு புதிய வழியைக் கூறினான். நாள்தோறும் ஒரு மத்தாப்புக்குச்சியைக் கிழித்துத் தீர்ப்பான்.

அங்கே நிழல் தெரிந்தது. மஞ்சள் திரைத் துணிக்குப் பின்னால் நிற்கும் மாலினியின் முகத்தைக் காணத்தான் மத்தாப்பு வெளிச்சம்.

முடிந்தவரை பாலகிருஷ்ணன், கணபதி, சிவசங்கரன் ஆகி யோரின் கூட்டத்திலிருந்து விலகியே சேது நின்றான். அவர்கள் இரவிலே மதிலைத் தாண்டிச் சினிமாவுக்குப் போவார்கள். பெண் களின் பின்னாலேயே சைக்கிளில் சுற்றுவார்கள். சிகரெட் பிடிப் பார்கள். அவர்களைப்போல செலவழிக்க அவனிடம் பணமில்லை. அதனால், அடக்க ஒடுக்கமுள்ள நல்ல பையனாக விலகியிருக்க உறுதி செய்து கொண்டான்.

பெரும் வியாபாரி ஒருவரின் மகன்தான் சுவாமி. என்றாலும் பணம் செலவழிப்பதில்லை. சிறியதோர் பாக்கெட் நோட்டுபுத்தகத் தில் அன்றைக்குச் செலவு செய்ததையெல்லாம் முறையாக எழுதி வைப்பான். சுவாமியிடம் எப்படியும் ஒரு டீயாவது வாங்கிக் குடித்துவிட வேண்டும் என்று ஒரு வாரம் முழுவதும் சிவசங்கரன் முயற்சி செய்தான். சுவாமி காபி குடிக்க போகும் நேரம் பார்த்து, கூடவே செல்வான். இறுதியில் சிவசங்கரன் சுவாமியை தோல்வியடையச் செய்துவிட்டான். அன்று சுவாமி நோட்டுப் புத்தகத்தில் வெறுப்போடு தனக்குத்தானே முணுமுணுத்துக் கொண்டு எழுதினான்.

தர்மம்=0—1—0

இரண்டாம் தேதி அனுப்பிக் கிடைத்த பணம் அறுபது ரூபா யாகும். ஹாஸ்டல் பாக்கியையும் வண்ணான் கணக்கையும் தீர்த் தால் பிறகு பத்து ரூபாய் மிச்சப்படுவது கஷ்டம். ஒரு மாதம் முழு வதையும் அந்தப் பத்து ரூபாயில் தான் ஓட்டவேண்டும்.

பண விஷயத்தைத் தெரியப்படுத்தாமலே சம்பந்தப்பட்ட பலருக்கும் கடிதம் எழுதினான். ''அன்புள்ள சங்கரன்குட்டி அண்ண னுக்கு, அங்குள்ள நீங்கள் எல்லோரும் நல்ல சுகமென்று கருது கிறேன். நான் ஜூனில் கல்லூரியில் சேர்ந்துவிட்டேன். ஹாஸ்ட லில்தான் தங்கியுள்ளேன்''—

கல்லூரியில் படிக்கும் சேதுவிடம் மகிழ்ச்சியோ அன்போ ஏற் பட்டு யாராவது கொஞ்சம் காசு—சிலர் பதில் அனுப்புவார்கள். எல்லோருக்கும் மகிழ்ச்சிதான்.

சனிக்கிழமை. ஹாஸ்டல் சிப்பாய் ராம கிருஷ்ணன் கீழே யாரோடோ வழக்கிடுவதைக் கேட்டுத்தான் படியிறங்கினான். கேட்டுக்கு அருகில் பையன்கள் பலரும் கூடி நின்றார்கள். கிழிந்து போன துணிமணிகளோடு வாடிக் கருத்த நிலையில் ஒரு பெண். கறுத்து, அழுக்குப்படிந்து இருந்த குழந்தை ஒன்றுக்கு அவள் மார் பகத்தில் பால் கொடுத்துக் கொண்டிருந்தாள். பையன் ஒவ் வொருவரும் ஒரு அர்த்தம் கற்பித்து தங்களுக்குள் பேசிக்கொண் டிருந்தார்கள். அவள் நாணமடையாமல், வரண்ட தனது முலைக் காம்பை கடித்து இழுக்கும் குழந்தையைத் தாலாட்டிக்கொண்டு ராமகிருஷ்ணனோடு பேசிக்கொண்டிருந்தாள்.

கொழிந்தாம் பாறையைச் சேர்ந்தவள். தமிழ் கலந்த மலையாளத்தில் அவள் பேசினாள். குழந்தையின் தகப்பனைத் தேடிக் கொண்டு ஒன்பது மைல் நடந்து வந்திருக்கிறாள். அவன் கூறி யிருந்த ஓர்க் ஷாப்பில் போய் விசாரித்தபோது, அப்படிப் பெயருள்ள ஒருவர் அங்கே இல்லை என்ற பதிலே கிடைத்தது.

ஹரிதாஸன் கொண்டுவந்து கொடுத்த நாவல்களில் வரும் கதாநாயகிகள் தான் அப்போது நினைவுக்கு வந்தார்கள். தெய்வமே, சுமித்திரா!

* * *

—சொல்லுடீ, சொல்லு. உன்னைக் கொண்டே வரவழைக்கிறேன்.

—நீ சொல்ல மாட்டே? கேடுகெட்டவளே, நீ சொல்ல மாட்டேடி!

வடக்கு வீட்டு அத்தை தூணில் கட்டி அடித்து சொல்லச் சொன்னபோது—அதை நினைத்துப் பார்த்தபோதே நடுக்க மேற்பட்டது.

படிக்க அமர்ந்தபோது மனது உறுதியாக நிற்கவில்லை.

மேற்கு வீட்டில் உள்ள ஆண்களைப்பற்றி இதுவரை ஒரு பழியும் கேட்டதில்லை. சேது மிகவும் சாது. புத்திசாலி. எல்லோரும் சாதுவாகக் கருதிய அவன்தான், அவனேதான் இதைச் செய்திருக்கிறான்!

சுவாமி எட்டு மணியிலிருந்து பத்து மணிவரை மட்டுமே படிப்பான். பத்து மணிக்கு இரண்டு மேசைகளை அடுத்தடுத்து இழுத்துப் போட்டு ஒன்றாக்கி, மூலைகளில் அடித்துள்ள ஆணிகளில் கொசு வலையின் கயிறுகளைக் கட்டி, பாதுகாப்போடு, பிரார்த்தனை செய்தபின் படுத்துக்கொள்வான். அதிகாலை ஐந்து மணிக்கு எழுந்திருப்பான். சேது தாமதமாகவே படுக்கச் செல்வான். காலையில் ஏழு மணிவரையாவது தூங்கவேண்டும்.

கொழிந்தாம் பாறைக்காரிக்கு எல்லோருடமிருந்தும் வசூலித்து ஒரு ரூபாய் கொடுத்து அனுப்பினார்கள். அதில் சுவாமியினுடைய தர்மமாக ஒரணாவும் சேர்ந்திருந்தது. அதைக் கணக்குப் புத்தகத்தில் குறிக்கும்போது சுவாமி சொன்னான்:

''ஓர்க் ஷாப்பிலே ஆளைப் பார்த்திட்டா வர்றா? சுத்தப் பொய். இந்த மாதிரித் தான்தோன்றித் தனத்துக்கெல்லாம் நல்லா சுடச் சுட ரெண்டு குடுக்கணும்!''

சேது ஏதும் பேசவில்லை. சுவாமி படுத்திருந்தபோது கீழே மெத்தையை ஒருக்கணித்து விளக்கணைத்துவிட்டுப் படுத்துக்கொண்டான். சுமித்திராவைப்பற்றி நினைக்காமலிருக்க முயற்சித்தான். லாரிகளின் பேரிரைச்சல் இறக்கத்தில் அடுத்தடுத்து வந்துகொண்டிருந்தது. அதிகரித்துப் பின்பு சிறிது சிறிதாக அகன்று போவதைக் கவனித்தான். நான்காம் வகுப்பில் படிக்கும் காலத்தில்தான்

கும்மானிக் குளத்தில் புலேயப் பெண்ணின் பிணம் மிதந்து கிடப் பதைக் காண ஆட்கள் கூடி நிற்பதைக் கண்டிருக்கிறுன்.

தூக்கம் வந்தபோது, ஈந்தை மரக்கூட்டங்கள் சுற்றி வளர்ந் திருக்கும் வயல் பக்கத்தில் உள்ள வரண்ட குளத்தில் கிடக்கும் பிணத்தைக் கனவில் கண்டான். திடுக்கிட்டு எழுந்தான். நேரம் என்ன என்பதை அறிந்துகொள்ள முடியவில்லே. உடல் வியர்த்துக் கொட்டியது. தனது இதயம் வேகமாக அடித்துக்கொண்டிருப் பதை அவனுல் நன்கு கேட்க முடிந்தது. ஜன்னல் கம்பிகளிடையே தெரு விளக்குகள் ஒளியுமிழ்ந்து கொண்டிருப்பதைக் கண்டான்.

சுமித்திராவை மனத்திலிருந்து அகற்றவேண்டி வகுப்பிலுள்ள பெண்களேப்பற்றிச் சிந்திக்கலானுன். எல்லோரும் பெரிய பெண் கள். பாவாடையுடுத்திவரும் சியாமளா நாயர்தான் அவர்களில் மிகவும் இளேய பெண்.

சியாமளா நாயர்.

ஆரம்பத்தில் 'அட்டன்டென்ஸ்' கூப்பிட்டபோதே அந்தப் பெயர் அவன் கவனத்தில் பட்டது.

த்ரீ ஹன்ரட் அண்ட் சிக்ஸ்ட்டி—சேது மாதவன்.

சாவித்திரி எம்.

சாவித்திரி பி. ஆர்.

சோம சுந்தரம்.

சியாமளா நாயர்.

சியாமளா நாயருடைய சிறிய முகத்தைப் பார்த்தால் மின்னிப் பொழியும் கறுத்த பெரிய கண்கள் மட்டுமே தெரியும்.

வகுப்பு முடிந்து வரும்போது பலருக்கு பலதும் பேசவேண்டி யிருக்கும். மாலினி குஞ்ஞிக்கிருஷ்ணனேப் பார்த்தாள். நளினி சந்திரனேப் பார்த்துச் சிரித்தாள். குள்ள ராஜன் ஒரு நகைச் சுவையை உதிர்த்தபோது அச்சாம்மா சிரித்தாள். யாரும் சியாமளாவைப்பற்றிப் பேசவில்லே.

அப்போது தனக்குள் வேண்டிக்கொண்டான். தனது உள்ளார்ந்த ஆசை வேண்டுதலாக மாறியது. யாராவது தன்னே ஏறிட்டுப் பார்க்க நேர்ந்தால், அப்படிப் பார்ப்பவர் சியாமளா நாயராகவே இருக்கவேண்டும். சியாமளாவின் பெருங்கண்கள் ஒருமுறை தன்மீது படவேண்டும்.

ஒரு சமயம்—

மணியார்டர் வந்த நாளன்று காபி குடிக்க வெளியே போயிருந்தான்—சிவசங்கரன் வற்புறுத்தியதால் போயிருந்தான்.

சுவாமி நழுவிவிட்டான். சிவசங்கரனும் பிரபாகரனும் சேதுவும் போயிருந்தார்கள். சிவசங்கரனுக்கு வாரத்துக்கு ஒருநாள் பிரியாணி சாப்பிடவேண்டும்.

பி. டீமுக்குத் தேர்வு கிடைக்கப் பெற்ற சிவசங்கரன் உடலை நன்ருக வைத்துக்கொள்ளவேண்டும் என்பதில் மிகவும் கவனமாக இருந்து வந்தான். அதனுல் 'மதராஸ் கபே'க்குள் நுழைந்தான்.

சேது பிரியாணி வேண்டாமென்று கூறிவிட்டான். சாப்ஸும் வேண்டாம்.

''வெஜிட்டேரியன்?''

''யெஸ்.''

பொய் சொன்ஞன்.

இன்றைக்கு சிவசங்கரன் பணம் கொடுப்பான். அடுத்த வாரம் சிவசங்கரன் அழைக்கும்போது—

ஹைஸ்கூலில் படிக்கும்போது பாலன் நாயருடைய ஹோட்டலுக்குச் சாப்பிடச் சென்ருல் இறைச்சி பரிமாறும்போது நாவில் நீர் ஊறும். ஒரு பிளேட் மட்டனுக்கு நாலணு தனியாகத் தர வேண்டும். புதன்கிழமை சந்தைக்குப் பாய் விற்க வரும் தடியன் மூத்தான் இரண்டு பிளேட்டுக்கு ஆர்டர் கொடுப்பான். மூத்தானை பொருமையோடும் பகையோடும் பார்த்தபடி நின்றுவிட்டுப் போனதுண்டு. புவனேஸ்வரி பூஜைக்கு கோழியை அறுத்து வைக்கும்போது, அதை எண்ணெயில் பொறித்த வாடையை நினைத்தால் வாயே வெள்ளமாகிவிடும்.

எனினும் தனக்குத்தானே எச்சரிக்கை செய்துகொண்டு சொன்ஞன்:

''எனக்கு டீ மட்டும் போதும்.''

மங்கிய கண்ணுடித் துண்டுகளால் தனிப் பகுதியாக அமைக்கப் பட்ட சிறிய அறையொன்றில் இருந்தபடி சிவசங்கரன் ஆர்டர் செய்தான்.

கைகழுவப் போய்விட்டுத் திரும்ப வந்த சிவசங்கரன் ரகசியமாகக் கூறிஞன்:

''அடுத்த அறையில் நம்ம வகுப்பிலே படிக்கிற சியாமளா நாயர் இருக்கு.''

''வேறே யாரு இருக்கா?''

''யார் யாரோ!''

பிரபாகரன் கூறினன்: ''அந்தப் பெண்ணேடை தகப்பனர் இங்கே ஒரு அட்வகேட்டாக இருக்கார்.''

சாவதானமாக ருசியோடு சாப்பிடும் சிவசங்கரனைச் சபித்தான். அவள் இறங்கிப் போகும்போது கூடவே இறங்க வேண்டும். 'மதராஸ் கபே' என்ற பெரிய ஹோட்டலிலிருந்து வயிறு புடைக்கச் சாப்பிட்டுவிட்டு இறங்கிப் போகும் சேதுவை அவள் பார்க்க வேண்டும்.

அடுத்த அறையிலிருந்து ஆண்களின் குரல்தான் கேட்டது. பில்லை எடுத்துக்கொண்டு கௌண்டரில் நின்றபோது சிவசங்கரன் ஒரு சிகரெட் வாங்கிப் பற்றவைத்தான்.

''பிரபாகரனுக்கு வேணுமா?''

பிரபாகரன் சந்தேகித்தான் என்ருலும் டின்னிலிருந்து ஒன்றையெடுத்தான்.

''சேதுவிடம் கேட்கவேண்டியதில்லையே.''

''வேணும்!''

தைரியமாகச் சிவசங்கரனின் முகத்தைப் பார்த்துச் சொன்னபோது அவனுக்கே நம்பிக்கை ஏற்படவில்லை.

சிகரெட்டை வாங்கிப் பற்றவைத்து, இழுத்து புகையை வெளியே விடாமல் துப்பிக்கொண்டே கீழேயிறங்கி ரோட்டில் வந்தபோது சியாமளா நாயரும் அவளோடு உள்ளவர்களும் இறங்கிப் போவதைக் கண்டான். வீட்டைச் சேர்ந்தவர்களாக இருக்கும். கம்பிக் கிராதிகளுக்கு அப்பால் நிறுத்தப்பட்டிருந்த காரில் அவர்கள் ஏறினர்கள். தடித்த கண்ணுடி போட்டிருந்த ஒருவன் காரை ஓட்டி வந்தபோது, சிகரெட் புகையை விட்டுக்கொண்டு அவர்கள் நிற்கும் பக்கமாக யாருமே திரும்பிப் பார்க்கவில்லை.

அடுத்தடுத்து வந்த இருமலால் மூச்சுத் திணறியது என்ருலும் சிகரெட்டை தூக்கியெறியவில்லை. ஹாஸ்டலின் மெத்தைப்படி ஏறும்போது யாரோ கோட்டார்கள்:

''உம்?''

''டௌனுக்கா?''

''ஷாப்பிங்கா?''

''இல்லே. மதராஸ் கபேக்கு.''

சிவசங்கரன் சொன்னபோது அந்த மகிழ்ச்சியில் பங்கு கொண்டவன் போல் தலையுயர்த்தி நின்ருன்.

இரவு சுவாமி கேட்டான்:

''நீ சிகரெட் குடிக்கிறதுண்டில்லையா?''

''இல்லை.''

''பொய் பேச வேண்டாம். வாசனையடிக்குது.''

சுவாமியின் முன்பாக கூனிக் குறுகிப் போய்விட்டான்.

''ஒண்ணேயொண்ணு குடிச்சேன். பழக்கமாக்கிக்கலே, சுவாமி.''

ஓய்வு நேரத்தில் நூலகம் போய் படிக்கும் சேதுவைப் பற்றி சுவாமிக்கு அதுவரை நல்ல அபிப்பிராயம் இருந்தது. கெட்ட பையன்களோடு சேருவதில்லை. பித்தலாட்டம் பேசுவதில்லை. ஆனால், ஊரில் நடக்கப்போவதை அறியும்போது சுவாமியும் மற்றவர்களும் என்ன சொல்லுவார்களோ?

எல்லா இரவுகளிலும் தூக்கம் வராமல் படுத்தபடி தனக்குத் தானே சபித்துக் கொண்டான்.

* * *

மாடி அறைக்குச் சுமித்திரா வந்தபோது எதையுமே நினைத்துப் பார்க்கவில்லை.

யாரிடம் சந்தேகம் கேட்பாள்? பதினாறு வயதானவன் தகப்பனாக முடியுமா?

ஒரு வாரத்துக்குப் பிறகு பரமேஸ்வர அண்ணனிடமிருந்து கடிதம் வந்தது. கவரில் பரமேஸ்வர அண்ணன் கடிதம் எழுதுவது அபூர்வமாகும்.

யாருமில்லாத வராந்தாவின் மூலையில் கொண்டுபோய் உடைத்தபோது கைகள் நடுங்கலாயின. தெய்வமே ஒருமுறை மன்னிப்புத் தா. . . இனி இதுபோல் திரும்பச் செய்யமாட்டேன். செய்த தவறுக்கு மன்னிப்புக் கொடு.

படித்து முடித்த பிறகுதான் சேதுவுக்கு மீண்டும் மூச்சு வந்தது.

நெஞ்சத்தில் வீசிய புயற்காற்று ஒரு வழியாக அடங்கியது. மனம் சாந்தமடைந்தது.

அடுத்த மாதத்தில் கல்லூரிக் கட்டணம் கட்டவேண்டும். அறுபது ரூபாய் மட்டுமே அனுப்ப முடியுமென்று அப்பா கடிதம் எழுதியுள்ளார். இரண்டு தடவைகளில் கல்லூரிக் கட்டணம் கட்ட முடியுமா என்பதை ஆபீஸில் விசாரித்துத் தெரியப்படுத்தவும்—நீ மைக்கல்மஸ்ஸுக்கு வருவாய் என்று கருதுகிறேன்.

எல்லாம் தெரிந்துவிட்டது. மைக்கல்மஸ்ஸுக்கு வரும்போது தகர்த்தெறியக் காத்திருக்கிறார் போலும்.

தனது தவறைப் பற்றி எண்ணிப் பார்த்தபோது துக்கம் ஏற்பட்டது. உலகத்தின் அழகு முழுவதும் சுமித்திராவிடம் ஒன்றுசேர்ந்து ததும்பி வழிவதாகக் கருதியது பைத்தியக்காரத் தனம். பெவிலியன் ஹாலில் உள்ள பால்கணியில் நிறைந்திருக்கும் வண்ண உலகைப் பார்த்தபோதுதான் தனது குற்றத்தைப் பற்றிய சரியான அறிவே ஏற்பட்டது.

[2]

ஓணம், மைக்கல்மஸ் விடுமுறைகள் ஒன்றாக வந்தன.

சுவாமி பெட்டி கொண்டு போக எண்ணியதனால் தோல் பையைக் கடன் வாங்கலானான். சலவை செய்த சட்டையையும் வேஷ்டியையும் இரண்டு மூன்று புத்தகங்களையும் பைக்குள் வைத்தான்.

வெள்ளிக்கிழமை இரவு இரண்டு மணிக்கே அவ்விடத்தை விட்டு அகன்றான். அன்று ஹாஸ்டலில் இரண்டு வார விடுமுறை யின் தொடக்க விழாவாக இருந்தது. எல்லோரும் கல்லூரி திறந்த பிறகு முதன் முறையாக ஊருக்குத் திரும்பிக்கொண்டிருக்கும் சமயமது.

விழாவில் பங்கெடுத்துக் கொள்வதைக் குறிக்கும் வகையில் சேது சிரிப்புமயமாக இருந்தான். கேரம் விளையாடினான். விருந்து முடிந்தபின் கிடைத்த சிகரெட்டைப் புகைத்தான். விழாவின் இடையே அர்த்தமற்ற முறையில் சிரித்துக்கொண்டு நிற்கும் போது, காலையில் வீட்டையடையும் சமயம் நிகழவிருக்கும் நிகழ்ச்சி கள் மனத்திரையில் தோன்றிக்கொண்டிருந்தன. பயத்தை வெளியே காட்டிக்கொள்ளாது, மனக்கவலையுடையவனாக தனியே இருக்கப் பயந்து அவன் கூட்டத்தில் நின்றான்.

—'ஒருவேளை நான் திரும்பி வரமாட்டேன். . . யாரும் அறிய முடியாத ஏதாவது ஒரு இடத்திற்குப் போய்ச் சேருவேன். அறிமுக மான முகங்களிலிருந்து சேது ஓடி ஒளிந்து ஆகாதவனாக ஆகிவிட நேரலாம்.'

முதலில் பாவம் செய்யத் தூண்டியது பாம்பாகும்.

முன்புற மாடியில் ஜன்னல் இடைவெளியினூடே பார்த்துக் கொண்டு நிற்கும்போது பாம்பு அவன் மனதில்தான் தன் படத்தை விரித்தது. மேற்குப்புறக் கணவாய் வழியே ஓலைப்பனைகளை ஆட்டிக்

கொண்டு சீறியடிக்கும் கொடிய குளிர் காற்றில், திறந்த பிளாட்பாரத்தில் நிற்கும்போது, பைபிளில் பாவத்தைப் பற்றிய கதையை வெறுமனே நினைக்கும்படியாகியது.

வீரமிக்க ஒரு காட்சி:

அவளைத் தொடவேண்டாம். அம்மா நான்தான் காரணம். குற்றம் என்னுடையதுதான்.

ஏண்டா, நீ!

ஆமாம், நானேதான்.

என்று கூறி தலையைத் தாழ்த்திக்கொள்கிறான். கண்ணீர்த் துளிகள் சிந்தியதால் நனைந்த மண்ணைப் பார்த்தவாறு மங்கையின் கையைப் பிடித்தபடி அகன்ற உலகை நோக்கி கீழே இறங்கும் போது, இதயம் அவள் கேட்கும்படி சத்தமாக உருப் போடுகிறது; 'உனக்கு நான் இருக்கிறேன்.'

அப்பாவின் முகமும் பரமேஸ்வர அண்ணனின் முகமும் மன தில் தெளிவாகத் தோன்றிய காட்சி மின்னல் வெளிச்சத்தில் கண்ட வழிப் பாதைப் போல சட்டென்று தோன்றி மறைந்து இருட்டாகி விட்டது.

மணியோசை, நீண்ட பிளாட்பாரத்தில் நெடு நீளத்தில் சல சலப்பு எழுப்பியது.

பிளாட்பாரம் முழுவதும் பையன்கள், காசர்கோடு வரையுள்ள வர்கள் இருந்தார்கள். பெட்டிகளும் பைகளும் உதட்டில் புகை தெரியும் சிகரெட்டுகளுமாக நடக்கும் சிறு சிறு கூட்டங்கள் விசி லடிக்கின்றன. ஆங்கிலத்தைக் கலந்து உரக்கச் சத்தமிட்டுப் பேசுகின்றார்கள். இதன் மூலம் தாங்கள் கல்லூரி மாணவர்கள் என்பதை சிறிது விளம்பரப்படுத்திக் கொள்கிறார்கள்.

இடித்தும்... தள்ளியும் அடித்தும் குத்தியும் புகைவண்டிகளி னுள்ளில் ஏறி விழும் மனிதர்களைப் பார்த்தபடி சேது அச்சத்தோடு சற்று விலகி நின்றான். உடன் வந்தவர்கள் தொடர்ந்து பின்பற்றி வராததால் அவர்களைப் பற்றி தகாத பேச்சுகள். இடத்தைப் பிடித்துவிட்ட பெருமிதங்கள். ஓடிக்கொண்டிருக்கும் பயணிகளின் இரும்புப் பெட்டிகளிலிருந்து தங்களுடைய உடலைப் பாதுகாத்துக் கொள்ள இயலாதவர்களின் வேதனைகள்.

கண்ணனூர்காரன் ராகவன் நம்பியார் டர்க்கி டவல் விரித்துப் பிடித்திருந்த இடத்தின் ஒரு பகுதியைத் தந்தான். கக்கூஸின் வாசற்படிக்கு சமீபத்தில் கடுக்கன் அணிந்து தலைப்பாகை கட்டிக் கொண்டிருக்கும் கிழவனின் அருகில் ஜன்னலை ஒட்டி நிற்கும்

பெண்ணைக் காண சேது முயன்றான். உண்ணி ஆசிரியர் 'மைனர் போயம்ஸ்' தொடங்கிய வகுப்பில் தெளிவாகப் புரிந்துகொண்ட 'ஷிவல்ரி'யின் பொருளை அறிந்தவர் யாருமே தன்னைப் பார்க்க வில்லை என்று தன்னைச் சமாதானப்படுத்திக் கொண்டான்.

வண்டியினுடைய தாளத்திற்கேற்ற சலனத்தில் தூக்கத்தின் வயப்பட்ட உருவங்கள் சுற்றிலும் ஆடிக்கொண்டிருந்தன. வியர்வையின் துர்வாடையும் பீடிப்புகையின் நாற்றமும், மூச்சுக் காற்றின் நெடியும் மூக்கைத் துளைத்தன. மேல்தட்டில் ஓலைப் பெட்டிகளும் இரும்புப் பெட்டியும் ஏற்றி வைத்திருந்த 'லக்கேஜ் பெர்த்'தில் இடமுண்டாக்கி சுருண்டு படுத்திருக்கும் பய்யனூர்க் காரன் பாலகிருஷ்ணனோடு நம்பியார் கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்தான். இறுதியில் அவனும் தூங்கிவிட்டான்.

இருளடர்ந்த இரவின் குகையில் ஊர்ந்து செல்லும் உயிரினத் தைப் போல அனத்திக்கொண்டும் சீறிக்கொண்டும் வண்டி ஓடியது. ஜன்னல் வழியாக சிறுசிறு தீப்பொறிகள் பறந்து வந்து விழுந்து அணைந்துபோயின. கிழவனுக்கு அருகில் ஆரஞ்சு நிறத் தோலும், ஈரமும், அழுக்குமாக இருந்த அந்தப் பெண்ணும் அந்த இடத்தில் இருந்தபடி தூங்கத் தொடங்கினாள்.

மங்கிய ஒளியில் எரிந்துகொண்டிருந்த விளக்கின் கண்ணாடிக் கூடு, கழன்ற நிலையில் ஆடிக்கொண்டிருந்தது. பல்பைச் சுற்றி வட்டமிட்டுக்கொண்டிருக்கும் பூச்சிகளைப் பார்த்தபடி சேது இருந் தான்.

ஐந்தரை மணிக்கு வண்டி ஸ்டேஷனை அடைந்தது. இதை ஒரு 'மறு வருகை' என உறுதிப்படுத்திக்கொள்ள முயற்சித்தான். நாற்பத்தைந்து மைல் தூரத்திலுள்ள நகரத்தில் பெரிய கல்லூரி யில் படிக்கும் இளைஞனின் 'மறு வருகை'.

கம்பி இடைவெளிகளுக்கிடையே மேலேயுள்ள கண்ணாடி அறைகளில் மண்ணெண்ணெய் விளக்குகளின் மங்கிய வெளிச்சத் தில் தென்பட்ட ஸ்டேஷன் ஆட்கள் சுறுசுறுப்பாக இருந்தார்கள். நல்லவேளை, தெரிந்தவர்கள் யாரும் விழித்திருக்கவில்லை. இல்லா விட்டால் கேட்டிருப்பார்கள். சேதுவின் வீடு எங்கே இருக்கு? வீட்டுக்கு பெயர் என்ன? யாராவது கோடை விடுமுறையில் வீட்டுக்கு வந்து சேர்ந்தால் அதனால் ஏற்படும் விரும்பத்தகாத நிலையை நினைத்துப் பார்க்கவே முடியவில்லை. முன்பொருமுறை ஹரிதாஸன் வீட்டிற்கு வந்த அனுபவம் ஒரு வெட்கக்கேடாக மனதில் இப்போதும் தங்கி நிற்கிறது.

இருட்டு மறையும் வரை காலியாகக் கிடந்த சிமெண்ட் பெஞ்சியில் இருந்தான். தூக்கத்தின் பளு முழுவதும் கண் இமை

களில் குடியேறத் தொடங்கியபோதுதான் தோணித் துறைக்கு நடந்தான்.

பழக்கமான தோணிக்காரன் கேட்டான்:

''ஸ்கூல் சாத்தி வர்றீங்களா?''

காலேஜுக்கும் ஸ்கூலுக்குமிடையேயுள்ள வித்தியாசத்தை தோணிக்காரனுக்கு எடுத்துக்கூறி விளக்க முற்படவில்லை.

முதலில் தோணி ஏற வந்தவர்கள் தூரத்துச் சந்தைகளுக்குப் போகின்ற வியாபாரிகள்தான். பழக்கமான முகங்கள் இருக்கின்றனவா? இல்லை. சமாதானமடைந்தான்.

தோணியில் தனியாக இருந்தான். இளம் குளிர்காற்று. அறுவடைக்காகக் காத்துக்கிடக்கும் வயல்கள்.

வீட்டை அடுத்துச் சென்றபோது நெஞ்சத் துடிப்பு அதிகரித்து வந்தது.

தைரியம் முழுவதையும் ஒருசேர வரவழைத்துக் கொண்டு, பாவியிருந்த நடைக் கற்கள் மீதேறி முற்றத்தை அடைந்தபோது புலையக் கிழவி முற்றத்தைக் கூட்டிக்கொண்டிருந்தாள். திறந்து வைக்கப்பட்ட வெற்றிலைப் பெட்டியின் அருகில் இருந்த அம்மா தலைமயிரைக் கோதிக்கொண்டிருந்தாள். மாதவ மாமா பிரிமனைக் கல்லின்மீது இருந்தபடி பல்தேய்த்துக்கொண்டிருந்தார்.

முற்றத்தில் முதல் நாள் வைக்கப்பட்ட பூக்கள் வாடிப் போயிருந்தன. சாணத்தில் பொதிந்து வைக்கப்பட்டிருந்த பூக்கள் கெட்டுப்போய் சிதறிக் கிடந்தன.

பையைக் கீழே வைத்தபோது, அம்மாவின் முகத்தை ஏறிட்டுப் பார்க்க தைரியம் வரவில்லை. எப்போது ஆர்ப்பரித்து வெளியே விரட்டும்? அதற்குத் தயாராகும் சாந்தபாவமா முகத்தில்?

''எவ்வளவு நாளுடா லீவு?''

அப்பாடா! வயற்காட்டில் வீசிக்கொண்டிருக்கும் குளிர்காற்று முழுவதும் மனதில் வீசிக்கொண்டிருப்பது போன்ற குளிர்ச்சி தோன்றியது. வராந்தாவின் பக்கமிருந்தபடி நேராக மூச்சுவிட்டுக் கூறினான்:

''இரண்டு வாரம்!''

அப்போது ஆட்கள் ஓடி வருகின்ற சத்தம் கேட்டது.

''இங்கேதான்; இங்கே, ஆட்டுக்குட்டியே, உன்னை நான்''— சுமித்திராவின் குரல். ஆம், சுமித்திராவின் குரலேதான்.

மேற்குப்புற முற்றத்தில் உள்ள ஆடுகளை அவிழ்த்துவிட்டு அருகே குன்றுப் பக்கத்திலுள்ள இடைவழியில் ஏறியபோதுதான் சுமித்திரா சேதுவைக் கண்டாள்.

சிரித்துக்கொண்டு அவனை அடுத்து வந்தாள்.

எடுத்துக்கட்டிய முண்டு வேட்டியின் முந்தாணியைத் தாழ்த்திக்கட்டியபடி அம்மாவின் முன்பாக வந்து நின்று கேட்டாள்:

''சேது இப்பத்தான் வர்றியா?''

''ஆமா.''

துக்கத்தின் சிறைச்சாலையில் அடைக்கப்பட்ட நாயகியல்லவா சுமித்திரா. ஜூன் மாதத்தில் பார்த்த சுமித்திராவேதான். முன்பு எப்போதுமே காணாத விதத்தில் அவளுடைய கண்களின் உறுத்த பார்வைக்கு முன்பாக சிறிதளவு பதற்றமிருப்பதாகத் தோன்றியது. நேரிடையாகப் பார்க்காமலிருக்க முயற்சி செய்துகொண்டு அவள் கூறினாள்:

''சேது பெருத்துப் போயிருக்கு, இல்லையா அத்தே?''

அவள் யாரோடு என்றில்லாது புன்னகை செய்தாள்.

இரவில் வண்டியில் முண்டியடித்துக்கொண்டிருந்த போதிலும் மடங்கிக் கசங்காத காலரையும் முழங்கை மூட்டு மறைய மடக்கி விட்டுள்ள சட்டையையும் அவள் பார்த்திருக்கவேண்டும். ஏதாவது கூறவேண்டுமே என்பதற்காகக் கேட்டான்.

''ஓணம் என்னிக்கி?''

''வெள்ளிக்கிழமை. பரமேஸ்வரன் தெக்கே போறதா எழுதியிருக்கான்.''

''அண்ணி வீட்டுக்கு.''

''அறுவடை யாகல்லே. பின்னே எப்படித்தான் ஓணச் செலவை செய்யறதோ எனக்குத் தெரியலே. ஒண்ணுமில்லே'ன்னாலும் இங்குள்ள வீட்டு வேலைக்காரங்களுக்கும் பண்ணையாளுகளுக்கும் சோறுவது போடவேண்டாமா? ஆடம்பரமா எதுவும் வேண்டாம். வழக்கமாச் செய்யறதை நிறுத்தமுடியுமா, மாதவா—

அம்மா பிரிமனைக் கல்லை அடுத்துச் சென்றாள்; ஓக்காளமான சத்தத்தோடு நாக்கு வழித்துக்கொண்டிருக்கும் மாதவ மாமா நேராகத் திரும்பியபோது, பையை எடுத்துக்கொண்டு முன்னறைக்குள் சென்றான். உள்ளே வாசற்படியை அடைந்த போது திரும்பிப் பார்த்தான். சுமித்திராவின் கண்கள் அவனைப் பின்தொடர்ந்தன.

[3]

திருவோணச் சாப்பாடு முடிந்ததும் பரமேஸ்வர அண்ணன் திரும்பிப் போய்விட்டார், காலை பஸ்ஸுக்கு வந்தவர். அம்மா ரோஷத்தோடு கூறினுள்:

''அங்கிருந்து இங்கேவந்து ஒரு நிமிஷம் நின்னுடாதேடா! கோழைப் பய!''

முன்புற மாடியில் உள்ள சாய்வு இருக்கையின் மீது படுத்துக் கிடந்தால் நம்பூதிரி இல்லத்தின் முற்றத்தில் நடக்கும் பாட்டையும் விளையாட்டையும் கேட்கலாம்.

சாப்பிடும்போது வியர்த்தது என்ருலும் சட்டையைக் கழற்ற வில்லை. வந்த மறுநாள் சட்டையை மாட்டிக்கொண்டு நடக்கத் தொடங்கியபோது அம்மா திட்டினுள். ஆனல், அதைப் பொருட் படுத்தவில்லை. பிறகு சொல்லவுமில்லை. கட்டிலிலிருந்து வெளியே பார்த்தபடி படுத்த நிலையில் விசில் அடிக்க முயற்சித்தான்.

''சலே ஜானனஹி நைனு மிலாகெ . . .''

கல்லூரியில் மூன்று மாதத்துக்கிடையே பார்த்தது ஒரே படம்தான், 'பஊ பஹன்.' இரவில் குஞ்ஞிக்கிருஷ்ணன் அதிலுள்ள அருமையான பாடல்களை விசில் ஒலியால் பாடிக்கொண்டு நடப்பான். 'வாழ்க்கை'யை ஒன்பது முறை பார்த்த குஞ்ஞிக் கிருஷ்ணன் நகரத்தில் எங்கேயோயிருந்து வைஜயந்திமாலா வினுடைய ஒரு போஸ்டரை திருடிக்கொண்டு வந்து வைத்திருந் தான். அவளுடைய முகத்தைப் பார்த்துவிட்டுத் தூங்கவேண்டும், விழிக்கவேண்டும். அதற்காகத்தான் அதைக் கொண்டுவந்து வைத்திருந்தான்.

வடக்கு வீட்டு அத்தையும் தேவுவும் நேரத்தில் நம்பூதிரி இல்லத்துக்குப் போவதைப் பார்த்தான்.

இல்லத்தில் முன்பெல்லாம் குஞ்சாத்தால் பாட்டும் விளை யாட்டும் கற்றுக் கொடுப்பதுண்டு. அம்மாவும் சின்னம்மாவும் வடக்கு வீட்டு அத்தையும் எல்லோருமே சிறு வயதில் அங்கே விளை யாடியதுண்டு. குஞ்சாத்தால் இப்போதும் திருவாதிரைக்கும் ஓணத்துக்கும் அக்கம் பக்கத்திலுள்ள சிறுமிகளை அங்கே விளையாடுவ தற்கென்று அழைத்துச் செல்வதுண்டு. வயதானவர்களுக்கு வெற்றிலையும் நீர்மோரும் கொடுப்பதுண்டு. முன்பு ஓணக் காலங் களில் வந்தவர்க்கெல்லாம் சாப்பாடு கிடைக்கும். நான்கைந்து மணிக்கு அப்புறமும் தங்கி விளையாட வருவார்கள். இப்போது வருஷத்துக்கு வருஷம் செலவு செய்ய குத்தகைக்காரன் கோவிந்

தனின் தயவு வேண்டுமென்று மாதவ மாமா கூறுகிறார். வெற்றிலே யும் மோரும் மட்டும் என்றபோது தூரத்திலிருந்து யாரும் வருவ தில்லே. என்றாலும் ஓணம் நெருங்கினால் பார்ப்போரையெல்லாம் குஞ்சாத்தால் அழைப்பாள்.

ராமனின் வேலியைச் சுற்றிக்கொண்டு இல்லத்தின் வயல் களுக்குச் செல்லும் வழியினிடையே ஒருநாள், கிழக்கு வெளுத்த போது சேது எழுந்து உட்கார்ந்து பார்வையை ஓட்டினான். ஆம், சுமித்திரா தான்.

விரைந்து கீழே இறங்கினான். முற்றத்தில் வெயிலாக இருந்த போதிலும் வெறுமனே சாவகாசமாகச் சுற்றி நடந்தான். தனக் குள் சொல்லிக்கொண்டான்: ''இல்லே. சுமித்திராவைப் பார்க்க வேண்டியது இல்லே.''

மாதவ மாமா தூணில் சாய்ந்துகொண்டு பீடி புகைத்துக் கொண்டிருந்தார்.

வராந்தாவின் ஓரத்தில் கிடக்கும் கோரைப் பாயை எடுக்க வந்த சின்னம்மா சொன்னாள்: ''எண்ணெய் தேய்த்துக் குளிச்சு வெயிலான வெயிலில் போயிட்டு இந்தப் பொண்ணு உடலேக் கெடுத்துக்குவா. பன்னுடையை இங்கேயே இருக்கச் செய்யக் கூடாதா?''

பத்மூ இல்லத்தை நோக்கி ஓடுவதைப் பார்த்தபோதிலுங்கூட சேது பதில் சொல்லவில்லே.

மீண்டும் மேலேயுள்ள சாய்வு இருக்கையின்மேல் வந்து உட் கார்ந்தான். அப்போது சுமித்திரா போவதைக் கண்டான். இல்லத்தின் வடக்குப்புறம் போகலாம் எனச் சென்றான்.

வேப்பமரத்தின் அடியை அடைந்தபோது சுமித்திரா மெது வாக மேலே பார்த்தாள். கறுப்புக் கரைபோட்ட ஒரு புது முண்டுவை சுமித்திரா உடுத்தியிருந்தாள். சுமித்திரா சிறிது பெருத் திருக்கிறாள். நீலப் பூப்போட்ட ஜாக்கெட் இருக்கமாக இருப்பது போல் தோன்றியது. நேற்றுப் பார்த்ததைவிட இன்று சற்று அதிகமாகவே வளர்ந்திருக்கிறாள்.

கீழே வெளிவராந்தாவில் தோணிக்கார மாப்பிளாவுக்கு மாதவ மாமா சோறு போட்டுக்கொண்டிருந்தார். அம்மா அருகே எங்காவது இருப்பாள். என்றாலும் கைகளால் ஜாடை காட்டிக் கூப்பிட்டான். அம்மா முற்றத்தின் முன்புறம் இருக்கும்போது அவள் ஏறி வரமாட்டாள் என்பது தெரிந்ததுதான். என்றாலும் அங்குமிங்கும் நோக்கியபடி உச்சி வெயிலில் சிரித்துக்கொண்டு சுமித்திரா நேராக இல்லத்து வேலியைக் கடந்துபோனாள்.

தூங்கவேணும்போல் தோன்றியது. ஆனால், சுமித்திரா வரும் போது பார்க்க முடியாமல் போய்விட்டாலோ?

வாழைக் கூட்டத்துக்கிடையே இல்லத் தோட்டத்தின் வேலிக்கு அடுத்து வருவது யாராக இருக்கும்? சுமித்திராதான்.

அவள் நடையை நிறுத்தாமல், முகத்தைத் திருப்பாமல் மேலே நேராகப் பார்த்துக்கொண்டு சிரித்தபடி நடந்தாள். முன்பக்க முற்றத்தைக் கடக்கும்போது மாதவ மாமா விசாரிப்பது கேட்டது.

''என்ன சுமித்திரா திரும்பிவர்றே?''

''அங்கே யாருமில்லே. எல்லோரும் வீட்டைச் சாத்திப் பூட்டிட்டுப் போயிருக்காங்க. முற்றத்திலே பாகற்காய் காயப் போட்டிருக்கு.''

அப்போது கண்களில் மயக்கம் தெளிகிறது. வடக்கு வீட்டில் யாருமில்லை.

படியிறங்கி, சாவதானமாக முண்டை மடக்கிக் கட்டினான். கிணற்றடிக்குப் போகும் பாவனையில் கமுகுத் தோட்டத்திற்குள் நடந்தான்.

தோட்டத்தின் எல்லையோரமாக நடந்து வடக்குப்புற வளைவின் வேலியை அடுத்துச் சென்றான். வேலி சிதைந்து கிடந்தது. ஒரு நிமிடம் சுற்றிலும் நோக்கினான். யாரும் கவனிக்க வில்லை. முற்றத்திலிருந்து யாரும் பார்க்கவில்லை.

வடக்கு வீட்டு முற்றத்தில் யாரும் காணப்படவில்லை. செம் மண் பூசப்பட்ட சிறிய வைக்கோல் வேய்ந்த வீட்டைச் சுற்றிக் குளத்துக்குப் போகும் பாவனையில் நடந்தபோது அவரைப் பந்தலின் கீழே சுமித்திரா தலைமயிரை உதறிக் கோதிக்கொண்டு நின்றாள்.

''அத்தை எங்கே சுமித்திரா?''

—அவனது குரல் மிக மெல்லியதாக இருந்தது.

''எல்லோரும் இல்லத்திலே இருக்காங்க.''

''பாகற்காய் காய வச்சிருக்கு. அதனாலேதான் நான் ஓடி வந்துட்டேன்.''

சேது வராந்தாவுக்குப் போனான்.

''சேது, பழமும் உப்பேரியும் தரட்டுமா?''

''வேண்டாம்.''

அவள் மேலே வைத்திருந்த குறுந்தடியொன்றை எடுத்து வாசல் கொண்டியைத் தட்டித் திறந்தாள்.

அவள் உள்ளே நடந்து சென்றபோது பின்னாலேயே சென்றான்; உள்ளே ஒரே இருட்டாக இருந்தது. வெயிலிலிருந்து வந்ததால் கண்கள் மஞ்சப்பூத்து, ஒன்றும் தெரியவில்லை. இருட்டு தெளிந்து, தெளிவாகக் காணும்வரை காத்து நிற்கும்போது சுமித்திரா தெற்கு அறையின் வாசலைத் திறந்தாள். பயந்துபோய்விட்டான். கதவு தன் இடத்தில் சென்று நிற்கும்போது ஓசை எழுப்பியது!

பீடி புகைக்காத, டீக்கடையிலிருந்து டீக்குடிக்காத சேதுவை இப்போது யாரும் பார்க்கக்கூடாதே என்று வேண்டிக்கொண் டான்.

அவளுக்கு பின்னாலேயே தெற்கு அறையைக் கடந்தபோது மாடியின் மேலுள்ள உருண்ட கிராதிகளுக்கிடையே ஊர்ந்து வரும் வெளிச்சத்தில் ஒடுங்கிய அந்த அறையைக் கண்டான். கட்டிலில் பழைய மெத்தைகள் அடுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன. கீழே ஒரு பெரிய மரப்பெட்டி; மூலையில் உரியில் தொங்கும் புதிய பாத்திரங்கள்; எண்ணெ பிடித்த பழைய துணிகளின் சாம்பிராணி மணம் அறையில் முழுமையாக நிறைந்திருப்பதுபோல் தோன்றியது.

அடுத்தடுத்துப் பேசாமல் நின்றார்கள். மாடிக் கதவை அடைத்தபோது இருட்டு; கும்மிருட்டு. கஞ்சிப் பசையுள்ள உடை உராய்வதால் ஏற்படும் சப்தம்; வியர்வையின், சந்தனத்தின், கண் மையில் கலக்கப்பட்டிருந்த கற்பூரத்தின் குளுமையான மணம் சிந்தையை வட்டமிடலாயின . . .

''ஹார்?''

சுமித்திராவின் பீதி நிறைந்த முணு முணுப்புக் கேட்டபோது நடுக்கமேற்பட்டுவிட்டது. வெளியிலிருந்து யாரோ கனைக்கும் சத்தம் கேட்டது.

நடுங்கும் கைகளில் ஒரு நிமிஷம் விரல்களை அழுத்திப்பிடித்து அவள் எழுந்தபோது பாதிச் சிந்தையை இழந்தவனாக சேது கண் களை மூடியபடி கிடந்தான். காதில் வண்டுகள் ரீங்காரமிட்டுக் கொண்டிருப்பதுபோல் தோன்றியது.

மீண்டும் பழைய நிலைக்குத் திரும்பியபோது சுமித்திரா சிரித்துக் கொண்டு கூறினாள்:

''மாதவண்ணன்தான்.''

''உம்?''

''நீர்மொள்ளும் பாத்திரம் வாங்க வந்தாரு.''

''போயிட்டாரா?''

''போயிட்டார்.''

வெளியே மஞ்சள் வெயிலில் புறப்பட்ட ஒரு பைத்தியத்தைப் போலச் சிரித்தாள்.

சுமித்திரா பரிகாசம் கலந்த நேர்த்தியானதோர் சிரிப்புடன் நின்றுகொண்டிருந்தாள்.

''இங்கிருந்து போகும்வரைதான் இருக்கும்? பிறகு எல்லாம் மறந்துபோகும் இல்லையா?''

அவளுடைய முகத்தைப் பார்க்காமலே சொன்னான்:

''பின்னே!''

இல்லை. மறக்கவில்லை என்று சொல்லத் தைரியமில்லாததாலே பதுங்கி நின்றான்.

கமுகுத் தோட்டத்திற்குள் நடக்கும்போது தப்பிப் பிழைத்தது போன்ற ஆசுவாசம் ஏற்பட்டது. அவளுடைய மை கலந்த பெரிய கண்கள் இன்பத்தில் மூழ்கிப்போயுள்ளன.

சுமித்திரா கூவிச் சொன்னாள்:

''நில்லுங்க.''

நின்றான். அவள் அடுத்து வந்தபோது என்ன சொல்வதென்று தெரியாமல் சந்தேகத்தோடு நின்றான்.

''ஒண்ணுமில்லே. பயப்படவேண்டாம். முகத்திலே மை பட்டிருக்காண்ணு பார்த்துச் சொல்.''

நடப்பதற்கான உத்தரவுக்காகக் காத்திருப்பவனைப்போல அவன் மேலும் நின்றுகொண்டிருந்தான்.

''போங்க!''

வெப்பமும் குளிர்ச்சியுமுள்ள தோட்டத்தினூடே நடக்கும் போது வெற்றிப் பெருமிதம் தோன்றவில்லை. சுமித்திராவின் கலங்கும் கண்களைப் பார்த்தபோது தோன்றிய ஆசுவாசம்தான் மனதில் நிறைந்திருந்தது.

## [4]

மைதானத்தில் கான்கிரீட் பெஞ்சுகளிலும் பசும்புல் பரப்பிலும் ஆட்கள் இடம் பிடித்துக்கொண்டிருந்தார்கள். நான்கு மணிக்கு ஒலிபரப்பி வாயிலாகச் சினிமாப் பாட்டுகள் ஒலிக்க ஆரம்பிக்கும். வெயில் குறைந்த பிறகு, மைதானத்தில் அங்கு மிங்குமாக அமைக்கப்பட்டுள்ள மெர்க்குரி விளக்குகள் பிரகாசிக்கத்

தொடங்கும். கோட்டை விளக்குகளின் நிழலில் மனிதர்கள் தெளிவற்ற உருவங்களாக மாறிக் காணப்படுவார்கள். அவ்வாறு காணும் அந்த ஒருசில நிமிடக் காட்சியைக் காணக் காத்திருப்பது சேதுவுக்கு என்றுமே விருப்பமுள்ள ஒன்ருக இருந்தது. மனதின் தெளிவற்ற முணுமுணுப்புகள் கேட்கும் நிமிஷங்கள்.

ஆள் கூட்டத்திலிருந்து அகன்று, கோட்டையின் தென்பகுதியில் பீரங்கி உருண்டைகளின் உடைந்த சிதைவுகளுக்கிடையேயுள்ள இடத்தில் அவர்கள் இருந்தார்கள்.

ஒருமுறைதான் சேது கோட்டைக்கு உள்ளே சென்றிருக்கிருன். வயதேறிய தளர்ந்த மரக்கிளைகள் நிலத்தில் பரவியுள்ள பெரும் மரங்கள் தான் முதலில் கவனத்தைக் கவர்ந்தன. சிவப்பு வர்ணம் பூசிய ஜெயிலைச் சுற்றி நடந்தபோது, மாடியில் உறுதியாக அமைக்கப்பட்டுள்ள கம்பி வலையால் அமைந்த சாளரங்களின் வழியாக சிறையறைகளிலிருந்து காலடியோசைகள் கேட்டன.

மேலும் நடந்தபோதுதான் அலறுவது கேட்டது. அடிக்கப்படும் சப்தம். பயத்தால் நடுங்கும் உடலைத் தூக்கிக்கொண்டு வேகமாக அவ்விடத்தைவிட்டு வெளியே கடந்து சென்ருர்கள்.

அகழியில் கற்களைப் பொறுக்கி எறிந்துகொண்டிருக்கும்போது பிரபாகரன் கேட்டான்.

''என்ன ஆலோசனை?''

''ஊஹூ ம்.''

நாளைக்குக் கல்லூரி திறக்கிருர்கள். ஹாஸ்டலுக்கு இன்னும் எல்லோரும் திரும்பி வரவில்லை. மத்தியானம் சிவசங்கரனும் பிரபாகரனும் சேதுவும் சேர்ந்து கல்லூரிக் காம்பௌண்டில் வெறுமனே நடந்துகொண்டிருந்தார்கள். சிவந்த செங்கற்களைக் கொண்டு கட்டப்பட்டுள்ள பழைய ஆபீஸ் கட்டிடத்தின் முன்பாக அதனைக் கடந்து போகும்போது 'லெட்டர் பாக்ஸ்'ஸில் பி. கே. சேதுமாதவனின் பெயரில் ஒரு கடிதம் இருந்தது.

எடுத்துப் பார்த்தபோது நான்கு வாரத்துக்கு முன்பு வந்தது என்பது தெரிந்தது. திறந்தபோது ஹரிதாஸனின் கைப்பட எழுதிய எழுத்துக்கள். விசாகப்பட்டினத்தில் ஐ.என்.எஸ். ஜலஜ கப்பலில் ஹரிதாஸன் வேலை செய்கிருன். உணவும் சீருடையும் போக மாதத்திற்கு அறுபது ரூபாய் கிடைக்கிறது. ஒரு வருடம் சென்ருல் சம்பளம் உயரும். பம்பாயிலிருந்து விசாகப்பட்டினத்திற்கு முதன் முதலாகக் கப்பலில் பயணம் செய்தபோது ஏற்பட்ட அனுபவங்களை ஹரிதாஸன் விவரித்திருந்தான். நீண்ட கடிதத்தின் இறுதியில் 'பி.எஸ்.' என்று குறிப்பிட்டு எழுதப்பட்டிருந்தது.

நம்முடைய டி.கே.பி.யின் திருமணம் முடிந்துவிட்டது. ஒரு ரோல்டு கோல்டு ஏஜென்ட்தான் மணமகன். ஆளை நான் பார்த்தேன். அவலட்சணம். நடக்கும்போது ஏறுவாதமுள்ள எருமையைப் போல நடப்பான். காலில் ஒரு குலுக்கலும் உண்டு.

சேது, ஹரிதாஸனைப்பற்றிக் கூறினான். உயர்நிலைப் பள்ளி வாழ்க்கையில் ஏற்பட்ட சம்பவங்கள் நீண்ட இடைவெளிக்குப்பின் மீண்டும் நினைவில் படர்வது போன்று தோன்றியது. ஒரு வருடம் எவ்வளவு தூரமுள்ளதாக இருக்கிறது!

சிவசங்கரன் ஓணக்காலத்தில் செய்த ஒரு வீர சாகசத்தை விவரித்தான். அடுத்துள்ள ஒரு கூரை வீட்டில் ஒரு சிநேகிதி இருந்தாள். கூரை வேய்ந்து கட்டியிருந்த கயிறுகளை சிறிய கத்தியினால் அறுத்து வீட்டிற்குள் நுழைந்தபோது வீடு நல்ல இருட்டாக இருந்தது. தாயும் மகளும் படுக்கையில் அடுத்தடுத்துப் படுத்திருக்கிறார்கள் என்பது தெரியவில்லை. தவறுதலாகத் தாயின் காலை பிடித்துவிட்டான். தாய் தூக்கத்தில் பூனை என்று கருதி அதைத் திட்டினாள்.

எல்லோரும் சிரித்தார்கள். சேது சிரிக்க முயற்சித்தான்.

செர்புளச் சேரிக்காரன் ராஜனுக்கு மருந்தியல் படிப்புப் படிக்கவேண்டும் என்பது விருப்பம். ராஜனின் தகப்பனாரின் தம்பி சென்னையில் ஒரு பெரிய உத்தியோகஸ்தர். பிரபாகரனுக்கு எப்படியாவது பி.எஸ்.சி., முடித்துப் பட்டம் பெற்றால் போதும். பனாரஸில் டெக்ஸ்டைல் டெக்னாலஜி படிக்கலாம். அகமதாபாதில் ஒரு பெரிய மில்லில் டையிங் மாஸ்டராகவிருக்கும் மாமாவின் உத்தேசமும் அதுதான்.

''ஓணச் சமயத்தில் நான் என்ன செய்தேன்?''

அவிட்ட நாளன்று அப்பா வந்தார். நான்கு நாள் இருந்துவிட்டுப் போய்விட்டார். போகும்போது கைக்கடிகாரத்தைப் பற்றி பேசவேண்டும் என்று எண்ணியிருந்தான். படிவரை கூடவே நடந்தான். ஒன்றும் கூறாமலே திரும்பி வந்துவிட்டான். ஓண விடுமுறை வருமானங்களைப்பற்றி எதுவும் சொல்வதற்கில்லை. அதனால் சிரித்துக்கொண்டு கூறினான்:

''என்ன செய்யறது? வெறுமனே புத்தகம் வாசித்துக்கொண்டிருக்க வேண்டியதுதான்.''

''அதுவும் வெறுமனே.''

சாம்பிராணியின் மணம் தங்கி நிற்கும் இருட்டறையில், புது முண்டுகள் உராய்ந்து விழுகின்ற சப்தம் வேண்டுமென்றால் இப்போது கண்களை மூடிக்கொண்டால் கேட்கலாம்.

பதில் சொல்லவில்லே.

''பெரிய சத்தியவானுக வேண்டாம்; நமக்குத் தெரியாதா? உண்மையைச் சொல், வீட்டில் எத்தனே எம்.எஸ். உண்டு?''

''எம். எஸ்ஸா?''

''மெய்டு சர்வண்ட்?''

சிவசங்கரன் ஒத்தப் பாலத்தைச் சேர்ந்த ஒரு பெரிய நிலச் சுவான்தாரின் மகனுவான். தன் வீட்டு விவகாரங்கள் சிவசங்கர னுக்குத் தெரியாது.

சும்மா சொல்லி வைத்தான் சேது.

''இரண்டு பேர் உண்டு.''

''வயது?''

ஒரு பொய்யை மறைக்கப் பல பொய்கள் தொடர்ந்து சொல்லும்படி நேர்ந்தது:

''ஓல்டு வெரி ஓல்டு.''

''அவருடைய வீட்லே வேறு யாரெல்லாம் இருக்காங்க?''

''யாருமில்லே.''

''டேய், என்னேயொட்டிப் பேசவேண்டாம். எம்.எஸ்ஸி யின் பயிற்சி முடிக்காதவர்கள் யாரும் இருக்கமுடியாது.''

சேது மூளே இல்லாதவனேப்போலச் சிரித்தான். அதை அறை குறையாக ஒப்புக்கொள்வதுபோல் நண்பர்கள் எல்லோரும் சிரித்து அங்கீகரித்தார்கள்.

சிவசங்கரனும் பிரபாகரனும் வீட்டு விஷயங்களேப் பேசும் போது எதையும் வெளிக்காட்டிக்கொள்ளாமல் அமைதியாகக் கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

—சிஸ்டரிடம் சென்றபோது ஐம்பது ரூபாய் தந்தாள்.

—மாமாவின் காரில் குருவாயூர் போனேன்.

—அண்ணனின் பெட்டியிலிருந்து இரண்டு'டீ' சர்ட்டுகளேக் கைப்பற்றினேன்.

ஹாஸ்டலுக்குத் திரும்பி வந்தபோது வார்டன் வரச் சொல்லி யிருப்பதாக வாட்ச் மேன் கூறினுன்.

வார்டனின் வீட்டின் வராந்தாவில் தடித்துக் கொழுத்தவனுக முரட்டு முகபாவமுள்ள ஒரு மீசைக்காரன் நின்றுகொண்டிருந் தான்.

''இந்தக் கிருஷ்ணன் குட்டியை சேதுமாதவன் தன் ரூமில் உடன் வைத்துக்கொள்ளவேண்டும்.''

இவன் மாணவன் என்பது அப்போதுதான் அவனுக்குப் புரிந்தது.

அவன் எதுவுமே பேசாமல் நின்றுகொண்டிருந்தான்.

''கார்னர் ரூம் தானே? முன்பு மூன்று பேருக்கு ஒதுக்கப்பட்டதாகும்.'' தப்பிக்க முயற்சிக்க வேண்டாம் என்ற பொருளில் வார்டன் இதை சூசகமாகக் குறிப்பிட்டார்.

சம்மதித்து வெளியேறினுன். தடியனை மனதிற்குள்ளே சபித்துக்கொண்டே நடந்தான். சோடா பாக்டரியின் முன்பு சென்ற போது கூடவே இருந்த அவன்,

''நானும் வறேன்'' என்ருன்.

சேது ஏதும் பேசவில்லை.

''லாட்ஜிலிருந்தேன். பயங்கர ரகளை, ஒன்றுமே படிக்க முடியவில்லை.''

''எந்த 'இயர்'?''

''ஃபஸ்ட் இயர். ஹிஸ்டரி.''

எஸ்.எஸ்.எல்.சி. முடித்து ஐந்து வருடங்கள் சும்மா இருந்த கிருஷ்ணன் குட்டி மீண்டும் படிக்க வந்திருக்கிருன்.

''பெட்டியும் புஸ்தகமும் வைக்க இடம் கிடைத்தால் போதும். கிளப் ரூமிலோ வராந்தாவிலோ எங்கு வேண்டுமானுலும் நான் இருந்துக்குவேன்.''

பேசத் தொடங்கியபோது அந்தப் பருத்த மனிதன் பாவமாகத் தோன்றினுன்.

ஹாஸ்டலில் எல்லோரும் அவனிடமிருந்து பிரிந்து நிற்க முயன்ருர்கள். அவசியமானுல் மட்டுமே பேசுவான். எப்போதும் படித்துக்கொண்டே இருப்பான். இதனுல் அவனை சேதுவுக்கு மிகவும் பிடித்தது.

மாலை நேரம் வந்தால் உலாவ வெளியேறுவான். மைதானத்தில் பெரிய பொதுக்கூட்டங்கள் ஏதுமிருந்தால் சொற்பொழிவுகள் முழுவதையும் நின்று கேட்பான். இல்லையென்ருல் ரெயில் பாலத்தின் வழியே மூன்று நான்கு மைல்கள் நடந்து சென்று திரும்பி வருவான்.

ஒரு சமயம் வெளியே புறப்படும்போது சேதுவிடம் கேட்டான்:

''உலாவ வர்றிங்களா?''

''வர்றேன்.''

நீண்ட நேரம் நடந்து ஆற்றோரத்தை அடைந்தார்கள். அலங்கோலமாகச் சிதறிக் கிடக்கும் பாறைகளுக்கிடையே நெளிந்து ஓடும் ஆறு தட்டுத் தடுமாறி உருண்டு போய்க்கொண்டிருந்தது.

''சிவசங்கரனும் பிரபாகரனும் நாளை மதியம் கோயம்புத்தூருக்கு தாராசிங்கின் குஸ்தி பார்க்கப் போறாங்க'' ஏதாவது பேச வேண்டுமே என்பதற்காக இதைச் சொன்னான்.

கிருஷ்ணன் குட்டி எதிர்பாராத விதமாகக் கேட்டான்:

''உனக்கு அவரைப்போல ஆக ஆசையிருக்கா?''

சேதுவால் சட்டென்று பதில் சொல்ல இயலவில்லை.

அந்தத் தொனியில் காணப்பட்ட கௌரவத்தின் முன்பு நாணப்பட்டுப் போய்விட்டான்.

''காசுள்ள வீடுகளிலிருந்து வந்துள்ளதைக் காட்ட ஒவ்வொருத்தரும் காட்டற கோமாளித்தனங்களைப் பார்க்கும்போது எனக்கு எரிச்சலாக இருக்கு.''

கிருஷ்ணன் குட்டியின் பருத்த முகத்தின் கண்கள் நேர்த்தியான கோடுகள் போல சுழிந்தன. அவன் மொத்தத்தில் எவ்வளவு வேகமாக சிவக்கிறான்!

''ராஜ குமாரர்கள் என்ற பிரமைதான் ஒவ்வொருத்தருக்கும். நான்காண்டுகள் கழித்து ராஜகுமாரர்கள் தெருவில் இறங்கும்போது உலகம் எத்தகையது என்பதைக் காணத் தொடங்குவார்கள். அதைக் கொஞ்சம் சரியாக மனதில் பதிய வைத்துக்கொண்டால் என்ன?''

சேது பதில் கூறவில்லை.

''ஹாஸ்டலில் இல்லாவிட்டால் வகுப்பில் பத்துப் பிள்ளைகளுக்குத் தலைவனாயிருந்தேன் என்று சொல்வது பெரிய காரியமாகிவிடுமா?''

முகஞ்சுளித்தபடி சேது பேச முயன்றான்:

''நான்—''

''நான் சொன்னது உங்க விஷயமல்ல. எல்லோருடைய விஷயத்தையும் பற்றிப் பொதுவாகச் சொன்னேன்.''

''வறுமை நாணக்கேடான ஒன்று என்று எனக்கு எப்போதுமே தோன்றியதில்லை.''

''எனது வீட்டிலும் பணமில்லை.''

கிருஷ்ணன் குட்டியின் தந்தைக்கு தென்னந்தோப்புகள் இருக்கின்றன. ஐந்நூறு பறை நஞ்சை பூமி உண்டு. தென்னந் தோப்பில் கீழே விழும் கீத்து மட்டையை பொறுக்கி விற்ருல், அதிலிருந்து வரும் வருமானமே போதும். இங்கே 'ஃபேஷண பிளா'க ஆர்ப்பாட்டத்தோடு நடந்துகொள்ள நான்கு வருடம் வீட்டுக்குப் பக்கத்திலிருந்த 'ரூரல் கிரெடிட் சொசைட்டி'யில் வேலே செய்து மிச்சம் பிடித்த சொந்தப் பணத்தைக்கொண்டு தான் கிருஷ்ணன் குட்டி படிக்க வந்திருக்கிருன் என்ற விஷயத்தைச் சொன்னபோது சேது நெக்குருகிவிட்டான்.

அவன் நதியின் நடுவில், பாறையின்மீது யாரோ ஒரு சந்நியாசிக்காக வேண்டி கருங்கல்லில் நிர்மாணித்த விசித்திர மான கட்டிடத்தை நேரே பார்த்துக்கொண்டிருந்தான்.

சேது கேட்காமலேயே கிருஷ்ணன் குட்டி கூறிஞன். நான்காண்டுகள் கழித்துப் பட்டம் பெற்று பி.டி.யும் முடித்த பிறகு அவனுக்கு ஊரில் உயர்நிலேப்பள்ளி ஆசிரியராகவேண்டும், அவனது லட்சியம் அவ்வளவுதான்.

பழக்கமான ஒரு பெண்ணிடம் அவனுக்கு அதிகப் பிரியம் உண்டு. அது அப்பாவுக்கும் தெரியும். அந்த விஷயத்தில் அப்பா தகராறு செய்து வருகிருர்.

''மாலேயில் அப்பா குடிக்கத் தொடங்குவார். அவரது நண்பர்களும் கூடவே இருப்பார்கள். நள்ளிரவுவரை வீட்டில் ஒரே சந்தடியாக இருக்கும். அப்பா பணக்காரரானதால் அதுவும் தேவையான ஒன்றுதானே.''

''அம்மா இல்லேயா?''

''ஒன்பது வருடமாக சிகிச்சை பெற்று வர்ருங்க.''

''மெண்டல்கேஸ், மாறுதல் ஏதும் ஏற்படவில்லே. அறையை மூடிவிடவேண்டும். வீட்டு நிர்வாகம் வேலேக்காரிகள்தான்.''

கிருஷ்ணன் குட்டி சொல்லிக்கொண்டு வந்தபோது சேது மனதில் அந்தக் காட்சி நிழலாடியது. அரை வெட்கத்தோடு களே இழந்த முகத்துக்கு நேராக மகன் கொண்டு வரப்படுகிருன்.

''இதோ, என் சத்புத்திரன்! மம்பாட்டு சிவராம நாயருடைய மகனுக்குச் சம்பந்தம் கோலத்தே வ்ருஷயானுடைய வீட்டில்'' சொல்லி முடிக்கும்வரை மகன் அரைக்குள்ளேயே காத்து நிற்கவேண்டும். இல்லேயென்ருல் பெரும் கூச்சலுக்குப் பிறகு மண் பாத்திரங்களே எறிந்து உடைக்கும் சப்தம் கேட்டு அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் ஒன்றுசேர்ந்து ஓடிவருவார்கள். ரகளே கேட்டால், முனிவரைப்போல நாமம் ஜெபிக்கும் அம்மா,

உடுத்தியிருக்கும் துணிமணிகளை கிழித்து அவிழ்த்து கை கால்களில் அடித்துக்கொண்டு கூப்பாடு போடத் துவங்குவாள். அதனுல் இதை எல்லாம் சகித்துக் கேட்டுக்கொண்டு நிற்கிருன் மகன்.

'படிக்கின்ற காலத்தில் ஓய்வு கிடைக்கும்போதெல்லாம் வீட்டிலிருந்து தப்பவேண்டி அவளுடைய வீட்டில் போயிருப் பேன்.''

அது காதலாக இருக்கவில்லை என்ருன் கிருஷ்ணன் குட்டி. மண் சுவர்களும் வைக்கோலால் வேயப்பட்ட கூரையும் கரியால் மெழுகிய தரையுமுள்ள அந்தச் சிறிய வீடு, சகிக்க முடியாதபோது ஓடி ஒளிந்துகொள்ளக்கூடிய ஒரு பொந்தாகவே இருந்தது.

அப்பாவும் அவரது அடி வருடிகளும் அங்கே சென்று ரகளைப் படுத்துவார்கள். ஊரில் அதை ஒரு கேவலமாக மாற்றியது அப்பாதான்.

''சொந்தத் தகப்பனைப் பற்றி இப்படியெல்லாம் கூறுவது சேதுவுக்கு அதிசயமாகத் தோன்றும். பிள்ளைப் பருவத்தில் தெய்வமாக இருந்தார் தந்தை. சிவராமன் நாயருடைய மகன் என்று ஆட்கள் கூறும்போது பெருமையால் தலை மேலும் உயரும். வளர்ந்த பிறகு விஷயங்கள் புரியத் தொடங்கின. மேலேயுள்ள அப்பாவின் அறையில் 'காலிங் பெல்' இருக்கும். இரண்டு மூன்று முறை பெல் அடித்தால் யார் மேலே போவது என்று வேலைக்காரிகளுக்குத் தெரியும். அவள் கீழே இறங்கும்வரை வேறு யாரும் மாடிப்படி ஏறமுடியாது.''

வெறுப்புணர்ச்சி நிறைந்திருந்த கிருஷ்ணன் குட்டியின் முகத்தைக் காணுமலிருக்க, சேது உருண்டோடும் நதி முகத்தைப் பார்த்தபடி நிசப்தமாகவிருந்தான்.

ஒரு சமயம் தைரியத்துடன் அப்பாவை எதிர்க்கும்படியான நிலைமை அவனுக்கேற்பட்டது. அன்று மாடி அறையின் மேலே யாரும் பயன்படுத்தாத அறைக்குத் தன் இருப்பிடத்தை மாற்றினுன்.

'அன்று அவளுடைய வீட்டிற்குச் சென்றபோது, 'எனக்குச் சொந்தக் காலில் நிற்கும் நிலை ஏற்படும்போது, உனக்கு விருப்பமென்ருல் நான் உன்னைத் திருமணம் செய்துகொள்வேன்' என்ருன்.

பச்சை வாதத்தால் தளர்ந்துபோன ஒரு பக்கத்தைச் சூடு உண்டாக்க எப்போதும் புருக்களைச் சேர்த்துப் பிடித்துக்கொண்டு கிடக்கின்ற அவளது தந்தைக்கு கேட்கும்படியாகவே கூறினுன். அவள் ஒன்றுமே சொல்லவில்லை.

அவள் அழகியல்ல. எட்டாம் வகுப்பு வரை மட்டுமே படித் திருக்கிறாள்.

மாடி அறைக்கு அவள் அடிக்கடி வருவதுண்டு. இரவுகளில் கூட.

''அவளை நான் தொட்டதில்லை. எத்தனையோ சந்தர்ப்பங்கள் ஏற்பட்டிருந்தன. வெறுமனே பேசிக்கொண்டிருப்போம், அவ்வளவுதான்.''

பெரு வெள்ளமாக ஓடுகின்ற ஏதோ காட்டருவியின் சப்தத் தைக் கேட்பதுபோல் தோன்றியது.

''ஊரை விட்டுச் சென்றபின் அவளைப் பற்றி அடிக்கடி நினைப்பதுண்டு. அவ்வப்போது அவளுடைய கடிதம் கிடைக்கும் போது மனச் சமாதானம் இல்லாமலிருக்கும். இதுதானோ காதல்? என்றால் அறிந்துகொள்ள முடியவில்லை. நான் கல்லூரி இலக்கிய இதழில் கவிதை எழுதியவனல்லவா? இதுதானா காதல்?'' சேது மந்தகாசமாகச் சிரிக்க முயன்றான்.

ரயில் பாலத்தின்மீது அமைதியாக நடந்து போகும்போது கிருஷ்ணன்குட்டியின் முகம் சாந்தமாக இருந்தது. லாவகத் தோடு அவன் விசிலடிக்க முயன்றான். சேதுவின் மனம் ஆசுவாசப் பட்டது.

எங்கேயிருந்தாலும் கிருஷ்ணன் குட்டியின் திருமணத்திற்குப் போய்ச் சேரவேண்டுமென்று நிச்சயப்படுத்திக்கொண்டான். கிருஷ்ணன் குட்டியின் மணமகளை அறிமுகப்படுத்தும்போது சொல்ல வேண்டும்: ''தெரியும். பல வருடங்களுக்கு முன்பே எல்லாம் கேட்டறிந்துள்ளேன்.''

காதலித்துக் கல்யாணம் செய்தல் என்பது இனியதோர் உறுதி யாகத் தோன்றியது. பரமேஸ்வரண்ணனின் விவாக சமயத்தில் தான் வீட்டில் மூலை முடுக்கெல்லாம் பரமேஸ்வரண்ணனின் குடும்ப விஷயமாகவே இருந்தது. அண்ணன் படியேறி வரும்போது யாரும் எதுவும் பேசவில்லை. அண்ணன் தீரத்தோடு இந்த ரகளையின் இடையில் நின்றார். வெண்மையான, பார்க்க அழகுள்ள சரோஜினி அண்ணி பரமேஸ்வரண்ணனை காதலித்தாள்! அண்ண னுக்குப் பெருமிதம் தோன்றியது.

பரமேஸ்வரண்ணன் கறுப்பாக இருந்தார். சரோஜினி அண்ணி அப்பாவின் மருமகள் ஆவாள். அப்பாவுக்கும் அப்பாவின் வீட்டுக் கும் அது விருப்பமாகவே இருந்தது. அம்மா மட்டும் எதிர்த்து நின்றாள். காரணம் அம்மா அப்பாவின் வீட்டாரோடு எப்போதும் தகராறாக இருந்ததுதான். தேயிலைத் தோட்டத்தில் வேலை

செய்து சம்பாதித்தது அத்தனையும் மருமகளுக்குத்தான் கிடைத்தது என்பதுதான் அம்மாவின் வாதம்.

அப்பாவின் வீட்டார் குளித்துப் பிரார்த்தனை செய்ததால் தான் வீட்டில் நோய் வந்தது என்றே அம்மா சொல்லிக்கொண்டிருந்தாள்.

எல்லோரும் சேர்ந்து வற்புறுத்தி அம்மாவிடம் சம்மதம் பெற்றூர்கள். நான்கு மைல் தூரம் ஒரு உறவினர் வீட்டில் திருமணத்துக்குப் போயிருந்தபோதுதான் இது நடந்தது.

அன்று அங்கே புடவையுடுத்திய இரண்டு பெண்களை மட்டுமே காணமுடிந்தது. ஒருத்தி திருமணமாகும் பெண்; மற்றொருத்தி அண்ணி. நீல நிறத்தில் அங்குமிங்குமாக வெள்ளிச் சரிகை கொண்டு பூ வேலை செய்யப்பட்ட புடவையுடுத்தி நிற்கும் சரோஜினி அண்ணியைக் கண்டபோது பிரியமாக இருந்தது. அவளே அண்ணியாக இருக்கட்டும்.

அவள் வீட்டுக்கு வந்த சமயத்தில் குளிக்கத் துணையாகப் போவது சேதுதான். குன்றுப் பக்கத்திலுள்ள, கல்லில் வீழ்ந்து கெட்டுப் போகாத நாவல் பழங்களை நிறையப் பொறுக்கிக் கொண்டு வந்து கொடுப்பான். சின்ன ரக அரிசியைப்போலுள்ள அவளுடைய பற்கள் நாவல் பழம் தின்றதால் 'வயலெட்' நிறம் போல் ஆகியிருப்பதைப் பார்ப்பது சுவையாயிருக்கும்.

எட்டாம் வகுப்புப் படிக்கும்போதுதான், அண்ணிக்கும் அம்மாவுக்கும் தகராறு ஏற்பட்டது.

''திருச்சூர்காரப் பெண்களின் சுபாவம் எனக்கு நல்லாத் தெரியும்.''

அம்மா தொடங்கி வைத்தாள். மிகத் தாழ்ந்த குரலில் மட்டுமே பேசும் அண்ணியின் சத்தம் ஓங்கியுயர்ந்து வந்தது.

''ஏண்டி, என்னுடை மகன் காரணமா ஒரு பொண்ணு தூக்கிலோ கிணத்துலோ விழவேண்டாம்'னுட்டுதான் நான் சம்மதிச்சேன். அல்லாம திருச்சூர்காரங்களோட பிரபல்யத்தை பார்த்து இல்லே. நானு'ங்கிறதுனுலேதான் ஊர்க்காரங்க கேட்காம இருக்கிறுங்க. மகனுடை மனைவிக்கு இப்போ எட்டு மாசம்.''

''கொஞ்சம் மெதுவாப் பேசு, அக்கா.'' சின்னம்மா கெஞ்சினுள்.

அதன் பிறகுதான் பரமேஸ்வர அண்ணனும் அண்ணியும் வங்கிக்குப் பக்கத்திலேயே வீடு வாடகைக்கு அமர்த்திக் குடியேறினுர்கள்.

ஐந்நூற்று ஒன்று சோப்பினுல் ட்ரௌசரையும் சட்டையையும் சலவை செய்து சுருக்கமில்லாமல் மடித்து வைக்கும் அண்ணி குடித் தனத்தை வேறிடம் மாற்றியதனுல், அம்மாவுக்கு கோபம் கோப மாக வந்தது. அவள் போன பிறகு பௌடர் மணமும் வாசனே சாந்தின் சுகந்த வாடையும் வீட்டிலிருந்தே மறைந்துவிட்டது.

கிருஷ்ணன் குட்டி படிப்பை முடித்து அந்தப் பெண்ணேடு இணைந்து குடும்பம் நடத்தும் சித்திரத்தை மனத் திரையிலே கண்டான்.

ரயில் பாலத்தைக் கடந்து லெவல் கிராஸிங்கிலிருந்து சாலையை அடைந்தபோது 'பெண்கள் ஹாஸ்டலி'லுள்ள பெண்கள் கோயிலில் சாமி கும்பிட்டுவிட்டுத் திரும்பி வருவதைக் கண்டான். வெளிச்சம் குறைவாக இருந்ததனுல் யாரையும் தெளிவாகப் பார்க்க முடியவில்லை.

கிருஷ்ணன் குட்டி கேட்டான்:

'ஏன் ஆலோசனே?'

''ஒண்ணுமில்லே''

''ஏன், இதெல்லாம் நான் சொல்றனேன்னு?'' அவன் ஆம் என்றே அல்ல என்றே தெளிவாகாவண்ணம் கூறினுன்:

''எப்போதாவது இதையெல்லாம் யாரிடமாவது சொல்ல வேண்டும். சொல்லவில்லையென்றல் முகப்பொலிவே மாறிப் போய்விடும். 'டென்ஷனே'ப் பொறுத்துப் பொறுத்து என் னுடைய முகமே குரூரமாகிவிட்டது என்பது எனக்குத் தெரியும்.''

சட்டென்று தெரு விளக்குகள் எரியத் தொடங்கின. தூசி பறக்கும் ஆகாயத்தில் வெளிச்சம் திடீரென ஒளி வீசிப் பிரகாசித் தது.

ஹாஸ்டல் கட்டிடத்தைப் பார்க்கக்கூடிய திருப்பத்தை அடைந்தபோது கிருஷ்ணன் குட்டி கேட்டான்:

''உனக்கு யாரோடாவது காதல் ஏற்பட்டிருக்கா?''

சுமித்திராவுடன் ஏற்பட்டது காதலோ? ஓணம் விடுமுறை கழித்துத் திரும்பும்போது, புதிதாக சேறு கலக்கிய வரப்பு களிடையே விழாமல் கவனமாக அடிமேல் அடி வைத்து ரயில்வே ஸ்டேஷனுக்கு நடந்து போகும்போது வடக்கு வீட்டின் வாசற் படிக்கு அடுத்து இருந்த வாழை மரங்களுக்கிடையே அவள் நின்று கொண்டிருந்தாள்.

நடந்து அவ்விடத்தை விட்டு அகன்ற பிறகு அவளுக்கு மன வேதனே ஏற்பட்டிருக்குமோ?

மனதிற்குள் தாழ்ந்த குரலில் பதில் கூறிக்கொண்டான்:

''இல்லை''

ஆனால், சுமித்திராவை இழக்க இஷ்டப்படவில்லை என்று மனம் கூறியது. யாரும் சுமித்திராவைச் சொந்தமாக்கிக்கொள் வதில் அவனுக்கு இஷ்டமில்லை.

கிருஷ்ணன் குட்டி படிக்கவேண்டிய புத்தகங்களை எடுத்துக் கொண்டு காலியாக இருக்கும் கிளப் அறைக்கு நடந்தபோது, சுவாமியின் கையிலிருந்து ஒரு இன்லாண்டு லெட்டர் வாங்கி ஹரி தாஸனுக்குக் கடிதம் எழுதினான்.

தோட்டுவக்கிலில் ஏப்ரல் மாத நடுப்பகல். உச்ச வெயிலில் பயணம் கூறியது எத்தனையோ வருஷங்களுக்கு முன்புபோல் தோன்றியது. எழுத எவ்வளவோ உண்டு. சர்டிபிகேட் புத்தக மும் டி.ஸி.யும் வாங்க உயர்நிலைப் பள்ளிக்குச் சென்றபோது ஹரி தாஸனைப் பார்க்கவில்லை. கல்லூரியைப் பற்றி, வகுப்புகளைப்பற்றி, நேச்சுரல் சயின்ஸ் ப்ராக்டிகலுக்குத் தொடக்கத்தில் தடித்த சொறித் தவளையை அறுத்துத் திரும்பி வந்து சாப்பிட அமர்ந்த போது ஏற்பட்ட வாந்தியைப் பற்றி, உடன்படிக்கும் நண்பர்களைப் பற்றி, கல்லூரி இதழுக்கு வேண்டி எழுதிக் கொடுத்த கவிதையைப் பற்றி எல்லாம் எழுதவேண்டியிருந்தது.

இறுதியில் எழுதியது இது மட்டுமே தான்:

''அன்புள்ள ஹரிதாஸ், கடிதம் கிடைத்தது. புதிய வேலையில் சேர்ந்ததை அறிந்து அதிக மகிழ்ச்சி. கல்லூரி வாழ்க்கை பரவாயில்லை. அடுத்து எப்போதாவது ஊருக்கு வரும்போது எனக்குத் தெரியப்படுத்தவேண்டும்—''

என்றும் பிரியாத நண்பனாக முன்பு மனதில் கருதியிருந்தது ஹரிதாஸனாகவே இருந்தான்.

விசாகப்பட்டினத்திலிருந்து ஹரிதாஸனின் கடிதங்கள் இனி யும் கிடைக்கவேண்டும் என்று மனம் விரும்புகின்றதோ?

ஆம் என்று தனக்குள் நம்பிக்கையூட்ட முயற்சித்தான்.

## [5]

டிசம்பர் மாதத்தில் கணவாய் வழியே இறங்கி கரிய பனை மரங்களைக் குலுக்கிக்கொண்டு குளிர்ந்த திருவாதிரைக் காற்று வருகின்றது. குளிர்ந்த இரவுகள். வேர்வையும் வெப்பமும் மிகுந்த பகல் நேரங்கள். கல்லூரி மூடப்பட்டும் ஊருக்குப் போக வில்லை. ஸ்பெஷல் வகுப்புகள் உண்டு; அதை இழக்க முடியாத

தால் வரவில்லை என்று அம்மாவுக்கு எழுதிவிட்டான். ஹாஸ்டலில் மெஸ் நிறுத்தப்பட்டுவிட்டதால் வெளியே போய் சாப்பிட வேண்டும்.

கோடை விடுமுறை அடுத்து வந்தபோதுதான் கஷ்டம் ஏற்பட்டது. கல்லூரி உணவு விடுதியின் கோலாகலத்தினிடையில் இருக்கும்போது நகரத்தில் எதையுமே எண்ணுமல் இருக்கலாம். அபயம் பெற்ற ஆறுதல். கொட்டும் மழை வெள்ளத்தின் திரைச் சீலைக்குப் பின்னுல் செம்மண் வெட்டியெடுத்த குகையில் யாரும் காணுமல் ஒளிந்திருப்பதுபோல வெளியே மழையினுடையவும் காற்றினுடையவும் முழக்கத்தைக் கேட்கலாம்.

வீட்டையடைந்தபோது ஆச்சரியத்தோடு கூடிய ஒரு விஷயத்தைக் கண்டறிந்தான். சேது அங்கீகரிக்கப்பட்டுள்ளான் என்பதே அது. காலையிலும் மாலையிலும் டீ மேல்மாடிக்கே கொண்டுவந்து தருவார்கள். பத்மூ பெரிய ஓட்டுக்கிளாஸ் தளும்பிப் போகாமல் இருக்க சிறிய விரல்களால் இறுகப் பொத்திப் பிடித்தபடி மாடிப் படியேறி வரும்போது பாவமாக இருக்கும்.

ஒரு வருடத்தில் பத்மூ உயரம் கூடியுள்ளாள். அவளுடைய பெரிய மாற்றத்தில் பயத்தோடு கூடிய நாணம் ஏற்பட்டிருந்தது.

ஒருமுறை அவள் திரும்பத் திரும்பக் கூறினுள்:

''சேதுவண்ணு, எனக்கொரு துணிக் குடை வேணும்.''

''உனக்குக் குடை இல்லையா?''

''ஓலைக் குடையிருக்கு, பழசு.''

சேதுவண்ணன் பெரிய ஆளாகி இருக்கிறுன். சேதுவண்ணனிடம் சொன்னுல் கிடைக்கும் என்ற எண்ணம் அவளுக்கு ஏற்பட்டிருக்கிறது.

அவள் அம்மாவிடம் கேட்டிருக்கிறுள். பெரியம்மாவிடமும் கேட்டிருக்கிறுள்.

''ஆமா, துணிக் கொடைதானே இப்போக் கொறவு'' அவர்களில் யாராவது உடனே பதில் கூறிவிடுவார்கள்.

சேது எண்ணினுன். எனக்கு ஒரு குடையில்லை. இருந்திருந்தால் பத்மூவுக்குக் கொடுத்துவிடலாம்.

ஆறு ரூபாய் மிச்சப்படுத்த ஒருபோதும் முடியாது என்பதைத் தெரிந்துகொண்ட பிறகுதான் கூறினுன்.

''உம். வாங்கித் தாரேன்.''

மாலை நேரம் படியிறங்கி வரப்பில் அங்குமிங்குமாக நடந்தான்.

வடக்கு வீட்டு கார்த்தியாயினி வரப்பு வழியே தென்புறமாகப் போவதைக் கண்டான். தேக்க இலைக் கட்டோடு அவள் திரும்பி வரும்போது வரப்பின் ஓரத்தில் சென்று நின்று கேட்டான்.

''என்னடீ, இந்த வயித்திலெல்லாம்?''

பெண் நாணி நின்ருள்.

சிறிய சலவை செய்த முண்டு உடுத்தி பெரிய வயிரைக் காட்டிக்கொண்டு நடக்கும் ஒன்பது வயதுள்ள ஒரு பெண்ணின் முட்டைக் கண்களையும் பெரிய வயிரையும் கண்டபோது ஹாஸ்டல் வார்டனின் அறையிலுள்ள சைனீஸ் பொம்மையே நினைவுக்கு வந்தது.

''எங்கே உன்னுடை சுமித்திரா அக்கா?''

''அக்கா திரூர்லே.''

''திரூரா?''

''குஞ்ஞிம்மாலு அம்மையோடு போயிருக்கு.''

அன்று இரவில் அம்மாவும் சின்னம்மாவும் ஊர்ப் பஞ்சாயத்தைப் பற்றிப் பேசும்போதுதான் தெரிந்தது. கண்டன் குளங்கரை அப்புண்ணி மேனேன் திரூரில் ஏதோ பெரிய வீட்டிலிருந்து திருமணம் செய்து கொண்டு வந்திருந்தார். அவள் பிரசவத்துக்குப் போகும்போது சுமித்திராவையும் உடன் அழைத்துப் போயிருக்கிருள்.

வடக்கு வீட்டு அத்தை, பீபாத்தும்மாவுக்கு தவறு செய்யக் கூடாதென்று விளக்கி அறிவுரை கூறிக்கொண்டிருந்தாள்.

''கஞ்சித் தண்ணி குடிச்சுக் கெடந்தாலும் தாதி வேலைக்கு எங்க வீட்லே'யிருந்து ஆளு போகத் தொடங்கலே'ன்னு சொல்லி யனுப்பினுள். பிறகு ஆயம்மாளே வீடுதேடி வந்து சொன்னுள். தாதி வேலைக்கு நான் கூப்பிடுவேனு? என்கூட வந்தால் சொந்தம் போல நான் பார்ப்பேன். சுமித்திராவை அனுப்பறது அம்மாவுக்குப் பெரிய காரியமில்லை. மாதவனுக்கு அவ்வாறு அனுப்புவதில் இஷ்டமில்லை.

மாதவ மாமாவின் சம்மதத்தை அப்புண்ணிமேனன் கேட்டுத்தான் இதைச் செய்தார் என்பதைக் கேள்விப்பட்டபோது சேது திடுக்கிட்டான். மாதவ மாமாவா?

வடக்குத் தோட்டத்துக்கு எளிதாகச் செல்ல வேண்டி, வேலியைச் சிதைத்து உண்டாக்கிய சிறிய சந்து வழி இப்போது அடைக்கப்பட்டிருப்பதைக் கண்டான்.

சோப்புப் பெட்டியையும் தூவாலையையும் எடுத்துக்கொண்டு வேலிக்கருகில் சென்று, ஒரு நிமிடம் சந்தேகத்தோடு நின்றான். திரும்பி வரும்போது அம்மா பார்த்தாள்.

''அந்த வழியை அடைச்சாச்சு.''

ஏன் என்று கேட்கவில்லை. அம்மா சொன்னாள்:

''கன்றும், பசுக்களும், ஆடுகளும் தோட்டத்துக்குள் நுழைஞ்சுடுது. வர்றவங்களும் போறவங்களும் படிக்கல்வரை வந்து போனாப் போதும்.''

சின்னம்மா கேட்டாள்: ''சேது குளிக்கலையா? வடக்குக் குளத்துத் தண்ணீ ரொம்பக் கெட்டிருக்கு. பத்தடி நடந்தாப் போதுமே? ஆத்திலே எவ்வளவு நல்ல தண்ணீ!''

வடக்கு வீட்டிலேயிருந்து அத்தையும் மகளும் முன்புபோல வருவதைப் பார்க்க முடியவில்லை.

சுமித்திரா குஞ்ஞிம்மாளு அம்மாவுடன் கூடவே போனதைப் பற்றி உள்ளே மனம் மெதுவாகப் பூனைக் குரலில் பேசிக்கொண்டிருப்பது கேட்டது.

பாக்கு வெட்டுபவன் கந்துவின் மனைவி வந்தபோது மேற்குப் பக்க முற்றத்தை அடுத்து நின்று அம்மாவும் சின்னம்மாவும் வடக்கு வீட்டைக் குற்றப்படுத்திப் பேசிக்கொண்டிருப்பதைக் கேட்டான்.

ஏன் இந்த மாற்றம் ஏற்பட்டது.

அப்போது விஷயம் ஓரளவுக்குப் புரிந்தது:

''ஒன்றைப் பார்க்கணும், போனவன் ஒரு ஆணில்லையா? நாங்க மூத்த பெண்கள். ஒருமுறை சொல்லலாம், இரண்டுமுறை சொல்லலாம், அதுக்கப்புறமும் முடியுமா?''

மாதவ மாமாதான் காரணம். மாதவ மாமா வடக்கு வீட்டுக்குப் போகிறார். அங்குள்ள காரியங்களைக் கவனிக்கிறார்.

மாதவ மாமாவுக்கு வடக்கு வீட்டுக்காரர்கள் வசிய மருந்தை வச்சுக் கொடுத்துவிட்டார்கள் என்று அம்மாவும் சின்னம்மாவும் நம்புகிறார்கள். இல்லாவிட்டால், ''அவங்க பேரைக் கேட்டாலே முகத்தை திருப்பிக் கொள்வார்களா? அவ்வாறு வழிமாறி நடக்கும் ஆள்தான் இங்கேயுண்டா?''

சேது மாலை நேரத்தில் ஆற்றுக்குப் போய்க் குளித்தான். சுமித்திராவைப் பற்றி சிந்தித்தபோது யாரோடு என்றில்லாமல் கோபம் ஏற்பட்டது.

கண்டன் குளங்கரை மேனன்கள் பணக்காரர்கள். பண்ட பாத்திரங்களை அடகு வைத்து அவர்களிடமிருந்துதான் ஆட்கள் நெல்லும் பணமும் கடன் வாங்குவார்கள். திரூரில் குஞ்ஞிம்மாளு அம்மாவினுடைய வீட்டார் பெரிய நிலையில் உள்ளவர்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறான். பழம்பெரும் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்.

பெரிய வீடு. காலியாகக் கிடக்கும் வராந்தாக்கள். வெளிச்சம் குறைவான அறைகள். குளக்கரை வீடுகள்.

அங்கே இளைஞர்கள் உண்டு. கல்லூரியில் படிப்போர், உத்தியோகம் செய்வோர் உண்டு. அப்பெரிய வீட்டில் சுமித்திரா அந்தி மயக்கத்திலிருக்கிறாளோ? வரட்டும், அவள் வரட்டும். இவள் எதுக்காக கண்டவர்கள் கூடவெல்லாம், தோணுமிட மெல்லாம் போகவேண்டும்? நினைக்கும்போதெல்லாம் மனதில் துயரம் அதிகரித்து வந்தது.

முன் பக்க மேல் மாடியிலிருந்தால் ஜன்னல் வழியாக கீழே யுள்ள முற்றத்திற்கு வருபவர்களோடு அம்மாவும் சின்னம்மாவும் பேசுவதைக் கேட்கலாம். ஆந்துறை உம்மட்டுவம்மா, புலையப் பெண் காளியம்மா, வலைக்காரன் முஹம்மதின் மனைவி பீபாத்தும்மா, கிராமத்தின் பழிபாவங்கள் அனைத்தும் கீழேயுள்ள முற்றத்தை வந்தடைகின்றன. அம்மாவும் சின்னம்மாவும் ஒன்று சேர்ந்திருக்கிறார்கள் என்றால் ஒன்றாகவே பங்கு கொள்வார்கள். தனியாக இருக்கிறார்கள் என்றால் கூட்டத்தில் அம்மாவின் தயவின்மை சின்னம்மாவையும், சின்னம்மாவின் கஷ்ட மனநிலை அம்மாவையும் மற்றுள்ளவர்களையும் பாதித்துவிடுகிறது.

ஒரு புதிய விஷயம் கொண்டுவந்த உம்மட்டுவம்மா உள்ளே யிருந்து பஞ்சாயத்து முடிந்து வெளியேறும்போது கேட்டாள்:

''என்ன, மாதவன் நாயரோட சம்மந்தம் என்னாச்சு?''

சின்னம்மா சொன்னாள்: ''ஏதோ கொஞ்சம் சூசகம் தெரிஞ்சது. கலியாணப் பேச்செடுத்தால் எழுந்து போயிடும். அவங்களும் அந்நியரில்லே. அவங்களுக்கு வேறு ஆள் துணை யில்லே, அந்தப் பெண்ணின் பெயரைக் கேட்கும்போது மகிழ்ச்சி ஏற்படுது.''

அப்போது குரோத உணர்ச்சி கலந்த அம்மாவின் உறுமல் சத்தம் கேட்டு: ''நான் சொன்னபோதெல்லாம் அவனுக்குத் தேவையில்லாம இருந்தது. இப்போ அந்த மடையன் அவங் களுக்குச் சொந்தமாயாச்சு.''

"இப்போ காய் வெட்டின ஏஜென்ட்டுக்கான காய் வடக்கு வீட்டுக்குப் போகுது.'' சின்னம்மா நினைவூட்டினாள்.

மாதவன் நாயர் கிடைச்சால் யாருக்குமே நல்லது இல்லியா? இல்லத்தின் காரியஸ்தனும்கூட. நாலுபேருடைய அனுசரணை யுண்டு. நமக்குத் தெரியாதா?—''உம்மட்டுவம்மா மற்றொரு வார்த்தையை வெளிப்படுத்தினாள்.

குன்னின்புரத்து சாத்து நாயருடைய மகள் ஜானகியினுடைய கள்ளக் காதலைப் பற்றி பேச்சு திரும்பியது.

மாதவ மாமா இரவு நீண்ட நேரம் கழித்துத்தான் வருகிறார். பெரிய காதும் எலும்பு தள்ளிக்கொண்டிருக்கும் முகமும் கையில் நிறைய ரோமமும் கூட்டுப் புருவமும் உள்ள தேவுவைத் திருமணம் செய்துகொள்ள மாதவ மாமா விரும்புகிறார் என்று தொடக்கத்தில் கேட்டபோது நம்பிக்கை ஏற்படவில்லை.

இரவில் நிசப்தமாக சாப்பிட்டுவிட்டு மாமா வெளி வராந்தாவில் நீண்ட நேரம் பீடி புகைத்துக்கொண்டு இருப்பார். முற்றத்தில் சேது நடக்கும்போது, வராந்தாவில் தட்டுத் தடுமாறி வீழ்ந்து, உருண்டைத் தூணைத் தாவிப் பிடித்து இருட்டில் இருக்கும் மாதவ மாமாவைக் காணும்போது அதிசயமாகத் தோன்றும்.

மாதவ மாமா கறுப்பு நிறம். தேங்காய் நாறு போலுள்ள வெட்டப்பட்ட சிறிய முடிகளின் வழியே அங்கங்கே தலையோட்டின் வெண்மை நிறம் தெரியும். சிரிப்பது அபூர்வம். பேசும்போது பெரிய தட்டைப் பற்களின் இடையே காற்று புகுந்து வரும் சப்தம் கேட்பதுபோல் தோன்றும்.

தேவு இப்போது இல்லத்து வேலைக்குப் போவதில்லை. அதுவும் மாதவ மாமா சொல்லித்தான் என்று அம்மாவும் சின்னம்மாவும் நம்புகிறார்கள். நம்பிக்கொண்டிருக்கிறார்கள்.

''நீ எங்கேடா படுத்திருக்கே?''

இருட்டிலிருந்து மாதவ மாமாவோட சத்தம் திடீரெனக் கேட்டபோது திடுக்கிட்டான் சேது.

''மேலேயா கீழேயா??'

''மேலே.''

கட்டைச் சுவர்மீது மடக்கி வைத்த துண்டை விரித்து, மாதவ மாமா மீண்டும் மற்றொரு பீடி பற்றவைத்து வெளித் திண்ணைக்கு வந்திருந்தபோது சேது உள்ளே நடந்தான்.

மாதவ மாமாவுக்கு எப்படி இந்த மாற்றம் வந்து சேர்ந்தது?

# III

## [1]

பீடி தீர்ந்தபோது சின்ன மதிலின் அடியில் தூக்கி எரிந்துவிட்டு எழுந்தார்.

நெற்களஞ்சியமுள்ள முற்றத்தில் குளிர் நிலாவில் நீண்ட வாழை இலைகளின் நிழல் மெல்லிய காற்றில் உயிர்பெற்று அசைந் தாடி விளையாடுவதைப் பார்த்துக்கொண்டு, சாய்வு இருக்கையின் மேலிருந்தபோது தூக்கம் வெகுதூரத்தில் இருப்பதாகத் தோன்றி யது. மேல் அறையில் சேது நடக்கும்போது பழைய பலகைகள் அசைந்தன.

ஒரு பாத்திரத்தில் குடிப்பதற்கான தண்ணீரை நிரப்பிக் கொண்டு வந்து வைக்கச் சொல்லியிருந்தார். பெண்கள் படுக் கையை சாய்வு இருக்கையின்மீது வைத்துவிட்டுப் போகும்போது நினைத்துக் கொண்டார். அப்போது சொல்ல வேண்டுமென்று தோன்றவில்லை. அவர்கள் முன்பாகச் செல்லும்போது சங்கோஜம் ஏற்பட்டு விடுகிறது. எல்லோருடைய மனதிலும் தன்னைப்பற்றிய கேள்விகள் உண்டு. யாரும் கேட்டுக் கொள்வதில்லை.

சேது, தன்னைப் பார்க்காதிருப்பதற்காக வடக்குத் தோட்டத் தின் முள் இலவமரத்தின் அடியில் ஒதுங்கி நிற்கவேண்டி வந்ததை திடீரென நினைத்துக் கொண்டார் மாதவ மாமா.

கடந்த ஓணத்தின் போது தான்—

தோணிக்காரன் சாப்பிடுவதை பார்த்துக்கொண்டு வராந்தாவி லிருந்தபோது சுமித்திரா போவதையும் வருவதையும் கண்டார். தோணிக்காரன் பயணம் சொல்லிப் போனபோது எதுவும் யோசி யாமல் தோட்டத்தைநோக்கிப் போனார். வடக்கு வீட்டுக்குப்போக வேண்டும் என்று கருதவில்லை. புது மழைக்கு நடப்பட்ட தென்னங் கன்றுகளை அக்கறையோடு பார்த்துக்கொண்டிருந்தார். குண்டுங் குழியுமாக அங்கங்கே திட்டுத்திட்டாகக் கிடந்த மண்ணையெல்லாம் காலால் தட்டி மட்டப்படுத்தி அமுக்கினார். இறுதியில் வடக்கு வீட்டின் முற்றத்தை அடைந்து நின்றபோது வாழ்வில் முதன் முறையாகப் பய உணர்ச்சி தோன்றியது. தொண்டை வரண்டு போயிருந்தது. உள்ளங்காலிலிருந்து தலை உச்சிவரை ஏதோ ஒரு

வித மின்சாரம் பாய்வது போலிருந்தது. கனைத்த சத்தம் பெரிதாக வெளிவந்ததோ? கதவு திறந்தபோது நடுக்கத்தை அடக்கிக் கொள்ள முயற்சி செய்துகொண்டு நின்றார். வெயிலில் நடந்து வாடி வியர்த்துப் போயிருந்த சுமித்திராவின் முகத்தை ஒரு நிமிடமே கண்டார். அறைமெழுகப் பயன்படும், யாருக்கும் பெயர் தெரியாத ஒருவகை மரம் ஆட்டுக் கொட்டகைக்கு அடுத்து இருந்தது. அதைப் பார்த்துக்கொண்டு நிற்கும்போது சுமித்திராவின் குரல் கேட்டது.

''என்ன மாதவ அத்தான்?''

சட்டென்று நாவில் வெளி வந்தது தேக்குக் கொட்டான் விஷயம் தான். 'இல்லை' யென்று பதில் சொன்னபோது, ஒரு நிமிஷம் ஐயப்பாட்டோடு நின்றார். எனினும் ஏதும் பேசாமல் திரும்பி நடந்து போய்விட்டார்.

ஆனி மாதம் முடிந்திருந்ததால் தேக்கு இறைவை நிறுத்தப் பட்டிருந்தது. கிணற்று நீர் இறைவையும் கையிறைவையும் நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது. தேக்குக் கொட்டான் கேட்டது மடத்தனமானது என்று சுமித்திராவுக்குத் தோன்றியிருக்க வேண்டும். தோட்டத்தின் வடக்கு வளைவைக் கடந்ததும், அவர் திரும்பிப்போனதை யாரும் காணவில்லை. தெய்வாதீனமாக குளத்துக்குப் போய்விட்டு வரும் சேதுகூடக் காணவில்லை.

ஆசுவாசத்தோடு வராந்தாவில் வந்து அமர்ந்தபோது வேலைக்கார புலையன் மலைச்சிகளுக்கு போட்ட சாப்பாட்டை கீழே கண்டபடி அங்கு மிங்கும் சிந்தி விட்டுப் போயிருந்தான்.

உள்ளே அடுப்பங்கரைப் பகுதியிலிருந்து பெண்களின் பேச்சைக் கேட்டுக்கொண்டே, தனது மடத்தனத்தைப்பற்றி சிந்தித்துக் கொண்டிருந்தார். குன்றுக்கு அப்பால் முன்பு பப்படச் செட்டிகள் வாழ்ந்திருந்த வீட்டில் வசித்துவரும் உண்ணிச் சிரியம்மாவின் சத்தம்தான் ஓங்கி ஒலித்தது.

வெளியே போகத் தோன்றவில்லை. ஓணச் சமயத்தில் கடை வீதியில் அப்புவினுடைய கடையின் மேல் மாடியில் சீட்டு விளையாட்டு நடக்கும். அங்கு போவதில்லையென்று தீர்மானித்தார். சாய்வு இருக்கையின்மீது ஏறிப் படுத்துக் கண்களை மூட முயன்றார்.

முற்றத்திலிருந்து யாரோ கூப்பிடுவதுபோல் தோன்றியது. கண்களைத் திறந்தபோது சங்குண்ணியின் ஆள் வந்திருப்பது தெரிந்தது. கஷ்டகாலமே, அவனுக்கு ஆள் அனுப்பக் கிடைத்த நாளும் நேரமும் இதுவா? காய்ந்த மிளகு விஷயம்பற்றி நேற்றே சொல்லியிருக்கிறார்.

''ஏண்டீ, பத்மூ.''

உள்ளே ஏற்பட்டிருந்த ஆரவாரத்தில் கூப்பிட்டது யாருக்குமே கேட்கவில்லை.

சற்று உரத்த குரலில் கூப்பிட்டார்.

''என்ன வேணும்?''

''அந்த எடைக்கோலை எடு. மிளகுக்கு ஆள் வந்திருக்கு.''

''நீதானே அன்னிக்கு இல்லத்துக்கு கொண்டுபோனது. பிறகு திரும்பக் கொண்டு வரலையே.''

இல்லத்துக்கு ஆளை அனுப்பி எடுத்துக்கொண்டு வர யாருமில்லை. சேதுவை அனுப்பினுலென்ன? தோட்டவேலை நடக்கும் போது உதவி செய்தும், வயலில் நாற்றுக்கு விதைபோடும் சமயத்திலும், நாற்றுக்களை வயல்களுக்கு எடுத்துச் செல்லும்போதும் முன்பு அவனைக் கூப்பிட்டிருக்கிறுர். பத்தாம் வகுப்பு முடித்ததோட இவன் அலங்கார மினுக்குப் பேர்வழியாகப் போய்விட்டான். வேலை சொல்லத் தோன்றவில்லை.

சங்குண்ணியை இருக்கச் சொல்லி விட்டு இல்லத்தை நோக்கி நடந்தார்.

இல்லத்தில் வடக்குத் தெரு பெண்கள் படையெடுத்திருந்தார்கள். நேரே உள்ளே போகாமல் உரலடிலுக்குப் பின்னுல் காய்ந்த மந்தாரையின் அடியில் தயங்கியபடி நின்றுர். யாரோ பார்ப்பது போல் தோன்றியது. குஞ்சாத்தாலு உரலடி சுவரினருகில் இறங்கி வந்து கேட்டாள்.

''என்ன மாதவா?''

இல்லத்துக் காரியங்களைக் கவனிக்கத் தொடங்கிய காலம் முதலிலே ஒரு விஷயம் அவருக்குப் பிடித்திருந்தது. அங்கு தன்னை யாரும் அன்னியனுகக் கருதாததுதான் அது.

தனது காரியஸ்தனேடு பேசுகிறேம் என்ற ஒரு பாவனை குஞ்சாத்தாலிடம் ஒருபோதுமே அவர் கண்டதில்லை. அவர் முன்பாக வருவதற்கும் நேருக்கு நேர் நின்று அவரோடு பேசுவதற்கும் அவளுக்கு தயக்கமேற்பட்டதில்லை. பாக்குப் பறித்து காசாக்கிக் கொடுக்கும்போதும் மிளகுக்காய் வாங்கிய வியாபாரிகள் கணக்குத் தீர்க்கும்போதும் குஞ்சாத்தாலு சிறிது நோட்டும் கொஞ்சம் சில்லரையும் ஒதுக்கி வைத்துச் சொல்வாள்:

''மாதவா! இதை மடியிலே வைச்சுக்க. சம்பளமாக அல்ல.'' குஞ்சாத்தாலுக்கு கணக்கொன்றும் தெரியாது. குஞ்சு நம்பூதிரிக்கு இதிலெல்லாம் அக்கரையோ ஆர்வமோ கிடையாது. இருந்தபோதிலும் அவர்களுக்குத் தெரியாமல் ஐந்து ரூபாய் எடுக்க அவளுக்குத் தோன்றியதில்லை.

''குஞ்சாத்தாலு, அந்த எடைக்கோலே எடுத்துத் தா.''

''முன்னறையின் மாடிப்படியடியின் சின்னறையில் இருக்கு. உண்ணியிடம் எடுத்துத் தரச் சொல்லு.''

சேறு நிறைந்த சேப்பங் கிழங்குப் பயிர் நிலத்தின் வலப்புற மாக, கிழக்கேபோய் முற்றத்தைக் கடக்கும்போது, முற்றத்தில் பெண்கள் விளையாடிக்கொண்டிருப்பதை அவர் பார்க்கவில்லை. கேட்டது சுமித்திராவின் சத்தமாக இருக்குமா?

முன் அறையின் படுக்கைக் கல்லின்மீது உண்ணிநம்பூதிரி ஓணப் பண்டிகையின் அலுப்போடு படுத்துத் தூங்கிக்கொண்டிருந் தான். அசடு, அவனைப் பார்க்கும்போது கோபம் வரும். வயதான காலத்தில் குஞ்சாத்தாலுக்கு உதவியாய் இருக்கக்கூடிய மகன். ஊர் முழுவதும் யாசகம் பெற்று ஆனப்புரம் போகும் நேரத்தில், அதற்குப் பதிலாக நான்கு கமுகுக் கன்றுகளை நட்டுவைக்க முயன்ற தில்லை. கோவிந்தனோடு மல்லுக்கு நின்று நெல் வாங்கி, அளந்து களஞ்சியத்தில் கொட்டி வைத்தால் சாப்பிடத் தயாராயிருப்பான்.

மாடிப் படியறையிலிருந்து எடைக் கோலைத் தேடி எடுத்தார். இருள் கவிந்துகிடக்கும் வராந்தா வழியாக வரும்போது தென்பக்க அறையின் வாசலின் பின்புறமிருந்து யாரோ முணுமுணுப்பது கேட்பதுபோல் தோன்றியது. சந்தேகப்பட்டு நின்றார். மீண்டும் காதைத் தீட்டிக்கொண்டு நின்றபோது சாத்தியிருந்த கதவு மெதுவாகத் திறக்கப்பட்டது. பாதி திறக்கப்பட்ட வாசலின்கண் பெரிய காதும் எலும்பு தள்ளிய கன்னங்களுள்ள ஒரு முகத்தை அவர் கண்டார்.

அவருக்கு அங்கிருந்து நடந்துசெல்ல அவசரம் ஏற்படவில்லை. அவருடைய தொண்டையில் உரத்த சத்தம் திடீரென உயர்ந்து வருவதுபோல் தோன்றியது. எனினும் தயங்கித் தயங்கி முன் னேக்கிக் கடந்து போனபோது, முன்னாலிருந்த வாசற் கதவு முழுமையாகத் திறந்தது. வெற்றிலைக் கரைபடிந்த பற்கள் இருட் டில் மின்னியது. உண்ணி நம்பூதிரியின் சப்தம் கேட்பது ரொம்ப ரொம்ப தூரத்துக்கப்பாலிருந்து எனத் தோன்றியது.

''என்ன மாதவா?''

அவர் ஒன்றும் பதில் கூறாமல் வெளியே சென்றார். வடக்கு முற்றத்து கோலாகலத்திலிருந்து அகன்று விலகி, தோட்டத்தினி டையே விரைந்து வீட்டை நோக்கி நடக்கும்போது சுருண்ட முறுக் கேறிய முஷ்டிகள் விரைத்தன.

குஞ்சாத்தாலு ஏதோ கூப்பிட்டுக் கேட்கிறாள். அவள் கூப்பிடு வது கேட்கவில்லை. நடையில் வேகத்தைக் காட்டினார்.

[2]

வெயில் மங்கும்வரை மனதில் உமித்தீ நீருபூத்துக் கொண்டிருந்தது. கமுகுத் தோட்டத்தினிடையே வீழ்ந்துகிடக்கும் பாக்குகளைப் பொறுக்கிக்கொண்டு நடக்கும் வேலைக்கார புலையக் கிழவியை திட்டி விரட்டினார். இனிமேல் வேலிக்கு இப்பக்கம் கண்டால் காலை ஒடித்துவிடுவேன் என்று கூறினார். அவள் இறுகக் கட்டியிருந்த தலைமுடியைத் தடவிக்கொண்டு என்னென்னவோ சபித்தாள்.

சங்குண்ணி அனுப்பிய ஆள் காத்து நிற்பது கண்டு தாவிச் சென்றார்.

''ஆளைப் பார்த்தியா?''

''போயி, அந்த மனுஷன்கிட்டே சொல்லு, இன்னிக்கு சௌகரியம் இல்லையாம்'னு. ஆளை அனுப்புறதுக்கு கண்டுபிடிச்ச நாளைப் பார். சங்குண்ணி வாங்கலே'ன்னு வேறே வியாபாரிங்களும் இருக்காங்க இந்த நாட்டிலே.''

அதைக் கேட்டுக்கொண்டு வந்த பெண்கள் தடுத்துக் கூறினார்கள்:

''நூறு வகை செலவு இருக்கு. இருக்கிறது என்னவோ அதைத் தூக்கிக் கொடுத்திட்டு, அதுக்குண்டான காசை வாங்கி வச்சுக்கடா, மாதவா . . .''

''எனக்குக் கத்துக்கொடுக்க வேணும். காரியத் திறமையிருக்கிறவங்க கொடுக்கவோ வாங்கவோ எதுவானாலும் அவங்களாலே செய்துக்க முடியாதா?''

அவர்கள் ஏதோ முணுமுணுத்துக்கொண்டு உள்ளே போய்விட்டார்கள். அவர்களுக்கே வியப்புத் தோன்றியிருக்கவேண்டும். மூத்த பெண்களுடன் ஒருபோதும் அவர் இவ்வாறு கோபித்ததில்லை.

வெளியே கிளம்பும்போது இளைய பெண்கள் தொடர்ந்து கூறினார்கள்.

''நீ வெளியே வா?''

''இல்லே, உள்ளே.''

''உனக்கென்ன கேடு? கடை வீதிக்கு யாரையாவது அனுப்பி ரெண்டு முக்காலணவுக்கு பொகயிலைப் பொடி வாங்கி வரச் சொல்லக்கூடாதா?''

நேராகக் கடைவீதியை அடைந்தபோது மனதில் ஒரே விசனமாக இருந்தது. சொல்லலாமா? வடக்கு வீட்டு அக்காவிடம் சொல்லலாமா?

தேவுவின் உருவம் அழிக்க முடியாத ஒன்ருக மனதில் தெளிவாகத் தோன்றியது. எலும்பு தெரியும் உடல். கையில் எழுந்து நிற்கும் கருத்த ரோமங்கள். அந்தப் பெண்ணைப் பற்றியதல்ல அந்த விசனம். அவளுக்கு என்ன நேர்ந்தாலும் தனக்கொன்றுமில்லை. ஆனுல், அவள் கெட்ட பெயரை ஏற்படுத்திக் கொடுப்பது வடக்கு வீட்டுக்குத்தான்.

''தெரியுமில்லியா, நம்மளோட வடக்கு—''

''என்ன? நம்மளோட மாதவ நாயரோட—''

பயத்தோடு மற்ருென்றையும் சேர்த்தார்.

''எங்கிருந்து கல்யாணம்?''

''வடக்கேயிருந்துதான்.''

''ஏது—நம்மளோட அந்த—''

அதற்கப்புறம் நினைத்துப் பார்க்க முடியவில்லை.

வீரான்குட்டியின் டீக்கடையின் வெளிப்புறத் திண்ணையில், வரிசையாக ஆட்கள் கடந்துபோவதைப் பார்த்துக்கொண்டிருந்தார்.

''டீ குடிக்கறியா மாணுயரே?''

''வேண்டாம்.''

கண்டன் குளங்கரை காரியஸ்தன் நாராயண நாயர் கேட்டார்:

''மாணுயரே இன்னிக்கு சீட்டாட்டத்திலே காணலையே.''

''நான் படுத்துத் தூங்கிப்போயிட்டேன்.''

''நாலு ரூபா போனவுடனேயே நான் நிறுத்திட்டேன்.''

தூரத்தில் பாப்புவின் கடையின் முன்பாகக் கூடைக்காரர்கள் மீனைக் கொண்டுவந்து இறக்கியிருந்தார்கள். ஆட்களை கூட்டம் கூட்டுவதற்காகவேண்டி உரத்த சத்தத்தில் கூப்பாடுபோட்டு ஆரவாரம் செய்யத் தொடங்கியிருந்தார்கள். கடை வீதிக்கு உயிரூட்டிஞர்கள்.

மாதவன் நாயருக்கு மீன் நிரம்பப் பிடிக்கும் என்பதை அறிந்த வீரான்குட்டி கூறிஞன்:

''பச்சை மீன் வந்திருக்கு நாயரே, பார்க்கலே?''

''என்ன மீன்?''

''வேளூரி.''

''ஓ!''

கூட்டத்திற்கப்புறம் துளிர்க்கத் தொடங்கிய கடலாமணக்கின் கிளைகளைக்கொண்டு நெருக்கமாகப் பின்னப்பட்டுள்ள வேலிக் கட்டுகள் லேசாகப் பிரிக்கப்பட்டிருந்தன. அப்புறத்தில் வேலிக் கட்டைகள் கீழே விழுந்துகிடந்தன. அந்தச் சந்தின் வழியே

குனிந்துவரும் ஆளைக் கண்டபோது தூரத்திலேயே புரிந்துவிட்டது; அது உண்ணி நம்பூதிரிதான் என்று.

தன்னைக் கண்டால் முகத்தைத் திருப்பிக்கொண்டு நடையில் வேகத்தைக் கூட்டுவான். கடையின் முன்பாக வந்தபோது அழுந்தக் கரைபடிந்திருந்த பற்களை முழுவதுமாக வெளிக்காட்டிக் கொண்டு நின்றான். பழத்தோலை எறியும்போது, காத்து நிற்கும் நேர்ச்சைக்காரனைப்போல, நல்ல நிறமுள்ள ஒரு போர்வை கொண்டு அங்குமிங்கும் பெருத்து இருக்கும் உடலைப் போர்த்திக் கொண்டிருந்தான். கையில் ஒரு நீண்ட டார்ச் விளக்கு. மேடையில் உள்ள டீக்கடையில் இருக்கும் எல்லோரோடும் சிரித்துக் கொண்டு நின்றான். மனதிற்குள் மீண்டும் மீண்டும் முணுமுணுத்துக் கொண்டான்: ''அசடு!''

டீக் குடித்துக்கொண்டிருக்கும் அப்புக்குட்டன் கேட்டான்:

''நம்பூதிரி எங்கே, இப்படி?''

''ஹேய்! எங்கேயுமில்லே.''

''கடை டீ குடிக்கணும்'னு மாப்ளாவினுடைய டீக் குடிக் கணும் உண்ணி நம்பூதிரி.''

இடது கண்ணால் தன்னைப் பார்க்கவில்லை என்று கருதி நடந் தான்.

''ஹேய், வேண்டாம்.''

வீரான்குட்டியும் உற்சாகப்படுத்தித் தூண்டினான்.

''நம்பூதிரி உள்ளே வந்தால், மாதவ நாயர் இல்லத்துக்குப் போய்ச் சொல்லிடுவார்'னு பயப்படவேண்டாம். என்ன மா நாயரே?''

டார்ச்சைத் திருப்பிப் பிடித்துக்கொண்டு உண்ணி நம்பூதிரி மடமைச் சிரிப்போடு மேடையிலேயே நின்றான்.

திண்ணையிலிருந்து இறங்கி, அடுப்பிலிருந்து பீடி பற்றவைத்துக் கொண்டு வெளியே சென்றார்.

அப்புவின் கடையோரமாக நடந்தபோது மேல் மாடியிலிருந்து ஆரவார ஒலியைக் கேட்டார்: நாணு நாயரும் அவரது குழாமும் போன பிறகும்கூட சீட்டு விளையாட்டுத் தொடர்ந்தது. கடைகளைக் கடந்து சென்றபிறகு பெருஞ்சாலையில் யாரோ வைக்கோல் காயவைக்கப் பரப்பி வைத்திருக்கிறார்கள். வழியில் நடக்கும்போது சாலையைக் களத்துமேடாக ஆக்குவதைக் கண்டார்.

கடை வீதியில் சுற்றித் திரிந்து நின்றால் ஆட்கள் பலதும் விசாரிப்பார்கள். ஆட்களிலிருந்து விலகி நிற்க முதலாவதாக அவருக்கு விருப்பம் ஏற்பட்டது அன்றுதான்.

வயற்காட்டில் இறங்கினர். பெரிய வரப்பு; சவாரி வண்டி போகுமளவுக்கு அகலமானது. அது கண்டங்குளங்கரைக் காரருடைய வயலுக்குச் செல்வதாகும். பெரிய வரப்பிலிருந்து இறங்கி இரண்டு வயல் கடந்தால் முதல் நிலம் வடக்கு வீட்டினுடையதாகும். நடந்துபோகும்போது யாரோ கூப்பிடுவதுபோல் தோன்றியது. இல்லை, தன்னை இல்லை. அப்போது சரியாகக் கூர்ந்து கேட்டார்:

''மாதவத்தான்! கொஞ்சம் இங்கே வர்றியா?''

புதிதாக சாணம் மெழுகிய மேற்பகுதியினின்றும் சுமித்திரா வயற்காட்டில் இறங்கினள். தான் போகவில்லையென்றால் அவள் இங்கே வருவாள் என்று தோன்றியது. அதனுல், வரப்பிலிருந்து திரும்பி வாசற்படியை நோக்கி நடந்தார்.

தலைமயிரைக் கோதிக்கொண்டு நிற்கும் சுமித்திராவைப் பார்த்தபோது, அப்போதுதான் குளித்து, ஈரத்துணி மாற்றி வந்திருப்பதுபோல் தோன்றியது. காய்ந்த தாளிப்பனை தண்டு நிறமுள்ள அவளுடைய கைகளும் சரடில் கோர்த்த மணியாபரணமும் அணிந்த கழுத்தும் நனைந்திருப்பதுபோல் தோன்றியது.

முற்றத்தில் தலைமுடியைக் கோதிப் பிரித்துக்கொண்டு நிற்கும்போது பெரிய வரப்பிலிருந்து வாழைத் தோப்பினிடையே மாதவ அத்தான் இறங்குவதை அவள் கண்டாள். சுமித்திரா வெகு தொலைவுக்கு அப்பாலிருந்து பார்த்தாள்.

அவளை மீண்டும் நோக்கியபோது ரோமங்கள் காடாக வளர்ந்திருந்த தனது வெற்றுடம்பைப்பற்றியும் மடித்துக் கட்டியிருந்த ஒற்றை முண்டினைப்பற்றியும் திடீரென அவருக்கு நினைவு வந்தது. பாக்கு விற்கப் போகும்போது குமரநெல்லூர் கடை வீதியிலிருந்து கை வைத்த நான்கு பனியன் வாங்கவேண்டும். மனதில் திட்டப் படுத்திக்கொண்டார்.

''அம்மா கூப்பிடுது.''

''வர்றேன். வர்றேன்'னு சொல்லு.''

கூடுதலாக ஏதாவது சுமித்திரா பேசுவாள் என்று கருதி ஒரு நிமிடம் காத்து நின்றார். பிறகு, திரும்பி நடந்தபோது பின்னாலிருந்து அவள் கேட்டாள்:

''இன்னிக்கு என்ன, மீனேதும் வாங்கலியா?''

''திருவோணமில்லையா?''

''போன வருஷம் அவிட்டம் அன்னிக்கு நரி மீன் கிடைச்சுது.''

அபூபக்கர் இரண்டு பெரிய நரி மீன்களைக் கொண்டுவந்தான். இல்லத்தின் மேற்புறத்தில் சிறிதளவு இடத்தை கரிசுட குத்தகைக்கு வாங்கிக் கொடுத்ததற்குப் பிரதிபலனாக இருந்தது அது. அரிந்து எடுத்தபோது ஒரு சட்டி நிறைய இருந்தது. மூத்த பெண்கள் பத்மூவின் கையில் பீங்கானில் வைத்து நான்கு துண்டை வடக்கு வீட்டிற்கு அனுப்பினார்கள். வழிமாறி கால் வைத்தபோதுதானே சொன்னாள்: அபூபக்கரிடம் அல்ல, வாழைத்தோட்டம் பார்க்கத் தான் போகிறார்.

நேந்திர வாழைத் தோட்டத்தில், காய் முற்றாததால் வெட்டி விற்கப்படாமல் நிறுத்தப்பட்டிருக்கும் ஐந்து குலைகள் உள்ளன. அதைச் சுற்றி நடந்தார். திருப்பத்தில் வளைந்து செல்லும் பாதையில் அபூபக்கருடைய வீட்டின் முன்பாகக் கடந்து செல்லும்போது வெறுமனே அவனைத் தேடினார். அபூபக்கர் இல்லை. காலையில் குட்டிப்புறத்துக்குப் போயிருக்கிறான். முற்றத்தில் வலையைப் பிரித்துக்கொண்டிருக்கும் மகனிடம் கேட்டார்:

''இப்பவெல்லாம் நரி மீன் எதுவும் கிடைக்கிறதில்லையாடா?''

''வடக்கே போனா கிடைக்கும்'னு சொல்லக் கேள்விப் பட்டேன்.''

''உம்.''

கடந்த வருடம் நரி மீன் கிடைத்ததை சுமித்திரா நினைவு கூர்ந்ததை எண்ணினார். இல்லத்தை நோக்கி நடக்கும்போது ஆரியம்பாடத்தில் நடக்கும் கூத்து அவர் நினைவுக்கு வந்தது.

ஏழாவது நாள் கூத்து. கதை இந்திரஜித் வதை ஆகும். நாணு நாயரும் அச்சுவும் போவதாக சாயந்தரம் கூறினார்கள்.

''வர்றீயா?''

''பார்க்கலாம்.''

சாப்பாடு முடிந்தபின் போகலாம் என்று தோன்றியது. சட்டையை எடுத்துக்கொண்டு டார்ச்சு தரும்படிக் கேட்டபோது தெற்கு அறையில் பேசிக் கொண்டிருக்கும் வடக்கு வீட்டு அண்ணி கேட்டாள்:

''எங்கே மாதவா?''

வீட்டை மூடிவிட்டு எல்லோரும் சேர்ந்து படுப்பதற்காக வந்திருக்கிறார்கள்.

ஆரியம்பாடத்துக்குத்தான் என்று சொன்னபோது கூத்து கேட்க அவர்களும் புறப்பட்டார்கள்! சொன்னது ஆபத்தாகி

விட்டது என்று கருதி தனக்குத்தானே சபித்துக் கொண்டார். அவரும் அவர் கூட்டாளிகளும் சென்று பார்ப்பார்கள். இப்போது பெண்களும் குழந்தைகளும் புறப்படும்வரை காத்து நிற்கும்படி நேரிட்டுவிட்டது. அவர்களுக்கு முன்பாக டார்ச் அடித்துக் கொண்டு நடக்கும்போது வெட்கமாக இருந்தது.

கூத்து மேடைக்கு முன்பாக ஆலமரத்தடியில் கொண்டு வந்திருந்த பாயை அவர்கள் விரித்தார்கள். உட்காரவில்லை. பெண்கள் பேசிக் கொண்டிருக்கட்டும் என்று அவர் நண்பர்களைத் தேடி நடந்துசென்று தேடிப்பார்த்தார். யாரையும் காணவில்லை. இறுதியில் எங்காவது ஓரிடத்தில் இருப்பார்கள் எனத் தோன்றியது. மீண்டும் பாயை எடுத்துச் சென்றபோது, அங்கே சிலர் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். அண்ணி தூங்கி வழிந்தாள். தனக்கு இடம் தரவேண்டி அவள் விலகி உட்கார்ந்தாள்.

இதற்காகத்தானு எல்லோரையும் சேர்த்து இழுத்துக்கொண்டு வந்தது? தூங்குமூஞ்சிகள். எல்லோரும் ஆழ்ந்த நித்திரையி லிருக்கிறார்கள்! மனதில் சினம் மூண்டது. மேடான தரையில் ஏறியமர்ந்து கால்களை நீட்டி வைத்து, பீடியைப் புகைத்தபடி கூத்துக் கவியின் வாக்கு சாதுரியத்தைக் கேட்டுக்கொண்டிருந்தார்.

மங்கிய ஆகாயம் தெளிந்த ஒரு நிமிடத்தில், கீழே பார்த்த போது, தனது நீட்டி வைக்கப்பட்ட கால்களைத் தள்ளிக்கொண்டு மல்லாந்தபடி படுத்துத் தூங்கும் சுமித்திராவை வியப்போடு பார்த்தார்.

இதற்குமுன் எப்போதும் கண்டிராத ஒரு மாபெரும் அற்புதம் இதோ காலடியில். ஆழ்ந்த நித்திரைக்கு அறிகுறியாக கனத்த மூச்சு வெளி வருகிறது. கருநீல இலைகளும் குறுங்கிளைகளும் பிரிண்டாகியுள்ள ஜாக்கெட்டில் குளிர்ந்த வியர்வை நீர் உருண் டோடியது.

கூத்துக் கவியின் வாய்த்திறம் கேட்க முடியாத நிலை ஏற்பட்டு விட்டது. இருட்டில் அவ்வப்போது பளிச்சிடும் வெளிச்சத்தின் சிறியதோர் தீவில் சுமித்திரா அரச குமாரியைப்போல் உறங்கினாள். கருத்தூன்றிய காவல்காரன் அருகே காவல் நிற்கிறான்.

சுமித்திராவுக்குத் தெரியாமல் சுமித்திராவைப் பார்த்துக் கொண்டேயிருக்க ஆர்வம் ஏற்படத் தொடங்கிய நிமிடமே அது தான்.

இல்லத்தின் வாசற்படியைக் கடக்கும்போது குளக்கரையி லிருந்து முண்டு துவைக்கும் சத்தம் கேட்டது. ஏதோ ஒரு குழந் தையின் நிறுத்தாத அழுகுரலும் கேட்டது.

குஞ்சாத்தாலு அடுப்பங்கரையில் இருக்கவேண்டும். நல்ல வேளை, வடக்கு வீட்டில் யாருமில்லை. பகலில் பெண்கள் ஓடி விளையாடிய முற்றம் ஓய்ந்து கிடந்தது. முற்றத்திலிருந்து சப்தம் வந்தது.

''யாரு?''

''மாதவன்.''

அடுப்பாங்கரையிலிருந்து வராந்தாவிலுள்ள வாசற் கதவைத் திறந்துவிட்டு வந்த குஞ்சாத்தாலு பாதி மறைந்து நின்றாள்.

''கோவிந்தன்'கிட்டே பாக்கி நெல்லு விஷயத்தைக் கொஞ்சம் சொல்லேன், மாதவா?''

''இன்னும் பார்க்கலே. கேட்டுப் பார்க்கிறேன்.''

''சிங்க மாதத்தில் இருநூறு படி கொடுத்தான். இந்தத் தடவை ஐம்பது கொண்டு வந்து தந்தான். இங்கே கொஞ்சம் அவனை அனுப்பிச்சா நம்ம கஷ்ட நிலைமையைச் சொல்லிக் கேட்க லாம்!''

பேசாமலே நின்றார். எப்படித் தொடங்குவது?

''நாளைக்கு மாதவனுக்குச் சாப்பாடு இங்கேதான். நினை விருக்கா?''

நினைவிருக்கு. அது வழக்கமானதுதானே. அவிட்டம் அன்றைக்கு மதியம் இல்லத்தில் தான் சாப்பாடு. ''சாப்பிட்டு விட்டுப் போகும்போது குஞ்சாத்தாலு ஐந்து ரூபாய் நோட்டைக் கையில் கொடுப்பாள். ஒரே நினைப்போட வாங்கிக்கோ. உண்ணி வாங்கிக்கறலே. மாதவனாவது நல்லதைப் பார்த்து வாங்கிக்கோ.''

அவர் அதன் பிறகும் கூட சந்தேகித்தபடி நின்றார்.

கரிபடிந்த சமையற் கட்டின் உள்ளே எரியும் அடுப்புகளிலிருந்து சிவப்பு வெளிச்சம் பரவுவதையும் குறைவதையும் கண்டார்.

மங்கிய வெளிச்சத்தில் குஞ்சாத்தாலின் வரண்டு வாடிய முகத்தில், கண்களுக்குக் கீழாக உள்ள குறுகிய சுருக்கங்களில் சட்டென்று ஆழம் அதிகமாகத் தோன்றியது.

''என்ன?''

எப்படிக் கூறுவது என்று அறியாமலே அறைகுறையான வாசகங்களெல்லாம் மனதில் தோன்றிச் சிதறி மறைந்தன.

''உண்ணி நம்பூதிரிக்குக் கல்யாணம் செய்து வைக்கணும்.''

குஞ்சாத்தாலின் முகம் சட்டென்று பிரகாசித்தது.

''யாரை அவன் ஏற்றுக் கொண்டாலும் பரவாயில்லை. விரைவாக நடத்த வேண்டும். இல்லாவிட்டால்—''

அவர் சட்டென்று தன்னைத் தானே கட்டுப்படுத்திக் கொண்டார்.

''என்ன மாதவா?''

குஞ்சாத்தாலின் குரலில் மிகுந்த வேதனை தொனித்தது.

''என்ன மாதவா? என்ன ஆச்சு'ன்னு சொல்லு.''

''ஒண்ணுமில்லே.''

பொங்கும் மன நிலையை ஒருவாறு அடக்கிக் கொண்டு கூறினார்:

''கல்யாணம் செய்து கொள்ள'வேன்னாலும் இல்லத்து வேலையையாவது பார்த்துக்கிட்டிருக்கட்டும்.''

பிறகு நிற்கவில்லை. தோட்டத்தின் நடுவிலேயுள்ள வழியைக் கடந்து திரும்பிப் பார்த்தபோது இருட்டில் ஓடியொளிந்த ஒரு நிழல் தலை தூக்கி நிற்பது போல வாசற்படி நிலையைப் பிடித்துக் கொண்டு குஞ்சாத்தாலு நின்றாள்.

தொலையட்டும். இறுதியில் சந்ததியில்லாத நிலை ஏற்பட்டு இல்லத்துத் தோட்டம் மாப்ளாமாரின் கையகப்படும். அதற்கு முன்பு பாவம் பாட்டி இறந்து போக வேண்டுமே என்பதுதான் அவர் வேண்டுதலாக இருந்தது.

முன்பு இல்லத்து வயல் ஆசாரி ராமனின் எல்லைக் கல்லிலிருந்து கண்டங்குளங்கரைக்காரரின் மேற்புறம்வரை இருந்து வந்தது. இப்போது நாலிலொரு பங்கே இருக்கிறது.

ஆற்றங்கரையிலுள்ள ஒரு இல்லத்துத் தோட்டத்தில் இப்போது மாப்ளாமார் நெசவுக் கம்பெனி நடத்துகிறார்கள். குன்றின் சரிவில் இல்லத்துக்காரர்கள் தான் பெரும் நிலச் சுவான்தார்களாக இருந்தார்கள். தகப்பனார்களும் மருமக்களும் தங்களிடையேயான பாகப் பிரிவினை வழக்கில் தகர்ந்துபோய் விட்டார்கள். புதிய களஞ்சிய அறைகள் பிரித்துக் காலி செய்யப் பட்டன. ஓடும் கல்லும் உத்திரங்களும் பங்கிடப் பட்டன.

சிறு வயதில் அம்மா சொல்லக் கேட்டதுண்டு. நாடு முழுவதுமுள்ள வயலும் தோட்டமும் பன்னியூர் கிராமத்தில் உள்ள இல்லத்துக்காரர்களுடையதாக இருந்தது. வராக மூர்த்தியின் அருளால் எல்லோரும் ஒன்றாக நின்றார்கள். சுகபுரத்துக்காரர்கள் பலரும் முயன்றும் கூட வராகமூர்த்தியின் சக்தியைக் குறைக்க முடியவில்லை. இறுதியில் பாளையத்திலேதான் ரகசியத் தூதர்கள்

இருந்தார்கள். செப்புப் பாத்திரத்தைப் பழுக்க வைத்து பார்க்க, துள்ளி தூர விழுந்தார்கள். சாந்தி செய்வோர் சுகபுரத்துக்காரர் களுக்காக வேண்டி பிம்பத்தின் மேல் தீட்டுப்படாமல் மூடித் தைத் தார்கள். ''அதமரே'' என்று அலறிக் கொண்டு அன்று வெளியே குதித்தோடியது தான் வராக மூர்த்தி.

வெளியே காற்று அடங்கியிருந்தது. இருள் கவிந்திருந்த வானத்தில் கரும் பூனைகள் பல்லிளிப்பது போல் ஆங்காங்கே விண் மீன்கள் மின்னிக் கொண்டிருந்தன. படுக்கைக் கல்லின்மேல் புரண்டு புரண்டு படுத்துத் தூங்க முயன்று கொண்டிருந்தார். உரக்கம் இன்னும் வந்தபாடில்லை.

எல்லோரும் ஏளனத்தோடு தன்னை நோக்கும்போது மனதிற் குள் சொல்லிக்கொண்டார்: ''அங்கிருந்து போகும் நேரமாச்சே இவனுக்கு என்ன நேர்ந்தது?''

வடபுற வீட்டுக்கு அடிக்கொருதரம் போவதனுல்தான்.

எலும்பு தள்ளிய ஒடுங்கிய முகமும் கழுத்திலும் உதட்டின் மேற்புறத்திலும் இரு கைகளிலும் ஆபாசமாகத் தோன்றும் வண்ணம் அடர்த்தியான கருத்த ரோமம் உள்ள அவளைக் கண்டு காதல் கொண்டு தான் வடக்கு வீட்டிற்குப் போவதாக உடன் பிறந்தவர்கள் கூட கருதுகின்ருர்கள்.

அவருக்குக் கோபம் ஏற்பட்டது.

எலும்புக் கூடுபோன்று ஆடி அசைந்து நடக்கும் வடக்கு வீட்டு அக்கா தான் ஆரம்பப் பிரச்சாரத்தைத் தொடங்கியது.

மாதவன் ஒரு தார் நேந்திர வாழைக்காய் கொடுத்தனுப்பினுர்.

மாதவன், மாதவன், மாதவன்

வராந்தாவில் இருக்கும்போது அவள் கூப்பிட்டுச் சொன்னுள்.

''ஏண்டீ தேவு, அந்தத் தட்டை இங்கே கொடு'' தேவு வர வில்லை. தன் முன்பாக தேவு வரவில்லை. அது நாணத்தால்தான் வரவில்லை என்று உரத்துக் கூறுவதைக் கேட்கும் போது ரத்தம் கொதித்தது.

''முன்பு போல இல்லையே!''

முற்றத்திற்கு முன்பாக வரிசை வரிசையாக நட்ட மிளகாய்ச் செடிகளிலிருந்து பெரிதாக விரித்துப் பிடித்த மடியில் சிறிய வெளுத்த மிளகாய்களை பறித்துப் போட்டுக் கொண்டு சுமித்திரா பேசிக்கொண்டிருந்தாள். அப்போது கதவுக்கு அப்பால் எங்கேயோ தேவு நாணத்தால் நாணிக் கோணிக் கொண்டு நிற்கும் விஷயம் மறந்து போனது. ஆடலோடக மருந்து நீரில் குளிகையைக்

கரைக்கும் எலும்புக் கூடுதான் ஏதோ சொல்ல வேண்டிக் காத்திருக்கிறது! . . .

உசிதமான ஒரு நாளன்று விஷயத்தை எடுத்துக் கொண்டாள்!

''மாதவா, கொஞ்ச நாளா சொல்லணும், சொல்லணும்'னு நெனச்சிக்கிட்டே இருக்கேன்''

''என்ன?''

''இவ்வளவு தூரத்துக்கு ஆயிடிச்சே, பார்க்கிறவங்கள்லாம் கேட்கிறுங்க. என்ன, எப்பவாம்?''

''அக்கா சங்கதி என்னு?''

''இல்லே, தேவுவோட காரியம்—''

அப்போது—

அப்போதுதான் சட்டென்று வீசத் தொடங்கிய புயற்காற்றில் பலதும் தகர்ந்து விழப்போகிறது.

அப்போது—

## [3]

திருமணம் நிச்சயித்தது முதலே சுற்று வட்டாரத்தினர் பேச்சு கிழக்கே எங்கேயோ உள்ள காரைக்காட்டு மனையைப் பற்றிய தாகவே இருந்தது. ஓணமில்லாத காலத்தில் ஊரிலுள்ளவர்களுக்கு ஒரு நிதியே கிடைத்திருக்கிறது. உண்ணி நம்பூதிரியின் திருமணம் தான் அது!

உண்ணி நம்பூதிரியின் அதிர்ஷ்டம்தான் அது! புத்தியில்லா விட்டாலும் குஞ்சாத்தாலின் நல்ல மனதுக்குத்தான் இந்தத் திருமணம் நிச்சயமாகியிருக்கிறது என்று அம்மா உறுதியாகக் கூறினள். தாராளமாகக் குத்தகை வரக்கூடிய இல்லம் அது. இப் போதும் அங்கே யானை உண்டு. காரைக்காட்டு யானையைப் பற்றிய கதைகளை மாதவ மாமாவுக்கு குழலூத்துக்காரன் சங்குண்ணி சொல்லிக் கொண்டிருப்பதைக் கேட்டதுண்டு. உண்ணி நம்பூதிரி திருமணம் உறுதி செய்யப்பட்ட உடனே வீட்டிற்கு வந்தான்.

''என்ன விசேஷம் உண்ணி நம்பூதிரி?'' வெற்றிலையை மென்று கொண்டு கண்களை உயர்த்தாமல் புன் சிரிப்புடன் முற்றத்தை நோக்கியபடி நின்முன்.

"எவ்வளவு வரதட்சிணை கிடைக்கும்?

சின்னம்மா கேள்வி கேட்டாள்.

''ரெண்டாயிரம்''

''சொந்தக்காரங்களையெல்லாம் பார்த்தாச்சா?''

''ஹேய்''

உண்ணி நம்பூதிரிக்கு அதிலெல்லாம் அக்கரையில்லே. கடந்த வேனிற்காலத்தில் திருமாந்தாம் குன்றில் நடந்த உற்சவத்துக்குப் போனபோது காரைக்காட்டுஆனப்புறம்போய்'இருந்ததாக உண்ணி நம்பூதிரி சொன்னான். ஆனால், உண்மையில் உண்ணி நம்பூதிரி போய் இருந்தது கொல்லங்கோட்டு ஐயப்பனின் பின்னாலேயேதான். நகரவில்லே. எத்தனை வெடிக்கட்டுகள் இருந்தாலும் நகரவில்லே. யாருக்குமே துரோகம் செய்ததில்லே. அடேயப்பா மாதவன் காரைக்காட்டு யானையைப் பார்த்திருக்கிறயா? பார்க்க வேண்டிய யானை அது!''

அப்போது இல்லத்திலிருந்து வந்த மாதவ மாமாவிடம் கேட்டான். மாதவமாமா ஆமா என்றோ இல்லை என்றோ கூறாமலே இருந்தார்.

''மதம் பிடிக்கும் சமயமானால் நேரே பந்தல்லே போய்த்தான் நிற்கணும்.''

வராந்தாவின் மேற்கு ஓரத்தில் குன்றுப்பக்கம் இருந்த நாவல் தோட்டத்தைப் பார்த்தபடி இருந்த மாதவ மாமா கூறினார்'' மிருகத்துக்காவது புத்தியிருக்கும். உண்ணி நம்பூதிரிக்கு அந்தப் புத்தி கூட இல்லை?''

உண்ணி நம்பூதிரி சிரித்தான்.

உண்ணி நம்பூதிரி இடையிடையே வெறுமனே டார்ச் விளக்கை மினுக் மினுக்கென்று அடித்து ரசித்துக் கொண்டிருந் தான். பகலிலும் டார்ச்சை எடுத்துக் கொண்டு நடப்பது உண்ணி நம்பூதிரியின் வழக்கமாக இருந்தது. சின்னம்மா உண்ணி நம்பூதிரிக்கு புத்திமதி சொல்லும் முயற்சியொன்றை மேற் கொண்டாள். திருமணம் நடந்த பிறகு கண்ட உற்சவ இடங் களுக்குப் போய் அலைந்து கொண்டிருக்கக் கூடாது. இல்லத்துக் காரியங்களைக் கவனிக்கவேண்டும். ஒரு நல்ல இல்லத்திலிருந்து வரு கின்றவர்களை சிரமப்படுத்தக் கூடாது. எல்லாவற்றிற்கும் உண்ணி நம்பூதிரி வெறுமனே சிரித்தான். இறுதியில் உண்ணி நம்பூதிரி இறங்கிப் போன போது சின்னம்மா கேட்டாள்.

''ரெண்டாயிரம் தருவார்களா சீதனம்?''

மாதவ மாமாவோடுதான் கேட்டாள். மாதவ மாமா அதைக் கேட்டதுபோல பாவிக்கவில்லை.

சின்னம்மாவுக்கு சிறிது கோபமும் வெறுப்பும் ஏற்பட்டது.

''இல்லத்தின் மிக முக்கிய காரியஸ்தனுச்சே? அதனுலேதான் கேட்டான்.''

''அதுசரி, நான் அதைக் கேட்கலே. தெரிஞ்சுக்க விருப்பம் இருக்கிறவங்க போய்க் கேட்டுத் தெரிஞ்சுக்கலாமே?''

அதன்பின் மேல்புற இடை வழியை அடைந்துக் குன்றின் சரிவில் நடந்து சென்ருர் மாதவ மாமா. திருமண வைபவத்துக்காக வேண்டி வேலேக்காரர்கள் விறகு வெட்டும் சத்தம் பகல் முழுவதும் அங்கிருந்து கேட்டுக்கொண்டிருந்தது.

நம்பூதிரிகள் வழக்கப்படி உண்ணி நம்பூதிரியின் கூடவே பின்னுல் இரண்டு நாயர்களாவது வேண்டும். குஞ்சாத்தாலு மாதவ மாமாவை பிரத்தியோகமாகக் கூப்பிட்டுச் சொன்னுள். நாராயணன் நாயரையும் சீங்குண்ணியையும் மாதவ மாமா அழைத்து வர எழுந்தார். ''நீங்க போனுல் ஒண்ணும் நடக்காது. இங்கு நூறு வேலேகள் இருக்கு.''

குடியமர்த்தும் தலேநாள் முதலே இல்லத்தில் ஆட்களின் கூட்டம் நிரம்பி வழியத் தொடங்கியது. அதனிடையேதான் வீட்டில் யாரோ கூறினுர்கள்: ''யானேயும் சொத்துமிருந்த போதிலும் செலவாகாமல் இருந்த ஒரு பெண்ணேத்தான் உண்ணி நம்பூதிரி திருமணம் செஞ்சுக்கிட்டு வந்திருக்கு.''

''அப்படியே இருக்கட்டும். இல்லே, நானும் நெனச்சுப் பார்த்திருக்கேன். ரெண்டாயிரம் ரூபா சீதனம் கொடுத்து இந்தப் பொட்டையனே வேறு யாராவது கட்டிக்குவாங்களா?''

குடிவைக்கும் நாளன்று விருந்து சாப்பிடப் போகவேண்டுமென்று அம்மா வற்புறுத்திக் கூறினுள்.

சேது போக விரும்பவில்லே.

''ஏண்டா அந்தப் பாட்டி வந்து ரெண்டு மூணு தடவை சொல்லிட்டாங்க''

முடியாது என்று பிடிவாதம் செய்தான். அதன் பிறகு அம்மா 'பிராமணன் சாபம் வரை' எடுத்துக் கூறினுள்.

மனமில்லா மனதோடவே இல்லத்துக்குச் சென்ருன்.

தோட்டத்தில் வரிசையாக இனும் வாங்குவதற்காக வேலேக்காரர்களும் வேலேக்காரிகளும் காத்து நின்ருர்கள். வடக்கு முற்றத்தில் துணேயாக வந்த நாயர் பெண்களின் கும்மாளச் சத்தம் கேட்டது. முற்றத்தில் விருந்து பரிமாறும் நாயர்கள் ஓட்டமும் நடையுமாக நடமாடிக்கொண்டிருந்தார்கள். அம்மாவைச் சபித்துக் கொண்டு வீட்டின் முன் பகுதியை அடைந்தபோது கண்டன்

குளங்கரையை சேர்ந்த சின்னன் மேனனும் மகனும் நிற்பதைக் கண்டான். அவர்கள் சமீபமாகச் சென்று நின்றான்.

கடப்ப மரத்தடியில், பத்தாம் வகுப்புத் தேர்வு முடிந்து வந்திருக்கும் மேனன் மகன் உண்ணி கிருஷ்ணன் பேசிக்கொண்டு நின்றான். படியும் பந்தக்காலும் வைக்கப்பட்டுள்ள வீட்டின் முன் பகுதியில் நம்பூதிரிகளின் இரைச்சல் கேட்டது. உலகம் முழுவதும் கேட்கக்கூடிய அளவில் உச்சக் குரலில் பேசிக்கொண்டு இருந்தார்கள். தெற்குப் புறத்தில் ஓலைகளால் கட்டப்பட்ட மறைவிடத்தில் செம்புகளும், பாத்திரங்களும் ஓசை எழுப்பின.

எல்லாவிடத்திலும் பார்வையைச் செலுத்தி மேற்பார்வை பார்த்துக்கொண்டிருந்தார் மாதவ மாமா.

சின்னன் மேனனின் அருகில் வந்து மாதவ மாமா கூறினார்:

''ரொம்பத் தாமதமாகவே எல்லா ஏற்பாடுகளையும் நான் செய்திட்டேன்.''

காரைக்காட்டிலிருந்து கொண்டு வந்து இல்லத்தில் குடி வைக்கப்போகும் மணப் பெண்ணைப் பற்றி எண்ணியபடி போனார். நேற்று வீட்டில் வந்து சொல்லிவிட்டுப் போனபோது உயரம் குறைந்த குட்டை வாத்தைப்போல நடக்கும் இந்த மணப் பெண்ணுக்கு அங்குள்ளவர்கள் இட்டிருக்கும் பெயர் ''ஓவுதாங்கி'' என்பதாகும்!

சிவன் கோயிலில் தீர்த்தம் ஒழுகும் கருங்கல் நீர்ஒழுக்கியின் அடியில் விகாரமாக உள்ள உருவத்தின் பெயரே அது; ஆரம்பத்தில் இப் பெயர் கொடுத்தது யாராக இருக்கும்?

குடிவைக்க வரும் குழு ஆற்றைக் கடந்ததும், ஓடி வந்து சொல்ல ஆள் நிறுத்தப்பட்டுள்ளது. எக்காள ஒலி எழுப்பக்கூடிய நாயர்களையும் சிறப்பாக ஏற்பாடு செய்துள்ளார். எங்கும் மாதவ மாமாதான் காட்சியளித்தார்.

சின்னன் மேனன் மகனோடு கூறினார்:

''உண்ணீ, நாம் மெதுவாய் போயிடலாம். நம்பூதிரி களுடைய விருந்து முடியறவரைக்கும் காத்திருந்தால் மாலைவரைப் பட்டினி கிடைக்க வேண்டியதுதான்.

''எப்போதும் இல்லையே. ஒரு தடவை அதுவும் வேணு மில்லையா?'' இடுப்பில் வேட்டியை மடித்துக் கட்டிய பரிமாறு வோரில் ஒருவன் கூறினான். அவனுக்கு கண்டன் குளங்கரை மேனன்தான் அது என்பது தெரிந்திருக்கவில்லை. முதலில் மணமகளின் வீட்டைச் சேர்ந்தவர்களுக்கும் உண்ணி வீட்டைச்

சேர்ந்தவர்களுக்கும் பந்தி. அது முடிந்து, நம்பூதிரிகளின் பந்தி. மூன்றாவது பந்தியில்தான் அழைக்கப்பட்ட நாயர்கள் உட்கார வேண்டும். சின்னன் மேனனும் உண்ணிக் கிருஷ்ணனும் போகும் போது தனக்கும் இடம் விடவேண்டும் என்று மனதில் எண்ணிக் கொண்டு இருக்கும்போதுதான் மாதவ மாமா வந்து கூப்பிட்டார்.

''இதோ! மேனனும் மகனும் வாங்க. சேது நீயும் வா. இவங்களுக்கு இலைபோடு. பின்னே யாரு?''

தெக்கினிக்கர நம்பூதிரிகள் மட்டும் இன்னும் சாப்பிட வேண்டியுள்ளது. ஊர் நாயர்களில் உயர்ந்தவர்களுக்கு மட்டும் வரிசை முறையை மாற்றி முதலில் இலை போடப்பட்டது. விருந்து முடிந்து வெளியே போகும்போது எக்காள ஒலி முழங்கியது. உண்ணி நம்பூதிரியும் குழாமும் ஆற்றைக் கடந்துள்ளது.

மேனனுடன் வெளியேறி வயல்களினூடே உண்ணிக் கிருஷ்ணன் பின்னால் நடக்கும்போது மேனன் கேட்டார்:

''நீ இப்போ எந்த வகுப்பிலேடா படிக்கிறே?''

''இண்டர்.''

கடந்த ஒன்பது நாட்களாக இல்லத்தின் திருமண வைபவமே பேச்சுக்குரிய விஷயமாக இருந்தது. இன்று அதுவும் தீர்ந்து போய்விட்டது. விருந்து பற்றிய வர்ணனைகளும் தீர்ந்துவிட்டால் பிறகு பேச என்ன விஷயம் இருக்கிறது? வீட்டின் முன் பக்க முள்ள வரவேற்பறையின் ஜன்னலருகே சென்று நின்றான். எக்காள முழக்கம் அடங்கிவிட்டது. பந்திக் கூட்டம் தொடங்கி விட்டது.

கிருஷ்ணன் குட்டிக்கு ஒரு நீண்ட கடிதம் எழுதினான்.

''சலிப்பு என்றால் என்னவென்று இப்பொழுதுதான் புரிகிறது. ஒவ்வொரு நாளும் முடிந்த நாளின் தொடக்கமாகவே ஆரம்பிக் கிறது. அப்படியே முடிகிறது. அடுத்த நாளும் அதைப் போன்றே இருக்கும் என்ற நம்பிக்கையுடனே இருக்கிறேன்.''

பக்கத்து வீட்டுச் சுமித்திரா உடன் இல்லை என்று எழுதினால் என்ன? ஒரு நிமிஷம் மனதில் ஒரு வேடிக்கை போன்று அந்த வாசகம் தோன்றி மறைந்தது. வேண்டாமென்று விட்டு விட்டான்.

கடிதத்தை தபாலில் சேர்த்தாகிவிட்டது. ரேஷன் கடையி லிருந்து பழைய பேப்பர்களைத் திருப்பிப் பார்த்துக் கொண்டிருந் தான். யாரிடமிருந்தும் கடிதம் வரவில்லை என்பது தெரிந்த பின்னரும் போஸ்ட்மேன் வந்து விசேஷங்களைப் படித்து முடிக்கும் வரை வெறுமனே காத்திருந்தான்.

நடந்து நடந்து காலியாகக் கிடந்த நாற்றங்கால்களின் வரப்பு வழியே இடிந்தும் சிதைந்தும் கிடக்கும் கோயிலை அடுத்துச் சென்றான்.

தேவன் உறங்குகின்றான்.

பூஜையும் நைவேத்தியமும் நடந்து வந்த அந்த நல்ல கால கட்டத்தைப்பற்றி கனவு கண்டுகொண்டு கிடக்கும் 'தேவனை'ப்பற்றி ஒரு கவிதை எழுதவேண்டும்போல் தோன்றியது. தேய்த்து வெளுப்பாக்கிய பித்தளைச் செம்புகளில் அரிசியும் விறகும் கொண்டு சோறு பொங்கி, குளித்துவிட்டு, ஈரத் தலை மயிரை முனையில் முடிபோட்டு, நெற்றியில் பொட்டுக் கோடிட்ட பெண்கள் வருகிறார்கள். யானைப் புல் மண்டி கிடக்கிறது. எருமைகள் அவற்றை மேய்ந்துகொண்டிருப்பதைப் பார்த்தான். பாதியளவு மண்ணில் புதைந்து கிடக்கும் கருங்கல் தூண்மீது அமர்ந்தான்.

வார்த்தைகள் பிடிகொடுக்காமல் மனதில் அங்காடிக் குருவி களைப்போல அங்குமிங்குமாக அலைந்துகொண்டிருந்தன.

மேல் மண்டபமும் தூண்களும் இடிபாடுகளாகக் கிடந்த பழைய வணக்கத் தலத்தில் தாயம் விளையாடிக்கொண்டிருந்த வேலைக்கார புலையப் பிள்ளைகள், விளையாட்டை நிறுத்திவிட்டு தன்னையே பார்த்துக்கொண்டிருப்பதை அறிந்தபோது ஒருவித வெட்கத்தோடு எழுந்தான். அந்தி மயங்கும்போதுதான் வீட்டை யடைந்தான். பத்மு விளக்கை ஏற்றினாள். அங்கிருந்து கருங்கல் பலகையின்மேலிருந்த மூன்றுதிரி விளக்கை ஏற்றி வைத்தாள்.

முற்றத்தில் தீப வணக்கத்தை முடித்து மீண்டும் புல்பாய் தடுக்கில் வந்தமர்ந்த நாணுநாயர் சேதுவைக் கண்டதும் அவன் சிரிப்பதாகக் கருதி அழைத்தார்.

அம்மா வராந்தாவின் நடுவிடத்தில் வெற்றிலைப் பெட்டியைப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

''ரெண்டு மூணு நாளா இதைச் சொல்ல இங்கே வரணும் வரணும்'னு முயற்சி செஞ்சேன். இன்னைக்கு திருமண வைபவத் திற்கு வந்ததும்கூட உங்களோடவெல்லாம் பேசணும்ங்கிறதுக் காகத்தான்.''

அம்மா ஏதும் பேசாமல் வெற்றிலைப் பெட்டியை மூடிவிட்டு கீழே பார்த்துக்கொண்டிருந்தாள். முற்றத்தின் கடைசிவரை இரண்டு முறை நடந்தான். பிறகு, இடிந்து கிடக்கும் மதில் அருகில் சென்று கீழே சேது நின்றான்.

''நாஞெரு பொட்டை'ன்னு இங்கே யாரும் நினைக்க வேண்டாம்.''

திடீரென்று அம்மாவின் சத்தம் உயர்ந்து எழுந்தது. எல்லா வற்றையும் கேட்கவேண்டும் என்ற ஆதங்கத்தோடு ஈரத் துணிகளை மாற்றியும் மாற்ருமலும் ரெவிக்கையின் இரு முனைகளைப் பிடித்த படி சின்னம்மாவும் நடு முற்றத்துக்கு வந்துவிட்டாள். அம்மாவின் முன்பாக இருந்த வெற்றிலைப் பெட்டியை இழுத்து வைத்து, வெற்றிலையை எடுத்து வேகமாக தேய்த்தபடி சின்னம்மா வராந்தாவின் கீழ் பகுதியில் இருந்தாள்.

''எல்லாம் எனக்குத் தெரியும். எனக்குக் கண்ணும் காதும் செவிடாயிடலே.''

யாரோடு அம்மாவுக்குக் கோபம் ஏற்பட்டிருக்கு? ''செய்ய வேண்டியதை காலா காலத்திலே செய்யவேண்டாமா? மூத்தவர் நீங்கதானே? அப்போ நீங்கதானே இதெல்லாம் செய்ய வேண்டியது. ஆலோசனை செய்யவேண்டியதும், உறுதி செய்ய வேண்டியதும் நீங்கதானே.''

அப்போதுதான் புரிந்தது. மாதவ மாமாதான் மீண்டும் பிரச்சினைப் பொருளாகியுள்ளார்.

அம்மா பல சமயங்களில் சொல்லி வந்த பழிச் சொற்களை யெல்லாம் மீண்டும் தொடங்கியபோது சேதுவுக்கு வெட்கம் தோன்றியது. வடக்கு வீட்டுக்குப் போகிருர். பேசிக்கொண் டிருக்கிருர். டீ குடிக்கிருர்.

''எதுக்காக அந்தச் சின்னப்பொண்ணு கார்த்தூனின் பிறந்த நாளுக்கு அவன் விருந்து சாப்பிடப் போனுன்?''

அப்போது சின்னம்மா வாதத்தில் பங்கெடுத்துக்கொண்டாள்.

''இங்கு ஒரு சின்னப் பொண்ணு இருக்குதில்லே? அவளைக் கூப்பிடவேண்டாமா? உம், உம்.''

''சந்தையில் நல்ல மீன் வந்தால் வடக்கு வீட்டுக்குப் போய் விடுகிறது.''

அம்மா சின்னம்மாவை எச்சரிக்கை செய்தாள்.

''நீ பேசாம இரு. சொல்ல வேண்டியவங்க கிட்டே நான் சொல்லிக்கறேன்.''

அப்போது சின்னம்மா சரியாக அம்மாவோட தாளம் தவற வேண்டும் என்பதற்காக வாதத்தையே மாற்றினுள்!

''அங்கே தொடங்கணும்'ஞ தொடங்கிக் கட்டும். அவனுக்கு

பத்து நாற்பது வயசாகலியா? நான் கேக்கல்லே இந்த அக்காதான் அவனே வற்புறுத்தி வற்புறுத்தி பின்னுலேயே நடந்துக்கிட்டிருக்கு.''

''இல்லேன்னு நான் சொன்னேனு? நான் சொன்னேன், சரிதானே. சாதுக்களில்லையா, ஆணும் தூனும் இல்லையா'ன்னு முன்பு நான் சொன்னேன். வடக்கு வீட்டு வைபவத்தைப் பார்த்திட்டு இல்லே. ஐயோ பாவம்'னு நெனச்சு.''

''அதிலே மாற்றம் இப்போ ஏன்?''

சாதுக்கள்தான். அவங்களுக்கு யாருமில்லே, இப்பவும்.''

''ஆமா, அதுதான் உங்களுக்குத் தெரியாதது. மாதவனே அந்த வீட்டிலே பிடிச்சுவச்சிருக்கல்லையா? அதுக்கென்ன பொருள்? அவனுடைய நடப்புகளைப் பார்க்கிறப்போ என் தலையே சுத்துது. இனி அவள் அங்கே சம்பந்தம் செய்துகிட்டா பிறகு பூமியிலே நிற்பானு? நீங்களே சொல்லுங்க.''

''பின்னே,'' நாணு நாயர் காரித் துப்பினுர். எழுந்து புல் பாய் தடுக்கை அம்மா அருகில் சிறிது இழுத்துப் போட்டு அமர்ந்தபடி குரலைத் தாழ்த்திப் பேசலானுர்:

''எங்கள் விசாரம் அக்காளுக்கில்லை. மாதவனுக்குத்தான்.''

அம்மா பரபரப்பு காட்டவில்லை.

மாதவ மாமா தூதனுக நாணுநாயரை அனுப்பியுள்ளார். பெண்களோட சம்மதம் பெற்ருல் தீர்ந்தது. அப்பாவுக்கு ஊர் மரியாதைக்காக ஒரு கடிதம் எழுதவேண்டும். வடக்கு வீட்டுக் காரரோடு நாள் நிச்சயம் செய்யுமாறு சொல்லவேண்டும்.

''மாதவனுக்கு அப்படியொரு மோகம் ஏற்பட்டிருக்கு. ஆண்களென்ருல் அதில் குற்றம் சொல்ல முடியுமா?''

சின்னம்மா நியாயம் கேட்டது, சேது கேட்க எண்ணிய கேள்வியாகும்.

''எதைக் கண்டு இவன் இவளை விரும்ப ஆரம்பிச்சு இருக்கான்.''

',அவனுக்கு விருப்பம் மூத்த பெண்ணின்மேல் இல்லே.''

''பின்னே.''

அம்மா, சின்னம்மா கேள்விகளோடு தன் சப்தமும் சேர்ந்து கொண்டதோ? சேது தனக்குத்தானே அடக்கிக்கொண்டான்.

''ரெண்டாவது பெண்ணிருக்காளில்லையா?''

''அந்த சுமித்திராவா?''

''சுமித்திராவோ கைகேயியோ என்னவோன்னு எனக்கொண்ணும் தெரியாது.''

தெற்குச் சரிவிலுள்ள கமுகுத் தோட்டத்தைக் கடந்து முற்றத்தில் வந்து வீசிக்கொண்டிருந்த குளிர்ந்த காற்று சட்டென்று நின்றுபோய்விட்டது.

யாரும் பேசவில்லை. தனது நெஞ்சு படபடக்கும் ஒலியை தானே கேட்டுக்கொண்டு சேது நின்றுகொண்டு இருந்தான்.

இறுதியில் இரவும் பகலும் கடந்துபோன பின்பு அம்மாவின் சத்தம் கேட்டபோது ஒரு நிமிஷம் நிம்மதி தோன்றியது.

''ஆ! என் தெய்வமே! இவனுக்கு என்ன கேடு வந்தது?''

''நான் இதையெல்லாம் அவனிடம் சொன்னேன். மூத்த பொண்ணு இருக்கும்போது இளைய பொண்ணைத் தர சம்மதிப்பது அவங்களுக்கு ரொம்பக் கஷ்டம். அவன் அதுக்கு என்ன சமாதானம் சொன்னு'ன்னு கேட்டீங்களா? தேவுவுக்கு நானே ஒரு துணை ஏற்பாடு செய்துடறேன்'னு—சொன்னான்.''

சொன்னது எதையுமே கேட்காத பாவனையில் அவர்களிடையே நடந்து, வராந்தாவிலிருந்து வரவேற்பறையின் முன்னாலிருந்த ஏணிப்படிகளில் ஓசையில்லாமல் ஏறினான்.

வெளிச்சமில்லை.

பத்மூவைக் கூப்பிட்டுச் சொல்லவில்லை.

படுக்கையின்மேல் படுத்து ஆச்சரியத்தோடு யாரைப்பற்றி என்றில்லாத நிலையில் எதையெதையோ நினைத்துக்கொண்டிருந்தான்.

மாதவ மாமா ஒரு சத்துருவாக உருவாகியிருக்கிறார். மாதவ மாமா!

மஞ்சப் பூத்த பல்லும், பீடிப் புகையும், கருத்த சரீரமும், முழுதும் மயிரடர்ந்த மாதவ மாமா.

முன்பு அன்பால் ஈர்க்கப்பட்டவராயிருந்தார். இப்போது மாதவ மாமா ராட்சதனைப்போல அவனுக்குத் தோற்றமளித்தார். பிள்ளைப் பருவத்தில் கேட்ட கதைகளில் யாரும் போக முடியாத கருங்கல் கோட்டைகளில் முட்கள் உள்ள கதாயுதங்களை வீசி, காவல் நிற்கும் ராட்சதன்.

இரவு படுத்திருந்தபோது பயனற்ற முறையில் கடும் கோபம் தான் தோன்றியது. சுமித்திராவைக் காப்பாற்ற கருங்கல் கோட்டையின் வாசலில் மந்திர சக்தியினால் ஏழு கற்களாக வந்து சேர்ந்த

ராஜகுமாரனைப்போல ஆகப் போவதில்லை. ஒருபோதும் ஆக முடியாது.

காவி நிறமுள்ள நிலத்தில் நனைந்த உதடுகள் சிறிது விரிந்தபடி பாதி கண் மூடிக்கிடக்கும் வாசனைத் திரவியக் கூட்டின் நிறத்தில் உள்ள சுமித்திராவின் உருவம் மனதில் நிறைந்து நின்றது.

கண்டங்குளங்கர அப்புண்ணி மேனனின் மனைவி வீட்டில், திரூரில் இருக்கும் சுமித்திரா தனக்கு ஏற்பட்டுள்ள ஆபத்தைப்பற்றி அறியவில்லையே என்பதை என்ணியபோது வேதனை தோன்றியது. காதலில் வெறுப்பும் ரோஷமும், வேதனையும் தோன்றிய வாழ்வின் தொடக்க நிமிடம், பதினெட்டு வயதுள்ள வாலிபனுக்கு மட்டுமே புரியக் கூடிய, ஒரு நிமிடம்.

பட்டன் உடைந்துபோய் அரைக்கால் ட்ரவுசரை அரைஞாண் கயிற்றுள்ளே திருகி வைத்துக்கொண்டு மாமரத் தோப்புகளிலும் நாவல் மரத்தடியிலும் சுற்றி நடக்கும்போது யாருமில்லாத அவள், சத்துருவின் நிழல்போல பின் தொடருகிறாள். நகச்சுத்தி நோய் பிடித்த விரல்களால் அவள் ஓடி எடுக்கிறாள். இறுதியில் அன்புணர்வு பொங்க, உடைந்த மாங்காயை நீட்டுகிறாள். அடுத்துள்ள குளிக்குமிடத்தில் பட்டுத்துண்டு அணிந்து அவள் நின்று குளிக்கின்றாள். பேசுவதற்காக அடுத்துப் போகும்போது அவள் அங்கிருந்து விலகிப் போகிறாள். ஒரு சமயம் யாருமறியாமல் ஆண்டுகளாக உதிர்ந்து வீழ்ந்து ஒன்று சேர மேய்ச்சல் நிலத்தை ஒருமுறை கண்டான். சத்துருவின் நிழல் அல்ல. சாபத்தால் பாதிக்கப்பட்டு விடுபட்டு வெளிவந்த அழகி!

அப்போது அவள் தூர இருந்தாள், உயரத்திலிருந்தாள். உரத்த குரலில் அவளுடைய பெயரை அழைக்கக்கூட இயலாதவனாக இருந்தான்.

வாழ்க்கை ஒரு கனவாகும்போது, அவள் ஒரு உலகமாகும் போது, பதினெட்டு வயதுக்காரனை அவன் ஆண் தன்மையின் வேலிக்கப்புறம் காத்து நிற்கிறான். ஒரே நாளில் பெண்ணாக மாறிய, நேற்றுக் குளக்கரைப் படித்துறையில் கண்ட சத்துரு அகன்று போவதை கோபம் நீக்கிப் பார்க்கவேண்டியுள்ளது.

யாரோடும் கூற முடியாது. பதினெட்டு வயதுக்காரனின் கனவை யாரும் கேட்கவும் மாட்டார்கள்.

பனைமரங்களினூடே வலிய கைகளிலிருந்து இரும்புத் தண்டுகள் உயருவதைக் கண்டு திடுக்கிட்டான்.

[4]

நன்கு பிசையப்பட்ட சேற்றைப்போல கசங்கிய இரவு மறைந்த போது வெளியிலிருந்து ஆட்களோட சத்தம் கேட்டது. இரவின் அரவணைப்பினின்றும் விடுபட்டு எழுந்தபோது இனிய குரல் கேட்டது.

ஆம், அது சுமித்ராவின் சத்தம்தான்.

காது கொடுத்துக் கேட்ட அம்மா ஆச்சரியத்தை அடக்கிக் கொண்டவளாக, தணிந்த குரலில் கேட்டாள்:

''நீ, எப்போதிடீ வந்தே?''

அவள் என்ன பதில் கூறினுள் என்பது கேட்கவில்லை. உறக்கத்தின் அழகிய புகைச் சுருள்களை கண்களிலிருந்து விரைந்து விலக்கிக் கொண்டு வேகமாக ஏணிப்படி இறங்கி கீழேயுள்ள வராந்தாவை அடைந்தபோது, சுமித்திரா ஆடுகளைக் குன்றைநோக்கி விரட்டிக் கொண்டிருந்தாள்.

வழக்கத்திற்கும் முன்னதாக எழுந்ததில் அம்மாவுக்கு ஆச்சரியம் தோன்றியிருக்க வேண்டும். கல்லூரி மூடி வந்ததுமுதல் காலை வெயிலின் சூடு நன்கு ஏறும்வரைத் தூங்கிக்கொண்டிருப்பதுதான் பழக்கம். விடியற்காலையில் சின்னம்மாவுடனே எழுந்திருக்கும் பத்மூ சின்ன முறமும் சிறிய துடைப்பமும் கொண்டு வேலைக்காரச் செறுமியைப் போலவே கூட்டிப்பெருக்கி அள்ளியபடி திண்ணையில் விளையாடிக்கொண்டு இருந்தாள். வெறுமனே அவளை அரட்டும் பாவனையில்:

''போடீ, உள்ளே போடீ. வீட்டுக்கு முன்னுலே அசுத்தப் படுத்துறீயா?'' அவள் அழுக்குப்பிடித்த முகத்திலுள்ள பெரிய கண்கள் மிரள பயத்தோடு பார்த்தபடி மெல்ல உள்ளே நடந்தாள்.

முகம் கழுவவோ, தலை வாரவோ காத்து நிற்கவில்லை. உடுத்தியிருந்த வேட்டியின் தலைப்பில் முகத்தைத்துடைத்து கைவிரல்களை சொடுக்கு எடுத்து, முடியைக் கையால் சரிசெய்து ஒதுக்கியபடி குன்றின் சரிவை நோக்கி நடையைக் கட்டினுன்.

நாவல் மரங்களிடையே சுமித்திராவின் ஆடுகள் துளிர்த்திருந்த செடிகளின் நுனியையும் காய்ந்து கிடந்த இலையையும் கடித்து ருசித்துக்கொண்டு நிற்பதைக் கண்டான். கழுத்தில் பெரிய தொங்கட்டான்கள் தொங்கும் கிழ ஆடு, சற்று நலமற்ற நிலையில் சோர்வாகப் பார்த்தபடி கொம்பையாட்டியது. என்றுலும், அங்கு மிங்குமாகச் சென்று காய்ந்த இலைகளுக்கிடையே பசுமையாகத் தெரிந்தவைகளை மேயத் தொடங்கியது. சுமித்திரா அங்கே எங்கும் காணப்படவில்லை. அவளைத் தேடவில்லை. குன்றின் சரிவில்

சுற்றி நடக்கும்போது எதிர்பாராத விதமாக சந்திப்பதுபோல் அவளைக் காணவேண்டும் என எண்ணினான். நாவல் மரங்களைக் கடந்து ஒற்றையபடிப்பாதை இறங்கி ஏறி வடக்கே மேல்பக்கமுள்ள குட்டப் பனைமரக்கூட்டம் வரை நடந்து பார்த்தான். திரும்ப இல்லத்துத் தோட்டத்தின் முனையில் மாப்பிலா கிழங்கு விவசாயத் துக்கு வேண்டி வேலிகட்டிப் பிரித்திருந்த இடம்வரை சுற்றி நடந் தான். கல்லைப் பொறுக்கி ஆட்டின் கூட்டத்தினிடையே எறிந்து திரும்பி நடந்து போனான்.

வடக்கே வேலிகட்டி வைத்திருப்பதால், பார்க்கவேண்டுமென் றால் படியிறங்கி வயல்களினூரடே தான் நடந்து போக வேண்டும்.

'வேண்டாம், நான் யாரையும் பார்க்க வேண்டாம்' சேது தனக்குத்தானே சொல்லிக்கொண்டான்.

—சுமித்திரா உனக்கு வேண்டியவளில்லை.

மத்தியானம் சாப்பிடக் கூப்பிடும்வரை வீட்டின் முன்புற வர வேற்பறையில் படித்துக் கொண்டிருந்தான். கவனம் எப்போதும் வெளியிலேயே இருந்தது — கேட்கிறதா, சத்தம் கேட்கிறதா?

பத்மூ வந்து சொல்லிக் கூப்பிடும்போது எப்போதுமே வெறுப்புத் தோன்றும். பரமேஸ்வர அண்ணன் சாப்பிடறதைப் பார்த்து, தனக்குப் பரிமாறப்போவது கஞ்சிதான் என்பதை யறிந்து வெறுப்பையும் சங்கடத்தையும் வெளிக்காட்டிக் கொள்ளாது முகஞ்சுழித்து நின்றகாலம் வெகுதூரத்தில் இல்லை. இப்போது அவன் முதிர்ச்சியடைந்துள்ளான். அதன் பேரில் மத்தி யானம் அரிசிச் சோறு வடித்துப் பரிமாறப்படுகிறது. அவ்வழியாக பத்மூ நடந்து போகும்போது வயிற்றைக் கலக்கும். வாரி விழுங்கு வது வெள்ளைக் கல்லோ என்று தோன்றும். நடைவழியில் பலாப் பழத்தோலை அறிந்துவைத்து, அவியலைக் குவித்துவைத்து, பீங்கான் களுக்கு அருகில் கஞ்சிக் கிண்ணங்கள் நிரம்பியது அவன் எழுந்து போன பின்புதான்.

கிருஷ்ணன் குட்டி கூறியதை எப்போதும் அவன் நினைத்துப் பார்ப்பதுண்டு. தரித்திரம் ஒரு பாவம் இல்லை. ஆனால், இங்கு அம்மாவும் சின்னம்மாவும் அந்தப் பாவத்தை தங்களிடமிருந்து மூடிவைக்க முயல்கிறார்கள்.

'—நண்பா, காரணம் ஒன்றுமில்லாமலே என்னுடைய வீட்டில் நான் அறிமுகமில்லாதவனைப் போல இருக்கிறேன்.'

உள்ளே பல்வேறு இடங்களிலும் எல்லோரும் குளிர்ந்த தரையைத் துடைத்து சற்று நேரம் கண் அயரப் படுத்தபோது மீண்டும் கீழே இறங்கினான்.

உச்சி வெயிலில் குன்றின் சரிவில் மீண்டும் சுற்றி நடந்தான்.

குன்றின் சரிவில் வடக்கு வீட்டின் முன்பாகத்தில் பேயாடும் இடத்திற்குச் சமீபமாக குடைப் பனைமரக் கூட்டங்களினூடே நின்ருன். அங்கே நின்ருல் வடக்கு வீட்டு முற்றத்தின் பிய்ந்த கூறையும் இப்போது மெழுகு பீர்க்குக் கொடி படரும் இடிந்து விழுந்து கிடக்கும் பழைய தொழுவத்தின் தரையும் தெரியும். மனச் சக்தியால் அவளை வருத்தவேண்டும்.

வகுப்பறையில் கேட்டதை நினைத்துக்கொண்டான். 'கல் கொண்டும் மரம் கொண்டும் உருவாக்கப்பட்ட தெய்வ விக்கிரகங் களுக்கு முன்பாக நூற்ருண்டுகளாக மனிதன் வந்து பிரார்த்திக்கும் போது அவர்களுடைய நம்பிக்கையிலிருந்து உயிரற்ற சிலைகளுக்கு தெய்வீகத் தன்மை கிடைக்கிறது.'

பிரார்த்தனையின் சக்தியினுலா? மனதின் சக்திகளுக்கு கடினத் துவத்தைத் தேடி அவைகளை அடைந்து கோரிக்கை தந்ததாலா?

சூடேறிய சரளைக் கற்களிலிருந்து எழும் ஆவியில் வியர்வைக் குளியல் செய்தவளாக சுமித்திரா ஏறி வருகிருள். வெற்றிப் பெரு மிதம் கொண்டு ஒரு நிமிஷம் மந்தகாசம் புரியவேண்டும்போல் தோன்றியது.

''என்ன சேது இங்கே?''

''ஒண்ணுமில்லே.''

''தெற்கு வாசல் தரை பொடிந்துபோய்க் கிடக்கு, திமுசுக் கல்லை எடுத்துக்கிட்டுப் போயிருந்தாங்க. அதை வாங்கிட்டு வர்றேன்.''

அவள் கொஞ்சம் பெருத்திருக்கிருளோ? கழுத்திலிருந்து ஒழுகும் வியர்வையில் மஞ்சள் நிறமுள்ள ஜாக்கெட்டின் சிவந்த பைபிங்குகள் நனைந்துபோயிருக்கின்றன. அவள் கடந்து செல்லும் போது கூப்பிட்டான்.

திரூரிலுள்ள பெரிய வீட்டைப்பற்றி கேட்கவேண்டும்போலிருந் தது. அங்கே யாரெல்லாம் இருக்கிருர்கள்? கழுத்தில் அவல் போல தட்டையாக்கிய சிறிய கண்ணிகள் கோர்த்த புதிய தங்க மாலை காணப்படுகிறதே, அவள்அங்கே போயிருந்தபோது கண்டங்கரை மேனனின் மனைவி அன்பளிப்பாகத் தந்ததா?

அவன் பேசுவதற்கான சொற்கள் உள்ளத்தில் திரளும்போது அவள் கேட்டாள்:

''எப்போ சேது போகணும்?''

அப்போது கேட்க அவகாசம் கிடைத்தது.

''சீக்கிரமா போயிடணுமா?''

சுமித்திரா, அதன் உட்பொருளின் தொனியை அறியாதவளாக உரக்கச் சத்தமிட்டுச் சிரிக்கிறுள்.

''எதுக்காகச் சிரிக்கிறே?

சிரிப்புக்கிடையே அவள் ஒன்றுமில்லே என்பதுபோல் தலையை ஆட்டினுள். அவளேப் பார்க்காமல் குடைப்பனே ஓலேகளே கீறிக் கொண்டு, தாழ்வாகத் தெரிந்த முற்றத்தைப் பார்த்தபடி நின்ருன்.

''காலேஜுக்கெல்லாம் போயிட்டும் சேது

இப்போதும் அப்படியேதானே.''

மனதில் சினம் கிளர்ந்தெழுந்தது.

''மாதவ மாமாவோட திருமண விஷயம் கேட்டிருப்பியே.''

அவன் கேட்டபோது விருப்போடு காத்திருந்தவளேப்போல சுமித்திரா காணப்படவில்லே.

''ஓ, நானும் கேட்டேன்.''

''எதுக்காக மாதவ மாமா எப்போதும் உங்க வீட்டுக்கு வர்ருர்?''

''அப்படியா!''

''ஒருவேளே உன்னேப் பார்ப்பதற்காக இருக்கும்.''

சுமித்திரா அப்போதும் உரக்கச் சிரித்தாள். சிரித்துக் கொண்டு நடந்து நாலேந்து அடி தூரத்தில் நேராகத் திரும்பி நின்று துப்பிவிட்டு உதட்டைத் துடைத்துக்கொண்டு வந்தபோது சிரிக்கும் கண்களில் தெளிவு நிறைந்திருப்பதாகத் தோன்றியது.

''சேது பேசுறதைக் கேட்டுக்கொண்டு நின்ருல் சிரித்தே செத்துப்போக வேண்டியதுதான்.''

ஆண்மையுடன் நிமிர்ந்து நின்று அவளே உற்றுப் பார்த்தான். கண்கள் பேச முயன்றன: பார், உன் முகத்தைப் பார். சேதுவின் முகத்தைப் பார்த்து மீண்டும் சிரித்தாள்.

''நான் வரும்போது சேது போயிருப்பார்'னுதான் நினேச்சேன். கார்த்தூன்கிட்டே கேட்டபோதுதான் போகலே'ங்கிறது தெரிஞ்சுது.''

''எப்போ திருமணம்?''

சுமித்திரா ஒரு நிமிஷம் பதறிப்போய்விட்டவள்போல் தோன்றினுள். என்ருலும் தனக்குத் தானே கட்டுப்படுத்திக் கொண்டு முகத்தின் சிரிப்பு மறையாதபடி கூறினுள்:

''அடுத்து நடக்கும். சேது வருவியா?'' அவனது கழுத்தைக் கைகளால் பற்றிக் குலுக்கிக்கொண்டு கேட்கவேண்டும்போல் இருந்தது. மஞ்சள் நிறப் பல்லும் பீடிப் புகையின் மணமும் கருத்த சரீரமும் உள்ள இந்த மனிதரிடம் நீ எதைக் கண்டாய்?

ஒன்றும் பேசாமல் வழியைப் பார்த்தபடி குசலம் விசாரித்துப் பிரிந்த பாவனையில் சேது தலை குனிந்தபடி நடந்தான். பின்னால் சுமித்திரா இருக்கிறாள் என்பதைத் தெரியாதவனைப்போல நடந்தான். குறுக்கு வழியைக் கடக்கும்போது சுமித்திரா கேட்டாள்:

''அப்புறம் சேது''

நின்றான். திரும்பிப் பார்க்கவில்லை.

''நாங்கள் இருக்கும்போது திருமண வைபவம் ஒன்றும் உண்டாகாது. சேது வரணும்'' சேது மறுமொழி கூற நிற்கவில்லை.

சங்ஙம்புழாவின் கவிதைகளில் உலகத் துன்பங்களின் ஆணி வேரான பெண்களை வர்ணித்த வரிகளை உருப் போட்டுக் கொண்டு உச்சி வெயிலில் நடந்தான்.

பகல் இருளடையவும் மற்றொரு இரவு விரைந்து வருவதை எதிர்பார்த்துக் காத்துக்கொண்டு மாடி அறையிலிருந்தான். கல்லூரி நூலகத்திலிருந்து எடுத்துவந்த இரண்டு நூல்களில் ஒன்று முடிந்து போயிருந்தது. ஹார்டியின் நாவலை தொடங்கியிருந்தான். மனைவியை விற்கத் தொடங்கும் பகுதியில் உள்ளம் ஒன்றியிருந்த போதுதான் கீழேயிருந்த அம்மாவும் சின்னம்மாவும் உற்சாகத்துடன் பேசிக்கொண்டிருப்பது கேட்டது.

''நேற்று என்ன நாள்? நல்ல நாளோ?

அதைப் பார்க்கணுமில்லையா?''

''டீக்குக் கொஞ்சம் தண்ணி வை. பத்மூ அந்தப் பஞ்சாங்கத்தை எடுத்து சேது அண்ணன்கிட்டே கொடுடீ.''

கீழே இறங்கி வந்தபோது பங்குட்டி வந்திருந்தான். அப்பாவின் வீட்டு வெளித் தோட்டத்திலே சிறியதொரு ஓலைக் குடிசையில் வாழ்ந்து வரும் வேலுவின் மகன்தான் பங்குட்டி.

''இந்தா! சேது. சரோஜினி குழந்தை பெத்திருக்காள். பெண் குழந்தை. நேற்று மாலை ஆறரையாகும்போது பூராடம் இல்லை. உத்திராடம் தொடங்கியிருந்தது.''

பஞ்சாங்கத்தைப் பார்த்துச் சொன்னபோது அம்மாவுக்குச் சமாதானம் ஏற்பட்டது. ''உத்திராடம் நல்ல நாளாகும். பூராடம்'னு குறையுண்டாகும். பிறகு அதுவே கெடுதியாகவும் ஆகும்.

தேநீரும் உப்புமாவும் தயாரிக்க சின்னம்மாவுக்கு உத்தரவு போட்டாள்.

சேதுவை உள்ளே அழைத்து அம்மா சொன்னாள்:

''உன் கையிலே காசிருக்கா?''

கோபம்தான் வந்தது. எங்கிருந்து இருக்கும். அம்மா யாரோடு என்றில்லாமல் கூறினாள்:

''குழந்தை பிறந்ததைச் சொல்ல வரும்போது ஐந்து ரூபாயாவது கொடுக்கவேண்டாமா?'' இல்லத்துக்கு பத்மூவை அனுப்பிச்சுப் பார்க்கலாம். பெட்டியிலிருந்து துவைத்த முண்டு இருந்தா ஒண்ணு கொடு, பங்குட்டிக்குக்—கொடுக்கணும்.''

அம்மாவோடு விவாதிக்கத் தொடங்கியபோது எச்சரிக்கை செய்தான். ''ஸ்ஸ்ஸ்...மெதுவா. வெளியே கேட்கவேண்டாம். ரொம்பப் பழசு வேண்டாம். ரொம்பப் புதிசும் வேண்டாம்.''

பங்குட்டியைக் கூப்பிட்டுச் சலவை செய்த முண்டும் ஐந்து ரூபாயும் கொடுத்து வழியனுப்பி வைக்கும்வரை அம்மா உள்ளேயும் வெளியேயுமாகப் பரபரப்போடு நடமாடிக்கொண்டிருந்தாள்.

இரவு சாப்பிட அமர்ந்திருக்கும்போது அம்மா சொன்னாள்:

''நாளைக்கு நீ கொஞ்சம் போயிட்டுவா''

''எங்கேயாம்.''

''அப்பாகிட்டே''

''பிறந்த குழந்தையைப் பார்க்க யாரும் போகலேன்னு அந்தக் குற்றம் உன்மேலேதான் உண்டாகும்.''

''அம்மா போனாப் போதும்.''

அம்மா அதற்குமேல் பேசவில்லை.

''ஊஹூம் அம்மாவுக்கு இங்கே நிறையே வேலை இருக்கு. சும்மா இருக்கிற நீ கொஞ்சம் போய் வரக்கூடாதா சேது?''

பரமேஸ்வர அண்ணன் திருமணத்திற்குப் பின்னர் ஒரேமுறைதான் அப்பாவின் வீட்டிற்கு அம்மா போயிருக்கிறாள். அதுவும் ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு.

நளினி அக்காவையும் பெரியப்பாவையும் மற்றும் சிறிய அப்பாவையும் எல்லோரையும் நினைவுபடுத்திப் பார்த்தபோது போக வேண்டும் என்ற ஆர்வம் அதிகமாக ஏற்பட்டது.

நன்கு விடிந்தபிறகு அம்மா வெளியே போனாள். எங்கிருந்தோ பத்து ரூபாய் வாங்கிக்கொண்டு வந்தபோது, போகவேண்டு

மென்ற ஆர்வத்தை வெளியே காட்டிக்கொள்ளவில்லை. குழந்தையைப் பார்க்கும்போது அதைத் தூக்கி வருகிறவனுக்கு ஒரு ரூபா கொடுக்கவேண்டும் என்று அறிவுறுத்தியபோது சொன்னான்:

''இது பெரிய வேலைதான்.''

தலையணைத் துணிக்குள்ளதுபோல நீளக் கோடு போட்ட சட்டையும் ட்ரௌசரும் அணிந்து எண்ணெய் வழியும் முகத்தோடு அம்மாவுடன் ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு சென்ற சேது, இப்போது வளர்ந்திருக்கிறான். அதைத் தெரிவிக்கவேண்டும் என்ற ஆர்வம் ஏற்பட்டிருந்தது.

சட்டையையும் வேஷ்டியையும் காகிதத்தில் அமுக்கிப் பொட்டலம் கட்டிக்கொண்டு படியிறங்கி நடக்கும்போது தேவு வடக்கு வீட்டு வாசற்படியில் நின்றுகொண்டு கூப்பிட்டுச் சொன்னாள்:

''சேது எங்கே இப்படி?''

''திருச்சூருக்கு.''

வடக்கு வீட்டு வாசற்படியை ஏறிட்டுப் பார்க்கவில்லை. சுமித்திரா கேட்டாலும் கேட்காவிட்டாலும் தனக்கு ஒன்றுமே அங்கில்லை.

மீன் வியாபாரிகளுக்கும் தலைச் சுமைக்காரர்களுக்கும் மத்தியில் மூச்சுத் திணறியபடி பஸ்ஸில் கம்பியைப் பிடித்துத் தொங்கியபடி நின்றுகொண்டு இருக்கும்போது நளினி அக்காவைப் பற்றிச் சிந்திக்கலானான்.

ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு அங்கு சென்றபோது நளினி பத்தாவது படித்துக்கொண்டிருந்தாள். டிரெயினிங்கை முடிக்கவில்லை. உடன் படித்து வந்த யாரோ ஒரு கிறிஸ்தவப் பையனோடு நளினி அண்ணிக்கு சிநேகிதம் ஏற்பட்டுவிட்டது. ஆரம்பத்தில் இது அண்ணியின் அம்மாவுக்குத்தான் தெரியவந்தது. பரமேஸ்வர அண்ணன் போய்க் கூப்பிட்டபோது நளினி அண்ணி வரவில்லை. கிறிஸ்தவனோடு கூடவே எங்கேயோ ஓடி வாழ்ந்து வருவதாகத்தான் வீட்டில் அப்போது கிசுகிசுத்துக்கொண்டார்கள். கோடை விடுமுறைக்கு வரும்போது அவளுக்குத் திருமணம் நடத்தி வைப்பதற்காகத் தந்தியடித்து அப்பாவை வரவழைத்தோம். நளினி அண்ணி வரவில்லை. அப்பாவும் பரமேஸ்வர அண்ணனும் சேர்ந்து போய்ப் பிடித்துக்கொண்டு வந்தார்கள். அறையில் அடைத்து வைக்கும்படி அப்பா உத்தரவிட்டார். திருமணம் நடக்கவில்லை. மருமகள் ஓடிப்போவாள் என்று பயந்து

அப்பா காவலுக்காக ஆளை நிறுத்தியிருந்தார். அதன் பிறகு நளினி அண்ணியைப் பற்றி யாரும் பேசக் கேட்டதில்லை. அண்ணியின் அம்மாவைப் பார்த்தபோதெல்லாம் கேட்கத்தோன்றும். ஆனால், அண்ணி அம்மா தனக்கொரு தங்கையுள்ள விவரத்தைக் கூறிக் கேட்டதில்லை.

பெரிய செந்தூரப் பொட்டை வைத்துக்கொண்டு கை நிறைய கண்ணாடி வளையல்களை அணிந்து எப்போதும் ஓசை எழுப்பிக் கொண்டு நடமாடும் நளினி அண்ணி ஆண் பிள்ளைகளைப்போல சீழ்கை அடிப்பாள். தையல் பெட்டியைத் திறந்து வைத்துக் கொண்டு அவள் உட்கார்ந்து துணியில் பூவேலை செய்வதை ஆர்வத்தோடு பார்த்துக்கொண்டிருப்பான்.

பாழுங் கல்லையும் இடிந்து பாழடைந்து கிடக்கும் கோயிலையும் ஓர் ஓட்டுக் கம்பெனியின் பெயர்ப் பலகையையும் கடந்து சாலையின் மேட்டில் பஸ் போகும்போது கண்டங்கரை என்று கூவினான். காக்கி டிரௌசரை ஒருக்கணித்து ஆபாசமாகச் சொரிந்துகொண்டு பெண்களின் இருக்கைக்கு பக்கத்திலிருந்த பின்வரிசையிலிருந்த பயணிகளோடு பேசிக்கொண்டிருந்த கண்டக்டர் அதைக் கேட்கவில்லை.

தலை தாழ்த்தி நெருக்கியமர்ந்திருக்கும் பெண்களை சிரிக்கச் செய்ய மீண்டும் முயன்றுகொண்டிருந்தார் கண்டக்டர்.

இறக்கத்தில் இறங்கிய பிறகு தயாள குணமுள்ள டிரைவர் வண்டியை நிறுத்தினார். நரக வேதனையிலிருந்து அவன் வெளியேறினான்.

## [5]

புழுதி மணல் நிறைந்து கிடக்கும் ஒற்றையடிப் பாதை. பெரிய ஆலமரம். ஆலமரத்தடியில் குருத்தோலைகளும் சிறு சிறு வாழைத்தண்டுகளும் கொட்டாங்குச்சிகளும் கிடக்கின்றன. முன்பு மாலையில் கோயிலிலிருந்து தனியாகத் திரும்பும்போது ஆலமரத்தடி வழியாகச் செல்லாதிருக்க காவல்காரனின் வீட்டு வழியாக ஓடுவான். மந்திரத்தால் பேயாட்டி முடிந்தவுடன், பேயை ஓட்டும் இறுதிச் சடங்குகளை இந்த ஆலமரத்தடியில்தான் செய்து முடிப்பார்கள்.

பெரிய வீடு.

தென்னந் தோப்பின் நடுவில் பரந்து கிடக்கும் அப்பெரிய வீட்டைப் பற்றி நினைப்பதே பெருமையாக இருந்தது. முன்புறத்

தில் கறுப்பு வர்ணம் அடித்து, குறுக்குச் சட்டங்களிட்ட வராந்தாவில் ஒட்டு மாமரத்தின் கிளைகள் உள்ளே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தன.

எனினும், அவன் இங்கே ஒரு விருந்தாளிதான். அரவமற்ற முற்றத்தின் வழியாக நடந்தான்; முன் அறையை அடைந்த போது யாரோ கேட்பது கேட்டது.

''யார் வர்றது?''

வெளியிலிருந்து காய்ந்திருந்த முண்டு முதலான துணிகளை வாரியெடுத்துக்கொண்டு முன்னறைக்குப் போக வந்த பெண் ஒதுங்கி நின்ருள்.

''சேதுவா? அடக் கடவுளே! சேதுவைப் பார்த்தும்கூட யாரு'ன்னு புரியாமல் போயிடுச்சே.''

நளினி அண்ணி!

நரைத்த தலையும் கரை போட்ட முண்டு வேட்டியுமாக நிற்கும் நளினி அண்ணி மொத்தத்தில் மெலிந்து போயிருந்தாள்.

சித்தப்பாவும் அங்கே வந்துவிட்டார். அப்பா, பெண்களைக் கண்டபோது மகிழ்ச்சி ஏற்பட்டது. காலையில் கோயில் குளத்திலே போய் குளித்துவிட்டு சந்தனப் பொட்டிட்டு இரட்டை முண்டு கட்டி நடப்பதைப் பார்க்கும்போதே மதிப்பாக இருக்கும். சின்ன தோர் முண்டு வேட்டியைச் சுற்றிக்கொண்டு, கிழிந்த உள் பாவாடையின் அடிப்பகுதிகளை வெளிக் காட்டிக்கொண்டு நடக்கும் அம்மாவையும் சின்னம்மாவையும் பார்க்கும்போது வெட்கமாக இருக்கும்.

''இப்போ காலேஜுக்குப் போய் பெரிய ஆம்பிளையாயிட்டே, இல்லே? இருந்தாலும் இங்கே அடிக்கடி வந்து போகக்கூடாதா?''

''பெரியப்பா எங்கே?''

''அம்மா குளிக்கப் போயிருக்கு. அதை இங்கே கொடு.''

நளினி அண்ணி காகிதப் பொட்டலத்தை கையில் வாங்கிஞள். கால் கழுவக் கிண்டியில் தண்ணீர் கொண்டுவந்து வைத்தாள்.

வீட்டு விஷயம் சொல்லிக் கொண்டிருக்கும்போது பெரியப்பா வந்தார்.

''குழந்தையைப் பார்த்தியா?''

இருள் கவிந்திருக்கும் சிறிய அறையில் ஈரத் துணிகளின், டெட்டாலின் வாடை தங்கி அடித்துக் கொண்டிருந்தது.

அண்ணி கிடந்த யிடத்திலிருந்து தலையைத் தூக்கிக் கேட்டாள்.

''அம்மா ஏன் வரலே, சேது?''

''பிறகு வரும். அண்ணன் வரும்போது கூட வருவதாகச் சொன்னுங்க.''

கிழிந்த பழைய துணிகளால் சுற்றிய நிலையில் இருந்த குழந்தையைப் பார்த்துக்கொண்டிருந்த மருத்துவச்சிதான் குழந்தையை வெளியே வெளிச்சத்துக்குக் கொண்டு வந்தாள். வெளிச்சத்தைப் பார்க்க பயந்து பாதிக் கண்களை மூடிக்கொண்டிருந்தது குழந்தை.

''யாரு வந்திருக்கு பாரு? சேது மாமா வந்திருக்கு.''

''உண்ணியும் சியாமளாவும் எங்கே?''

''அண்ணன் கூடப் போயிருக்காங்க. இங்கே இருந்தா குழந்தையைத் தூங்க விடறதில்லே.'' அண்ணி சொன்னுள்.

''புறக்கடைக் கதவு திறந்திருக்கியாம்மா? சேரை மடக்கிவை. கட்டிலின் கோடியில் கைத்தடி இருக்கு.''

முதலில் அந்த அறை அண்ணியினுடையதாகும். மூடியிருந்த ஜன்னல் கதவுகளை நளினி அண்ணி தள்ளித் திறந்தாள்.

''சேது உட்காரு. பஸ்ஸிலேதானே வந்தே!''

ஜன்னலின் சதுர குறுக்குச் சட்டங்களைப் பிடித்து நின்றபோது பெரிய கண்ணுடியில் தனது உருவத்தைப் பார்த்தான். அப்பாவிருந்த ஜன்னலின் மேலே அண்ணனும் அண்ணியும் இருக்கும் ஒரு பெரிய போட்டோ பிரேம் போடப்பட்டு மாட்டி வைக்கப் பட்டிருந்தது.

வெள்ளைப் பீங்கானில் மாம்பழமும் ஒட்டுக் கிளாஸில் தேநீருமாக பெரியப்பா வந்தார்.

நளினியக்கா கக்கத்தில் சுருட்டி மூடி வைத்திருந்த விரிப்பை விரித்தாள்.

''ரவி எங்கே?''

''வெளியே போயிருக்கான். இப்போ வந்துடுவான்.''

பெரியப்பா மகன் ரவிக்கும் தனக்கும் ஒரே வயதுதான். சிறு வயதில் அவர்கள் நண்பர்களாக இருந்தார்கள். மூன்று மாதம் தான் அதிகம் என்பதால் அவனை அண்ணன்'னு அழைத்து வந்தான்.

ஐந்து ஆண்டுகளுக்குள் நளினியண்ணி எவ்வளவு மாறிப் போயிருக்கிருள்!

வெளுத்த தலையோடு அங்குமிங்குமாக மயிர் குறைந்து காணப் படுகிறது. கையின் மூட்டுவரை பலவித வர்ணங்களில் அழகிய கை வளையல்கள் அணிந்திருந்த கைகள் வெறுமனே காணப்படுகின்றன. மழையால் ஈரமான களத்தில், மண்ணில் ஈரம்பட்ட நேற்றையப் பூவைப் போல அவள் வாடி நிற்கிறாள்.

''சேது காலேஜுக்குப் போன செய்தியைக் கேள்விப் பட்டதி லிருந்தே கடிதம் எழுதணும்'னு நினைச்சுக்கிட்டிருந்தேன். ஆனால், எழுதலே.''

''நளினியண்ணி பிறகு தேர்வு எழுதவில்லையே.''

நளினியண்ணி வாசற்படி மேல்கட்டையைப் பிடித்துக் கொண்டு தலையைத் தாழ்த்தியபடி நின்று சிரிக்கப் பார்த்தாள்.

''தேர்வு! . . . அழுக்குத் துணி போடும் கணக்கெழுத பென்சிலை எடுக்கவே சோம்பேறித்தனமா இருக்கும். . . அதெல் லாம் போச்சே?''

சேது ஏதும் கூறாமல் நின்றான்.

''சேது பாஸாகி உத்தியோகம் பார்க்கும்போது. . .''

நளினியண்ணி சிரிக்க முயன்று திரும்பி நின்றுகொண்டாள்.

''அதைத்தான் நான் எழுதணும்'னு நெனைச்சுக்கிட்டிருந்தேன். ஒருநாள் திடீர்னு அப்படித் தோன்றியது. அண்ணியை கூடக் கூட்டிக்கிட்டுப் போறது ரொம்ப அவமானமாகும். சேது ரொம்பப் பெரியவனாகும்போது பார்த்துக்கலாம். இப்ப ஒண்ணும் வேண் டாம். குழந்தைகளைப் பார்த்துக்க ஆளு தேவைப்படும்போது என்னைக் கூப்பிட்டுக்க.''

சேது அயர்ந்துபோய் நிற்கும்போது விரிப்பும் தலையணை உறை களுமாக அவள் வெளியே போனாள். புதிய தலையணை உறைகளைக் கொண்டு வந்தபோதும் சேது ஜன்னல் வழியாக வெளியே பார்த்தபடி நின்றுகொண்டிருந்தான்.

''நளினியண்ணிக்கு பைத்தியமேதுமில்லை. பயப்பட வேண் டாம். சேது கல்லூரிக்குப் போகும்போது பேண்ட் போடற துண்டா?''

''எனக்கு பேண்ட் இல்லை.''

''இன்னிக்குக் காலண்டரைக் கண்டபோதுதான் பார்த்தேன், இன்று ஈஸ்டர். கண்ணனூராயிருந்தால்—''

அவள் சட்டென்று நிறுத்தினாள். தலையிலிருந்து ஏதோ சுமையை இறக்கப் பெருமுயற்சி செய்வது போல ஒரு நிமிஷம்

நின்ற பிறகு மீண்டும் நிலத்தைப் பார்த்துச் சிரிக்கப் பெரும்பாடு பட்டாள்.

''நான் என்னமோ சொன்னேன், இல்லேயா? சேது ஒரு பக்கமா இரு. . .''

அப்போது கீழேயிருந்து உலகம் முழுவதும் கேட்கத்தக்க வண்ணம் கூப்பிடும் சத்தம் கேட்டது:

''சேதுவண்ணு''

ரவி வந்திருக்கிறுன். குனிந்த தலேயோடு நளினியண்ணி வெளியே போனபோது, வாசற்படிகளும் நிலேக்கதவும் அதிரும்படியாக ரவியின் மிதியடிகளின் சத்தம் கேட்டது.

ரவியைக் கண்டபோது சேது மிகவும் வியந்துபோஞன். தன்னே விட பெரியவனுகவும் வலுவானவனுகவும் இருக்கிறுன். நாட்டுப்புறத் தையற்காரன் தைத்த கோடு போட்ட சர்ட்டின் காலர், தேவைக்கும் அதிகமாகக் கெட்டியாயிருந்தது. மொத்தத்தில் வியர்வையில் குளித்துக்கொண்டு வந்திருந்தான். கிழிந்த பனியனே வெளியே காட்டிக்கொண்டு சட்டையின் பட்டன்கள் திறந்தபடி இருந்தன. ரவி நன்கு பருத்துப் போயிருக்கிறுன். காதில் சிவந்த கற்கள் பதித்த பெரிய கடுக்கன்கள் அணிந்திருக்கவில்லே.

கனத்த கைகள் தோளில் விழுந்தபோது வீரிட்டான்.

''சேதுவண்ணு, உன்னேக் காட்டிலும் எனக்குப் பெரிய தொந்தியாயிருக்கு, இல்லே?

ரவி அவனுக்கருகில் நின்று வயிற்றைப் பார்த்தான். பையைத் திறந்து சோதிப்பது அவனது அடுத்த வேலேயாயிருந்தது. துவைத்து உலர்த்தி மடித்த சட்டைகளேயெடுத்து ஜன்னலருகே வந்து பரிசோதித்து விலே என்ன என்று கேட்டான்.

''இந்தத் தடவை பாஸாயாச்சா?''

''படிச்சு பெயிலாயிட்டேன், சேதுவண்ணு. இந்தத் தடவை பிரமோஷன் தரலே'ன்னு ஹெட் மாஸ்டருடைய குடலே நான் எடுத்திடுவேன். இப்போ இங்கே சினிமா வந்திருக்கு சேதுவண்ணு. வீட்டுக்குப் பக்கத்திலேயே. சேதுவண்ணன் பாலக்காட்டில் இருக்கும்போதெல்லாம் விருப்பம் போல சினிமா பார்ப்பே இல்லே?''

''எப்போதாவது''

''நாம இன்னிக்குச் சினிமாவுக்குப் போக வேண்டும்.''

''என்ன சினிமா?''

''குலேபகாவலி. நல்ல நகைச்சுவை. அருமையான சண்டைக் காட்சிகள் உண்டு.''

''நாம யோசிக்கலாம்.''

''யோசிக்க என்ன இருக்கு?''

ரவி கட்டிலில் ஏறியமர்ந்து படிப்பு விஷயங்களை எடுத்துச் சொன்னான். எப்படியாவது பத்தாவதுவரை படித்து முடித்து விடவேண்டும் என்பதுதான் ரவியின் உத்தேசம். வீட்டுக்காரியங் களைக் கவனிக்கும் ஆண் பிள்ளையாக அவன் ஒருத்தன் மட்டுமே இருக்கிறான். தோட்டத்தில் தேங்காய் பறிப்பது உண்டு. உப்பங் கழியில் படகு தள்ளுவதுண்டு.

ஒன்றாகத்தான் சாப்பிட்டார்கள். உண்டு முடித்ததும் ரவி மீண்டும் வெளியேறிச் சென்றான். தோட்ட வெளியில் வெட்டிப் போடப்பட்டுள்ள ஓலைகளை வாங்க ஆள் வரும். அதை எண்ணிக் கொடுக்க வேண்டும். திரும்பிவர நேரமாகும் என்று சொல்லி விட்டுத்தான் ரவி போனான்.

பெரியப்பாவும் சித்தப்பாவும் மாறி மாறி வந்து பேசினார்கள். மாலையில் தேநீர் கொண்டு வந்து கொடுத்தது நளினிதான். குடித்த தேநீர் பாத்திரங்களை வராந்தாவின் பக்கமாக வைத்து விட்டு நளினி வாசற்படியின் மேல் நின்று கொண்டிருந்தாள். முகத்தைச் சாய்த்தபடி இடது கை விரல்களால் தலையைத் தடவிக் கொண்டு அமைதியாக இருக்கும் நளினியைக் கண்ட போது மனம் நிம்மதியில்லாமல் இருந்தது. நகரத்தின் ஓரிடத்தில் திப்பு சுல்தான் கோட்டையைப் பற்றி கூறத் தொடங்கியபோது, அக்கறையோடு நளினி முகத்தை உயர்த்தினாள். அந்தக் கோட்டைக்கு உள்ளிருந்து யாருமறியாது வெளியே போக ஒரு குகை வழி உண்டு. சேது அந்தக் கதையைக் கூறியபோது நளினியினுடைய கண்களில் மறைந்து விட்டதாகக் கருதிய பிர காசம் மீண்டும் ஒளி விடுவதைக் கண்டான்.

முன்பு, கோட்டைத் தலைவனாக இருந்த சேனாதிபதிக்கு கால் முடமான ஒரு மகள் இருந்தாள். நல்ல அழகி. அவள் நடக்க வேலைக்காரர்களின் உதவி வேண்டும். இரவும் பகலும் ஏகாந்த மாக தனிமையில் இருப்பாள். சித்தார் வாசித்துக் கொண் டிருக்கும் மகளைக் காணும் போதெல்லாம் சர்தார்கான் பெருமூச்சு விடுவான். ஒரு சமயம் கோட்டைக்குள் ஒரு கைதி கொண்டு வரப் பட்டிருந்தான். அந்த வாலிபனைப் பற்றி கேட்ட மகள் வேலைக்காரர்களின் உதவியோடு அவனைக் கண்டாள். ஒரு இரவில் யாருமறியாமல் குகையின் திறவு கோலைக் கையில் எடுத்துக் கொண்டு அவள் தத்தித் தத்தி சென்று அவன் தப்பிக்க உதவி

செய்தாள். கண்டுபிடிக்கப்பட்டபோது காவல்காரர்களின் வெடியிஞல் இருவரும் இறந்து வீழ்ந்தார்கள். அன்று அடைக்கப் பட்டதுதான் அந்தக் குகை வழி.

பேச்சினிடையே கோட்டையின் கதையைக் கூறி முடித்த போது நளினி கேட்டாள்:

''நடந்தது தாஞ? இல்லாட்டி சேது சும்மா கட்டிச் சொல்ற கதையா?''

''நடந்ததாகத்தான் பலரும் சொல்ருங்க, சரித்திரம் தெரிந்தவர்கள்.

நளினி மீண்டும் அமைதியாஞள். சுவரில் சாய்ந்து, மூடிய கண்களைத் தேய்த்துக் கொண்டிருந்தாள். பின், நளினி தூக்கத்தில் இருந்த மாதிரி கண்களைத் திறந்து கேட்டாள்:

''அந்தக் கைதியின் பேரென்ன கதையில்?''

''எனக்குத் தெரியாது.''

''இந்துவாக இருந்தான், இல்லையா?''

''இருந்திருக்கலாம்.''

'' உம் .''

"நளினியக்கா சினிமாவுக்குப் போவதுண்டா?

''சினிமாவா? நல்ல காரியம். முன்பு கண்ணனூரில் இருந்தப்போ —'' சொல்லத் தொடங்கிய விஷயம் மீண்டும் மனக் கவலையைத் தருவதுபோல அவள் கருதிஞள்.

நகரத்தில் கோட்டையின் ஓரமாக மாலை நேரத்தில் சென்று உட்காரும் மைதானத்தைப் பற்றி கூறிஞன். வகுப்பிலுள்ள பெண்களைப் பற்றியும் சொன்ஞன். நளினியக்கா பழையபடி உரக்கச் சிரிப்பதைப் பார்க்கவேண்டும் எனத் தோன்றியது.

யாரோ படி ஏறி வரும் மெல்லிய காலடியோசை கேட்டது. வெளியே வராந்தாவிலிருந்து கை வளையல்கள் குலுங்கும் சத்தம் கேட்டது.

''நளினி, குளிக்க வரலையா?''

''தங்கமணி, இந்தப் பாத்திரங்களை கீழே எடுத்துக் கிட்டுப் போ.''

பகையுணர்வுப் பார்வையோடு அறையைத்தாண்டி வந்த இளம் பெண் வாசல் கடந்து சென்று நின்ருள். வெளுத்த ஜாக்கெட்டும்

இளம் பச்சை நிறத்திலுள்ள பாவாடையும் உடுத்த மெலிந்த இளம் பெண்.

''உனக்கு சேதுவைத் தெரியலியா?''

கழுத்திலே இருந்த பாசி மாலையைப் பல்லால் கடித்துக் கொண்டு தலையாட்டினாள். தெரியும் என்றோ தெரியாது என்றோ அதற்குப் பொருள் கொள்ளலாம்.

சேது ரொம்ப நாளைக்கு முன்பு பார்த்த தெளிவற்ற ஏதோ ஒரு உருவத்தை மீண்டும் மனக் கண்முன் கொண்டு வந்து பார்க்க பெரிதும் முயன்று கொண்டிருந்தான்.

''சேது தங்கமணியைப் பார்த்ததில்லே. புஷ்போத்து சின்னம்மாவோட பெண்.''

சிவன் கோவிலில் வழிபாடு நடத்தவேண்டி அவள் காலையிலேயே புஷ்போத்திலிருந்து வந்திருக்கிறாள்.

''எந்த வகுப்பிலே படிக்கிறே?''

''ஒன்பதாம் வகுப்பு.''

அவள் வெளியே போனபோது நளினியிடம் கேட்டான், 'புஷ்போத்து கோவிந்தன் மாமா இப்போதும் திருப்பூரில் தானே இருக்கார்?'

சிறுவனாக இருந்தபோது அப்பா அம்மா எல்லோருமாக வந்திருந்தபோது ஒரு சமயம் புஷ்போத்து போனதுண்டு. பாட்டியின் தங்கைக்கு பாகம் பிரித்த காலத்தில் பெருங்கஷ்டம் ஏற்பட்டது. உத்தியோகம் பார்க்கும் மக்களில்லை. மூத்த பெண்ணைத் திருமணம் செய்து கொண்டவர் பத்து ரூபாய் சம்பளமுள்ள மாப்பிள்ளைமார் பள்ளிக்கூட ஆசிரியராவார். சம்பளம் சரிவரக் கிடைக்காததால் முதலாண்டோடு தகராறு செய்து ஊரை விட்டே போய் விட்டார். திருப்பூரில் ஒரு செட்டியாரின் கணக்குப் பிள்ளையானார். பிறகு மில்லில் நல்ல உத்தியோகம் கிடைத்தது. நிறைய பணம் சம்பாதித்தார்.

அம்மாவுக்கு பாட்டியை விட புஷ்போத்திலிருந்த சின்னம்மாவிடம் அதிகப் பிரியம்.

கோவிந்த மாமாவைக் கண்டால் எல்லோருக்குமே பயம். இன்றும் கூட அவர் கோபக்காரர்தான். ஊருக்கு வரும்போது காலை முதலே குடிக்கத் தொடங்குவார். சொந்தப் பிள்ளைகளே அருகில் செல்ல அஞ்சுவார்கள். ஆனால், லீவில் வரும் ஒவ்வொரு சமயமும் நிறையப் பணம் கொண்டு வருவார். ஊரிலுள்ள சொந்த வீட்டிலும் மனைவி வீட்டிலும் தாராளமாகப் பணம் செலவு செய்வார்.

கோவிந்த மாமா முன்பு லீவில் வரும்போதெல்லாம் வீட்டிற்கு வருவார். அம்மா கோழிக்கறி சமைப்பாள். பங்கோடையின் வீட்டுக்குத் தனது ஏற்பாடாக ஆளை அனுப்பி சாராயம் வரவழைப்பார்.

''யாரு என்ன சொன்னாலும் சரி. அவன் என் முன்னே வந்தால் பச்சைப் பயலாக மாட்டானா?''

கோவிந்த மாமா போன பிறகு அம்மா பார்ப்பவர்களிடமெல்லாம் சொல்வாள்.

பயணம் சொல்லி புறப்படும்போது அம்மாவுக்கு ஏதாவது பணம் கொடுப்பார். சேதுவின் கையில் சென்ட் மணமுள்ள ஒரு ஒற்றை ரூபாய் நோட்டைக் கொடுத்தது இன்னும் கூட ஞாபகம் இருக்கிறது.

கடந்த சில ஆண்டுகளாக கோவிந்த மாமா வீட்டிற்கு வருவதில்லை.

ஆனைமலைத் தோட்டத்தில் வேலை போன பின்பு அப்பா வேலை தேடித் திருப்பூர் போனார். ஒரு மாதம் அவருங்கூடவே தங்கி இருந்தார். இறுதியில் இருவரும் ஏதோ தகராறு காரணமாகப் பிரிந்து விட்டார்கள். அதற்குப் பிறகு அப்பா வந்து ஏதேதோ கதைகளைக் கூறினார். கோவிந்த மாமா வேலைக்கு இரண்டு இளம் பெண்களை அமர்த்திக் கொண்டுள்ளார். அதனால்தான் மனைவி மக்களோடு அவர் வாழாமல் இருக்கிறார்.

கல்லூரிக்குச் சென்றது முதலே, கோவிந்த மாமாவுக்கு ஒரு கடிதம் எழுதினால் பணம் அனுப்பித் தருவார் என எனக்குத் தோன்றியது. கோபக்காரரான கோவிந்த மாமாவுக்கும் அப்பாவுக்குமிடையே தகராறு ஏற்பட்டிருப்பதனால் எழுதத் தைரியம் வரவில்லை.

உண்ணிக்கு சோறு ஊட்டு விழாவுக்கு புஷ்போத்திலிருந்து அண்ணன் மட்டுமே வந்திருந்தார். மாலை நேரமாகிய போது அவர் வேண்டிக் கேட்டுக் கொண்டார். ''அங்கிட்டுப் போறேன். அங்கே பிள்ளைங்கள்'லாம் இருக்கு.''

வெட்கமுற்று நின்றான்.

''பரமேஸ்வரா, சேதுவை நான் அழைச்சுட்டுப் போகட்டுமா?''

அண்ணன் சொன்னார்:

''அவனுக்குப் பள்ளிக்கூடம் இருக்கு. இன்னிக்கே அவன் திரும்பணும்.''

அதனால் அழைத்துப் போகவில்லை.

ஐந்தோ ஆறோ வயதிருக்கும்போதுதான் அங்கே போயிருக்கிறான். கழுத்துச் சரடில் ஒரு பவுன் கோர்த்துத் தொங்க விட்டுக் காலை நீட்டி அமர்ந்திருக்கும் சின்னம்மாவைப்பற்றி அவனுக்கு நன்றாக நினைவிருக்கிறது. பாட்டியை விட இரண்டு மடங்கு பெருத்திருந்தாள் தங்கை. நடக்கப் பெரும் பிரயாசை எடுத்துக்கொள்வாள். வெளித் தோட்டத்திலுள்ள குடிசை வீட்டைச் சுற்றிலும் பிள்ளைகளுடன் கண்ணாமூச்சி விளையாடுவதுண்டு. அந்த வீடு பின்னர் இடிந்து தகர்ந்து போய் விட்டது.

கீழே இறங்கி வந்த போது நளினியும் தங்கமணியும் குளிக்கப் போகவில்லை என்பது தெரிந்தது.

''சேது குளிக்கலையா? பெரியப்பா கேட்டார்.

''சாயங்காலமாகட்டும்.''

''நீர் இறைக்கும் குட்டையில் போய் குளிச்சுக்க. அங்கே நல்ல தண்ணி இருக்கு.''

''வேண்டாம். நான் குளத்திலேயே போய்க் குளிச்சுக்கிறேன்.''

ஹாஸ்டலில் குளியலறையில் குளிச்சுப் பழக்கப்பட்டுப் போனதால் திறந்த வெளியில் குளிக்க வெட்கமாக இருந்தது.

சித்தப்பா கேட்டார்:

''ஒரு கிளாஸ் காப்பி வச்சுத் தரட்டுமா?''

''வேண்டாம் அப்பா. இப்பத்தானே குடிச்சேன். ரவி என்ன சொன்னான்?''

''அவன் வருவான். ஈச்சங்குருத்து வெட்டிக் கொண்டு வர்றேன்னான். ஈச்சங்குருத்துப் பலகாரம் சேதுவுக்குப் பிடிக்குமா?''

''எல்லாமே பிடிக்குது. இங்கே வந்தது முதலே உலகம் முழுவதுமே பிடிச்சிருக்கு.''

நிலத்தைத் துடைத்துக் கொண்டிருந்த சித்தப்பா சொன்னார்:

''இன்னிக்குக் கோயில்லே வரிசைமாலை வைபவம். சாப்பிட்டுட்டு நாம போகலாமா?''

''போகலாம்.''

இறங்கு வெயிலில் தென்னந்தோப்புகளுக்கிடையில் வெள்ளை மணல் பளிச்சிட்டது. வடபுற இடைவெளியில் உள்ள சயினி மரத்தடியில் காக்கைகள் கீழே வீழ்ந்து கிடக்கும் பலாப் பழத்தைக்

கொத்திக் கொண்டிருந்தன. தென்னை ஓலைகளின் நுனிப்பகுதியைத் தடவிய வண்ணம் குளிர்காற்று அவ்வப்போது கடந்து போய்க் கொண்டிருந்தது. தூரத்திலிருந்து சமுத்திரத்தின் அலைகள் எழுப்பும் ஒலியைக் கேட்க முடிந்தது. மனதில் இனிமையான ஒரு வித உணர்வு நுரையிட்டுப் பொங்கியது.

மேல் மாடி அறையிலிருந்து கடிகாரம் மணியடிக்கத் தொடங்கியவுடன் கூர்ந்து கேட்டான்.

மணி ஆறு.

உள்ளே எங்கேயோயிருந்து நளினியோடு தங்கமணி பேசிக் கொண்டிருப்பது கேட்டது. எவ்வளவு மெதுவாக அந்தப் பெண் பேசுகிறாள்.

''தீபம்''

முன்புறக் கல் இருக்கையின் மேலிருந்து தங்கமணி சொன்ன போது சேது திரும்பிப் பார்த்தான். அவன் வணங்கவேண்டும் என்பதற்காக அவள் விளக்கைப் பிடித்துக்கொண்டு ஐயப்பாட்டோடு நின்றிருக்க வேண்டும். அவன் வணங்கவில்லை. கல்லூரியில் படிக்கும் பெரியவனான தான் வணங்குவது மோசமானதல்லவோ? என எண்ணினான்.

நிலைப்படி மாட விளக்கின் ஒளிவீசும் மஞ்சள் வெளிச்சத்தில் அவளுடைய சிறிய முகத்திலிருந்த பெரிய விபூதிப் பட்டையைப் பார்த்தான்.

தண்டு விளக்கிலிருந்து திரிகளை எடுத்து அவள் வீட்டின் தென் புறத்திலிருந்த குங்குமத்திற்கு அடியில் தரையில் திரியை வைத்து விட்டு உள்ளே முற்றத்திற்குக் கடந்து செல்லும் போது எதையோ நினைத்துக் கொண்டு நின்றாள்.

''சேதுவண்ணா குளிச்சாச்சா?''

''ரவி வரட்டும்.''

வழக்கு முற்றத்துக்குக் கூடவே நடந்து வந்த நளினி இருக்கைக் கல்லின் மீது அமர்ந்தாள்.

''என்னா தலைவலி. சாயந்திரமானால் தலைவலி தொடங்கிடுது. இரவு முழுக்க ஒரே வலி. சேது போய்க் குளி. சேது வரிசை மாலை சடங்கு பார்க்கப் போவதாக சின்னம்மா சொல்லிச்சு.''

''சித்தப்பாவும் சொல்லியிருக்கார்.''

''தங்கமணி, உள்ளே தென்புறத்திலே சோப்பும் டவலும் இருக்கு. கொஞ்சம் எடுத்துக்கிட்டு வந்து குடு.''

உள்ளே போய் சட்டையைக் கழற்றி விட்டு வெளியே வரும் போது துவாலைத் துண்டால் உடலை மூடிக்கொண்டான். முற்றத்தில் வரும்போது ரவியின் சத்தம் கேட்டது.

''சேதுவண்ணு, நானுமிருக்கேன், குளிக்க.''

வேட்டுவ வேலைக்காரனின் தலையிலிருந்த சாமான்களை இறக்கி வைத்து அவனுக்குக் காசு கொடுத்து அனுப்பினுன். காலையிலே அவன் செய்யவேண்டிய மற்ருெரு காரியத்தை நினைவுபடுத்தினுன். அம்மாவோடும் பெரியம்மாவோடும் தேங்காய்க்காரன் மாப்பிளா கொண்டுவந்த கணக்கைச் சரிபார்த்தான். எல்லாவற்றையும் வியப்போடு சேது பார்த்துக் கொண்டு நின்றிருந்தான், ஒன்பதாவது வகுப்பில் படிக்கும் ரவி சரியான வீட்டுக் காரியஸ்தனுக இருக்கிருன்.

சட்டையையும் பனியனையும் வேட்டியையும் கழற்றிச் சுருட்டி நளினி முன்பாக எறிந்து விட்டு துவாலைத் துண்டை மட்டும் கட்டிக்கொண்டு வாயு வேகத்தில் கைகளை வீசி தேகப்பயிற்சி செய்வதுபோல காட்டிக் கொண்டு ரவி கூறினுன்:

''பெண்ணே, எனக்கும் கொஞ்சம் எண்ணெய் கொடு.''

தூக்கிக் கட்டியிருந்த வீட்டுத் தட்டியின் பின்னுல் பாதி மறைந்துகொண்டு நிற்கும் தங்கமணியின் முகத்தைச் சேது காண வில்லை.

மனதிற்குள் எண்ணிக் கொண்டான்: குறும்புக்காரப் பையன். கூப்பிட்டதைப் பார், ''பெண்ணே'' என்று.

நீர்த் தடாகத்தை நோக்கி நடக்கும் போது ரவி கேட்டான்:

''சேதுவண்ணுவுக்கு இன்னும் எத்தனை ஆண்டுகள் வேணும் கல்லூரிப் படிப்பை முடிக்க?''

''இன்னும் சில ஆண்டுகள் ஆகவேண்டும். தோல்வியடையாமல் இருக்கவேண்டும்.''

''சேதுவண்ணு தோற்பதா? வெற்றி நிச்சயம். நான் ஒரு வியாபாரம் தொடங்கத் திட்டமிட்டிருக்கிறேன். பஞ்சாயத்து அலுவலகத்துக்குப் பக்கத்திலேயே இரண்டு அறைகளுள்ள கடையைப் பார்த்து வச்சிருக்கிறேன். உத்தியோகத்திலே எனக்கு பற்று இல்லை.''

''எதுக்கு உத்தியோகம்? தென்னை வளர்க்கலாம். நெல் பயிரிடலாம். இதெல்லாம் எதுவும் இல்லாதவங்கதானே வேலை தேடி அலையணும்.''

''சேதுவண்ணு, உத்தியோகம் பார்க்கும்போது நாங்கள்'லாம் வருவோம்.''

அந்தக் காலத்துக்கு இன்னும் எவ்வளவு காலம் ஆகுமோ என்பதை பீதியோடு சேது நினைத்துக்கொண்டான்.

தடாகத்தில் யானைத்துறையில் மட்டும் ஆட்களில்லை. அங்கே இறங்கினுன். நீர் சற்று வெதுவெதுப்பாக இருந்தது. தடாகத்தின் நடுவில் கழுத்தளவு தண்ணீரே இருந்தது. அப்பாலிருந்த ஓடு வேயப்பட்ட குளக்கரை வீட்டில் ராந்தல் விளக்குகள் கொளுத்தி வைத்து குளிக்கும் தம்பிரான்களின் சத்தமிட்டுப் பேசும் உரை யாடலைக் கேட்க முடிந்தது.

''உன் வகுப்பிலே எத்தனை பேர் இருக்காங்க?''

''நாற்பத்தைஞ்சுபேர் இருக்காங்க. எல்லாம் பசங்கதான். தங்கமணி மற்ருெரு பிரிவுக்குப் போனது என் அதிஷ்டம்.''

''பெண்களில்லே?''

''எட்டுப் பத்துப் பேர் இருப்பாங்க. அவதாரங்க.'' விஷயம் மனப்பூர்வமாக பெண்களை நோக்கித் திரும்பியது. ரவிக்கு எந்த விதமான அக்கறையும் ஏற்படவில்லை. அவன் மேற்கேயிருந்த கோயில் குளத்தில் உள்ள குட்டைப் புழுக்களைப் பற்றியும் வெடி வைத்து வீழ்த்துவதைப் பற்றியும் மற்றவற்றைப் பற்றியும் பேசினுன். இடையிடையே நினைவூட்டினுன்:

''நாம சினிமாவுக்குப் போகணும்.''

குளித்து விட்டு வீட்டிற்கு வந்தபோது தளத்தில் ராந்தல் விளக்கை ஏற்றிவைத்து இலை போடப்பட்டிருந்தது.

சாப்பாடு முடிந்து முற்றத்தில் நடந்தபோது ரவி மெதுவாகக் கேட்டான்:

''சேதுவண்ணு சிகரெட் புகைக்கிறதுண்டா?''

''உம்?''

''இல்லே, எப்போதுமா?

''எப்போதாவது. ஹாஸ்டலில் பெரிய விருந்துகள் நடக்கும் போது சிகரெட் தருவாங்க, பழக்கமாக்கிக்கறலே.''

''நான் நாளைக்குக் கொண்டுதறேன்.'' வேண்டுமென்ருே வேண்டாமென்ருே கூறவில்லை. சித்தப்பா வந்து சொன்னுர்;

''சேது புறப்படலையா?''

''அம்மாவுக்குப் பைத்தியம். வரிசை மாலேக்கு சேதுவண்ணு வைக் கூட்டிக்கொண்டு போகணுமாம். நாம சினிமாவுக்குப் போயிடலாம். யாராவது கோயிலுக்குப் போவார்களா.''

''டேய் நீ எனக்குக் கற்றுத் தரவேண்டாம். நாங்க அதுக்கு உள்ளே போய் கும்பிட்டுக்கறோம். பிறகு நானும் தங்கமணியுமே சேர்ந்து போகவா?''

ரவியை வேண்டினுள்:

''வா, நாம போகலாம்.''

''நாம காத்திருக்கவேண்டாம். ரவி சுயகாரியமாக பரபரத் தான்.'' அம்மா போகட்டும். நாம ரெண்டாவது ஆட்டம் சினிமாவுக்குப் போய்க்கலாம்.''

ரவியை நிராசைப்படுத்த வேண்டி வந்தது. இஸ்திரி போடப் பட்டு பளபளப்பாக இருந்த பாப்லின் சட்டையைப் போட்டுக் கொண்டான். பகலில் கட்டிய வேஷ்டி கசங்கவில்லே. என்ருலும் வேட்டி, கண்ணுடிக் கோப்பையிலிருந்த அண்ணியின் பௌடரை எடுத்துப் பூசிக்கொண்டான். அண்ணி படுத்திருக்கும் அறையின் வாசற்படியருகில் சென்று கூறியபோது கேட்டாள்:

''செலவுக்கு ஏதாவது வேணுமா?''

''வேண்டாம்.''

''டார்ச்சை எடுத்துக்கிட்டுப் போ.''

முடுக்குக் கடந்தால் புழுதி மணல் பரந்து கிடக்கும் வெட்டுப் பாதைதான். கடை வீதியும் ஆலமரங்களும் கடந்தால் தென்னந் தோட்டத்தின் நடுவேயுள்ள நீண்ட பாதை ஆள் அரவம் ஏதுமின்றி வெறிச்சோடிக் கிடந்தது.

முன்னுல் நடக்கும் சித்தப்பா பேசும்போது அம்மாவைப் பற்றிப் பேசினுர். இடையில் அம்மாவுக்கு ஏதாவது நேர்ந்தால் என்ன செய்வது? நாங்கள் யாரும் அம்மாவுக்கு ஒரு துரோகமும் செய்யவில்லே.

அருகே கைநீட்டினுல் தொடக்கூடிய தூரத்தில் நடக்கும் தங்கமணி அடியெடுத்து வைப்பதைக் கவனித்துக்கொண்டு டார்ச் விளக்கின் வெளிச்சத்தைப் பின்தொடர்ந்தான். பூப் போட்ட தாவணி கட்டி, மேலும் பருத்தவளாகக் காட்சியளிப்பதுபோல் தோன்றியது. ஒரு புறம் தலேயில் வைத்திருந்த முல்லேப் பூச்சரத் தின் நறுமணம் கமழ்ந்து கொண்டிருந்தது. எரியும் தீப்பந்தக் கட்டையோடு முடுக்குக் கடந்து வெட்டுப் பாதைக்கு வந்து சேர்ந்த பெண்களின் கூட்டமொன்று சித்தப்பாவுக்கு பேச்சுத் துணேயாகக் கிடைத்தது.

''இது யாரு?''

''சேதுதான். அண்ணனின் ரெண்டாவது மகன். அவன் இப்போ பாலக்காட்டுக் கல்லூரியிலே படிக்கிறான். இன்னிக்குத் தான் வந்தான்.''

அவன் நடையின் வேகத்தைக் குறைத்துக் கொண்டான், சற்று பின் வாங்கினான். தங்கமணி பெண்களின் கூட்டத்தோடு சேர்ந்து செல்லும் வண்ணம் தன் நடைக்கு வேகத்தைக் கூட்டிக்கொள்ள வில்லை.

''பார்த்து கவனமா நடக்கணும், கல்லு கிடக்கு.'' காலடி நிழல் பார்த்து நடக்கும்போது தன் தலையை உயர்த்திப் பார்த்த போது அவளது கண்கள் மின்னிப் பொழிவதைக் கண்டான்.

ஏதாவது பேசவேண்டும் போலிருந்தது.

பூமணம் முழுவதையும் ஒரே மூச்சில் உள்ளுக்கிழுத்துக் கொண்டபோது ஒரு பூமொட்டுப் போன்றவள் இப்பெண் எனத் தோன்றியது அவனுக்கு.

—இதுதான் கவிதை.

மேகக் கீற்றுகள் மாறி, ஆகாயம் தெளிந்ததாகத் திடீரென்று தோன்றியது. பொங்கும் நிலவொளியில் தென்னந்தோப்பின் நிழலுக்கிடையே நீண்ட நடைவழி மந்தகசிப்பதுபோல் இருந்தது. அற்புதமாக குளிர் ஒளியை உமிழ்ந்து கொண்டிருந்தது நிலவு.

இந்த நிமிடத்தில் சுமித்திராவைப்பற்றி நினைவு ஓடுவது ஏன்? தனக்குத்தானே கேட்டுக்கொண்டான். 'சுமித்திரா! என்னைப் பொறுத்தவரை யாரோ படித்த கவிதைகளிடையே கற்பனையில் உருக்கொண்டெழுந்த அழகிய பெண் இதோ என் அருகிலே இருக் கிறாள்.'

தென்னந்துண்டுகளால் போடப்பட்ட கால்வாய்ப் பாலத்தை கடக்கும்போது கூறினாள்: ''கவனிச்சு நடக்கணும். கையைப் பிடிச்சுக்கோ.''

குளிர்ந்த விரல்கள். பௌடரினுடையவும் முல்லைப் பூவினு டையவும் நறுமணம்.

மறுபுறத்தை அடைந்தபோதுகூட பிடியை விடவில்லை.

மேலே தெளிவான வானம். கீழே நிலவின் நீண்ட ஆற்றொழுக் கான பாதை. தூரத்தில் கோயிலிலிருந்து கேட்கும் மேளச் சத்தம், ஒரு இளங்காளையின் இருதயத் துடிப்புபோல முன்னே செல்வோரின் காலடியோசை வர வர அதிகரித்துக்கொண்டே வந்தது.

மாலையில் மலர்ந்த ஊசி முல்லைப் பூக்களின் நறுமணத்தை உள்ளிழுத்துக்கொண்டு அவள் கைபிடித்து நடந்தபோது தோன்றியது:

இதுதான் வாழ்விலே மணமுள்ள நிமிஷம்.

—இந்த நிமிஷத்துக்காக நான் காத்திருக்கிறேன்.

—நிலவும் நறுமணமும் மேள இசையும் சேர்ந்து உலகம் எனக்காகக் காத்திருந்ததோ?

உனக்காகவும் தான்.

[6]

நாளைக்கு இங்கிருந்து போகப் போகிறோம் என்பதை நினைத்துப் பார்த்தபோது மனதுக்கு வேதனையாக இருந்தது.

மீண்டும் ஒருமுறை பிரியவேண்டி வந்தது. வயல்களையும் தென்னந்தோப்புகளையும் விட்டு புழுதி மணல் படர்ந்து கிடக்கும் பாதை கடந்து தார்ரோட்டை அடைந்து விட்டான். காகிதப் பொட்டலத்தைக் கக்கத்தில் இடுக்கிக்கொண்டு பஸ்ஸுக்காகக் காத்திருக்கும்போது பலவற்றையும் விட்டு விட்டு, ஏதோ ஒரு இழப்போடு திரும்புவது போன்ற மன அரிப்பு மனதிலே சக்தியோடு உருவெடுத்திருப்பதுபோல தோன்றியது. நெருக்கியடித்துக் கொண்டு மனத்தைக் குமட்டும் மனித துர்வாடைக்கிடையே முடிந்தவரை மிகச் சிறிய இடத்துக்குள் தன்னை ஒதுக்கிக் கொண்டிருக்கும்போது சுற்றியிருக்கும் சபதங்களும்கூட விலகிப்போவது போல் தோன்றின. கைவளையல்களின் கலகல ஒலியோடு முல்லைப் பூக்களின் மணமும், பௌடரின் வாசமும், ஆற்றங்கரை நிலவு போல இதயத்தில் நகர்ந்து கொண்டிருந்தன. தொட்ட உணர்ச்சியின் நினைவுகள் தங்கி நிற்கும் விரல்கள், இடது தோள், அப்போது உடலின் வெளுப்பில் வெள்ளை நிறத்தில் கோடுபோட்ட சட்டையோடு ஒட்டியிருந்த நினைவு வெப்பமும் ஓடும் வண்டியின் சாஞ்சலாட்டமும் மயக்கமான சூழ்நிலைக்கு இட்டுச் செல்லும்போது, கடந்துபோன நாட்களின் ஒவ்வொரு நிமிடமும் மாலைக்கால மேகங்களில் தெளிவாகத் தெரியும் வானப்பகுதிகளைப் போல முன்னால் நகர்ந்து கொண்டிருந்தன.

—ஒருமுறை நாம் பிரியவேண்டி வருகிறது, மீண்டும் காணும் வரை.

விருந்தாளிக்கு புதிய சூழ்நிலை பழையதாகும் முன்னரே அவ்விடத்தை விட்டுச் செல்ல நேர்ந்துள்ளது.

பெரியப்பாவும் சித்தப்பாவும் வற்புறுத்தினுர்கள். அண்ணி வலியுறுத்திச் சொன்னுள்:

''கல்லூரி இன்னும் திறக்கலியே, கொஞ்சநாள் கழித்துப் போனுப் போதும்.''

நளினி கவலையை வெளியே காட்டிக்கொள்ளவில்லை. அமைதியாக யாரோடு என்று இல்லாமல் சொன்னுள்:

''சேது வந்தபோதுதான் யாரோடவாவது பேச முடிந்தது.''

''இனியும் வருவேன்.''

''அடிக்கடி கடிதம் எழுது . . . சில சமயம் நானே உனக்குக் கடிதம் எழுதி போஸ்ட் செய்தால் என்னுன்'னு நினைப்பேன்.

''எழுதறேன்.''

'வரிசைமாலைச் சடங்கு' நடந்து முடிந்த அடுத்தநாளே தங்கமணியும் போவதற்காகப் புறப்பட்டு விட்டாள்.

எல்லோரும் சேர்ந்து வற்புறுத்தினுர்கள். அவள் தான் போவதைப்பற்றித் தீர்மானிக்க இயலாத நிலையில் வராந்தாவில், சிமெண்ட்டினுல் பூக்கள் வரையப்பட்ட தூணில் நகத்தைக் கொண்டு ஏதேதோ வரைந்து கொண்டு, தலை குனிந்தபடி நின்று கொண்டிருந்தாள்.

''புஷ்போத்திலிருக்கிற சுகம் இங்கே இருக்கவில்லை. இருந்தாலும் என்னுடைய பெரியம்மாவும், சின்னம்மாவும், அக்காமார்களும் எல்லோரும் ஒன்ருக இருக்காங்களே இங்கே.'' சித்தப்பா தன் மனதில் பட்டதைச் சொன்னுர்.

பயணம் தள்ளி வைக்கப்படும் நிலை வரும்வரை சேது ஜன்னலுக்கு அருகிலேயே மனத்துடிப்புடன் நின்றுகொண்டிருந்தான்.

இங்கே நேரம் ஒரு சாபத்தைப்போல வரிந்து கட்டிக் கொண்டு இருக்கவில்லை. ஒவ்வொரு நிமிடமும் காத்திருக்கின்றன. அடுப்பங்கரையானுலும், வராந்தாவானுலும் மெதுவான காலடி ஓசையா கேட்கின்றது? அடுப்பங்கரையிலிருந்து வெளி வேலைக்காரிகளின் போக்குகளைப்பற்றிப் பேசி பெண்கள் சேர்ந்து சிரிக்கும்போது அடக்கமான புன்சிரிப்பு பெரிதாகி விடுகிறது. மாடி வராந்தாவில் சன்லைட் சோப்பு போடப்பட்ட பாவாடையிலிருந்து வரும் மணத்தோடு அவற்றினிடையே விரல் பாய்ந்து செல்லும்போது ஒருவித கிளுகிளுப்பு ஏற்படவே செய்கிறது.

காதல் என்பது இதுவாகத்தான் இருக்கவேண்டும்.

—'உலகத்துக்கு காதில் ஓதிவைக்கிறேன். என்னிடம் ஒரு ரகசியம் இருக்கிறது. நான் பதினேந்து வயதான கவிதையைப் போன்ற பெண்ணொருத்தியை விரும்புகிறேன்.'

'ஐ லவ் யூ, ஐ லவ் யூ, ஐ லவ் யூ.'

இரவில் நீண்ட நேரம் கீழே சமையலறையில் பேசிக்கொண்டிருப்பார்கள். பெரியப்பா என்ன சொன்னாலும் அபிமானத்தோடு தான் சொல்வார்! ஆசாரிச்சி பாரு வந்தாள் என்று சொல்லும் போது அவளைப்போலவே அபிநயம் பிடித்தபடிதான் சொல்வார். அபிப்பிராயம் எதையும் வெளியிடாமலே எல்லாத்தையும் கேட்டுக் கொண்டிருக்கும் நளினி சொல்வாள்:

''நம்மோட வேடிக்கையான பொழுதுபோக்கு இது.''

வெளியே தோட்டத்திலுள்ள சின்ன வீட்டில் வாழ்ந்து வரும் நாணயப் பரிசோதகனின் மனைவி தகராறு செய்துகொண்டு கிணற்றில் குதித்த கதையைச் சொன்னபோது சேதுவும் சிரித்து விட்டான். கிணற்றில் தண்ணீர் குறைவாக இருந்தது. சாப்பாடு போடும் சத்தம் கேட்டு ராமன் ஓடிப்போய்க் கேட்டான். தண்ணீர் அதிகமாக இருக்கா? ''இல்லே'' ''கையிலோ காலிலோ அடிபட்டு விட்டதா?'' ''இல்லே.'' பிறகு ராமன் பாயையும் தலையணையையும் சுருட்டிக்கொண்டு இங்கே வந்து சொன்னான்.

''அம்மா! இங்கே இந்தத் திண்ணையோரத்திலே படுத்துக் கறேன். சத்தமும் ஆர்ப்பாட்டமும் கேட்காமே கொஞ்ச நேரமாவது மன அமைதியோட படுத்துத் தூங்கிக்கறேன்!''

அடுப்பங்கரை வாசற்கதவின் மறைவில் மயங்கி இருட்டில் நிற்கும் தங்கமணி சத்தமில்லாமல் மெதுவாகச் சிரிப்பதை அவன் கேட்டான்.

படுத்துத் தூங்குவதற்காக மாடியறைக்குச் சென்றபோது விளக்கும் கையுமாக நளினி வந்தாள்.

''சேதுவுக்குத் தூக்கம் வந்திருச்சு?''

''இல்லே; நான் சாதாரணமாக நேரங் கழிச்சுத்தான் தூங்குறது.''

வெளியே வராந்தாவிலிருந்து தங்கமணியின் காலடிச் சத்தம் கேட்டது.

கட்டில்காலில் உட்கார்ந்திருக்கும் நளினியின் பின்புறமாக அவள் ஒதுங்கி நின்றாள்.

''ரவி தூங்கலியா?''

உள் வராந்தாவில் தரையை துடைத்துக்கொடுத்து வந்தான். ''அங்கே எதையும் விரிக்காமப் படுத்துத் தூங்குறதுதான் அவனுக்கு சுகமாக இருக்கு.''

ஒரு சமயம் நன்கு முற்றியிருந்த நான்கு தென்னை மரங்களிலிருந்து தேங்காய்கள் களவுபோய்விட்டன. அதற்குப் பிறகு வாசலிலேயேதான் படுக்கை. ஐந்து செல் உள்ள பேட்டரி விளக்கையும் நல்ல கெட்டிக் கைத்தடியொன்றையும் கைக்கருகில் வைத்துக் கொண்டுதான் ரவி தூங்குவான்.

நளினி சொன்னாள்:

''சேது, நீ பார்த்த ஏதாவது ஒரு சினிமாக் கதை சொல்லு.''

''ஐயோ எனக்கு எதுவும் நினைவிலே இல்லே.''

''சொல்லணும்.''

அது தங்கமணியின் மெதுவான சத்தமாகும்.

கட்டிலின் பின்புறமாக நின்றுகொண்டிருந்த அவள் இடம் மாறி நளினியின் பின்புறமாக அவள் தோளைப் பிடித்துக்கொண்டு மெத்தையில் சாய்ந்தபடி நின்றாள்.

வெளியே வராந்தாவில் திரி குறைத்து வைக்கப்பட்ட சிறிய மேசை விளக்கின் வெளிச்சம் மங்கிக்கொண்டு வந்தது. சுவரில் சாய்ந்தபடி மெத்தையில் காலை நீட்டியபடி சாவதானமாக சிகரெட் புகைத்தபடி அவன் கதை சொல்லலானான். பிரபுகுமாரன், தெரு நடனம் ஆடும் ஜிப்ஸி பெண்ணை விரும்பிய கதை.

நளினியின் 'உம்' போடும் சத்தம் வரவரக் குறையத் தொடங்கியது. பிறகு சத்தமே இல்லாமல் மறைந்துவிட்டது.

''நளினியக்கா தூங்கிருச்சு.''

'' 'உம்' சொல்லுங்க!'' தங்கமணி வற்புறுத்தினாள். தூங்கத் தொடங்கிச் சாய்ந்துவிட்ட நளினிக்கு தொந்தரவு ஏதுமில்லாதபடி கையை இழுத்துக்கொண்டு தங்கமணி இந்தப் பக்கம்வந்து மெத்தையில் சாய்ந்து நின்றாள்.

''சுகாவீராத்து—தங்கமணி கேட்டிருக்கியா இந்தப் பாட்டை?''

''இல்லை.''

நிலவில் அடையாளத்தின் படிவந்து காத்து நிற்கும்போது பிரபுகுமாரன் பாடிய பாட்டு. அவனது சத்தம் மிகவும் மெதுவானது. பாடப்போய் இசையுள்ள ஒரு வரியை அழகாகச் சொல்லக்கூடத் தெரியாது. இருந்தும் சொன்னான்.

''எவ்வளவு அழகான பாட்டு.''

''சுகானீ ராத்து தில் சுகி
ஹா ஜானெ தும் கபெளகி.''

ஊர்ந்து வந்த கத்தியின் முனை மேல் விரோதி வீழ்ந்து நாயகன் காப்பாற்றப்படுகிற கட்டத்தில், தங்கமணியின் மெல்லிய விரல்கள் சேதுவின் கையடக்கமாக ஆகியிருந்தன.

கதை முடிந்தபோது நளினி திடீரென எழுந்தாள்.

''தூங்கிட்டேன். நேரமாயிடுச்சு சேது. படுத்துத் தூங்கு.''

நளினிதான் முதலில் வெளியேறியது. கூடவே செல்ல அவசரம் காட்டாதபடி தங்கமணி ஒரு நிமிஷம் ஐயப்பாட்டோடு நின்றாள். நளினி விளக்கைத் தூக்கியபோது அணைந்துவிட்டது, இருட்டு.

''தங்கமணி, பார்த்து ஏணிப்படி இறங்கு.''

தைரியமூட்டும் இருட்டின் ஒரு நிமிஷம்.

அவனுடைய கை வளையத்துக்குள் அந்த நிமிஷத்தில் அவள் ஒதுங்கி நின்றாள். வராந்தாவினிடையே ஏணிப்படிக்கு அவன் அவளை அணைத்துப் பிடித்தபடி கொண்டுசென்றான். ஏணிப்படியில் நிற்கும்போது அவளது தோளில் கை வைத்தபடி ஆனந்தக் களிப்போடு கூறினான்.

''போய்த் தூங்கு.''

ஏணிப் படிகளின் வழியே அவள் இறங்கிப் போகும்போது இருட்டில் அவன் நின்றான். வராந்தாவுக்கு வெளியே மாமரத்தின் நிழலைச்சுற்றி புழுதி மணலில் நிலவு துள்ளி விளையாடுவதுபோல் தோன்றியது. கற்பூரம் எரிந்த வீபூதியினுடையவும், வாசனைத் திரவியங்களின் கூட்டுக் கலவைகொண்ட சாந்தினுடையவும், சந்தனப் பொட்டினுடையவும் நறுமணம் தங்கி நிற்கும் அவள் இருந்த இடத்தைத் தொட்டு மகிழ்ச்சியோடு சுவாசித்தபடி இருளில் அவன் கண்களைமூடி ரசித்துக்கொண்டிருந்தான்.

பிரசவ அறையின் வாசற்படியில் நின்றபடி அண்ணியிடம் பயணம் கூறிக்கொண்டான். வாசலில் எல்லோரிடத்திலும் பயணம்கூறிப் புறப்படும்போது தங்கமணியும் புறப்படத் தயாராக அங்கே ஒதுங்கி நிற்பதைக் கண்டான். அப்பாவும் பெண்களும் அடிக்கடி வருமாறு பணித்தார்கள். படிவரை ரவி கூடவே வந்தான்.

அவன் பின்னாலே அவள் இறங்கினாள். அவள் முன்பே எல்லோரிடமும் பயணம் கூறியிருக்கவேண்டும். ஆனால், அவன் அதைக் கேட்கவில்லை.

இலந்தைப் பூக்கள் விழுந்துகிடக்கும் ஒற்றையடிப் பாதையை அடைந்தபோது அவன் தன் நடையைத் தளர்த்தி மெதுவாக நடந்தான். ஒற்றையடிப் பாதையின் இறுதியில், உயர்ந்திருந்த தென்னந் தோட்டங்களுக்குச் செல்லும் பாறைக் கல்லுகளின் தொடக்கத்தில் அவன் நின்றான்.

''போறேன்.''

''இனி எப்ப வருவீங்க?''

''சீக்கிரமே வருவேன்.''

''இனி வரும்போது எங்கவீட்டுக்கும் வரணும்.''

''வர்றேன்.''

''நான் அம்மா கிட்டே நீங்க வர்றேன்'னு சொன்னதாகச் சொல்றேன்.''

வெயில் மங்கும்போதுதான் வீடுவந்து சேர்ந்தான். அம்மா கொஞ்சங்கூட தன் வரவால் மகிழ்ச்சியடைந்தவளாக காட்டிக் கொள்ளாத முகபாவத்தில் கேட்டாள்.

''ஏண்டா இவ்வளவு நாள்?''

கேள்வி கேட்டதைச் செவி மடுத்தபோது அடக்க முடியாத அளவுக்குக் கோபம் ஏற்பட்டது. இங்கே இரவு பகல் எந்நேரமும் வீட்டைக் காத்துகிடக்கவேண்டும். மூன்று நாட்கள் இங்கேயிருந்து காப்பாற்றப்பட்டிருக்கிறேன்.

இடிந்து தகர்ந்துபோய் பழுதுபார்க்கப்பட்டு நிற்கும் தூணில் சாய்ந்துகொண்டு இருளில் மூழ்கிக்கிடக்கும் உள் வராந்தாவில் இருக்கும்போது வெறுப்புத் தோன்றும். கரையான்கள் தின்று பொடிந்துபோன மரச்சட்டங்களிலிருந்து சிறுசிறு மரவண்டுகளின் சத்தம் இங்கு எப்போதும் கேட்டுக்கொண்டே இருக்கும், கவனித்தால். ஈரங்காயாத துணிகளுடையவும், இருட்டினுடையவும் ஒருவித வாடை இந்த வீட்டினுள்ளே முழுக்க இருப்பதாகத் தோன்றும்.

ஒரு விளக்கை ஏற்றிவைக்க யாருக்கும் நல்ல மனது இருப்பதாகத் தோன்றவில்லை. பத்மு எங்கே?

புகை அடர்ந்துள்ள ஒரு காடா விளக்கு கொண்டுவந்து அவள் வாசற்படியின்மேல் வைத்தாள். சுவரில் அது வளைந்து நெளிந்து கரி அடையாளங்களை உண்டாக்கிக்கொண்டிருப்பதைப் பார்த்துக் கொண்டு நிசப்தமாக இருந்தான்.

ஒருவேளை இந்த வீட்டுக்குத் தங்கமணி வரும்போது—ஒருவித பயணவுர்ச்சியோடுதான் நுழைவாள். அதை அவனால் நினைக்க முடிந்தது.

''சேதுவண்ணனுடை வீடு—!''

''அடியே ஒரு துவாலைத் துண்டை எடுத்துக்கிட்டு வா.''

உள்ளே இருந்து உரக்க பெரியம்மா கூப்பிடுவதை பத்மூ கேட்டாள்.

இல்லத்துக் குளத்திலிருந்து வேட்டி துவைக்கும் சப்தம் கேட்டது.

முற்றத்தின் இருட்டிற்குள் இறங்கி மதிலின் மேலிருந்து சாயந்திரம் நனைத்த வேட்டிகளை எடுத்துக்கொண்டு ஏறிப்போகும் போது சின்னம்மா கூறினாள்:

''இல்லத்துக் குளத்தில் பெண்களோட கூட்டமா இருக்கு. இப்போதைக்கு குளம் காலியாகாது.''

துவாலைத் துண்டும், சோப்புப் பெட்டியும் பத்மூ கொண்டு வந்து வைத்தாள். சோப்புப் பெட்டியைத் திறந்து பார்த்தான். தேய்ந்து நடுவில் உடைந்த கோல்டார் சோப்பின் இரண்டு சிறிய துண்டுகள் அடியில் இருக்கமாக ஒட்டிக்கிடந்தன.

''உனக்கு எண்ணெய் வேணுமா?''

பதிலேதும் பேசவில்லை. படியிறங்கி வயல் வெளியை அடைந்தபோது இளம் தென்றல் காற்று வீசியது. வயல் வெளியை விட்டு இன்னும் இருட்டு முழுமையாக இறங்கியிருக்கவில்லை.

வயல்களின் வழியாக கொஞ்ச தூரம் நடந்து நின்றான். வடக்கே கடைத் தெருவில் விளக்குகள் ஏற்றப்பட்டிருந்தன. பாதை வழியே ஒரு கட்டை வண்டி ஆடி அசைந்து குலுங்கிக் கொண்டு கடந்துபோகும் சத்தம் கேட்டது.

நேற்று மாலை மாமரங்களின் அடியில் அங்குமிங்குமாக சுற்றி நடந்து கொண்டிருந்தான். ராஜகுமாரனைப்போல ஒரு வீடு முழு வதும் உத்தரவு கேட்க காத்துநின்றது. ஒரு காலடியோசை அருகாமையில் கேட்கும்போது இதயத் துடிப்பின் வேகம் அதி கரித்தது.

மூன்று நாட்களுக்குப் பிறகு மீண்டும் சாலைக்குத் திரும்பியிருக் கிறானே!

மழைத் தூறல் வரலாமென்று தோன்றியது. வயலில் இறங்கி நடந்து வடக்கு வீட்டுப் படியேறும்போது மழைத்துளி விழத் தொடங்கியது. இருபக்கமும் கமுகுத் தோட்டத்தில் இருட்டு திடீரென முழு ஆதிக்கம் செலுத்தத் தொடங்கிருப்பதுபோல் தோன்றியது. சோப்புப் பெட்டியில் மெதுவாகத் தாளம் போட்டபடி வாசலை அடைந்தபோது வாசல் இருட்டில் மூழ்கிக் கிடந்தது. மேற்கு பக்கமாக நடந்து சென்றபோது அடுப்பங்கரை

வராந்தாவில் விளக்கு எரிந்துகொண்டிருந்தது. கார்த்தியாயினி அதற்கு அடுத்தாற்போல் உட்கார்ந்து சதுர முறத்தில் அரிசியைப் பரப்பி கல் பொறுக்கிக்கொண்டிருந்தாள்.

''யாரது சேதுவா?''

அவன் நின்றான்.

உள்ளே இருந்து சிம்னி விளக்கும் கையுமாக சுமித்திரா கடந்து வந்தாள்.

''சேது எப்போ வந்தே?''

''மாலையிலே.''

மழைச் சாரலிலிருந்து பாதுகாப்புப் பெற சுவரின் ஓரமாக மாறி நின்றான். துவாலைத் துண்டைக்கொண்டு தலை துவட்டிக் கொண்டான்.

''சரோஜினியக்காவின் குழந்தை நல்லா இருக்கா?''

''உம்.''

சிரத்தையில்லாமலே 'உம்' கொட்டினான்.

சிம்னி விளக்கின் சிவப்பு வெளிச்சத்திலிருந்துகொண்டு சுமித்திரா இருட்டில் நிற்கும் அவனைக் காணப் பிரயாசைப் பட்டாள்.

''அத்தை எங்கே?''

வடக்கே ஆற்றுப்பக்கமுள்ள அத்தையின் குடும்பத்தைச் சேர்ந்த சின்னம்முவின் வீட்டில் பிரசவ வேதனை தொடங்கியிருப்ப தாக ஆள் வந்து சொன்னபோது போனவள்தான். துணைக்குத் தேவுவும் போயிருக்கிறாள்.

''நளினியக்காவுக்கு ஏதாவது பெரும் மனத்துயரம் ஏது மில்லையே?''

''என்னமோ, தெரியாது.''

மனம் எல்லாவற்றையும் கூட்டிக் கழித்துக் கணக்குப்போட்டுக் கொண்டிருந்தது. சுமித்திரா தனியாக இருக்கிறாள்.

''குடை வேணுமா?''

''வேண்டாம்.''

இதோ விளக்குத் தாறேன், பாதை பார்த்துப் போய்க்கோ. இங்கே ஈச்சஞ் செடி நிறைய இருக்கு. முள் குத்தாமப் போகலாம்.

விளக்கை வாங்கும்போது அவளுடைய விரல்களைச் சேர்த்துப் பிடித்தான்.

காடா விளக்கின் சிறிதளவு வெளிச்சம் சுற்றிலுமுள்ள இருட்டுக்குக் கனம் கூட்டுவதுபோல் தோன்றியது. ஈச்சஞ் செடிகளின் அருகே போகும்போது சிறிதளவு பயம் தோன்ருமலில்லை. இருளடர்ந்த குளம் குகைபோலத் தோன்றியது. முன்பு கிணருக இருந்தது. சுற்றிலும் வெட்டி வெட்டி ஆழமாக்கி குளமாக்கப் பட்டிருக்கிறது.

படியின் மேலே, இடையிடையே தட்டுத்தடுமாறி விழும் மழைத்துளிகள்பட்டு கண்ணுடி உடையாதிருக்க வேண்டி, விளக்கை மறைத்து வைத்து, தண்ணீரில் இறங்கினுன். துவைப்பதற்காகப் போடப்பட்டுள்ள சதுரக் கல்லில் இருந்து தண்ணீரில் காலை வைத்தான். நல்ல குளிர்ச்சி. துவாலைத்துண்டை நனைத்து உடலைத் துடைத்தான். குளித்து விட்ட பாவனையில் கரைமேல் ஏறினுன். இருட்டிலிருந்து யாராவது தன்னைப் பார்க்கிருர்களா என்ற பதைப்போடு விளக்கை ஊதி அணைத்தான்.

''சுமித்திரா!''

உரக்கக் கூவியபோது சத்தம் விரைந்து வெளியேருமல் இருக்கப் பெரிதும் முயன்ருன்.

''சுமித்திரா விளக்குக் கெட்டு விட்டது. ஒரு திரி கொண்டு வந்து கொடு.''

நீர்த்துளிகள் சுற்றிலும் வீழ்ந்து கொண்டிருந்தன. புதிய மழைச்சாரலாச்சே. தொடர்ந்து பெய்தபோது கமுகு மர மட்டைகளில் தங்கி நின்ற நீர் திவலையாகக் கீழே கொட்டிக் கொண்டிருக்கின்றனவோ?

அவள் கேட்டுக் கொண்டிருக்கவில்லை. கேட்டாலும் அவள் வரமாட்டாள். காரணம், அவள் பழைய சுமித்திரா அல்ல. அடுத்து வீட்டு மாமாவின் மனைவியாக—அத்தையாக வரப் போகின்றவள். அவனுக்குத் தெரியும். அந்த அகந்தைதான் அவள் முகத்தில் காணப்படுகிறது. குடைப்பனை மரத்தடியிலிருந்து திருமணத்தைப் பற்றி பேசும்போதும் அதே அகந்தைதான் முகத்தில் பிரதிபலித்தது.

அப்போது இருள் கவிழ்ந்திருந்த கமுகுத் தோட்டத்ினூடே ஒரு வெண்ணெய்த்திரி வெளிச்சம் வருவதைக் கண்டான். கார்த்துவாஞக இருக்குமோ? யாராக இருந்தாலும் எனக்கொன்றுமில்லை. வெளிச்சம் வேண்டும். விளக்கு காற்றில் அணைந்து போய் விட்டது—தனக்குள் கூறிக் கொண்டான்.

அது சுமித்திராதான்,

அவளுடைய கையிலிருந்து திரியை வாங்கினுன். விளக்கைக் கொளுத்துவது போன்ற பாவனையில் கையைக் கீழே குவித்தான்.

இருட்டின் அலைகள் சட்டென்று வளையமிட்டுச் சூழ்ந்து கொள்கின்றது.

குரூரமான எண்ணத்தோடு அவளை வாரியெடுத்தபோது காதில் சுழற்காற்று ஓங்காரமிடுவதுபோல் தோன்றியது.

இருட்டில் தீனக் குரல் கேட்டது:

''வேண்டாம் சேது, வேண்டாம்.''

''நீ பெரிய ஆளாக இருக்கே. திரூரில் பெரிய வீட்டில் இருந்தபோது சேதுவைப்பற்றி நீ நினைத்ததுண்டா? யார் உனக்குத் தங்கச் சங்கிலி தந்தது? பீடி புகையின் வாடையும் மஞ்சள் பல்லுகளும் தானே உனக்கு இஷ்டம்! இல்லையா? இல்லையா?''

''வேண்டாம் சேது, வேண்டாம்.''

பச்சை நிறப்பாசி பிடித்த நனைந்த ஈரச் சுவரில் சாய்ந்து நின்றுகொண்டு, பிடியை விடுவிக்க முயலாமலே அவள் தீனக் குரலில் கூறினுள்:

''வேண்டாம்.''

''இல்லை, உனக்கு என்னைப் பிடிக்கவில்லை.''

சுற்றிலும் காற்று மோதி ஓடி மறைந்தது. கமுகுத் தோட்டம் மந்திரவாதப் பீடத்தின் முன்பாக இருக்கின்ற பேயாடும் பெண்களைப்போல தலைவிரி கோலமாக ஆடித் தகர்க்கின்றது. ஒரு அழுகைபோல ஆரம்பித்த காற்றின் இரைச்சல் பெருகி பெருகி ஓங்கார இரைச்சலாக மாறியது. சூரைக் காற்ருேடு அதிவேகத்தில் பெய்த மழை சுற்றிலும் சிதறிக் கிடக்கின்றது. நனைந்த மண்ணின் வாடை எங்கும் பரவியிருந்தது.

இறுதியில் தன் முன்பாக அவளது கண்கள் கலங்கிய புது வெள்ளத்தில் ஏறிவரும் ஏற்று மீன்போலப் பிரகாசிப்பதைக் கண்டபோது அவனது அறிவு மீண்டும் தெளிவடைந்தது.

''என்னுடைய கை மூட்டில் தோல் சிராய்ந்து போய் விட்டது.''

சிரிப்பும், அழுகையும் கலந்த குரலில் சுமித்திரா கூறினுள்.

மழையில் நனைந்துகொண்டு அவளுடைய கழுத்தில் கை வைத்து இருட்டில் அவளை இழுத்துக்கொண்டு நெருக்கியபடி இருந்தான். அவள் பேசவில்லை. வேகமாகத் தலையைத் துடைத்துவிட்டு, தோட்டத்தினிடையே நடந்து போக வேண்டும் எனத் தோன்றி

யது. இடது கையை அவள் இரண்டு கைகளைக் கொண்டு பிடித்து வைத்திருப்பது அப்போதுதான் அவனுக்குத் தெரிந்தது. அவளது விரல்கள் தனது கையில் குளிர்ந்த கோடுகள் போடுவதும் அழிப்பது மாக இருந்தன.

அவன் அவளது கையை விட்டுவிட்டு எழுந்தான். அப்போது சட்டென்று அடுத்து வந்து தோளில் கை வைத்து ஆட்டியபடி சுமித்திரா சொன்னாள்:

''என்னை வீணாக வேதனைப் படுத்துறே இல்லே?''

பயந்தவனைப்போல அவன் எழுந்து நின்றான். நனைந்த தன் தோள்மீது அவள் தன் முகத்தைப் புதைத்தபோது ஒழுகிய கண்ணீரின் வெப்பத்தை அவனால் உணர முடிந்தது. தீப்பந்த வெளிச்சம் படியேறி வாசல் முற்றத்தை அடைவதற்குள் போய்ச் சேர்ந்துவிட வேண்டும் என்பது சேதுவின் சிரத்தையாக இருந்தது.

''குளத்திலே யார்ரா பிள்ளைங்க?''

முற்றத்திலிருந்து மாதவ மாமாவின் உரத்த சத்தம் கேட்டது. அவன் அச்சத்தோடு, கையை விடுவித்துக்கொண்டு ஓட எண்ணினான். சுமித்திரா மாதவ மாமாவின் சத்தத்தைக் கேட்கவில்லை போல் தோன்றியது. நனைந்த சுருள் முடிகளைப் பிடித்துத்தூக்கி அவளது முகத்தை மேல்நோக்கி உயர்த்தியபோது தன் முன் அழுது கொண்டிருக்கும் முகத்தை அவன் கண்டான்.

''என்னை மன்னித்துவிடு சுமித்திரா'' — இல்லை வார்த்தைகள் தொண்டையில் எங்கேயோ மாட்டிக் கொண்டதுபோல் தோன்றியது. மிகுந்த முயற்சியின் பேரில் அவன் பேசினான்.

''வரட்டும், பார்க்கலாம்.''

அவளது கன்னங்களை லேசாகத் தட்டி, மெதுவாக சோப்புப் பெட்டியை மண்ணைத் தட்டியெடுத்துஇருட்டில்தோட்டத்தினூடே நடந்தான். ஓடவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். இடது மதிலைக் கடந்து வயலில் இறங்கினான். வீட்டுப் படி ஏறும்வரை யாரோ பின் தொடர்ந்து வரும் பீதியோடவே நடந்தான்.

படியேறியபோது நடப்பதை நிறுத்தினான். மொத்தத்தில் நனைந்து குளித்திருக்கிறான். துவாலைத் துண்டைப் பிழிந்து தலையையும் உடம்பையும் துடைத்து பெருமூச்சு விட்டுக்கொண்டு நின்றபோது அவன்மீது அவனுக்கே வெறுப்புத் தோன்றியது.

தங்கமணி என்னை மன்னித்துவிடு. நிலவில் காணும் ஆற்றையும் நீண்டு மெலிந்த விரல்களையும் பற்றி நினைத்துக்கொண்டு மனதுக்குள் கூறிக் கொண்டான்.

சுமித்திரா உனக்கு யாருமில்லை.

உன் முன்னால் வரும்போது நான் தேவனாகி விடுகிறேன். ஆனால் முதன் முதலாக சுமித்திரா அழுவதைக் கண்ட அந்த வேதனை மனதில் ஒரு கசப்பான காட்சியாக நிழலாடி நின்றது.

இல்லை. இனி தவறு செய்ய மாட்டேன்.

இது சத்தியம். எல்லோரும் என்னை மன்னித்து விடுங்கள்.

முற்றத்தை அடைந்தபோது உள்ளமும் உடலும் பழைய துணியைப்போல நைந்து போய்விட்டது போன்ற அனுபவம் ஏற்பட்டது.

சேதுவுக்கு அழ வேண்டும்போல் தோன்றியது.

# IV

## [ 1 ]

காலை முதலே ஆட்கள் வந்துகொண்டிருந்தார்கள்.

ஊர் மரியாதைக்காக விசாரித்துவிட்டு தேநீர் அருந்தி வெற்றிலைபாக்குப் போட்டுவிட்டுப் போய்க்கொண்டிருந்தார்கள். தொடக்கத்தில் பலரும் வந்து வாழ்த்துக் கூறினார்கள், நேற்று வழி மாறி நடந்தவர்களும்கூட.

மத்தியானத்திற்குப் பிறகு குடும்பத்தவர்களின் வரவாக இருந்தது.

யாருக்கும் தெரியாமல் ஒளிந்திருந்த இடம் காணுதபோது உதவியற்ற வேதனையிலிருந்து உருக்கொண்ட ஒரு மரக்கட்டை போல அவன் கிழக்கு வராந்தாவில் வந்து இருந்தான். வாசற்படியில் வேறொரு கூட்டம் ஏறி வருவதைப் பார்த்தான். பாட்டி காலத்தில் பாகம் பிரித்துக்கொண்டு போன ஒரு தாய் வழியில் வந்த உண்ணிக்கிரியக்காவும் அவள் மக்களும்தான் அது. நீண்ட காம்புடைய ஓலைக் குடையை உயர்த்திப் பிடித்துக்கொண்டு ஆண்களைப் போல நிமிர்ந்து நடக்கும் உண்ணிக்கிரியக்காவுக்கு எழுபது வயதிருக்கும். ஆற்றைக் கடந்து மூன்று மணி நேரம் நடந்து திருமண விருந்துக்காக வந்திருக்கிறாள். கூடவே மகளுமிருக்கிறாள். மகளுடைய மூன்று பிள்ளைகளும் இருக்கிறார்கள்.

வராந்தாவின் மற்ற முனையில் வந்த நாராயணன் நாயர், இலையை வெட்டி அடுக்கி வைக்கிறார்.

உள்ளே ஒரே அமளி.

அதற்கிடையே மூத்த சகோதரி எதையோ சத்தமாகப் பேசிக்கொண்டு வாசலுக்கு வந்தாள்.

''மாதவா, எங்கே மாதவன்?''

அவர் அதைக் கேட்ட போதிலும் பதிலேதும் பேசவில்லை.

முன் அறையில் சாய்வு நாற்காலி ஒலி எழுப்பியது.

மைத்துனனின் சத்தம் கேட்டது, ''கொஞ்ச நேரத்துக்கு முன்னே இங்கேதானே பார்த்தேன்.''

''இல்லை யாரும் பயப்பட வேண்டாம், ஓடிப்போக இனி நினைக்கமாட்டேன்.'' அவர் மெதுவாகத் தனக்குத்தானே கூறிக் கொண்டார்.

''ஆ, நீ இங்கே இருக்கியா? இது இப்போ நல்லா இருக்கா?''

இனி தட்டிக் கழிக்கவோ மறுக்கவோ முடியுமா?

''காவுங்கள் சாத்தரை இன்னும் காணலையே. நீ சொல்லலையா?''

''நான் பார்க்கலே.''

அவர் தன் தலையைத் தூக்காமலே சரளைக் கற்கள் பதித்த முற்றத்தை நோக்கியபடி உற்சாகமற்ற பாவனையில் சொன்னார்.

''நான் ரெண்டு பேர் கிட்டே சொல்லியனுப்பினேன். குஞ்சுக் குட்டனைக் கொண்டு மட்டும் அடுப்பங்கரை காரியம் நடந்திடுமா?''

பொறுமை இழந்தபோது அவர் கூறினார்:

''ஒண்ணும் வேண்டாம். உனக்கென்ன வந்திருச்சு? குடும்பத்தைச் சேர்ந்தவர்களையும் பந்துக்களையும் மட்டுமே கூப்பிட்டிருக்கு. இருந்தாலும் சொன்னவங்களுக்கு மரியாதைக்காக ஒரு சோறும், குழம்பும் குடுக்க வேண்டாமா? பரமேஸ்வரனின் அப்பா ஈடு பட்டுள்ள காரியமாச்சே.''

அங்கேயிருந்தால் பெண்கள் தங்களின் வேலைப் பளு, தாம் ஒற்றையாளாக வகிக்கும் பொறுப்பு இதையெல்லாம் பேச ஆரம்பிப்பார்கள். அதனால் எழுந்துவிட்டால் அவசியமான காரியங்களை செய்து தீர்க்க வேண்டுமே என்ற பாவனையில் முற்றத்தில் நடந்தார்.

''மாதவா.''

மைத்துனனின் குரல்தான்.

''பெட்ரோமாக்ஸ் லைட்டுக்குச் சொல்லியாச்சா?''

''இல்லை.''

''ங்ஹூம்.''

பெட்ரோமாக்ஸ் லைட்டுக்கு ஆறு ரூபாய் வாடகை கொடுக்க வேண்டும். மண்ணெண்ணெய் வேறு. பெஞ்சியில் படுத்துக் கொண்டு மைத்துனன் சுலபமாகச் சொல்லிவிடலாம். தான் இருக்கும்போது விசேஷத்தில் குறையேதும் வந்துவிடக்கூடாது என்பது அவரது கவலையாக இருக்கலாம்.

உள்ளேயும் வெளியேயும் கூட்டத்தைவிட அமளி பெரிதாக இருந்தது. இது என்னுடைய காரியமில்லை. எனக்கு இதில் எவ்

விதப் பங்கும் இல்லை என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டு அவர் முற்றத்தின் மத்தியில் சென்று நின்றார்.

மண் சுவர்களுக்குப் பலம் போதாதென்று சொல்லி பின்புறமாகக் கட்டிய படலுக்கு அருகில் தலை வாரிக்கொண்டு மூன்று பெண்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். குன்னின்புரம் காளிக்குட்டி பாட்டியுடன் வந்தவர்கள் கமுகுத்தோட்டம் வழியில் சென்று வெறுமனே வெற்றிலைக் கொடிகளின் கட்டுகளை அவிழ்த்து மீண்டும் கட்டினார்கள்.

''எங்கே மாதவன்?''

சின்ன அக்கா தான் பேசும்போது வரும் சத்தத்தைக் கேட்டால் மூக்குப் பொடியை நிறைய மூக்கினுள் அமுக்கிக்கொண்டு பேசுவது போல்தான் தோன்றும்.

''மாதவா, நீ இப்படி கொஞ்சம் வர்றீயா?''

திரும்பிப் பார்க்காமலே கேட்டார்:

''என்ன வேணும்?''

''பத்தாயத்தைத் திறந்து கொஞ்சம் தண்ணி போட்ட பாக்கு எடுத்துத் தா.''

எனினும் சத்தத்தைத் தாழ்த்தி மெல்லிய குரலில் யாரோடு என்றில்லாமல் பெண்கள் முணுமுணுத்தார்கள்.

''கேடு கெட்டதுங்க. வெத்திலே போட்றதுக்கும் ஒரு அளவில்லே? ஆடுங்க மாதிரி நிறுத்தாம மென்னுகிட்டேவா இருக்கணும்? நாலு கட்டு வெத்திலையும் பாக்கும் வச்சிட்டு திரும்பினேன். இப்போ தட்டிலே ஒரு துண்டு துக்காணியைக் கூடக் காணோம்.''

பத்தாயத்தைத் திறந்து உள்ளே கையைவிட்டுத் தண்ணீர் போட்டு வைக்கப்பட்டுள்ள பெரிய சட்டியைத் தடவி எடுத்து அதிலிருந்த பாக்கை எடுத்து வைத்துக் கொடுத்தார்.

திரும்பி நடக்கும்போது எண்ணினார்: 'ஒண்ணும் வேண்டா'ம்னு தான் நினைத்திருந்தேன். கடைசியில் பரமேஸ்வர அண்ணன் திருமணத்தில் ஏற்பட்ட ஆரவாரமும் ரகளையும் எல்லாமே ஒன்றாகிப் போய்விட்டது.

அன்று எல்லாவற்றையும் நடத்தியவனே அவன்தான். உள்ளேயும் வெளியேயும் ஒன்றுபோல காரியமாற்றினான். திருமணக் குழு வெளியேறியபோது ரெண்டு பந்தியாக வீட்டாரால் அழைக்கப்பட்டவர்களுக்கு திருமண விருந்து போடப்பட்டது.

எல்லாம் முடிந்த பின்னர் சமையல்காரன் அருகிலிருந்தபடி ஒரு கவளத்தை வாரித் தின்றான். அப்போது பசி அடங்கிப் போயிருந்தது. சாப்பாட்டுக்கென்று காத்திருந்த நேரம் கடந்து விட்டதால் பசி அடங்கிவிட்டது. இது அவனுக்கு மற்றொரு அனுபவம்.

பரமேஸ்வரனின் திருமணம் இப்படித்தானே நடந்தது என்று சட்டென்று நினைவுபடுத்திக் .கொண்டான். பெண்களுக்குத் தொடக்கம் முதலே இதில் எதிர்ப்பு இருந்தது. நிச்சயதார்த்தம் முடிந்தபோது முகம் கருத்திருந்தது. முடிவில் திருமண நாள் நெருங்கும்போது எல்லாமே மாறிவிட்டது. எல்லாம் தான் நடத்த வேண்டியவைகள். தன்னாலேயே எல்லாம் நடத்தப்பட வேண்டும் என்ற பாவனையில் ஆரவாரத்தோடு அவன் ஓட்டமும் நடையுமாக இருந்தான்.

சடங்குகளும் மற்ற சம்பிரதாயங்களும் வேண்டாமென்று சொன்னபோது இம்முறை பெண்கள் சம்மதித்துவிட்டார்கள். வடக்கு வீட்டுக்காரர்களுக்கு அதுதான் மிகவும் அவசியமானதாக இருந்தது. சாயந்திரம் நான்கு பேர் வருவார்கள். விளக்கு வைத்த பிறகு தோத்திரப் பாட்டு முடிந்த பிறகு புறப்பட வேண்டும். மோதிரம் மாற்றிக்கொள்ள வேண்டும். இங்கே விசேஷ முறைகள் எதுவும் வேண்டாம். வடக்கு வீட்டுக்காரர்கள் சிறியதோர் திருமண விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். அவ்வளவுதான். நான்கு நாட்களுக்கு முன்பாக மைத்துனன் வந்திருந்தபோது கூட்டம் கூடுவதில் மாற்றம் ஏற்பட்டிருக்கவில்லை.

''திருமண விருந்தும் கூட்டம் கூட்டறதும் வீண். மூக்குப் பிடிக்கத் தின்னுட்டு கீழே இறங்கும்போது உப்பு போதலே, மிளகு போதலேன்னு குறை கூறித் திரிவாங்க. ஒரு பயனும் இருக்காது.''

அக்கா கூறுவது கேட்டது:

''பரமேஸ்வரன் அப்பா நான் சொன்னதுக்கு சம்மதிச்சிட்டார்; உதவியாயிருந்தாப் போதும்'னு.''

ஆனால், அன்றைக்கு விடிவதற்கு முன்பாகவே குடும்பத்தைச் சார்ந்தவர்களை அழைப்பது என்று முடிவெடுக்கப்பட்டுவிட்டது. ஆற்றுப் பக்கத்திலும் குன்றுக்கு அப்பாலும் உறவினர்கள் இருக்கிறார்கள். தூரத்துச் சொந்தக்காரர்களும் உண்டு. அவர்களை விட்டுவிட முடியாது. ''ரத்த உறவை மறக்க முடியுமோ?'' பெண்கள் நியாயம் பேசி வெற்றியடைந்துவிட்டார்கள்.

திருமண வீட்டிற்கு மணமகனுடன் புறப்பட்டு போவதற்காக ஆட்களை கூப்பிடத் தொடங்கியதும் அவர்கள்தான். அதிலும் அவர்கள் நியாயம் பேசி வெற்றியடைந்து விட்டார்கள்.

''பஸ்சையும் ரயில் வண்டியையும் பிடிக்கப் போக வேண்டிய தில்லையே. இங்கே இருந்து அங்கேதானே போகவேண்டும்? பரமேஸ்வரன் அப்பாவும் அதையேதான் கூறினார். நமக்கு வர்ற வங்களுக்கு ஒரு கிளாஸ் தேநீர் செலவுதான் ஆகும்.''

முன் அறையின் தாழ்வாரத்தில் உத்திரத்தைப் பிடித்துக் கொண்டு அவர் சோர்ந்துபோய் நின்றார்.

சாய்வு இருக்கையில் இருக்கும் மைத்துனரின் சுருட்டு வாடை சுற்றிலும் நிறைந்திருந்தது. கீழே உட்கார்ந்திருக்கும் உண்ணிச் சிரியக்கா வெற்றிலைப் பெட்டியைத் திறந்து வைத்துக்கொண்டு வெற்றிலை போட்டுக்கொண்டிருந்தார்.

''பரமேஸ்வரன் வரலே?''

''வரும்.''

''சேது வரல்லையா? அவன் படிக்கிறானே? வர்றதேயில்லை.''

''மாதவா நீ ஏன் அங்கே உட்கார்ந்திருக்கே?''

எழுபது வயதாக இருந்தாலும் பாட்டியின் கண் பார்வைக்கு மட்டும் ஒரு குறையுமில்லை. அவளைப் பார்க்கும் வண்ணம் உண்ணிச்சிரியக்கா அவனை அடுத்துக் கீழே நகர்ந்திருந்தாள்.

''நல்ல காரியம்தான் என் மகன் செஞ்சிருக்கான். அந்நிய ரல்ல. எப்போக் கூப்பிட்டாலும் சொன்னாலும் கேட்கக்கூடிய பக்கத்து ஆட்களாகப் போயிட்டாங்க. உனக்கு அது ஒரு புண்ணியமும்கூட.''

புண்ணியம்! புண்ணியம் தேடுவதற்காக நடத்தப்படும் திரு மணம்!

அவருக்கு எங்கேயாவது ஆள் நடமாட்டம் இல்லாத இடத் திற்குப் போகவேண்டும்போல் இருந்தது. வெளியே செல்ல முடியாது. பாதையிலே பார்க்கிறவர்களெல்லாம் கேட் பார்கள். திருமணக் கூட்டம் நடக்கும்போது அங்கே ஓடித் திண்ணையிலோ, டீக்கடைப் பெஞ்சியிலோ சென்று உட்கார்ந் திருக்க முடியாதே. உள்ளே விருந்துக்காக வந்திருக்கிற பந்துக் களும், குடும்ப உறவுக்காரர்களும் இருக்கிறார்கள். வடக்கே முற்றத்தில் அடுப்புக் கூட்டி பெரிய குருணை ரவையைக் கொண்டு உப்புமா தயாரித்துக் கொண்டிருப்பவர்களின் ஓசை; பிள்ளைகள் அதைச் சுற்றி நிற்கிறார்கள்.

மாப்பிள்ளையுடன்கூட வருகின்றவர்களுக்கு தேநீர் மட்டும் கொடுத்தால் போதுமென்று பெண்களும் மைத்துனரும் சேர்ந்து இன்று காலையில்தான் தீர்மானித்தார்கள்.

முற்றத்திலும் சமையற்கட்டிலும் வாசலிலும் இரண்டு பெண்கள் போட்டி போட்டுக்கொண்டு ஓடியும் நடந்தும் நிர்வாகம் நடத்துகிறார்கள்.

அடைப்பாகக் கட்டியிருந்த வடக்கு வேலியைத் திறக்க ஏற்பாடு செய்ததும் அவர்கள்தான். வந்தவர்களிடமெல்லாம் மாதவனை மயக்கிய கதையை வியப்புடன் கூறிக்கொண்டிருந் தார்கள்.

இறுதியில்—

''மாதவா, என்ன நிச்சயம் பண்ணியிருக்கே?''

வார்த்தைகளில் பகையும் குரோதமும் கலந்திருந்தது.

''நான் நிச்சயம் பண்ணியது கூடப் பிறந்தவளை.''

முகத்தை ஏறிட்டுப் பார்க்காமலே கூறினார்.

பின்பு இப்போது ஒரு ஆங்கார கூச்சல் எழும் என்ற எண்ணத் தோடு காதைத் தீட்டி வைத்துக்கொண்டிருந்தார். ஒரே அமைதி. திரும்பிப் பார்த்தபோது பெண்கள் எழுந்து உள்ளே போனார்கள். வாசற்படியை அடைந்தபோது நின்றார்கள்.

''அச்சுதன் குட்டிப் பணிக்கரை நாளைக்கே இங்கே வரச்சொல், நான் பார்க்கணும். இன்னிக்கே பரமேஸ்வரனின் அப்பாவுக்கு ஒரு கடிதம் எழுது. நீயே எழுதறதுதான் மரியாதை.''

அப்போதிருந்தே கலியாணக் காரியங்களின் பொறுப்பை இரண்டுபேரும் மேற்கொள்ளலானார்கள்.

பத்மூ கொண்டுவந்து வைத்த கசப்புள்ள டீயைக் குடித்தார். மேற்குப்புற முற்றத்திலிருந்து யாரோ வேலைக்காரி அக்கரையோடு அழைத்தாள். குஞ்சுதான் அது. துணியும் மற்ற சாமான்களை வைத்த இரும்புப் பெட்டியை கலியாணக்காரர்களுடன் சுமந்து கொண்டு போவது அவளது காரியமாகும்.

வெயில் மங்கியது. கட்டிடத்தின் மேற்கூரை நிழல், மதில் கட்டுவரை நீண்டிருந்தது.

''ஆளுகள் வர ஆரம்பிப்பாங்க. நேரமாயிடுச்சு, மாதவா நீ போய் குளிச்சிட்டு வரலையா?''

மீண்டும் அறிவு வளர்ச்சி பெறாத குழந்தைப் பருவத்தை அடைந்திருப்பதுபோல அவருக்குத் தோன்றியது. எல்லோரும்

தனக்கு உபதேசம் செய்கிறுர்கள், திட்டுகிறுர்கள், உத்திர விடுகிறுர்கள்.

அவர் எழுந்தார்.

''பத்மு! துவாலேத் துண்டைக் கொண்டுபோய் கொடு.''

உண்ணிச்சிரியக்கா நினேவூட்டினுள்.

''எண்ணெய் தேய்க்க வேண்டாம். கலியாணத்தன்று எண்ணெய் தேய்ச்சுக் குளிக்கக் கூடாது. அப்படிதான் சாஸ்திரம்.''

எல்லாமே சாஸ்திரபடி நடக்கட்டும்.

## [2]

படியிரங்கும்போது வயலின் தெற்கு ஓரத்திலிருந்த நேந்திர வாழைத் தோப்புக்கு அடுத்திருந்த வரப்பில் வெள்ளேச் சட்டையும் வேட்டியுமாக யாரோ இறங்குவதைக் கண்டார். ஆம், பரமேஸ்வரனே தான்.

வரப்பைத் தாண்டிச் செல்லும் பரமேஸ்வரனே நேரில் சந்திக்க விரும்பாததால் தலே குனிந்தபடி நாற்றுத் தலேப்புகளேப் பார்த்த படி விரைவாக நடக்கலானுர்.

யாருமில்லாதிருந்த ஆற்றங்கரையையடைந்தபொழுது திடீரென ஆசுவாசம் தோன்றியது. யாருமில்லே. ஏளனமாகப் பார்க்குங் கண்களிலிருந்து தப்பித்துங்கொண்டாயிற்று. மண் கட்டிகள் இடிந்து விழுந்து கிடக்கும் சரிவில், ஆற்றுக்குள் இறங்கும் பாதையின் தொடக்கத்தில் அவர் நின்றுர். இப்போது வேண்டு மானுல் ஆற்றைக் கடக்கலாம். நாற்றுப் பிடுங்கப்பட்ட நாற்றங் கால்களும் காய்கறித் தோட்டங்களும் கடந்தால் பாலத்தின் தொடக்கத்தை அடையலாம். அப்புறம் ரெயில் பாதை, அறியாத இடங்களுக்கு முடிவற்ற பயணம் நடத்துகின்ற ரெயில் பாதை.

இல்லே. இனி தப்பவே முடியாது, யாரையுங் குற்றஞ் சொல்லி ஆகப்போவதில்லே. யாரையாவது குற்றஞ் சொல்ல வேண்டுமென்ருல் அது தன்னேயே தான் குற்றப்படுத்தவேண்டும்.

சுமித்திராவின் முன்பு, விரோத உணர்வை வெளிப்படுத்தும் வண்ணம் குரலேக்கூட உயர்த்த முடியாதபடி முதுகொடிந்த நிலேயில் நிற்கவேண்டி வந்த அந்த நிமிடத்தைப் பற்றி நினேத்த போது அவருக்கு வெட்கமாக இருந்தது.

படித் துறையை அடுத்து ஆற்று மீன் விற்பனைக்கு வந்துவிட்ட தென்பதைக் கேட்டு டீக்கடையிலிருந்து இறங்கி வெளியே வந்தபோது அவர்கள் படியிறங்கிப் போவதைக் கண்டார். தேவுவும் அவளுடைய அம்மாவும் மீனை வாங்கித் தேக்கு இலையில் வைத்து மடித்துப் பொட்டலமாக எடுத்துக்கொண்டு வீட்டை யடைந்தபோது மனம் பதறத் தொடங்கியது. வடக்கு வீட்டிற்குச் சென்று சுமித்திராவைப் பார்த்தால் என்ன? முதலில் வேண்டாம் என்று கருதினார். யாருமில்லாத நேரம் பார்த்து வந்திருப்பதாக அவள் நினைத்துக்கொண்டால்? முடிவில் அவருக்கு இருப்புக் கொள்ளவில்லை.

ஐயப்பாட்டோடு முற்றத்தைச் சென்று அடைந்தார்.

குளத்தில் யாருமில்லையென்பது தெரியும். இருந்தும் வெறு மனே கூப்பிட்டுக் கேட்டார்.

முன்புற வாயிலைத் திறந்து கார்த்தியாயினி சிம்னி விளக்கை கொளுத்திக்கொண்டு வந்து வைத்தாள்.

''என்னடி, ஒரேயடியா அடைச்சுப் பூட்டிக்கிட்டு இருக்கே?''

அவளிடம் குசலம் விசாரித்தார்.

''அக்காவும் அம்மாவும் வடக்கு தெருவுக்குப் போயிருக் காங்க.'' வெளிச்சத்திலிருந்து சற்று விலகிய நிலையில் மங்கிய மஞ்சள் ஒளிக் கற்றைகளுக்கு அப்பால் நிழலுருவாக உள் வராந்தா வில் அவள் இருந்தபடிக் கூறினாள்.

''பாய் போடட்டுமா?''

உள்ளேயிருந்து காலடி ஓசை தன்னை நெருங்கி வருகிறதா யென்று காதைத் தீட்டி வைத்துக்கொண்டு இருட்டில் உற்று நோக்கியபடி இருந்தார்.

''ஒரு கிளாஸ் தண்ணி தா.''

சுமித்திரா எங்கேயென்று கேட்கத் தைரியமில்லை.

ஒரு கிளாஸில் அவள் கொண்டு வந்து வைத்த தண்ணீரை ஒரு மடக்குக் குடித்தார். சுமித்திரா தான் கூப்பிட்டதைக் கேட்டிருப் பாள் இல்லையா? கார்த்தியாயினி மீண்டும் உள்ளே போயிருக் கிறாள்.

பைத்தியத்தைப்போல இருட்டையே பார்த்துக்கொண்டு இருக்கும்போது சுமித்திராவின் சப்தம் கேட்டது.

''வராந்தா காலியாகக் கிடக்கு.''

கீழ்ப்பக்க வராந்தாவில் சென்று மடியை அவிழ்த்து மீண்டும் முண்டு வேட்டியை இடுப்பில் சரியாக்கி இறுக்கமாக உடுத்திய பின்னர் அவள் சுவரில் சாய்ந்து நின்ருள்.

என்ன சொல்வதென்றே தெரியாதவருக அவர் நின்று கொண்டிருந்தார்.

தன்னேயே நினைத்துக் கேட்டார். இது எத்தனையாவது தடவை? அவள் முன்னிலேயில் வரும்போது எதுவும் பேச இயலாத வராக நாக்கு உள் வாங்கியதுபோல ஊமையாக நிற்கும்படியாக நேர்ந்திருக்கும். இந்நிலே முதலாவது இல்லே.

''வராந்தா ஒரே நிசப்தமாயிருக்கே.''

சுமித்திரா மீண்டும் நினைவூட்டினுள்.

அவர் எழுந்தார். எதையோ மறந்துவிட்டவர்போல மீண்டும் முற்றத்தில் தயங்கி நின்ருர். சுமித்திரா உள்ளே போவதைக் கண்டு பதைபதைப்போடு கூப்பிட்டார்.

''சுமித்திரா,''

அவள் வாசற்படியை அடுத்து திரும்பி நின்ருள்.

''நான்—பின்னே—ஒரு விஷயம் சொல்லனும்'னு கொஞ்ச நாளாக நெனேச்சுக்கிட்டிருக்கேன்.''

நிறுத்தி, சாவதானமாக மூச்சு இழுத்துக்கொண்டு அவளே நேரே பார்த்தபோது நிழலினிடையே அவளது கண்கள் மின்னு வதைப் பார்த்தார்.

''உன் அம்மாவுக்குத் தெரியும்...என் வீட்டிலுள்ளோர்க்கும் தெரியும்.''

சுமித்திரா நிசப்தமாகக் கேட்டுக்கொண்டு நின்ருள்.

''உனக்கும் தெரியும்'னுதான் நான் நெனச்சுக்கிட்டிருக் கேன்.''

''என்ன?''

அவர் உமிழ் நீரை விழுங்கினுர்.

''உனக்குப் புரியலே.''

மடியிலிருந்து ஒரு பீடியை எடுத்து உதட்டில் வைத்தார், முதலில் கொளுத்திய தீ அணேந்துவிட்டது. நடுங்கும் விரல்களேக் குவித்து வைத்துக்கொண்டு தீக் கொழுந்தை மறைத்துப் பிடித்து ஒருவிதமாக பீடியைப் பற்ற வைத்துக்கொண்டார்.

மின்னிப் பொழியும் அவளது கண்களை நேரிடையாகப் பார்க்க இயலாதவராக சிம்னி விளக்கிலிருந்து வரும் புகைச் சுருளைப் பார்த்தவராகத் தனக்குள்ள தைரியத்தையெல்லாம் ஒருங்கு திரட்டிக்கொண்டு கூறினார்.

''படுக்கையறை விஷயம்.''

சொல்லக்கருதிய ஒரு நீண்ட கதையைச் சொல்லி முடித்த ஆசுவாசம் ஏற்பட்டது. வார்த்தைகள் பாதுகாப்பாக வெளிப் பட்டதுபோது,

''ஓ, அதுவா?'' கடவுளே—கோடை வெப்பத்தில் ஒரு குளிர்ந்த காற்று கடந்து வருகிறது!

சுமித்திரா அடுத்து என்ன சொல்லப்போகிறாள் அன்று காத்து நிற்கும்போது வாசற்படிகளில் ஓலைத் தீப்பந்தத்தின் வெளிச்சத்தைக் கண்டார்.

தேவுதான் ஓலைத் தீப்பந்தத்தை வீசிக்கொண்டு முன்னதாக வந்துகொண்டிருந்தாள். பின்னால் அம்மா வந்துகொண்டிருந் தாள். அவர்கள் முற்றத்தை அடைவதற்கு முன்னரே குளத்திற்கு நடையைக் கட்டிவிட்டால்? அவர் வெம்பும் உள்ளத்தோடு சுமித்திராவைப் பார்த்தார். வாசற்படியை அடுத்து மண் சுவரில் மாட்டப்பட்டிருந்த காலண்டரில் ஸ்ரீகிருஷ்ணனின் சித்திரத்தை பாதி மறைத்துக்கொண்டு சுமித்திரா நிற்கிறாள். அவள் சிரிக் கிறாளோ? ஏன் அவள் எதுவுமே சொல்லவில்லை?

ஓ, அக்காவும் அம்மாவும் வந்துட்டாங்களே. நீங்கள் குளிக்கலையா?

அவர் இருட்டினிடையே நடக்கலானார். அதிருப்தியெனும் கசப்புணர்வே அப்போது அவருக்கேற்பட்டது. சொல்லவேண்டி யதைச் சொல்லவில்லையேயென்று தன்னைத் தானே நொந்து கொண்டார். சுமித்திரா தனக்கு விருப்பம் என்று சொல்வதற்கு முன்பாகவே பேச்சு முடிவடையும்படியாயிற்று.

இரவில் வீட்டின் முன் வசமுள்ள பலகையின்மீதிருந்து உறக்கம் வராத நிலையில் மீண்டும் ஆலோசனை செய்யலானார். எப்படியொரு கண்துடைப்புபோல் காட்டிவிட்டாள்? சுமித்திரா வுக்குத் தெரியும். யாருடைய சம்மதத்துக்காக காத்திருக்க வேண்டும்?

அடுத்த நாளே, குன்னின்புறத்து நாவல் தோப்பிலிருந்து தோட்டத்துக்கு உரமாக இடவேண்டிய தழை குழைகளை ஆட்களை வைத்து வெட்டிக்கொண்டிருந்தார். மரங்களை வெட்டி விற்றுவிடுவதால் பசுந்தழை உரங்களுக்குப் பஞ்சமாகப் போய்விடு கிறது. கூடவே நிற்கவில்லையென்றால் புலைய வேலைக்காரர்கள்

கண் மூடித் திறக்கு முன்னே இலைக் கட்டுகளைத் தங்கள் சொந்தக் காய்கறித் தோட்டத்திற்குச் சொந்தமாக்கிக்கொண்டு விடுவார்கள். நண் பகல் இடைவேளைக்கு அவர்கள் கஞ்சி குடிக்கக் கலையும்போது வீட்டை நோக்கி நடக்கலானார். வீட்டுத் தோட்டத்தை அடுத்துச் சென்றபோது வடக்கு வீட்டருகில் ஆடுகள் மேய்ந்துகொண்டிருப்பதை கண்டார். ஒற்றையடிக் குறுக்குப் பாதையில் இறங்கியபோது சுமித்திரா எதிரே வந்தாள்.

அவள் நடந்து அவர் அருகில் வந்தபோது சற்றுக் கூடுதலாகக் கஞ்சிப் பசை போடப்பட்ட முண்டு வேட்டி கணுக் காலில் அடித்து சப்தம் எழுப்பியது.

கடந்த வடமேற்குப் பருவ மழைக் காலத்தில் கால்வாயில் உருண்டு வந்து தங்கிவிட்ட பாறைத் துண்டு ஒன்றின்மீது ஒரு காலைத் தூக்கி வைத்துக்கொண்டு வேலியிலுள்ள முட்களில் மெதுவாக விரல்களை ஓட்டியபடி அவள் கூறினாள்:

''நான் உங்களை நோக்கித்தான் வந்தேன்.''

உள்ளே ஏறு மீன்கள் ஏறி வந்து துள்ளிக் குதித்து மறைவதைப் போன்ற அனுபவம் அவருக்குண்டாகியது.

''உங்களோடு ஒரு விஷயம் சொல்லவேண்டியிருக்கு.'' வேலிப் படப்பிலிருந்து ஒரு கொழுந்தைக் கிள்ளி கையில் வைத்துக் கசக்கியபடி சுமித்திரா குளுமையின் புன்சிரிப்போடு கூறினாள்:

''எங்களுக்கு ஆண் துணை யாருமே இல்லை; அதைப் பற்றித் தான் உங்களோடு பேசணும்'னு இருந்தேன்.''

மனம் படபடத்தது; சொல்லு. நீ எதை வேண்டுமானாலும் சொல்லலாம்.

''எனக்கு உங்களிடம் ரொம்ப பிரியம் உண்டு.''

அவர் நுரை கூட்டிப் பொங்கி வரும் மகிழ்ச்சியை அடக்க இயலாதவராகச் சிரித்துக்கொண்டு நின்றார்.

''நான் சொன்னால் நீங்க கேட்பீங்க'ன்னு நெனச்சுத்தான் சொல்றேன். ஆச்சரியமா இருக்கா?''

''ஆச்சரியமா?''

அப்போது உரக்கச் சிரித்துவிட்டாள்.

''சுமித்திரா எதை வேண்டுமானாலும் சொல்லலாம்.''

''நீங்க எங்களோடு வந்து சேர்ந்துகொள்ளணும். எல்லோருக்கும் அதுவே பெரிய விருப்பமாக இருக்கு.''

உடல் கனம் குறைந்து இருப்பதுபோல் தோன்றியது. வேண்டுமென்றால் காற்றில்கூடப் பறந்து துரும்பைப்போலப் பறந்துவிடுவார்போலிருந்தது.

''எனக்கொரு ஆசையுண்டு. நீங்க அக்காளைத் திருமணம் செய்துக்கணும்.''

அப்போது கொடுவாளைப் பிடித்திருந்த வலது கை துடித்தது. கடலாமணக்குச் செடியின் அடியில் வட்டம் போட்டுக்கொண்டிருந்த தரையை அப்படியே அழுத்திப் பிடித்தபடி நின்றார். மிளகுக் கொடிகளின் வழியே பாய்ந்து வந்த காற்று சட்டென ரம்பம்போல் காதுக்குள் சென்று இறைந்தது. முன்னால் அழகிய உதடுகளை விரித்துச் சிரித்துக்கொண்டு நிற்கும் சுமித்திராவின் முகம் மட்டும் மறைந்து போகாமல் நின்றது.

[3]

கூக்குரல்கள். நான்கு புறமிருந்தும் கூக்குரல்கள். நடுங்கி விட்டான். யாரோ தன்னைப் பரிகசிப்பதாக எண்ணிப் பார்க்கும் போது சிறுவர்கள் எண்ணெய் தேய்த்து முடித்தவுடன் வீட்டார் முன்னிலையிலேயே ஓடிப்போய் மணல் திட்டில் ஓடியாடி விளையாடி அமர்களப்படுத்துகிறார்கள். வலைக்கார மாப்பிளாவின் குடிசைக்கு அப்பால் இருந்த பாதையில் இறங்கி பெண்கள் வருகிறார்கள். தெற்கே கரையில் எங்கேயோ இருப்பவர்களாக இருக்கக்கூடும். சோப்புப் பெட்டியும், உடம்பு தேய்க்கும் நார்பத்தையும் கிண்ணத்தில் எண்ணெயுமாகத் தண்ணீர் அருகில் சென்று ஆழம் குறைந்த இடம் பார்த்து அவர்கள் நடக்கும்போது சிறுவர்களைத் திட்டவும் செய்கிறார்கள்.

வீட்டிற்கு விருந்தினர்கள் வரத்தொடங்கும் நேரமாகிறது. மணமகன், ஆற்றின் படித்துறையில் அதிக நேரம் குளிக்க முடியாதென்று எண்ணி, வேகமாகக் குளித்து முடித்து வெளியேறினார். தண்ணீரில் இறங்கி நிற்கும் பெண்களை அடுத்துச்சென்று அவர்களை கடந்துசெல்லாமலிருக்க வேண்டி, சதுப்பாகக் கிடக்கும் பகுதி வழியே கடந்து சென்றார். முதலில் கண்ட புல்தரையில் கால்களைத் தேய்த்துச் சேற்றை நீக்கியபின் கரையேறினார்.

வயலின் நடுவே இருந்த ஒற்றையடி வெட்டுப்பாதைக்கு இறங்கும் இடத்திலிருந்து பார்த்தால் இரண்டு வீட்டுப் படிகளுமே தெரியும். வடக்கு வீட்டிலிருந்து படியிறங்கி வேதப்பிராமணர் வந்துகொண்டிருந்தார். பேய், பிசாசு போன்ற தீயவைகளை விரட்டித் தூய்மையாக்கவேண்டி தரையை மெழுகிப் பாலும் நீரும் கொடுக்க வேதபிராமணரை அழைப்பார்கள். காலையில் சாமி கும்பிடப் போனபோது அழைக்கப்பட்டிருக்கலாம். இதையும் சுமித்திராதான் ஏற்பாடு செய்திருக்க வேண்டும்.

எல்லாமே சுமித்திராவின் முடிவுப்படிதான் நடக்கிறது. வயல் வரப்புகளிடையே நடக்கும்போதும், நடந்தவைகளையெல்லாம் நினைத்துப் பார்க்கும்போதும் ஒரு முடிவுக்கு வந்தார். அது ஒரு ரகசியம் போன்றது. அற்புதம் போன்றது; இல்லை அபத்தமாக ஒரு நிமிஷத்தில் சம்மதித்தது. எனக்கு சம்மதம் இல்லை என்று ஒரு போதும் கூறவில்லை. தேவைப்பட்டதும் சிந்தித்ததும் சுமித்திரா வைத்தான். நிச்சயப்படுத்தியதும் அவளைத்தான்.

ஒற்றையடிப்பாதை வழியே எதுவும் சொல்லக் கருத்தில்லாமல் சுமித்திராவின் முன்பிருந்து அகன்று போகும் மனக்கஷ்டத்தோடே மேல் படிகளில் ஏறி மூச்சு வாங்கிக்கொண்டு நின்றார். அப்போது சொல்லவேண்டிய விஷயங்கள் நாக்கின் நுனியில் கூடியிருந்தன.

—தேவக்கா!

தேவக்காவை! சுமித்திராவுக்குத் தெரியவில்லை.

இல்லத்தின் தெற்குத் தளத்தின் உள்ளேயுள்ள சிறிய அறையின் வாசற்படியில் மங்கிய வெளிச்சத்தில் கெட்ட கனவுபோல நின்ற தேவுவின் உருவம் மனதில் இருந்தது.

—சுமித்திராவுக்குக் கேட்குமோ? நான் கண்டதுதான். நான் என் கண்ணாலேயே பார்த்தேன்—

உறக்கம் வராத மற்றொரு இரவு. வாழைத் தோப்பில் காற்றில் அசையும் இலைகள் மென்மையாக எழுப்பும் ஓசை தெளிவாகக் கேட்டது. இருட்டு சுற்றிலும் படர்ந்திருக்கிறது. காற்று கடுமையாக அடித்தது. குளுமையான புற்றுகளிலிருந்து வெளியேறிய பாம்பு முதலிய ஊர்வன போன்று உடலில் உராய்ந்து சென்றது. தூக்க மயக்கம் தலையைச் சுற்றிக்கொண்டு வந்தது. கமுகுத் தோட்டத்திற்கு நீர்பாய்ச்ச வேண்டி பொய்கையொன்றிலிருந்து தண்ணீர் இறைப்பது போன்று கனவு படர்ந்தது. ஆழம் காணமுடியாத பொய்கை பதினாறு பாகம் நீளமுள்ள சால் இணைப் புத்தண்டை கீழே இறக்கியும்கூட தண்ணீரைத் தொடவில்லை. கடைசியில் நிராசையோடு சாலை மேலே தூக்கத் தொடங்கும் போது ஏதோ தடுப்பதுபோல் தட்டுப்பட்டது. இல்லை, யாரோ பிடித்துக் கீழே இழுப்பதுபோல் தோன்றியது. உற்றுப் பார்க்கும் போது தண்ணீரினுள்ளேயிருந்து பொங்கி மேலே வந்த ஒரு விகாரமான உருவம் காலை எட்டிப் பிடித்துக்கொண்டு நிற்கிறது. நனைந்த நீர்ஒழுகும் ரோமங்கள் நிறைந்த சரீரம் கால்தடுமாறி ஆழத்தில் விழும்போது கீழே காத்திருந்த கைகளின் நீளம் வளர்ந்து நீளுகிறது. இப்போது அந்தக் கைகளினுள் அகப்பட்டு விடுவோமோ என்று அச்சம் தோன்றிய சமயம்; தப்பமுடியாது என்று தோன்றியது. வீழ்ச்சியின் முடிவில் நீர்ஒழுகும் ரோமம்

நிறைந்த கைகளுக்கிடையே விகாரமான முகத்தைப் பார்த்தார். பயந்து நடுங்கிவிட்டார், தேவுவின் முகம்!

அப்போது வெளியே இருட்டு மங்கத் தொடங்கியிருந்தது. சுமித்திராவைக் காணுதிருக்க முயன்று கொண்டு அடுத்த சில நாட்கள் நடந்துகொண்டிருந்தான். என்ருலும், அவளைக் காணும்படி நேரிட்டுவிட்டது. அவசரத்தோடு அவள் நெருங்கி மெதுவான குரலில் கூறினுள்:

''நான் அம்மா கிட்டே சொல்றேன்.''

''என்ன?''

''மாதவ அத்தானுக்குச் சம்மதம்னு.''

''நான்—பிறகு.''

திகைத்துப்போய் கருத்த முகத்தோடு அவர் நிற்கும்போது சுமித்திரா இன்னும் சற்று அருகில் வந்து நின்று, கை நீட்டினுல் உடலை வளைத்துப் பிடிக்கக்கூடிய அளவில் நெருங்கி, நின்ருள்.

''நீங்க என்ன யோசிக்கிறீங்க?''

''நான்—''

''ஒண்ணும் யோசிக்க வேண்டாம். உங்ககிட்டே நானே சொல்றபோது?''

செந்நிறக் கண்கள் கலங்கியிருந்தபோதிலும் அதில் மின்னல் போல ஒளி தோன்றி மறைந்தது. நீட்ட நினைத்த கைகளில் திடீரென கனம் கூடியிருப்பதுபோல் தோன்றியது. அவள் சிரித்துக்கொண்டு தொட்டும் தொடாத நிலையில் தன் முன்பி லிருந்து கடந்துபோனபோது அவர் எவ்விதச் சிந்தனையும் செய்ய இயலாதவராகக் காரணமின்றி மந்தகாசம் புரிந்தபடி தளர்ந்தவராய் நின்றுகொண்டிருந்தார்.

''மாதவ நாயரே, குளிச்சிட்டு வர்ருப்புலே இருக்கு.''

சிரிக்க முயற்சித்தார். வராந்தாவிலும் வீட்டின் முன் அறையிலும் பாய்களிலும் ஓலைத் தடுக்குகளிலும் உட்கார்ந்து ஆட்கள் தேநீர் குடித்துக்கொண்டிருந்தார்கள்.

ஈரத் துணிகளை மாற்றுவதற்காகக் கடந்து சென்றபோது பெண்கள் வாசற்படிக்கு வந்து புதிய முண்டுவேட்டியும் கரை போட்ட மேல்துண்டும் கொடுத்துவிட்டுச் சென்ருர்கள்.

''இந்தா புறப்பட்டுப்போகும் போது பரமேஸ்வரன் கொண்டு வந்து தந்தான்.''

மணமகன் வேஷத்தில் வெளியே வந்தபோது இளைய பெண்கள் வந்து நினைவூட்டினார்கள்.

''மச்சின் முன்பாக ஒரு திரியை கொளுத்திவைத்து கும்பிடணும்.''

வெளியே ஊர்க்காரர்கள், பழக்கமானவர்களுக்கு இடையிலே சென்றபோது பலரும் விலகிப் பாயில் இடம்பிடித்து உட்காரும் முயற்சியில் ஈடுபட்டார்கள்.

கடைத்தெரு முனையில் டீக்கடை நடத்தும் கிருஷ்ணன் நாயர் வேடிக்கையாகச் சொன்னார்:

''தோட்டந்துரவுன்னு அடிக்கடி போவீங்க. இனி அப்படிப் போக முடியுமா!''

யாரோ இதைக் கேட்டுச் சிரித்தார். அதையடுத்து சங்குண்ணி கூறினார்.

''இன்னிக்கு ஒருநாள் தானே? அந்தக் கஷ்டம்?''

இல்லை. யார் இப்படிச் சொல்றது? மைத்துனன் நாற்காலியிலிருந்து எழுந்து பணிவோடு—

''உட்காருங்க. இதோ இங்கே உட்காருங்க.''

உண்ணி நம்பூதிரிதான். முற்றத்தில் உலாவிக்கொண்டிருந்த பரமேஸ்வரன் உண்ணி நம்பூதிரியை வரவேற்றான்.

தன் மார்பைச் சொறிந்துகொண்டு உண்ணி நம்பூதிரி நின்றுகொண்டிருந்தான். மைத்துனன் ஒதுக்கித் தந்த நாற்காலியில் உட்காரும்படி கேட்கத் தயங்கியவனாய் நின்றான். சங்குண்ணி நகர்ந்து பாயை உண்ணி நம்பூதிரிக்குத் தள்ளிக்கொடுத்தான்.

மைத்துனன் மீண்டும் நாற்காலியில் இருந்தபடி சொன்னான்: ''மாதவா? உண்ணி நம்பூதிரிக்கு என்ன கொடுக்கிறது. இளநீரும் பழமும்?''

''தேநீர் போதும்.''

உள்ளே போய் தேநீரும் இலையில் உப்புமாவும் வாங்கி வந்து அவனே உண்ணி நம்பூதிரி முன்பாக வைத்தான். முன் பக்க அறையைப் பார்க்காமலே சொன்னான்.

''சாப்பிடலாமே.''

மாலைநேரம் வரும்வரை அவர் வெற்றிலை பாக்குப் போட்டுக்கொண்டும் பீடி புகைத்துக்கொண்டும் காத்திருந்தார். அவருடைய சிரிப்புகளும், சப்தங்களும் குறைந்தன. தான் தனியாக இருப்பது போல் தோன்றியது. இப்போது மனம் ஒரு நிலையில் இல்லை. தைரியம் பெருகி சாந்தமாக அங்கு நிலைகொண்டிருந்தது. பாயில் சம்மணம் போட்டு அமர்ந்தபடி தேநீர் அருந்திக்கொண்டிருக்கும்

உண்ணி நம்பூதிரியைப் பார்த்துக்கொண்டிருக்கும் போது கத்தியின் முனை உறையிலிருப்பதுபோல் பகை நீக்கிய வகையில் இருந்தார்.

ஆகவேண்டியது ஒன்றுமில்லை என்று தோன்றியது. வடக்கு வீட்டுத் தேவுவைத் திருமணம் செய்யப் போகிறார். தேவுவைக் காண்பதில் மகிழ்ச்சியில்லை. யாருக்குமே தெரியாத ஒரு ரகசியம் உண்டு. தேவுவல்ல இங்கு முக்கிய விஷயம். சுமித்திரா உட்பட உள்ள வடக்கு வீட்டின் தலைவராக ஆகப்போகிறார்.

மனதிற்குள் வாதங்கள் நடந்தன. உரக்கச் சிரித்துக்கொண்டிருக்கும் இந்த மனிதர்களின் முன்னிலையில் தலை தாழ்த்தி அதைரியத்தை வெளிக்காட்டிக்கொள்வதால் ஆகப்போவது ஏதுமில்லை. டீக்கடை நாயரின் மனைவி அவரது அண்ணனின் மனைவியாக ஆகியிருக்கிறாள். விஷக்கடியினால் அண்ணன் இறந்தபோது அந்தப் பெண்ணுக்கு மூன்று பிள்ளைகள் இருந்தன. அவர்களைக் காப்பதற்காகச் சென்றவன்தான் தம்பி. நான்காவதாக ஒரு பிள்ளை பிறந்தபோது அவன் பகிரங்கமாக அவளை ஏற்றுக்கொண்டான். அவன் முன்னிலையிலா நாணமடைவது? அவர் ரோஷத்தோடவே தனக்குத்தானே கேட்டுக்கொண்டார்.

வைசூரி நோயால் ஏற்பட்ட வடுக்களும் அடையாளங்களும் கீழே விழுந்த அடையாளங்களோடு கூடிய முகமும் காதில் வெள்ளைக்கல் பதித்த கடுக்கனுமாக இருக்கும் குட்டக் குறுப்பின் தோரணை, பார்வைக்கு அவனை அழகனைப்போலவே காட்டியது. அவனைக் கண்டங் குளங்கரை உழவடை செய்வோனாக அமர்த்தியிருப்பதைப்பற்றி ஆட்களுக்குத் தெரியும். சொந்த வீட்டின் வாசற்படிவரை சென்று சின்னன் மேனன் உள்ளேயிருப்பதை அறிந்து அவன் திரும்பிப் போவதைப் பார்த்தவர்கள் உண்டு. தெரியும், மற்றவர்களைப் பார்த்துப் பரிகசிப்பவர்களின் கதைதான் எல்லோருக்கும் தெரியுமே.

ஏறுவாதம் பிடித்த எருமை மாட்டைப்போல ஒரு காலை உந்தி இழுத்துக்கொண்டு நொண்டியபடி பத்மநாபனின் மனைவி நடப்பாள். யானை உள்ள இல்லத்திலிருந்து முட்டுக் கொடுக்கப்பட்டவளைப்போல உள்ள ஒருத்தியைக் கொண்டு வந்து குடிவைத்துள்ள உண்ணி நம்பூதிரி.

உண்ணி நம்பூதிரியையே இவ்வளவு நேரமும் தான் பார்த்துக்கொண்டிருப்பதைச் சட்டென்று நினைவு கொண்டபோது,

''தீபம்!''

உள்ளே இருந்து, பத்மூவின் குரல் கேட்டது.

''விளக்கை வணங்கிய பிறகு வெளியே போகலாம்.''

அந்தி விளக்கு வணக்கம் செய்துவிட்டு வெளியேறக் கூட்டம் முயன்றது. அவனும் கூடவே முற்றத்திற்கு வந்தான். மைத்துனன் அறிவுரைகள் வழங்குகிருன்.

மனக்கஷ்டத்தை வெளியே காட்டிக்கொள்ளாமலே ஆட்களுக்கிடையில் படியிறங்கும்போது வெறுப்புடன் மெதுவாக முணுமுணுத்துக் கொண்டார். தயாராக நிற்கும் திருமணப் பந்தலுக்கு வானளாவ மணமகன் தலையுயர்த்தி வருகிருர். வடக்கு வீட்டு தேவுவுக்குத் தாலிகட்ட மணமகன் வருகிருர்.

[4]

மழை பெய்தே தீருமென்று தோன்றிய ஒருநாளின் ஆரம்பம் கண்களில் உறக்கம் தேங்கியிருப்பது போன்று வெளிச்சம் மங்கிக் கொண்டிருந்தது.

புகை படிந்து நிற்கும் முற்றத்தைப் பார்த்துக்கொண்டிருக்கும்போது கடந்துபோன ஒரு இரவைப்பற்றி அவர் நினைவுகூற பெரிதும் முயன்று கொண்டிருந்தார். ஒரு இரவு மாறி வந்தவுடன் கணவனுக மாறியிருக்கிருர். வடக்கு வீட்டின் ஓர் அங்கமாக ஆகியிருக்கிருர்.

ஒடுக்கமான அந்த அறையின் உள்ளே வியர்வையில் குளித்தவருக நின்றது எப்போது? மணமகனின் கூட்டம் படியிறங்கிப் போகும் வரை நேரத்தைப்பற்றிய சிந்தனை ஏற்பட்டிருக்கவில்லை.

வெளி வராந்தாவில் கூடியிருந்த விருந்தினர்கள் எப்போது போனுர்கள்? இப்போது வீடு சஞ்சாரமற்று அமைதியாக உள்ளது. அறைக்கு வெளியே வெளித்தளத்தினூடே கால்களின் நடமாட்டமும் அங்குமிங்குமாகக் கடந்துபோய்க் கொண்டிருந்தது.

''நான் விளக்குக் காட்டறேன்,'' சுமித்திராவின் குரல்தான். ''எச்சிலையும், மத்தவைகளையும் இப்பவே கூட்டித் துடைக்கிலேன்ஞ காலையிலே நாய்களும் பூச்சிகளும் கூடி நாசமாக்கிடும்.''

வெளிப்படிக்கு முன்பு அரிக்கேன் விளக்குக்கு அருகில் உரல் பக்கமாக இருட்டைப் பார்த்துக்கொண்டு நின்றுர். காற்று இல்லை. சர்ட் வியர்வையில் நனைந்துபோயிருந்தது. வாசல்புறமிருந்து இடம் மாறியிருந்த ஸ்ரீ கிருஷ்ணனின் காலண்டர்மீது சட்டையைக் கழற்றி மாற்றினுர். நெற்றியில் வடியும் வியர்வையை வழித்துக் கொண்டு நிற்கும்போது சுமித்திரா வீட்டினுள்ளே ஓட்டமும் நடையுமாக வீட்டு வேலை பார்த்துக்கொண்டிருப்பதை நினைத்துக் கொண்டார்.

சடங்குகள் நடந்தது. முடிந்ததும் பந்தியில் சாப்பிடவிருந்த கிருஷ்ண நாயரினுடையவும், நாணுநாயருடையவும் வலுக்கட்டாயத்தினுல் இந்த ஒடுக்கமான அறைக்கு வந்த அவருக்கு எல்லாமே தெளிவான ஓவியப் படம்போல மனக்கண்முன் விரிந்தது.

மணமகனின் கூட்டம் முற்றத்தை வடந்தடைந்தபோது முழுமையாக இருள் கவியவில்லே. பதினுலாம் நெம்பர் விளக்குகள் வெண்மை ஒளியை உமிழ்ந்து கொண்டிருந்தன. சடங்குகளுக்கு இன்னும் நேரம் வரவில்லே. இரண்டு பந்திக்கான ஆட்களே அங்கே இருந்தார்கள்.

அடுப்பங்கரையிலிருந்து சுமித்திராவினுடைய அம்மாவின் குரல் கேட்டது.

''நேரமாயிடுச்சே, எங்கேயாவது ஒரு இடத்திலே படுக்க வேணுமா? கோழி கூவறதுக்கு முன்னுடி எழுந்திருச்சது.''

சோர்வாக இருந்தது. அருகில் சுவரோடு சேர்த்துப் போடப் பட்டிருந்த கட்டிலில் கிடந்த படுக்கையை நோக்கினுர். உட்கார வேண்டும்போல் இருந்தது. விபூதித்தட்டால் மூடிவைக்கப்பட்டிருந்த கோப்பைப் பாத்திரத்தில் என்ன இருக்கிறது என்று திறந்து பார்த்தார். தண்ணீர் ஒரு மடக்குக் குடித்தார்; பீடியையும் தீப்பெட்டியையும் வாசலில் எங்கேயோ மறந்து வைத்துவிட்டதை நினேவுக்குக் கொண்டு வந்தபோது அவருக்கு அச்சமாக இருந்தது. வெளியே சென்று வாசலே அடைந்தால் எங்கேயாவது தேடி எடுத்துவிடலாம். ஆனுல் இந்த ஒடுக்கமான அறைக்கு வெளியே போவது என்னமோபோலிருந்தது.

விறைப்பான தொனியில் பேசும் கிழவியின் குரல்: ''இப்போவுள்ள பெண்களுக்கு ஒரு நாணம் இருக்கணுமே!'' வடக்கேயுள்ள ஆற்றுப் பக்கத்திலிருந்து திருமணத்துக்கு வந்த குடும்ப உறவுக்காரர்களில் ஒரு கிழவியின் விமர்சனம் இது.

பின்னுலிருந்த வாசற்படியில் யாரோ முணுமுணுப்பதைக் கேட்டபோது இதயத்துடிப்பு அதிகமாகியது. திரும்பிப் பார்க்கவில்லே. கால்களில் ஒருவித நடுக்கமேற்படுகிறதோ?

காலடிச் சத்தங்கள். மீண்டும் முணுமுணுப்புகள். கட்டைச் சத்தத்தில் வாசல்கதவின் கீல் ஒலி எழுப்பியது. சாய்படியின்மீது இரண்டு கைகளேயும் ஊன்றி வெளியே பீடியும் தீப்பெட்டியும் மறந்து வைத்த நிமிஷங்களே சபித்துக்கொண்டு, உரல் பக்கமாக இருட்டில் கண்களே இமைக்காமல் பார்த்துக்கொண்டிருக்கின்ருர்.

வளேயல் குலுங்கியபோது, பின்னுலிருந்து வேகமாகப் பெருமூச்சு வருவதைக் கேட்டபோது சாவதானமாகத் திரும்பி நின்று

பார்த்தார். கதவு திறந்த வாசற்கதவின் பக்கம் கட்டில் கால்களின் நிழலோடு சேர்ந்து நிற்கும் தேவுவின் உருவம் தெளிவாகத் தெரிந்தது. மண் சுட்டி விளக்குக்கு முன்பாகத் தாலிகட்ட வேண்டி நேருக்கு நேராக நின்றபோது சிவந்த சேலை முந்தாணியும் கத்தரித்த நகங்களோடு கூடிய கால் விரல்களை மட்டுமே பார்த்திருந்தார். இப்போது புடவை இல்லை. நிழலில் முண்டின் வெள்ளை நிறம் காணப்பட்டது.

மங்கிய வெளிச்சத்தில் கட்டிப் பிடித்துக்கொண்டிருக்க அவள் முயல்வதுபோலத் தோன்றியது.

மனம் மரத்துப்போயிருந்தது. அழுத்தமாகப் பதியத் தொடங்கும் காலடிகளைப் பார்த்தார். விரைப்பாக மரக்கட்டை போல் அவள் நிற்பதைப் பார்த்தபோது அவருக்கு வேடிக்கையாக இருந்தது. நிழலிலிருந்து மெதுவாக விலகி அவள் கட்டிலினருகே படுக்கையில் ஒருகையை ஊன்றி வெளியே திரும்பி நின்றபோது அவர் அனுதாபத்தோடு பார்த்தார்.

பலகையின்மீது எறும்புகள் ஊர்கின்றன. அங்கே தலையணை வைத்துப் படுத்தால் உரல் பக்கமிருந்து கொஞ்சம் காற்றுவது வரும். ஆனால் முடியாது. எறும்புக் கூட்டமும் கண்ணாடி விளக்கை ஏற்றி வைக்கும்போது சிந்திய மண்ணெண்ணெய் வாடையும் அங்கு உள்ளன.

திறந்த கதவுக்கு அப்புறம் விளக்குகள் அணைக்கப்படுவதை அவர் பார்த்தார். பாய்கள் விரிக்கும் சத்தம் கேட்டது. எங்கிருந்தோ குறட்டை ஒலி கேட்டது. வடக்கேயுள்ள ஆற்றுப் பக்கமிருந்து வந்த கிழவியினுடையதாக இருக்கவேண்டும். வளையல் குலுங்கலும் கொட்டாவியும் சுமித்திராவினுடையதாக இருக்குமோ?

வியர்வையடங்கிய கழுத்தைத் துடைத்து கட்டிலின் ஓரமாக நிற்கும் தேவுவைப் பார்க்க விரும்பாத பாவனையில் படுக்கையில் படுத்தார்.

கண்களை மூடியவுடனேயே சோர்வின் காரணமாக தூக்கம் வந்துவிடும் என்று கருதினார். இல்லை, தூக்கம் அப்போதும் பிடி கொடுக்காமல் அவரிடமிருந்து விலகியே நின்றது. வெளிச்சம் கண்ணில் படாமல் இருக்கவேண்டிக் கைகளால் கண்களை மூடிய வண்ணம் சத்தமில்லாது படுத்திருந்தார். காலடியோசையைக் கேட்டபோது கண்களைத் திறக்கவில்லை—சிறிதளவு திறந்துள்ள வாசற்கதவின் கீழ் பகுதி ஓசையெழுப்பியது. அறையில் இருள் பரந்தபோது ஒரு நிமிஷம் கண்களைத் திறந்து பார்த்து மீண்டும் கண்களை மூடிப் படுத்திருந்தார்.

அச்சத்தோடு கட்டிலின் ஓரமாக மெதுவாக அவள் ஏறிப் படுத்ததை அறியாதவரைப் போன்ற பாவனையில் சிறிது சுவரோர மாகச் சத்தமில்லாமல் நகர்ந்து படுத்தார்.

—கதவு மீண்டும் திறக்கும் சத்தம் கேட்டு கண்களைத் திறந்த போது அதிசயமாக இருந்தது. பொழுது புலர்ந்திருக்கிறது.

தூங்கியது எப்போது?

உரல்பக்கமாக வெளியே வெளிச்சம் அதிகரித்துக்கொண்டு வருவதைப் பார்த்துக்கொண்டு கொஞ்ச நேரம் படுத்திருந்தார். பிறகு எழுந்து வெளியே சென்றார். வெளித்தளத்தில் பாயில் கார்த்துவும் கிழவியும் அப்போதும் தூங்கிக் கொண்டிருந்தார்கள். சத்தம் உண்டாக்காமல் நடந்து வாசல் வெளிவராந்தாவுக்கு வந்தார். முற்றத்தின் மத்தியில் எச்சில் துண்டுகளை காக்கைப்படை கூட்டமாக கொத்திக்கொண்டிருந்தன.

அப்போது சுமித்திரா குளியல் முடிந்து வராந்தா வந்து சேர்ந் தாள். வாசல் கல்லின்மீது கால்வைத்த போதுதான் அவள் பார்ப்பது தெரிந்தது. நனைந்த துணியை ஒருபுறமாக வைத்து விபூதிக் கொட்டானிலிருந்து ஒரு சிட்டிகை விபூதியெடுத்து நெற்றி யில் வைத்து அவள் உள்ளே செல்லும்போது கேட்டார்:

''என்ன இவ்வளவு சீக்கிரம் எழுந்திட்டே?'' பதிலுக்கு அவள் காத்து நிற்கவில்லை. உள்ளேயிருந்து நனைந்த முண்டுவேட்டி யோடு மீண்டும் வந்து பீடியும் தீப்பெட்டியும் அருகில் வைக்கும் போது நனைந்த முண்டுவேட்டி சற்றே விலகியது. நிலத்தில் பதிந்த ஈரக்காலடிகள் மெதுவாக மறைந்துபோயிற்று.

வராந்தாவில் அமர்ந்து புகைவிட்டுக் கொண்டு காக்கைகளின் கோலாகலத்தை சிரத்தையோடு கவனித்துக்கொண்டிருந்தார்.

ஈரத்துணிகளை மாற்றி வெளியே வந்த சுமித்திரா முற்றத்தில் தேங்காய் நாறினால் நன்கு தேய்த்து வெளுப்பாக்கிய ஓட்டுக் கெண்டியில் தண்ணீரும் காகிதத்தில் உமிக்கரியும் கொண்டு வந்து வைத்தாள்.

''பல்ல தேய்க்கிறதுக்கு முன்னதாகக் கொஞ்சம் வெறும் சாயா தரட்டுமா?''

அவர் வேண்டுமென்றோ, வேண்டாம் என்றோ சொல்லவில்லை. டீ கொண்டு வந்தபோது சுமித்திரா கேட்டாள்:

''இல்லத்து பாக்கு பறிக்கணுமில்லையா? குமாரனும் குண்டுண் ணியும் போவதைப் பார்த்தேன்.''

''உம்.''

டீ குடித்துச் சாவதானமாக மற்றொரு பீடிக்குத் தீவைத்து கனைத்தார்.

''சாலிசேரிக்குப் போவும்போது ஒரு காரியம் ஆகவேண்டி இருக்கு. இன்னிக்கு வேண்டாம் அடுத்த மாசமாகட்டும்.''

''என்ன?''

அவள் அதிக ஆர்வமில்லாமல் கூறினாள்: ''இப்ப வேண்டாம் கம்மல் திருகு ஒடைஞ்சு போயிருக்கு. அதை வித்துட்டு வேறெ ஒண்ணு வாங்கணும்னு நெனச்சு ரொம்ப நாளாகுது. இப்ப வேண்டாம். பிறகு பார்த்துக்கலாம்.''

உள்ளே இருந்து ஒரு கனைப்போடு வாசற்படி கடந்து வந்த அம்மா கேட்டாள்:

''ஏன் இவ்வளவு சீக்கிரமா!''

''இல்லத்துப் பாக்குப் பறிக்க ஆள்வரும்.''

வாசற்படிக்கு அப்புறத்தில் தேவுவும் இடம் பிடித்து விட்டாள் என்பது புரிந்தது.

''என்னோட இரண்டாவது முண்டுவேட்டி ஒன்றை எடுத்துத் தா சுமித்திரா.''

தேவு நினைவூட்டினாள் ''பலகாரம் செய்யறோம்னு சொல்லு சுமித்திரா. டீ குடிச்சிட்டுப் போகலாம்.''

சுமித்திரா அதைக் கேட்காததுபோல் நடித்துக்கொண்டு உள்ளே போய்விட்டாள். கரைபோட்ட ஒரு மேல் துண்டு கொண்டு வந்து நீட்டியபடி கூறினாள்.

''இந்தா மேல் துண்டு. வேஷ்டியை நான் மடிச்சு வைக்கிறேன் சர்ட்டில் அவ்வளவு வேர்வை நான் துவைச்சு வைக்கிறேன்.''

அவர் முற்றத்தை நோக்கி நடந்தார்.

''வெள்ளிக்கிழமை மீனெண்ணும் இருக்காது. இருந்தாலும் ராத்திரி சாப்பாட்டுக்கு நேரத்திலேயே வந்திடணும்.''

சுமித்திரா நினைவூட்டினாள்.

என்ன சொல்வதென்று தெரியாமல் ஒரு நிமிஷம் ஐயப்பாட்டோடு நின்றார்.

''சால சேரிலேருந்து திரும்பி வர நேரமாகும்.''

''அதனாலென்ன? வந்த பின்னாலேதான் நாங்கள் கதவடைப்போம்.''

பயணத்துக்காக அவர் முற்றத்தில் இறங்கினர். அவர் படி இறங்கும்போது சுமித்திரா நினைவூட்டினள்.

''மத்ததை அப்புறம் பார்த்துக்கலாம், அதிகம் இருட்டற துக்கு முன்னடியே திரும்பி வரப் பாருங்க.''

படியிறங்கும்போது அவருக்கு ஒரு விஷயம் புரிந்துவிட்டது. சுமித்திராவின் முன்பில் வடக்கு வீட்டில் தேவு யாருமே இல்லே. சுற்றிலும் படரத் தொடங்கும் இளவெயில்போல மனதில் தெளி வாகப் பதியலாயிற்று. படியிலிருந்து அவர் உரக்க அதிகாரக் குரலில் கூப்பிட்டார்.

''சுமித்திரா?''

மாடி முன் பகுதியில் தேங்காய் குவியலருகே நின்று கொண் டிருந்த சுமித்திரா விரைந்து இறங்கி வந்தாள்.

''வாப்புவின் வீட்லேருந்து சாமானங்கள் ஏதாவது தேவையா னல் வாங்கிங்க. கணக்கு வச்சுக்க சொன்னபோதும். நான் கொடுத்துக்கிறேன்.''

''பின்னே—''

''இல்லே, பின்னே ஒன்றுமில்லே.'' அவளுடைய காதில் தங்கக் கம்மல்கள் அணிந்தால் அழகாக இருக்கும் என்பதை நினைத்துக் கொண்டான்.

தேவுவின் காதுகளில் கம்மல்கள் இருக்கின்றனவா? மயிர் நிறைந்த கைகளும் முக எலும்புகள் துருத்திக்கொண்டிருக்கும் முகமும் மட்டுமே மனக் கண்முன் தோன்றுகிறது.

இல்லே, அவளுக்கு ஒருபோதும் தன் முன்பில் முகத்தோடு முகம் நோக்கி நிற்க முடியாது.

# V

## *[1]*

இன்று வெள்ளிக் கிழமை, கடிதம் கிடைத்த உடனேயே பதில் போட்டிருந்தால் அது இன்றே கிடைத்திருக்க வேண்டும். ஐந்தாவது நாள்தான் பதில் கிடைத்திருக்கிறது.

ஸ்ரீ தேவியம்மாவின் கெமிஸ்டிரி வகுப்பு. கேட்டால் மட்டும் போதாது. சொல்லுவதை நோட்ஸும் எடுக்கவேண்டும். தாயன்பும் பரிவும் காட்டும் அவளை எல்லோருக்கும் பிடிக்கும். ஒரு நாட்டுப்புறப் பெண்ணைப் போல புடவையை வாரிச் சுருட்டிக் கட்டிக் கொண்டு எண்ணெய் வழியும் முகத்தோடு அவள் மேடையேறி நிற்கும்போது வகுப்பில் பூரண அமைதி நிலவும்.

காதல் கதையொன்றின் ஒளி வட்டம் அவளைச் சுற்றிலும் உண்டு. அதையறியாத பையன்களில்லை. அவளோடு கொண்டுள்ள அன்புக்கும் அபிமானத்துக்கும் பின்னால் அக்கதை உணர்த்தும் உண்மை நிலைக்காக அவர்கள் வருந்தவே செய்தார்கள். பெரும் பணக்காரர் ஒருத்தரின் மகளாவாள். அப்பாவிடம் வேலை பார்த்த கார் டிரைவரைக் காதலித்தாள். அவனுக்கு வேறு ஒரு மனைவியும் மூன்று பிள்ளைகளும் உண்டு. அவனைத் திருமணஞ் செய்து கொள்வதற்காக வீட்டைவிட்டு வெளியேறினாள். அவள் சுண்ணாம்புக் காளவாய்க்காரர்கள் குடியிருந்த காலனியில் ஒரு பழைய வீட்டில் வாழ்கிறாள். கணவனும் குழந்தைகளும் இருக்கிறார்கள். கணவனை யாரும் கண்டதில்லை. தொலைவில் எங்கேயோ வாழ்ந்து வரும் அவனுடைய முதல் மனைவிக்கும் மக்களுக்கும் செலவுக்கெனப் பணம் வாங்க மாத ஆரம்பத்தில் ஸ்ரீ தேவியிடம் வருவான்.

நெருங்கி அவளைப் பார்க்கும் போது எல்லாம் அவளது கண்களில் பெருந்துயரமொன்று தேங்கிக்கிடப்பது போன்று சேதுவுக்குத் தோன்றும்.

அவளுடைய சகோதரிகள் பெரிய இடங்களில் உயர்ந்த பதவிகளில் இருக்கிறார்கள்.

முதல் மனைவியும் மூன்று பிள்ளைகளும் உள்ள அந்த ஆண் மீது அவளுக்கு வெறுப்புத்தான் ஏற்பட்டது. காதலுக்காக வேண்டி சாம்ராஜ்ஜியத்தையே இழக்கத் துணிந்த இக்கால ராஜ குமாரியை எண்ணியபோது வேதனை தோன்றியது.

சேதுவுக்கு அவள் அனுபவித்துவந்த தர்மசங்கடத்தை ஓரளவுக்கு நன்கு ஊகிக்க முடிந்தது.

ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் பேரார்வத்தோடு தான் கண் விழிப்பான். தங்கமணியின் கடிதம் வரும் நாள் அன்று தான். பெரிய வட்ட வட்ட எழுத்துக்கள் கண் முன்பாக உயிர்பெற்று உறவாடுவது போன்ற பிரமை, மீண்டும் படித்து விட்டு இரும்புப் பெட்டிக்கடியில் விரிக்கப்பட்டிருக்கும் காகிதத்துண்டுக்குக் கீழே அதை வைக்கும்போது சேமிப்புக் களஞ்சியத்தில் புதிய செல்வம் சேர்ந்திருப்பது போல் தோன்றும்.

எல்லாவற்றையும் ஒருபுறமாக ஒதுக்கி வைத்துக்கொண்டு தொடக்கத்தில் ஒரு சாதாரணக் கடிதம் போலத்தான் எழுதினன்:
அன்புள்ள தங்கமணி,

நீ சுகமாக இருப்பாய் என்று கருதுகிறேன்.

காத்திருந்தும் பதில் வராது என்று உறுதி ஏற்பட்டபோது ஆரம்பத்தில் நிராசையாகப்பட்டது. அது பின்னர் ஆச்சரியமாக மாறத் தொடங்கும்போது அவளது கடிதம் கிடைத்தது. அவன் தனது தந்தைக்கோ அண்ணனுக்கோ மாமாக்கோ எழுதுவது போன்று அமைந்த கடிதம். கடிதத்தை எழுதி வைத்துவிட்டுச் சரியான முகவரியோடு அனுப்ப இயலாமல் கடைசியில் எப்படியோ அனுப்பியிருக்கிருள். அதற்குப் பதில் எழுதியபோது தனது சொந்த முகவரி எழுதப்பட்ட அஞ்சல் கவரை அதில் வைத்து அனுப்பினன். கடிதம் ஏதும் கிடைக்காததால் தங்கம் தன்னை மறந்து விட்டாள் என்று தான் எண்ணியிருந்தான்.

''—சேது அத்தானை என்னுல் என்றுமே மறக்கமுடியாது. இப்படியெல்லாம் சேது அத்தான் எழுதுவது எனக்கு சங்கடம் தருவது ஆகும்.''

இளமை உணர்ச்சியால் எழுதப்பட்டவையோ இவ்வரிகள்? மீண்டும் மீண்டும் அதையே நினைத்துக் கொண்டான்.

''எனது பேரன்பிற்குரிய தங்கமணி''

என்று தொடங்கி அடுத்த கடிதத்தில் எழுதினன். எனக்கு யாருமில்லை. என் மனதிலுள்ள வேதனைகள் எனக்கு மட்டுமே தெரியும்.

''கல்லூரியிலும் உணவு விடுதியிலுமுள்ள மாணவர்களின் ஆர்ப்பாட்டங்களிலிருந்து விலகி நிற்கவே விரும்புகிறேன். உறக்கமில்லா இரவுகளில் எனக்குள்ள தாபமெல்லாம் எனது தங்கத்தைப்பற்றி நினைத்துக் கொண்டிருப்பது தான் . . .''

அஃதொரு காதல் கடிதமாக அமைந்திருந்தது. எழுதி முடித்து அனுப்பியபோது பயம் ஏற்பட்டது. வேறு யாராவது

பிரித்துப் படித்தால் என்ன தோன்றும். கோவிந்த மாமாவிடம் அக்கடிதம் சிக்கினுல், அப்பாவுக்கு கோவிந்த மாமா மேலும் ஒரு கடிதத்தை எழுதி அதோடு சேர்த்து அனுப்பி வைத்து விடுவார்.

அவளுக்கு அது புரியுமோ? வாழ்க்கையில் முதன் முதலாகத் தான் எழுதிய காதல் கடிதத்தின் குரலோசை அவளுக்குப் புரியுமோ?

சனிக்கிழமை ஸ்பெஷல் வகுப்பு முடிந்து திரும்பி வந்தபோது வராந்தாவில் தபால்காரன் பிரான்சிஸ் வருவதைப் பார்த்து, அவனுக்காகக் காத்துக்கொண்டு நின்றிருந்தான். வெளியே தார் உருகும்வண்ணம் வெயில் தனது வெப்ப நாளங்களை நீட்டிக் கொண்டு தகித்துக் கொண்டிருந்தது. தனது கைப்பட எழுதிய முகவரியோடு கூடிய கடிதம் ஒன்றை விரைவாகக் கொடுத்துவிட்டு நடையைக் கட்டினுன் தபால்காரன். வேகமாகக் கடிதத்தைப் பிரித்துப் படித்தான். வார்த்தைகள் அவன் முன்பாக நடம்புரிந்து கொண்டிருந்தன. உச்சிவெயிலில் நிலாக்குளுமை அருவியாகப் பெருக்கெடுத்து ஓடியது.

''நான் கடிதத்தைப் படிக்கும் போது 'யார்' எழுதிய கடிதம் என்று அம்மா கேட்டாள். சேது அத்தானிடமிருந்து என்று நான் சொன்னவுடன் அதைத் தான் படிக்க வேண்டுமென்றும் கண்ணுடிக்குப் பின் புறத்தில் வைக்குமாறும் சொன்னுள். நான் கொடுக்கவில்லை. நல்ல வேளையாக அம்மா அதற்குப் பிறகு அதைப் பற்றிக் கேட்கவேயில்லை.''

ஐந்து நிமிடங்களுக்கு முன்பு ஸ்ரீதேவியம்மா வகுப்பை விட்டிருந்தால், நேரே ஹாஸ்டலுக்குப் போய் தபால் பார்த்து விட்டு முதல் பந்தியில் சென்று சாப்பிட ஏதுவாக இருக்கும், அவள் விடவில்லை. மணியடித்த பிறகுங்கூட மூன்று நான்கு நிமிடங்கள் தொடர்ந்து வகுப்பில் பேசிக்கொண்டே நிற்பாள், அதற்கு யாரும் எதுவும் செய்ய முடியாது. அந்தத் தைரியம் யாருக்கும் இல்லை.

ஹாஸ்டல் உணவுக் கூடத்தில் உணவு பரிமாறப்படும் வரிசையில் இரண்டுபேர்களை நிர்ப்பந்தமாக நெருக்கி உட்காரச் சொல்லி, அதில் இடம் பிடித்து உட்கார்ந்தான். சாப்பாட்டை முடித்துக் கொண்டு கை கழுவியவுடன் நேராக அறையை நோக்கி நடையைக் கட்டினுன். கதவைத் திறந்தபோது கடிதம் எதுவும் காணப்படவில்லை. மேசைக்கடியில் ஒரு கார்டு விழுந்து கிடந்தது. அன்றைய தபாலில் வந்ததுதான். அப்பாவிடமிருந்து வந்தது. ஒன்பதாம்தேதி காலை வண்டிக்குத் திரும்புகிருர். 'ஊர் வந்தபோது மாதவ மாமாவின் திருமணம் நிமித்தமாக எதிர்பாராத செலவுகள் ஏற்பட்டிருக்கிறது. திரும்பிச் சென்ற பிறகே பணம் அனுப்ப இயலும். நீ நலமாக இருப்பாய் என நம்புகிறேன்.'

நான் சுகமாகத்தான் இருக்கேன், பரம சுகம். அப்பா ஊருக்குப் போகும் சமயம் கடிதம் எழுதவில்லே. ஒருவேளே பஸ்ஸில் போயிருக்கலாம், பொள்ளாச்சியிலிருந்து திருச்சூருக்குப் பஸ் உண்டு. அப்பாவின் வீட்டிலிருந்தால் பஸ்ஸுக்குப் போவதுதான் வழக்கம். பொள்ளாச்சியிலிருந்து ஆனேமலேக்குப் பஸ் உண்டு.

மாதவ மாமாவினுடைய திருமணம் விஷயம் பரமேஸ்வர அண்ணனின் கடிதத்திலிருந்துதான் அறிய முடிந்தது. ஸ்டடி டூருக்குப் பெயர் கொடுத்திருக்கிறன். நாற்பது ரூபாய் கட்டவேண்டும். அதற்காக பரமேஸ்வர அண்ணனுக்கு எழுதியபோது இந்த மாதத்தில் எதுவும் இயலாது என்று பதில் வந்தது, 'வீட்டிற்கு கொஞ்சம் பணம் அனுப்பவேண்டியுள்ளது. நம்முடைய வடக்கு வீட்டு தேவுவை மாதவ மாமா திருமணம் செய்யப்போகும் விவரம் உனக்குத் தெரிந்திருக்குமே.'

திருமணத்தைப் பார்க்கப் போகவேண்டும் எனத் தோன்றியது. அடுத்தடுத்து நிற்கும் மாதவ மாமா தேவு உருவங்கள் மனதில் தோன்றியது. திருமணக் காரியங்களேயெல்லாம் பெரும் சிரத்தையோடு செய்யும் சுமித்திராவின் உருவத்தை மனதில் எண்ணிப் பார்த்தான். அவளுடைய முகத்தைத் திருமணத்திற்குச் சென்று பார்ப்பது உசிதமானதாக இருக்குமா? ''சேது வருவியா? எங்களோட இருக்கும்போது பெரிய ஆரவாரம் ஏதும் இருக்காது,''

அப்போது அவளது முகத்தில் கண்ட பரிகாசத்தின் பொருள் தேவுவின் திருமணம் உறுதி செய்யப்பட்ட விவரம் அறிந்தபோது சேதுவுக்குத் தெளிவாகத் தெரிந்தது.

குளக்கரையில் இருட்டில் அவளது முகத்தில் உருண்டோடிய கண்ணீர் மறக்கமுடியாத ஒன்றுக இடையிடையே மனத்திரையில் தோன்றி மறைந்து கொண்டிருந்தது. அவள் தன்முன்பு வேதனே உருவாய் நின்றதே அப்போது தான்.

குற்றம் தன்னுடையதல்ல என்று சமாதானப்படுத்த முயன்முள். தெய்வத்தின் குற்றமும் ஆகும், தங்கமணியைத் தொடக்கத்தில் காண முடியாமல் போய் விட்டது. தங்கமணியைப் பார்த்திருப்பின் சுமித்திரா தனது சிந்தையில் இடம் பிடித்திருக்க முடியாது. பயணவழியில் பாதை மாறிவிட்டது. வெகுதூரம் கடந்த பின்னர்தான் கை காட்டி மரத்தைக் காண நேர்ந்தது. கண்ணீர் வழியும் முகங்களின் நினேவுகளே மிச்சமாகியுள்ளன. சொல்லுங்கள் யாருடைய தவறு?

இரவே தீர்மானம் செய்து, அதிகாலே வண்டிக்குள் ஸ்டேஷனுக்குப் போய் அப்பாவைப் பார்க்க வேண்டும்.

காலையில் வழக்கத்துக்கும் முன்பாகவே எழுந்து தயாராகி விட்டான். ஒன்பதரைக்குத்தான் வண்டி. ஒன்பதரைக்கும் பதினொன்றரைக்கும் ஊருக்குப் போகும் பாசஞ்சர் வண்டிகள் உண்டு.

ஒன்பதாந்தேதி புறப்படுகின்றேன் என்றே அப்பாவின் கடிதத்தில் கண்டிருந்தது. ஒன்பதரை என்றுதான் இருக்கவேண்டும், பார்க்கவேண்டும் என்றோ வந்து காத்து நிற்க வேண்டும் என்றோ எழுதியிருக்கவில்லை.

ரோட்டில் இறங்கியபோது மெஸ்ஸில் டிபனுக்காகக் காத்து நிற்காது கிருஷ்ணய்யருடைய ஹோட்டலிலிருந்து காப்பி குடித்து விட்டுவரும் நண்பர்கள் கூறினார்கள்.

''சீக்கிரமாய் போ! சாமியின் ஊத்தப்பம் இன்னிக்கு அருமையாய் இருக்கு.''

''நான் ஸ்டேஷனுக்குப் போகணும்.''

''உம்.''

''அப்பா வரும், காலை வண்டிக்குப் போக வேண்டியிருக்கு.''

பாலகிருஷ்ணன் கூறினான். ''இதோ பார், நான் உங்கிட்டே சீரியஸா கேட்கிறேன். பத்து ரூபாய் கடன் தரணும். அப்பாவைப் பார்க்கப்போனால் ஏதாவது கிடைக்குமில்லையா.''

சரி என்ற பாவனையில் சிரித்துக் கொண்டே சாலையைக் கடந்து சென்றான்.

நாற்சந்தியில் டவுன் பஸ்ஸுக்காகக் காத்து நின்றான், ஹாஸ்டலுக்கு அப்பாவோ மாமாவோ வேறு பொறுப்புக்குரியவர்கள் யாராவதோ வருகிறார்கள் என்பதைக் கேட்டாலே எல்லோருக்குமே ஒரு மகிழ்ச்சியாக இருக்கும். 'பாக்கெட் மணி' யாகக் கைச் செலவுக்கு ஏதாவது கிடைக்குமே. சிலர் 'ஷாப்பிங்' குக்குக் கொண்டு போவார்கள். நண்பர்கள் பொறுப்புக்குரியவர்களுடன் அனுசரணையோடு நடந்து கொண்டிருக்கும் சிநேகிதனை தொந்தரவுக்கு ஆளாக்காது அவனை விட்டு சிறிது விலகியே இருப்பார்கள். காசு கிடைத்திருக்கிறது என்பதை அறிந்தால் மாலையில் மதராஸ் கபே'க்குக் கொண்டுபோகாமல் யாரும் விடமாட்டார்கள். நல்ல பையன்களாக இவ்வளவு நேரம் ஒதுங்கி இருந்ததற்குப் பிரதி பலன்தான் இது.

ஹாஸ்டலில் பதினொன்றும் எண்ணுள்ள அறையில் இருக்கும் டானியல் ஜோன் வைத்திருக்கும் பாட்டரியில் இயங்கும் சிறிய ரேடியோ செட் அவனது அப்பா வந்தபோது கிடைத்ததாகும்.

ஹாஸ்டலும் கிளப்ரூமும் ரீடிங்ரூமும் நடந்து சென்று பார்த்த பிறகு ஹாஸ்டலில் ரேடியோ, இல்லாதது ஏன் என்று கேட்டார். டானியல் பதில் ஏதும் கூறவில்லை. பெருமையோடு நண்பர்கள் எழுந்து கூறினார்கள், வார்டனிடம் சொல்லியிருக்கோம் என்று. எனக்கு யாரோ வெகுமதியாத்தந்த சிறிய ரேடியோ காரிலிருக்கு, அதை எடுத்துக்கொள் என்று டானியலிடம் அப்போது அவன் அப்பா கூறினார்.

''தாங்க் யூ அப்பா.''

''இட்ஸ் ஆல் ரைட்.''

கிளப் ரூமிலிருந்த நம்பியார் வந்து அற்புதமாக அந்த உரையாடலை விளக்கிக் கூறக் கேட்டார்கள்.

அப்பாவும் மகனும் பயணம் கூறிக்கொள்ளும் கட்டத்தில் ஒரு வித அருசையோடு சேது பார்த்துக்கொண்டு நின்றான்.

கோயம்புத்தூரில் வெள்ளைக்காரர்களின் ஏதோ கம்பெனியில் பெரிய உத்தியோகத்தில் டானியலின் அப்பா இருப்பதாகக் கேள்விப்பட்டிருக்கின்றான். டேனியலோடு அப்படியொன்றும் நெருங்கிய நட்பு இல்லை. ஞாயிற்றுக்கிழமை பெரிய பாண்டியாக் கார் ஹாஸ்டலுக்கு வெளியே வந்து நின்றபோது யாரோ கூறினார்கள். 'டானியலின் அப்பா வந்திருக்கார்.' பைப் மூலம் புகைபிடித்துக்கொண்டு வெளியில் இறங்கிய ஆறடி உயரமும் ஒற்றை நாடி உடம்புமான வெள்ளை நிறமுள்ள ஒருவரைப் பார்த்தான், வெள்ளை நிற ஸ்லாக்கும் வெள்ளைப் பேண்ட்டும் அணிந்திருந்தார். சாவதானமாக வாசற்படியை அடுத்து நடக்கும்போது பாலீஷ் போடப்பட்ட மினுமினுப்பான கருத்த பஞ்சாபி செருப்புகளின்மீது படிந்திருந்த சிவந்த தடித்த கால்கள் மடங்கி நிமிரும் அழகிலேதான் அவன் கவனம் முதலில் நிலைகுத்தி நின்றது. சிறு பையன்களின் காலடிகளைப்போல சுழிவில்லாதது.

வாசற்படிக்கு அப்புறத்தில் நிற்கும் பையன்களோடு மந்தகசித்தபடி தலைதாழ்த்திக் கொண்டு அவர் உள்ளே வந்தபோது விவரம் சொல்ல டானியலின் அறைக்கு யாரோ ஓடினார்கள்.

டானியலின் முதுகில் தட்டியபடி அவனை அணைத்துக்கொண்டு அறையை நோக்கி நடக்கும்போது இங்கிலீஷ் ஆராதகனாய அப்பா பேசினார்.

''யூ ஸ்மெல் சிகரெட்?''

''நோ.''

டோன்ட் பிளஃப்'' சுவற்றிருந்த புத்தக அலமாரியில் அலங்காரமாக அடுக்கி வைத்த சிகரெட் பெட்டிகளைச் சுட்டிக்காட்டினார்.

வாய்விட்டுச் சத்தமாகச் சிரித்துக் கொண்டு சொன்னர். ''பிராபபிளி யூ பை தெம் டு டெக்கரேட் யுவர் ஷெல்ஃப்.''

சிரித்துக் கொண்டு நின்ற டேனியலுக்கு அறிவுரை கூறினர். ''ஸ்ட்ரிக் டு ஒன் பிரான்ட் அண்ட் ஈட் வெல்.''

அன்று முழுவதும் ஹாஸ்டலில் அதுவே பேசுவதற்கான விஷயமாக இருந்தது.

அவர் திரும்பிப் போகும்போது வெளியேற நிற்கும் பாவனையில் முற்றத்தில் நின்ருர். காருக்கு அருகில் டானியலுடன் அவர் சேர்ந்து நடக்கும்போது அப்பாவும் மகனும் நண்பர்களைப் போல சிரித்துப் பேசிக்கொண்டார்கள். டிரைவர் ஆசனத்தில் ஏறியமர்ந்து தடித்த கைகளை வெளியே நீட்டி டானியலிடம் என்ன கேட்டார் என்று தெரியவில்லை. டானியல் உரக்கச் சிரித்தான். என்ஜின் இரையத் தொடங்கியது. உந்தி ஓடத் தொடங்கியபோது அவர் கையை நீட்டினர்.

''ஸோ லாங்.''

அப்பாவும் மகனும் கை குலுக்கிக் கொண்டார்கள். ஒரு மாபெரும் அற்புதத்தைப் பார்த்துக்கொண்டு நிற்கும் அனுபவம் அவனுக்கேற்பட்டது. திரும்பி நடக்கத் தொடங்கும்போது வாசற்படியை அடுத்திருந்த கைப்பிடியைப் பிடித்துக் கொண்டு அறை மதிலில் கையை ஊன்றி அகன்று போய்க்கொண்டிருக்கும் காரைப் பார்த்துக்கொண்டு கிருஷ்ணன் குட்டி நின்று கொண்டிருந்தான்.

கிருஷ்ணன்குட்டி சிரிக்க முயன்ருன். ஆனல் முகக்குறி மாருமலே நின்று கொண்டிருந்தான், ஒரு நிமிடம் அவர்கள் ஒருவரையெருவர் பார்த்தபடி நின்றுகொண்டிருந்தார்கள்.

அப்பாவைப் பார்க்கப் போகிறேன் என்று கூறியது அபத்தமாகி விட்டதோ? மாலையில் இதைப்பற்றிக் கேள்வி எழும்; ''என்ன கிடைத்தது? அதெல்லாம் போகட்டும் மகனே! உண்மையைச் சொல்.''

பஸ் வரவேண்டிய நேரம் கடந்தும் பஸ் வராததால் வெறுப்பேற்பட்டது. காத்து நிற்பவர்களில் யாரோ ஒருவர் திருநெல்லாவிலிருந்து வரவேண்டிய பஸ் பிரேக் டௌனுகி விட்டதாக கூறினர். மணப்பிள்ளிக்காவிலிருந்து வரவேண்டிய பஸ் இன்னும் அரைமணி நேரத்திற்குள் வரும்.

'நேரம் என்ன ஆகிறது.' பக்கத்தில் நடந்து போகின்றவர்களின் கைக்கடிகாரத்தில் நேரம் பார்க்க முயன்ருன். ஏழே முக்காலோ எட்டேமுக்காலோ ஆகியிருந்தது. மணிக்கூண்டிலிருந்து மணியடிப்பது கேட்டபோது அவன் நினைவுக்கு வந்தது.

ஒரு கைக்கடிகாரம் வாங்க வேண்டுமென்று ஒரு சமயம் பரமேஸ்வர அண்ணனுக்கு எழுதியிருந்தான். அப்பாவுக்கும் எழுதியிருந்தான். பதில் கடிதங்களில் அதைப்பற்றி யாருமே குறிப்பிட்டு எழுதவில்லை.

சிங்கப்பூரிலிருந்து வருகின்றவர்கள் கொண்டு வருகின்ற கைக் கடிகாரம் குறைந்த விலைக்குக் கிடைப்பதுண்டு. எண்பத்தைந்து ரூபாய்க்குக் கிடைக்கும்.

தரித்திரம் ஒரு பாவம் அல்ல என்று கிருஷ்ணன்குட்டிக்கூறி யிருந்தான். அவ்வழியாகக் கடந்து போகின்றவர்களின் இடது கையில் நேரம் பார்ப்பதற்கேற்ப தூக்கிக் கட்டியிருப்பது பற்றி எண்ணிக்கொண்டு நிற்கும்போதுதான் எண்பத்தைந்து ரூபாயின் பெருமை புலப்பட்டது. காய்ந்த சப்பாத்தியும் முள்ளங்கியின் முடைக்கு வாசனையுள்ள சாம்பாரும் கொண்ட இரவுச் சாப்பாட்டை சாப்பிட விரும்பாமல் உணவு விடுதியின் கூடத்திலிருந்து வெளியேறிக் கை கழுவினான். நேந்திர வாழைப்பழக்குலைகள் தொங்கும் ராவுத்தரின் கடை முன்பாக நடக்கும்போது, ஒன்றரை யணுவின் விலை மதிப்பை உணர முடிந்தது. பஸ் நிற்குமிடத்தில் கூட்டம் கூடியது. ஓட்டுக் கம்பெனிகளில் வேலை பார்க்கும் பெண் கள் தமிழ் கலந்த சுவையான மலையாளத்தில் உரக்க பேசிக் கொண்டு சாலையோரமாக நடந்து போய்க்கொண்டிருந்தார்கள்.

கார் வரும் சத்தம் தூரத்திலிருந்து கேட்கும் போதெல்லாம் ஆட்கள் பரபரப்போடு இடித்துப் பிடித்துக் கொண்டு வண்டியேறும் பாவனையில் தயாராக நிற்பார்கள். பீடி இலைகளின் புகையிலைக் கட்டுகளின் துர்வாடையைப் பரப்பியபடி லாரிகள் வேகமாகக் கடந்து செல்லும். இறுதியில் பஸ் வந்து சேர்ந்தது. ஃபுட்போர்டில் நான்கு பேரோடு தொத்திக்கொண்டு கீழே விழாமல் உயிரைக் கையில் பிடித்தபடி நின்று கொண்டான்.

பிளாட்பார டிக்கெட் வாங்கிக்கொண்டு மேம்பாலத்தைக் கடந்து போகும்போது வண்டி வந்திருப்பது தெரிந்தது. பிளாட் பாரத்தில் வேகமாக நடந்தபடி அங்கு மிங்குமாக ஓடினான். காண முடியவில்லை. மீட்டர் கேஜ் லைனில் நிற்கும் வண்டி பொள்ளாச்சியி லிருந்து வந்தது என்பதை போர்ட்டர் சொன்னபோது அந்த வண்டியில்தான் வந்திருக்க வேண்டுமென்று உறுதிசெய்து கொண் டான். நுழைவு வாயிலுக்கு அருகில் பழனி போகவேண்டிய காவியுடை யணிந்தவர்களின் கூட்டமும் காவடிக்காரர்களின் எண்ணிக்கையும் அதிக அளவில் இருந்தது. என்ஜினுக்கு அடுத்த பெட்டியில் ஜன்னல் அருகில் அமர்ந்தபடி அப்பா பத்திரிகை படித்துக் கொண்டிருந்தார். அந்தப் பெட்டிக்குள்ளே சிவப்புச் சேலைகள் அணிந்த செட்டிப் பெண்களும் பித்தளைக்குடம் முதலிய பாத்திரங்களுடன் கருப்பு நிற தமிழர்களும் நிறைந்திருந்தனர்.

அப்பாவின் கவனம் முழுவதும் பத்திரிகையிலேயே இருந்தது. ஜன்னல் அருகிலே சென்று நின்ருன், கூப்பிடலாமா? என்ற ஐயப் பாட்டோடு நின்று கொண்டிருந்தான். அப்பாவைக் கூப்பிடுவது என்னமோ போலிருந்தது. நினைவுக்கெட்டிய காலம் முதலே அப்பா வீட்டிலிருந்ததில்லை. பல இடங்களிலும் மாறி மாறி வேலை செய்து வந்தார். அப்பா எப்போதாவது வீட்டிற்கு வரும்போது தூரமாகவே விலகி நிற்கத் தொடங்கினுன்.

''அப்பா, சாப்பிடக் கூப்பிடறுங்க'' அன்று கூப்பிட முடியா நிலை. அப்பாவைச் சாப்பிடக் கூப்பிடுவதற்கு அருகில் சென்று எதிரே நிற்க முயன்றபடி நின்றபோது, அப்பா தலையை உயர்த்தி ஞர். பத்திரிகையை மடித்து மடியில் வைத்தபடி அப்பா கேட்டார்:

''ஆங், உனக்கு இன்னிக்கு கிளாஸ் இல்லே?''

சனிக்கிழமையாக இருந்தபோதிலும் அன்று வகுப்பு இருந்தது. என்ருலும் கூறினுன், ''சனிக்கிழமை இல்லையா வகுப்பு இல்லை,''

''உம்.''

அதிகாலையில் எழுந்து ஷேவ் செய்யாமலே அப்பா வெளியே சென்ருர். நரையேறிய தாடி ரோமங்களைத் தடவிக்கொண்டு அப்பா கண்களை மூடிக்கொண்டு நெற்றியைச் சுளித்தபடி எதையோ எண்ணிக்கொண்டிருப்பவரைப்போல இருந்தார். குறுக்கு மயிர் வெட்டப்பட்ட தலையில் பூச்சிக்கடியினுல் மயிர் கொட்டிய சொட்டைப் பகுதிகள் திட்டுத்திட்டாகத் தெரிகின்றன.

''என்னிக்கு எக்ஸாமினேஷன்?''

''டிசம்பர் அஞ்சில்.''

''உம்.''

அதன் பிறகு பேசாமலே நின்ருன்.

விவரந் தெரிந்த காலத்தில் அப்பா நீலகிரியில் வேலை பார்த்து வந்ததாக நினைவு. அப்பா வருகையை சுமந்துவருங் கடிதங்களுக்காகக் காத்திருப்பான். வராந்தாவில் சாய்வு நாற்காலியில் சிவப்புப் போர்வையைப் போர்த்தியப்படிச் சாய்ந்து அமர்ந்திருக்கும் காட்சியை ஆர்வத்தோடு பார்த்துக்கொண்டு நிற்பான். அப்பா மிக நெருக்கமாகக் கடந்து செல்லும்போது நல்ல மணம் வீசும். அப்பாவின் கண்ணுடி, செருப்பு, ஷேவிங் சோப், எல்லாமே மதிப்பேறிய பொருட்களாகக் கருதப்பட்டன. வண்டியில் இருந்த அப்பாவின் குரல் மீண்டும் அவனை பழைய நினைவுகளிலிருந்து விடுபடச் செய்தது.

''கல்லூரிக் கட்டணம் எப்போ கட்டணும்?''

''நாளைக்கு.''

''உம்.''

''அபராதத்தோடு சேர்த்து 25ஆம் தேதிக்கு முன்பு கட்டினால் போதும்.''

தட்டில் திறந்த டீக் கோப்பைகளைத் தூக்கிக்கொண்டு கூவிய படி டீக்கடைப் பையன் ஜன்னல் அருகில் வந்து நின்று மீண்டும் மீண்டும் கேட்டபோது அப்பா வேண்டாம் என்று சைகை காட்டினார்.

''உனக்குச் சாயா வேண்டுமா?'' சிறிது நேரத்திற்குப் பிறகு நினைத்துக்கொண்டு அப்பா கேட்டார்.

''வேண்டாம். டீக் குடித்துவிட்டுத்தான் ஹாஸ்டலிலிருந்து வந்தேன்.''

''யாரோடவோ பேசுவதுபோல் அப்பா பேசினார். எதிர் பாராதபடி எத்தனையோ செலவுகள் வந்து சேருது. மாதவனோட திருமணத்துக்கு பத்து நூறு என்று வெறுஞ் செலவு வந்து சேர்ந்தது. முன்னைப்போல செலவு செய்யும்படியா எனக்கு இப்போ வருமானமில்லே, அதை யாரும் உணர்ந்ததில்லே.''

இதெல்லாம் தன்னிடம் சொல்லாதது போன்ற பாவனையில் தலை குனிந்தபடி நின்றான்.

''ஒவ்வொருத்தனையும் படிக்கவச்சு உருப்படியாக்க வேண்டியிருக்கு. நான் இப்போது ரிடையர் நிலையிலே இருக்கிறதும் மனசில் ஒரு பக்கத்தில் இருக்கணும். யாரை நம்பியிருக்கேன்? நான் மனைவியையும் மக்களையும் கவனிக்க சொந்த வீட்டுக்குப் பணம் அனுப்பியதையெல்லாம் தவறும செஞ்சிருக்கேன். தொண்ணூறு ரூபா சம்பளமாயிருந்தபோதே இதெல்லாம் செய்தேன்,''—

அப்பாவுக்கு இப்போ யாரோடு மனச் சங்கடம்?

பரமேஸ்வர அண்ணனோடா?

புதிதாக வந்து சேர்ந்த பழனி யாத்திரீகர்கள் இடம் பிடிக்க வேண்டி அங்கு மிங்குமாக ஓட்டமும் நடையுமாக இருந்தார்கள்.

கல்லூரிக் கட்டணம் கட்டிய பிறகு வேறு எதற்கும் பணம் தேவைப்படாது என்று சொல்ல வேண்டும்போல் இருந்தது. இப்போதைய சம்பளக் கணக்கு, அம்மாவுக்கு அனுப்புவது, இவைகளின் கணக்குகளைப்பற்றிய விவரங்களையெல்லாம் கேட்கும் படியாக வரும். அதற்காகப் பதில் ஏதும் பேசவில்லை.

மணியடிக்கும் சத்தம் கேட்டபோது மனம் சமாதானப்பட்டது. வண்டி புறப்பட இனி அதிக நேரம் ஆகாது. என்ஜின் உரத்த ஒலியை எழுப்பியது.

அப்பா தலையை வெளியே நீட்டிக் கூறினார்:

''உம், சரி, நீ போய்வா.''

வியர்வை காயும் வகையில் குளிர் காற்று உடம்பின்மீது பட்டபோது மிகவும் சுகமாக இருந்தது.

வெயில் நல்ல சூடு பிடித்திருந்தது. ஸ்டேஷனுக்கு வெளியே சென்று கடைவீதியின் தொடக்கத்தில் டவுன் பஸ்ஸுக்காகக் காத்துக்கொண்டு நிற்கும்போது தனக்குத்தானே வியப்புத் தோன்றியது. வந்திருக்கவே வேண்டியதில்லை.

ஒரு ரூபாய் கையில் மிச்சமிருந்தது. பஸ்ஸுக்காக இனிக் காத்திருந்தால் அதை மாற்றவேண்டி வரும். இருபத்தைந்தாம் தேதியையொட்டி பணம் கிடைக்கும் வரை சில்லரைச் செலவுகளுக் கென மொத்தமே கையிலிருப்பது ஒரே ரூபாய்தான்.

இரண்டரை மைல் தூரத்தை நடந்து ஹாஸ்டலை அடையும் போது வியர்வையில் குளித்துப் போயிருந்தான். எல்லோரும் வகுப்புக்குப் போயிருக்கிறார்கள், கல்லூரி டவர் கிளாக்கில் அப் போது நேரம் பதினொன்றாகியிருந்தது.

வகுப்புக்குப் போகத் தோன்றவில்லை. சட்டையைக் கழற்றி வைத்துவிட்டுப் பழைய வேட்டியொன்றை எடுத்துக் கட்டிக் கொண்டான். சாய்ந்து உட்கார்ந்து நூலகத்திலிருந்து எடுத்து வந்திருந்த 'தி லீவ்ஸ் ஆஃப் கிராஸ்' என்ற புத்தகத்தை எடுத்துப் படிக்கலானான்.

வராந்தாவினிடையே பூட்ஸின் ஓசையும் பேச்சொலியும் நெருங்கி வந்துகொண்டிருந்தன. முதல் ஃபிரியட் முடிந்து வகுப்பி லிருந்து வருபவர்கள் டானியல் ஜோனும் பாலகிருஷ்ணனும்.

திறந்திருந்த வாசல் நிலையின்மீது பாலகிருஷ்ணன் நின்றான்.

''வகுப்புக்கு மட்டம் போட்டியா?''

''உடம்புக்குச் சரியில்லே, தலைவலி.''

டானியலின் அறைக்குள் சென்ற பாலகிருஷ்ணன் திரும்பி வந்து கம்மிய குரலில் மெதுவாகக் கேட்டான்.

''நான் வேடிக்கைக்காகச் சொல்லவில்லை. பத்து ரூபா கொடு, சேது.''

''காசு இருக்கிறவங்ககிட்டே — கேளு — டானியல் கையிலே இருக்கும்.''

''கேட்டாக் குடுப்பான். ஆனல், நான் கேட்கலே, நீ எனக்குப் பத்து ரூபா தா. மணியார்டர் வந்தவுடன் திருப்பித் தந்திடறேன்.''

''காசில்லே.''

''தகப்பனுரைப் பார்க்கப் போயிருந்தியே நீ? சும்மா வேடிக்கை காட்டவேண்டாம். ஒரு பத்து ரூபா கொடு. அப்பா எவ்வளவு குடுத்தார்?''

பாலகிருஷ்ணனின் முகத்தை ஏறிட்டுப் பார்க்காமலே விட்மனின் கவிதையில் கண்களைத் தாழ்த்தியபடி சேது கூறினன்:

''அப்பா வரவில்லை, புரோக்கிராமை சேஞ்ச் செய்திருப் பார்.''

''நம்மோட துரதிஷ்டம்.''

பாலகிருஷ்ணன் வெளியே போன பிறகு காலை நீட்டி திறந்திருந்த வாசற் கதவைச்சாத்தி, கண்களை மூடிக்கொண்டு படுத்திருந்தான். அப்போது தங்கமணியின் கடிதத்தைப்பற்றிய நினைவு வந்தது.

இன்று வராதிருக்காது. தளர்ந்த மனதில் ஒரு மகிழ்ச்சி சட்டெனப் பொங்கி எழத்தொடங்கியது. இன்று கடிதம் வரும். கல்லூரிச் சாலையில் தபால் வரும் நேரம் கடந்திருக்கிறது. காத்துக் கொண்டிருக்க வேண்டிய சமயத்தில் ஏதாவது ஒரு வேலையில் மற்றெதெல்லாம் மறந்து போய்விடுகிறது.

[2]

தங்கமணியின் வீட்டைப்பற்றி நினைக்கும்போது மனதில் தங்கி நிற்பது அவளது வீட்டின் கண்ணுடித் துண்டுகள் பதித்த ஜன்னல் கள்தான்.

வீட்டினுடையவும் வீதியினுடையவும் சித்திரம் அவ்வளவு தெளிவாக மனதில் இல்லை. புதிய வழிகள் உருக்கொண்டிருக் கின்றன. புதிய திண்ணைகள் வழியில் எழுந்துள்ளன. முன்பு, கடைவீதியின் தொடக்கத்தில் மாறிப்போகும் வழியில் தென்னை மரத்துண்டு போடப்பட்டுள்ள பாலத்தின் சித்திரம் நினைவில் நிழலாடிக்கொண்டிருக்கிறது. அதைக் காணுதபோது தெளிவற்ற சித்திரம் மனதில் தோனும். கடைத்தெரு கடந்து பூ மணலில் தெளிவில்லாது வளைந்து வளைந்து செல்லும் காலடிப் பாதையி

னூடே நாலடி நடந்தபோதே வேகம் குறைந்து தலையில் எதையோ சுமந்து செல்லும் கூலிக்காரன் ஒருவனிடம் கேட்டான்:

''புஷ்போத்துக்கு வழி எது?''

''அதோ அந்த ஓடையின்மேலே போட்டிருக்கும் பலகை மேலே நடந்துபோய் திரும்பினால் வயல் வரும். வயல் கடந்தால் நேரே கிழக்கே போகவேணும்.''

குறிப்பிட்ட வழியின் இறுதிப் பகுதியைக் கடந்து கடைவீதி வழியே செல்லும்போது இருபுறமும் ஏறிட்டுப் பார்க்கத் தைரியம் வரவில்லை. அந்நியனாகிய தன்னைச் சுற்றிலும் சந்தேகிக்கும் கண்கள் பின்தொடர்ந்து வருவது போன்று தோன்றியது. புஷ்போத்தில் தனக்கு என்ன வேலை? அவர்களது பார்வையில் அந்தக் கேள்வி இருக்குமோ?

தென்னந்தோப்பினிடையே நடந்து வயல் பரப்பின் கரையை அடைந்தபோது தூரத்தில் நாற்றங்கால்களைக் கண்டான். அது தான் அடையாளம்.

வீட்டை நெருங்க நெருங்க நெஞ்சு பதை பதைக்கத் தொடங்கியது. இந்த நாளுக்காகத்தான் மாதக்கணக்கில் காத்திருந்தான். ஆனால் தங்கமணி மட்டுமே தன்னை அழைத்திருக்கிறாள். அதன் பேரில் வீடேறிச் செல்லும் சுதந்திரம் தனக்குண்டோ என்று தனக்குத்தானே கேட்டுக்கொண்டான்.

வீட்டிற்குள் செல்லும்போது யாராவது அங்கு இருப்பார்கள்.

''யாரது, தெரியலிலே?''

''நான்—''

என்று தன்னைத்தானே அறிமுகப்படுத்திக்கொள்ள பிரயாசைப் படும் அந்த நிமிஷத்தைப்பற்றி உறுதிப்படுத்திக்கொள்ளலானான். அன்பான உபசரணை வார்த்தைகள்கூறி வெளி முற்றத்திலிருந்து டீ குடித்துவிட்டு பயணம்கூறி இறங்கிப்போக நேரும்போது—

வருகிறேன் என்று தங்கமணிக்கு எழுதும்போதும் கடந்த சில நாட்களாக ஹாஸ்டலிலிருந்து பயணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யும்போதும் இதைப்பற்றிச் சிந்திக்காததைப்பற்றி தன்னைத்தானே கடிந்துகொண்டான்.

மூன்று செட் உடைகளையும், இரண்டு புத்தகங்களையும், இரவலாகப் பெற்ற பாக்ஸ் காமெராவையும் ஒரு பக்கமாக வைத்துக் கொண்டான். பெரிய தோல் பையை கக்கத்தில் இடுக்கிக்கொண்டு வருவது வரட்டும் என்ற அசட்டுத் தைரியத்தோடு படியேறும் போது வியர்வையால் நன்கு குளித்திருந்தான்.

அச்சத்தோடு மனதை ஒருவாறு நிலைப்படுத்தி முகத்தில் புன் சிரிப்பை வரவழைக்க முயன்றபடி வராந்தாவை யடுத்து நின்ற போது யாருமே காணப்படவில்லை. முற்றத்தின் நடுவில் யாரோ ஒரு கிழவன் வேலைக்காரனோ யாரோ எதையோ குத்திக் கிழித்துக் கொண்டிருந்தான். தோல் பையின் சுமை மேலும் கூடுவது போன்று தோன்றியது. வியர்வை நீர் நெஞ்சினிடையே சாரை சாரையாக ஓடிக்கொண்டிருந்தது.

''என்ன, வந்து, அங்கேயே நிக்கிறே?''

ஆசுவாசத்தோடு பார்க்கும்போது தங்கமணியின் அம்மா சிரித்துக்கொண்டே உள்ளே இருந்து வராந்தாவைக் கடந்துவந்து கொண்டிருந்தாள்.

பல ஆண்டுகட்கு முன்பு கண்ட அவளுடைய உருவத்தில் பெரிய மாற்றம் ஏதும் ஏற்பட்டிருக்கவில்லை. காதுக்கு மேலே நரையின் அடையாளங்கள் சற்று கூடுதலாகப் படர்ந்திருந்தது மட்டுமே மாற்றம்.

வராந்தாவை அடைந்து பெஞ்சியில் பையை வைத்துவிட்டு சிரித்துக்கொண்டு நின்றபோது என்ன பேசுவது என்று திணறிக் கொண்டிருந்தான்.

''உட்கார், சேது, வருவேன்னு பொண்ணு சொன்னபோது நான் சும்மா சொல்றாளோண்ணு நெனச்சேன். திருச்சூருக்கு வரவேண்டிய காரியமொன்று இருந்தது. எங்க கல்லூரியிலிருந்து கொஞ்சம்பேர் வந்தோம். மாணவர்கள் கூட்டம்.''

பொய் சொன்னான். அலாரம் வைத்து அதிகாலையில் எழுந்து ஐந்தரை மணி பஸ்ஸைப் பிடித்து பயணம் செய்து வந்ததாகக் கூற மனம் வரவில்லை.

மண் அப்பிய ட்ரௌசரும் காலில் கட்டும் எண்ணை வடியும் முகமுமாக பத்து வயதுள்ள உண்ணி தோட்டத்திலிருந்து வந்தான். சேதுவைப் பார்த்து அவன் மெதுவாகத் தூண் மறைவில் பதுங்கி நின்றுகொண்டான்.

''வா, கூச்சப்படாதே, என்னை தெரியுதா?'' தங்கமணி தனக்கு எழுதும் கடிதங்களைத் தபாலில் சேர்ப்பது உண்ணிதான் என்பது அவனுக்குத் தெரியும்.

சிறிதுகூடக் கூச்சமில்லாமல் அவன் அருகில் வந்தான். பரங்கி மாங்காயின் மணம்தான் அவன் உடல் முழுவதும் வீசியது

''சேது மாமா இல்லையாடா? பெரியம்மாவோடு முன்னாலே நீ பார்க்கலே?''

ஆமாம் என்பதற்கு அடையாளமாகத் தலையை ஆட்டினான். அதன்பிறகு பெஞ்சியின்மீது இருந்த பையின் மூடித் திருகுகளைத்

திருகத் தொடங்கினன். பரிசோதனை செய்யும் பாவனையில் பையின் பல பகுதிகளையும் கையால் அமுக்கி ஆராயலானன். கேமரா அவன் கையில் தட்டுப்பட்டபோது எதையோ கண்டு பிடித்துவிட்டது போன்ற உணர்வு அவனுக்கு ஏற்பட்டது. புறப் படும்போது உண்ணியைப்பற்றிய ஞாபகம் இல்லை. ஏதாவது தின்பண்டம் வாங்கிவந்திருக்கவேண்டும்.

''இப்போ வந்தேன்'' என்று கூறிவிட்டு அம்மா வராந்தாவின் வழியே நடந்து மூன்ருவது கதவைத் தாண்டி உள்ளே போன போது சேது உண்ணியின் தோளில் கையை வைத்துக்கொண்டு கேட்டான்.

''நீ எந்த வகுப்பில் படிக்கிறே?''

''அஞ்சாம் வகுப்பு.''

அப்போது பக்கத்திலிருந்த கதவுக்கு அப்பால் உள் வராந்தா வில் யாரோ வந்து நிற்பதுபோல் தோன்றியது. உண்ணியின் தோளைப் பிடித்துக்கொண்டே எழுந்து நின்ருன். கதவுநிலையைப் பிடித்தபடி நிசப்தமாக நின்ருன். சிரித்துக்கொண்டு நின்ருள் தங்க மணி. அவள் சற்று பெருத்திருப்பதுபோல் தோன்றியது. . .

''இங்கேயா இருந்தே?''

''உம் வயல்வெளியைக் கடக்கும்போதே நான் பார்த்து விட்டேன்.''

அவளுடைய குரல்கூட சற்று கனத்திருப்பதுபோல் அவனுக்குத் தோன்றியது. நேருக்கு நேரே பார்க்கும்போது வெட்கத்தால் அவள் உதடுகள் துடிப்பதையும் கண்கள் பதறுவதை யும் அவன் கண்டான்.

''கடிதம் கிடைத்ததோ?''

''நேற்றுத்தான் கிடைத்தது. மத்தியானம் வருவீங்கன்னு நெனச்சேன். எத்தனைநாள் லீவ்?''

''திங்கக்கிழமை கல்லூரியிலே இருக்கணும்.''

இடைமறித்து உண்ணி கேட்டான்:

''இதென்ன சேது அத்தான்?''

அவன் கேமராவை வெளியே எடுத்தான்.

''கேமரா. உன்னைப் போட்டோ எடுத்துத் தர்றேன்.''

அவன் அதைக் கையில் வாங்கி பரிசோதிக்கும்போது அவனைத் தடுத்தான்.

''பிலிம் போட்டு வச்சிருக்கேன். வீணுப்போயிடும்.''

''அதையொண்ணும் கெடுக்கவேண்டாம் உண்ணி.''

''தங்கமா என்ன? நான் தொட்டவுடனே கெட்டுப்போகு மாக்கும்?''

தேநீரும் வெள்ளேப் பீங்கானில் வறுத்த பலாச் சுளேகளுமாக அம்மா வந்தபோது சேது கேமராவைத் திரும்ப வாங்கிக்கொண் டான்.

அவன் டீ குடிக்கும்போது, தூணில் சாய்ந்தபடி குந்தி யமர்ந்திருந்த தங்கமணியின் அம்மா பேசலானுள். சேதுவின் வீட்டைப்பற்றிக் கேட்டாள், அம்மாவைப் பார்த்த காலத்தை அவள் மறந்திருக்கிருள்.

''முன்பெல்லாம் அண்ணி இங்கே வரும்போதெல்லாம் பார்க்க முடிஞ்சுது. இப்போ அதுவும் இல்லாமல் போச்சு. நானும் பொண்ணும்தானே இப்போ இருக்கோம். அங்கேயாவது வந்து பார்க்கணும்'னு ஆசையா இருக்கு. அதற்கும் சமயம் வாய்க்க வேண்டாமா?''

அம்மாவும் அக்காமாரும் குழந்தைகளும் எல்லாம் ஒன்ருகவே இந்த வீட்டில் இருந்தார்கள். பாகப்பிரிவினே நடந்தபோது வீட்டிற்கு விலேகொடுத்து கோவிந்த மாமா வாங்கினுர். வீட்டைச் சுற்றியுள்ள வயல்களும்கூட வாங்கினுர். அம்மா மூத்த அக்கா கூடவே இருக்கிருள். இடையிடையே இங்கே வந்து தங்குவாள்.

''அம்மாளோட காலம் கழிந்தால்போதும். அதுக்கப்புறம் தான் மற்றது'ன்னு சொன்னதைக் கேட்டாங்களா?''

பாகப்பிரிவினே விஷயத்தை முதலில் ஆரம்பித்தது மூத்த அக்காவின் கணவர்தான். எல்லோரும் சொன்னபோது இப்போது வேண்டாம் என்று தள்ளி வைத்தார்கள். ஆனுல், கோவிந்த மாமா பிடிவாதம் பிடிக்கலானுர். இடை நாழியில் தங்கமணி நிற்கிருள் என்பது தெரிந்தே இருந்தது. அம்மா தன் கணவரின் முன்கோபத்தைப்பற்றியும் பிடிவாத குணங்களேப்பற்றியும் பேசும் போது அக்கறையோடு கேட்பதுபோல பாவனே செய்துகொண் டிருந்தான். அவனது கவனம் முழுவதும் கதவுக்கடுத்துள்ள உருவ அசைவுகளில்தான் இருந்தது. விவசாய நிலங்கள் பங்குக்குக் கொடுக்கப்பட்டுள்ளது. மற்ருெரு பாகமான இரு தென்னந் தோப்புகளும் மத்தியஸ்தர்கள் வசம் விடப்பட்டுள்ளன.

''இந்த சண்டு சண்டாளங்களேயெல்லாம் கவனிக்க பத்து நாள் போதுமா என்றிருந்தது அப்போதைய நிலே. இப்போ? நானும் என் பிள்ளேகளுமா இருந்து என்ன செய்ய முடியும்?

வருஷத்திலே ரெண்டு நாள் வந்து தங்கினு அதுவே பெரிய காரியம். இப்போதும் மாதா மாதம் பணம் அனுப்புவதுண்டு. கருவாவின் வயல் விற்கும் விஷயத்தை எழுதியபோது அட்வான்ஸாகக் கொடுக்கப் பணத்தை அனுப்பிவைத்தார். வரும்போது ரிஜிஸ்தர் செய்துகொள்வதாக எழுதியுள்ளார். ''எவ்வளவுதான் பணமும் காசும் வந்து என்ன பிரயோசனம்? மனுஷப்பற்று வேண்டாமா? வந்தால் ரெண்டு நாளில் தகராறு. ஒண்ணும் உண்டாகல்லே'ன்னு மூணும் நாள் ஏற்பட்டுடும். இதுதான் காரணம்'னு எதுவும் வேண்டியதில்லே. இப்போ சாரதாவோட கணவன்கிட்டே தகராறு.''

தங்கமணியின் அக்காள் சாரதா விசாகப்பட்டணத்தில் இருக்கிறுள். கப்பல் கம்பெனி உத்தியோகஸ்தர் ஒருவர்தான் அவளைத் திருமணம் செய்துகொண்டிருக்கிறுர்.

அப்பாவுக்கும் கோவிந்த மாமாவுக்குமிடையேயான தகராறு தொடர்பான சம்பவத்தை அவள் விவரிக்கலாஞள்.

''முன்பு ஊருக்கு வந்தால் முதலில் அங்கேதான் போவார். இப்ப பார்க்கிலேயா? எப்போ மனத்தாங்கல் வரும், எப்போ வராதுன்'னு தெரியாது?''

சொல்லிக்கொண்டே வந்தபோது அவளது குரல் இடறத் தொடங்கியது.

''அம்மா குளிக்கப் போகலேயா?'' உள்ளேயிருந்து தங்கமணி கேட்டாள்.

அவள் அதைக் கேட்டதாகவே காட்டிக்கொள்ளவில்லே. எண்ணெய்க்காரன் பௌலோயின் மகன் ஊரைவிட்டுப் போய் வேலே தேடி அலேந்து கடைசியில் கோவிந்த மாமாவிடம் போய்ச் சேர்ந்தான். மில்லில் ஏதோ ஒரு வேலேயைக் கொடுத்தார். வீட்டில்தான் தங்கி இருந்தான். ஒரு மாதம் ஆவதற்கு முன்பே அவனே அடித்து விரட்டிவிட்டார். அவன் ஊருக்கு வந்தபோது அவன் உடம்பில் தடியால் அடித்த தழும்புகள் நிறைய வடுக்களாயிருந்தன. அவன் வந்து சொன்ன கதைகள் ஊர் முழுவதும் ஒரே பேச்சாகிவிட்டது.

''இடையிலே நான் கேட்டேன், பள்ளிக்கூடம் மூடும்போது இவங்க ரெண்டு பேரையும் கூட்டிக்கிட்டுப் போனு என்னுன்னு?''

சேது வெளியே தென்னந் தோட்டத்திலும் அதற்கப்பாலுள்ள வயலிலும் வெயில் மங்கி மாலே நேர மஞ்சள் வெளிச்சம் பரவிக் கொண்டிருப்பதைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

''சேது குளிக்கலேயா?'' உண்ணீ! சேது அத்தானுக்கு துண்டும் செம்பும் கொண்டுபோய் வை!''

இரவு ஜன்னலுக்கருகில் இருந்த இருக்கையில் ஒரு பழைய சஞ்சிகையை மறைத்து வைத்துப் பார்த்துக்கொண்டிருக்கையில் மிகுந்த அவமானம் ஏற்பட்டது. அவன் இங்கே ஒரு அந்நியனுக வந்திருக்கவில்லை. சிறப்பு விருந்தாளியாக வந்திருக்கிறுன். அப்பால் இருந்த அறைக்குள் தங்கமணி போவதும் வருவதுமாக இருப்பதைக் கவனித்தான். வெளியே வராந்தாவிலும் மாடிப் படிகளிலும் அவளுடைய காலோசைகள் கேட்டபோது அவன் மீண்டும் மீண்டும் திரும்பிப் பார்க்கும்படியாயிருந்தது.

ஒருசமயம் கதவுக்கருகில் வந்து உண்ணியிடம் எதையோ சொல்வதற்காக அவள் வந்து நின்றபோது அவன் அனுதாபத்தோடு கேட்டான்.

''பயங்கர வேலை போலிருக்கு?''

''பின்னே என்ன செய்யறது?''

''சாப்பிட்டாச்சா?''

''உம். . . உம். . .''

அந்தி நேரத்தில் குளித்து அவள் ஆடை மாற்றி பாவாடையும் ஜாக்கெட்டும் அணிந்திருந்தாள். வெள்ளையில் நீலப் பூக்களுள்ள தாவணி மாலையில் பார்த்தது போலிருந்தது.

கண்ணுடிக் கிளாஸில் பால் கொண்டுவந்து ஜன்னல் கட்டை மீது வைத்து அவள் நின்றபோது சேது தலையைத் தூக்கினுன். சாய்வு நாற்காலியின் கைப்பிடியில் முழங்கால் முட்டியை அழுத்திக் கொண்டு தங்கமணி நின்றபோது சேது உண்ணியைக் கவனித்தான். கீழே தரையில் மண்டியிட்டபடி சத்தமில்லாமல் வாயசைத்துத் தனக்குத்தானே பேசிக்கொண்டிருக்கும் உண்ணியைக் கண்டு பயந்தவனுய் ஜாடைக் காட்டினுன். பாவாடையின் அடித்தலைப்பு காலடியை உராயும்வண்ணம் அவள் நெருக்கமாகச் சென்றபோது மீண்டும் அவன் சாய்வு இருக்கையில் சாய்ந்தான்.

கீழே கதவுகள் சாத்தப்படுவதும் வேலைக்காரிக்கு மிச்ச மீதங்கள் கொடுப்பதும் பாத்திரங்கள் ஓசை எழுப்புவதும் கேட்டது. வேலைக்காரக் கிழவன் வராந்தா நடுவில் பாயை விரித்துத் தட்டிக்கொண்டிருந்தான்.

அம்மா அறைக்குள் வந்தாள். உண்ணியை அதட்டியபடி கதவில் சாய்ந்துகொண்டு தரையில் காலை நீட்டி அமர்ந்திருந்தாள். தங்கமணி வெற்றிலைச் செல்லத்தைக் கொண்டு வைத்துவிட்டு வராந்தாவில் எங்கேயோ போய் ஒதுங்கி நின்றுள்.

''சேதுவுக்குப் படுக்கை போட்டாச்சா? ஏண்டி அந்த படுக்கையைக் கொஞ்சம் விரித்துத் தட்டி விரிச்சுப் போடப்படாதா?''

''விரிச்சுப் போட்டாச்சு.''

சுவரினருகில் மடித்து வைத்திருந்த சிறிய படுக்கையை எடுத்து விரித்து உண்ணி படுத்துக்கொண்டான். அப்படியும் இப்படியுமாக புரண்டு புரண்டு படுத்த அவன் சட்டென்று உறங்கத் தொடங்கிவிட்டான்.

அவனைப் பார்த்தபடி அம்மா பெருமூச்செறிந்தாள்.

''ஆளுன்னு இவன் ஒருத்தன்தான் இருக்கான். சொன்னப் பேச்சுக் கேக்குதா? அப்பாவோட மூர்க்கத்தனமும் முன்கோபமும் முழுக்க முழுக்க அப்படியே இருக்கு. ஒரு வழியா படிக்கணும். அதுதானே பெரிய காரியம்.''

''சின்னப் பிள்ளைதானே! பெரியவனாகும்போது எல்லாம் மாறிப் போயிடும்.

ஒரு பெரிய மனிதனைப் போன்ற பாவனையில் உலகத் தத்துவம் பேசி சமாதானப்படுத்தினான்.

ரொம்ப நேரம் அவள் பேசிக்கொண்டிருந்தாள். வீடு, தென்னந் தோப்பும் பணமும் எல்லாம் தந்தும் சிநேகிதம் மட்டும் தராத கணவனைப் பற்றிய குற்றச்சாட்டுகளாக இருந்தன. அவள் பேச்சு முழுவதும் சென்ற முறை வந்தபோது சாரதாவும் அவள் கணவனும் அவள் குழந்தைகளும் வந்திருந்தார்கள். அவனோடு ஒரு வார்த்தை பேசவில்லை, அவன் என்ன தவறு செய்தான்?

''சரியான நேரம்'னு நெனைக்கிறேன். எதையும் பேசவோ கேட்கவோ யாரும் இல்லாதபோது சேது வந்திருக்கான். யாரிடமாவது இதையெல்லாம் சொல்ல வேண்டாமா?''

விளக்கை அணைத்துவிட்டுப் படுத்தபோது பயங்கர வெப்பமாக இருப்பதுபோல் தோன்றியது. பனியனைக் கழற்றினேன். அடுத்த அறையில் படுக்கை விரிப்பதும் தாழ்ந்த குரலில் தங்கமணி அம்மாவோடு ஏதோ சொல்வதும் கேட்டது.

ஜன்னல் கதவுகளைக் கை நீட்டி முழுக்க திறந்து வைத்தான். வெளியே மங்கிய ஊர் வெளிச்சத்தில் தென்னைமரங்களின் நீண்ட நிழல்கள் தெளிவாகத் தெரிந்தன.

இருட்டில் கண்களைத் திறந்தபடி அவன் படுத்திருந்தான். சுவற்றுக்கு அப்பால் எங்கேயோ தங்கமணி படுத்திருப்பாள். எட்டுப் பத்தடி அகலமே இருவருக்குமிடையில் இருந்தது. உண்ணியைப் போல அவள் படுத்தவுடனேயே உறங்கிப் போயிருப்பாளோ? கடிதங்களில் வாயாடித்தனத்தைக் காட்டியிருந்த தங்கமணி தன்

முன்பாக இருக்கும்போது எவ்வளவு ஒதுங்கி மாறிப்போய் நிற்கிறாள்.

மனது முழுவதையும் ஒருசேர ஒதுக்கி வைத்துக்கொண்டு இருட்டில் முணுமுணுத்தான்; வா, வா.

சுவருக்கு அப்பாலிருந்து கேட்டது விரல்களைச் சொடுக்கும் சப்தமா?

வெறுமனே வாயைச் சப்பிக்கொண்டான், 'இல்லை நான் தூங்கவே இல்லை. தூங்க என்னால் இயலவில்லை' என்பதை அவளுக்குத் தெரிவிக்க வேண்டும்.

இரவு அமைதி எங்கும் நிலவியபோது உள் வராந்தாவில் உள்ள கடிகாரத்தின் டிக்டிக் சத்தம் தெளிவாகக் கேட்பதுபோல் தோன்றியது.

புஷ்போத்து வந்து தங்கிய செய்தியை அம்மா அறிந்தால் அதைக் கொஞ்சமும் விரும்பமாட்டாள். அப்பா எதிராக இருப்பார். கோவிந்த மாமாவுக்கு எதிர்ப்பதற்குக் காரணம் எதுவும் வேண்டாம். எல்லாவற்றையும் நானேதான் நிச்சயிக்க வேண்டும். எனக்கு விருப்பமான காரியமென்றால்கூட மற்றுள்ளவர் முதலில் அதைப்பற்றி ஆலோசித்திருக்கிறார்கள் என்பதை அறிந்தால் அதனை எதிர்க்கும் முதல் ஆள்தான் கோவிந்த மாமா. எதிர்ப்புகள் அவசியமானதென்று தோன்றியது. உலகமே எதிர்த்து நின்றாலும் தங்கமணியை அழைத்துக்கொண்டு இந்த வீட்டை விட்டு ஒருநாள் இறங்கியே தீரவேண்டும்.

எப்போது தூக்கம் வந்ததென்றே தெரியவில்லை. திடீரெனக் கண்விழித்து எழுந்தபோது அறைக்குள் யாரோ நடந்து வந்திருப்பதுபோல் தோன்றியது. கட்டிலுக்கு வெகு அருகில் வளையல் குலுங்கும் ஓசை கேட்டது. ஒருவித நடுக்கத்துடன் விஷயம் புரிந்தது. தங்கமணி!

மகிழ்ச்சியைவிட பயமே அதிகமாக ஏற்பட்டிருந்தது. நெஞ்சத் துடிப்புகள் இரவு நேர அமைதியில் முழங்கிக் கொண்டிருப்பது போல் தோன்றியது. எழுந்து உட்கார்ந்தான். கீழே மங்கிய வெளிச்சத்தில் குப்புறப் படுத்துத் தூங்கும் உண்ணியை ஒரு நிமிஷம் பார்த்தான். அவளது கரங்களைப் பிடித்து அருகில் சேர்த்து உட்கார வைத்தபோது உடல் விறைப்பது போல் இருந்தது. வெளிச்சப் பிரளயத்தில் இப்போது குற்றவாளியைப் போலப் பிடிபட்டுவிடுவோமோ என்ற பீதி மனதில் தெளிவில்லாமல் இருந்துகொண்டே இருந்தது.

தழதழத்த குரலில் கேட்டான்:

''தூங்கலியா?''

இல்லே என்ற அர்த்தத்தில் அவள் ஒலியெழுப்பினுள். வலது கைமுட்டை தலேயணேயில் ஊன்றி அவளே அடக்கிப் பிடித்து சாய்ந் திருந்தபோது வார்த்தைகள் வற்றிப்போயிருப்பது போல் தோன்றியது. அவளது மெலிந்த கைகள் சதைப் பிடிப்புடைய தாக இருந்தது. அப்பா வீட்டில் மாடிப் படிக்கடியில் கைகளுக் குள் ஒதுங்கி நின்ற சிறுமியல்ல இவள்.

அவன் தனக்குத்தானே சொல்லிக்கொண்டான். இது என் னுடைய தேவாலயம். இங்கே பூசனே செய்வோன் மட்டுமே நான். சந்தன சோப்பின் மணம் நிறைந்த அவளுடைய கழுத் திலும் கன்னத்திலும் மிருதுவான கைகளால் தடவினுன்.

''பயமில்லேயா?''

''எதுக்கு?''

''அம்மா எழுந்திருக்கலே?''

''உம். . . உம். . .''

அவள் புன்முறுவல் பூப்பதை அந்த மங்கிய இருட்டிலும் அவனுல் காண முடிந்தது.

அவன் சொல்ல விரும்பினுன்: ''நீயும் நானும் தனித்திருக்கும் நிமிஷங்களேப் பற்றி நான் மனதில் பல இரவுகள் எண்ணிப் பார்த்ததுண்டு. ஆனுல் எனக்கு இதுபோதும். உன் அருகில் இருப்பதே போதும். நீ அதிகாரத்தோடு எனது அறைக்கு ஏறி வரும் அந்த நாட்களுக்காக நான் காத்திருக்கத் தயாரா யிருக்கிறேன்.''

''எப்பப் போகணும்?''

''நாளே.''

மெல்லிய சத்தத்திலும் கவலேயும் ஏக்கமும் கலந்திருந்தது.

''பின்னே ஏன் வந்தீங்க? அவ்வளவு சீக்கிரமா போறவுங்க வந்திருக்கவே வேண்டாம்.''

''அப்படீன்னு பொறுத்துக்கோ. நீ உத்தரவிட்டால் மட்டுமே போவேன், போதுமா?''

''அம்மாவைக் கொண்டு சொல்லச் சொல்லவா?''

அவளது கழுத்தைத் தடவிக்கொண்டு மீண்டும் அவன் நிசப்தமாயிருந்தான். ''கடிதம் வந்ததெல்லாம் அம்மாவுக்குத் தெரியுமில்லியா?''

''நாளை நாம் கடற்கரைக்குப் போகணும்''

''அம்மா சம்மதிப்பாங்களா?''

''உண்ணியையும் கூடக் கூட்டிக்கொண்டு போனால் போதும். நான் பிடிவாதம் பிடிப்பேன்.''

''எவ்வளவு உஷ்ணமா இருக்கு?'' நெஞ்சில் ஊதிக்கொண்டு அவன் கூறினான்.

அவள் தாவணியின் தலைப்பால் அவனது நெற்றியையும் கழுத்தையும் துடைத்தாள்.

''உங்கப்பாவுக்கு என்னைப் பிடிக்காது'' படித்த கவிதைகளிலும் நாவல்களிலும் வரும் காதலர்களை நினைத்துக்கொண்டு சேது கூறினான்.

''என்னிடம் பணமில்லை. வேறு எதுவுமில்லை. உன்னைப் பெண் கேட்டு பெரிய இடத்து ஆட்கள் நிறைய பேர் வருவாங்க.''

''எனக்கு இதுவே போதுமானதாக இருந்தா?''

''பின்னால் கவலைப்படுவே.''

''உம், அப்புறம்.''

கீழே படுக்கையில் உண்ணி திரும்பிப் படுத்திருந்தான். தூக்கத்தில் என்னென்னவோ சொல்லி பிதற்றிக்கொண்டிருந்தான்.

''தங்கம்! போய்த் தூங்கு.''

அவள் பதிலேதும் பேசவில்லை. கழுத்தைச் சுற்றியிருந்த கைகள் மேலும் இறுக்கமாயின.

அவன் பயப்படலானான். இது சுமித்திரா இல்லை. தங்கமணி. கூடாது, இறுக்கம் மேலும் நெருக்கமாகக்கூடாது, கூடாது.

''உம்... தங்கம் போய்த் தூங்கு. அம்மா முழிச்சிடும்.''

அவள் தான் சொல்வது எதையும் புரிந்துகொள்ளவில்லை என்பதை அறிந்தபின்னும்கூட அவளைத் திருப்திப்படுத்தும் போக்கில் பேசலானான்:

''வீ மஸ்ட் வெயிட், வீ மஸ்ட் வெயிட்.''

கட்டிலை விட்டிறங்கி கதவு வரை அவளது கைகளைப் பிடித்துக் கொண்டு நடந்தான். தீரத்துடன் அவளது கைகளோடு பின்னியிருந்த தன் கைகளை விடுவித்து அவளைச் சுதந்திரமாகப் போக விட்டபின் திரும்பி வந்து படுத்தபோது, அவள்மீது அவனுக்கு அன்பும் பாசமும் அதிகரித்தது.

அடுத்த நாள் மாலை மயங்குவதற்கு முன்பு கடற்கரைக்குப் போகவேண்டித் தயாராஞன். நல்ல அழகான சட்டையை அணிந்துகொண்டான். பௌடர் போட்டுக்கொண்டான். நாவிஞல் கறுப்பாக முழுக்க வளராத குறுமீசை மயிர்களை நனைத்துக் கொள்ள முயன்ருன். அதன் பின் திருப்தியடைந்தவனுகக் காமெராவை எடுத்துக்கொண்டு வெளியேறிஞன். உண்ணி முற்றத்தில் வந்து நின்றுக்கொண்டிருந்தான். அம்மாவும் மகளும் தர்க்கம் செய்த பின்னரே ஒருவாறு அனுமதி கிடைத்திருக்கிறதெனத் தோன்றியது. அவள் வராந்தாவுக்கு வந்தபோது முகத்தில் மகிழ்ச்சி இல்லாதிருந்தது. சிரிக்க முயன்றபடி சொன்ஞள்:

''நேரமாவதற்கு முன்ஞடியே திரும்பிடணும்.''

யாரோடு என்றில்லாமல் கூறிஞள்.

வீட்டுப் பையன் புறப்பட்டு ஓடத் தயாராயிருந்தான். உள்ளேயிருந்து தங்கமணி வந்தபோது சேது திடுக்கிட்டான். புடவை உடுத்திய தங்கமணி தலை முடியை இரண்டாகப் பிரித்து இரட்டை ஜடை போட்டிருந்தாள். மின்னும் காகித ரோசாப் பூக்களைச் சூடியிருந்தாள். படியேறி வந்த வயதான மனிதரைக் கண்டு சேது திகைத்து நின்ருன்.

''பெரியப்பா வர்ருர் அம்மா.''

உண்ணி கூறிஞன். பாகம் பிரித்துச் சென்ற பெரியம்மாவின் கணவர் என்று உண்ணி விவரித்தான். முன்பு பெரிய அதிகாரியாக இருந்தவர் என்று கேள்வி.

''யாரு? தெரியலையே?''

சேது வினயமாகச் சிரித்துக்கொண்டு நின்ருன். உண்ணி கூறியதைப் புரிந்துக்கொள்ள முயன்றபோது அம்மா எடுத்துச் சொன்ஞள்.

தங்கமணியின் கண்கள் பரபரத்தது. நாம் போகலாம்.

உண்ணியின் பின்ஞல் அவள் நடக்கத் தொடங்கும்போது ஜாடையாகப் 'பார்க்கலாம்' என்று கூறி அவனும் இறங்கிஞன்.

ஊர்ப் பாதையில் இறங்கிச் சென்றபோதே மனச் சமாதானம் ஏற்பட்டது.

"பெரியப்பா...இனி எல்லா இடத்திலும் போய் சொல்லுவார்.''

உண்ணி கேட்காதபடி தங்கமணி சொன்ஞள்.

''சொல்லட்டும்.''

தென்னந் தோட்டங்களும் வயல்களும், மீண்டும் தென்னந் தோப்புகளைக் கடந்து கடற்கரையைச் சற்று தூரத்தில் கண்டபோது, வெயிலின் வெப்பம் சற்று குறைந்தது. வெயில் பட்டு வியர்த்துப்போயிருந்த தங்கமணியின் முகம் வாடிய அந்தி மந்தாரைப் பூவின் நிறத்தைப்போல் தோற்றமளித்தது. வழியில் போய்க்கொண்டிருந்த தோணிக்காரர்களாகிய வாலிபர்களின் கண்கள் தங்கமணிமீது பதிந்து சென்றதைக் கண்டபோது சினமூண்டது.

பரந்த கடற்கரை, அலைகள் பாம்புக் குட்டிகளைப்போல காலில் சுற்றிப் பிறகு பிடி தளர்த்தி ஓடி மறைகின்றன.

''வா.''

தண்ணீரினின்றும் சற்று விலகி நிற்கும் தங்கமணியிடம் அவன் கூறினன். ''நான் கையைப் பிடிச்சுக்கிறேன்.''

கடற்கரையின் தொடக்கத்தில் உள்ள குடிசைகளின் முன்புள்ள கருத்த மனிதர்கள் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதை அவன் கவனிக்காமலில்லை. அதைக் காணுதவன்போல் நடித்து அவன் அவள் கையைப் பிடித்துக்கொண்டு அலைகள் தாவி வரும் வரை காத்து நின்ருன்.

காலில் அடியிலிருந்து மணலை அரித்துக்கொண்டு ஒரு பெரிய அலை பின்வாங்கியபோது தங்கமணி பயம் கலந்த மகிழ்ச்சியில் கூச்சலிட்டாள்.

''ஐயோ!''

சூடு குறையாத பொடி மணலில் அடுத்தடுத்துச் சென்ருள். நனைந்த புடவை நுனிப் பகுதிகளின்மீது அப்பிக்கொண்ட பொடி மணல்களைத் தட்டியபடி தங்கமணி கூறினுள்.

''நான் போறது அம்மாவுக்கு விருப்பமில்லை. பிடிவாதம் பிடிச்சதனுலே ஒருவழியாக 'எஸ்'னு சொன்னுங்க.''

''நான் ஒரு போட்டோ எடுக்கட்டுமா.''

''வேண்டாம். நான் சம்மதிக்கமாட்டேன்.''

''ஓ' அப்படிச் சொன்ன?''

''நான் போட்டோவிலே நல்லா இருக்கமாட்டேன்.''

''இவ்வளவு நல்லா இருந்தாப்போதும். நான் பார்க்க வேண்டாமா?''

முதலில் உண்ணியைப் படம் பிடித்தான். பிறகு தங்க மணியின் முழு உருவத்தை எடுத்தான். பழைய பாக்ஸ்

காமெராவை எப்படி இயக்குவது என்பதைப் பற்றி, இரண்டு நாட்களுக்கு முன்புதான் பாலகிருஷ்ணனுக்குச் சீடனுக இருந்து கற்றுக்கொண்டான். தவறு ஏற்படாமல் இருக்கவேண்டுமே என்று வேண்டிக்கொண்டான்.

''நல்லா இல்லே'ன்னுக் கிழிச்சுப் போட்டுடணும்.''

''ஸ்ரீராமன் கள்வன்'' என்று மணலில் எழுதியதை அலைகள் அழித்துச் செல்வதைப் பார்ப்பதற்காகக் காத்து நிற்கும் உண்ணி கூறினுன்:

''சேது அத்தான்! என் படத்தை பெரிசாக்கி அனுப்பித் தரணும்.''

தொடக்கத்தில் கரும் நீல நிறமாக மாறியிருந்த கடல் நீர்ப் பரப்பு படிப்படியாக செம்பு நிறமாக மாறியது. வெண்மைப்பரப் பாகத் தோற்றமளித்த ஆகாயத்தின் மேற்பரப்பில் சிவப்பும் கரும் மஞ்சளுமான மேகக் கீற்றுகள் தெளிவாகிக்கொண்டு வந்தன.

''போகலாமா, சேது அத்தான்? உண்ணி அவசரப்படுத்தினுன்.''

அவனுடைய கண்களின் நேர்த்தியான சிரிப்பையும் மேலுதட்டில் தங்கி நிற்கும் வியர்வைத் துளியையும் பார்த்துக்கொண்டே இருக்கவேண்டும்போல் தோன்றியது. இறுதியில் எழுந்தான்.

அந்திப் பொழுதின் மங்கிய வெளிச்சத்தில் நடந்து வீட்டை அடையும்போது மனதில் விவரம் புரியாத ஒரு வேதனை அரிக்கத் தொடங்கியது. அவளுடைய பாதுகாப்பாளனுக அமைந்திருந்த மணித் துளிகள் முடிவடையப்போகின்றன.

காலடியோசைகளுக்காகக் காத்திருக்கும் மற்ருெரு இரவு. சந்தன சோப்பின் மணமுள்ள உடம்பை கைக்குள் அடக்கிப் பிடித்துக்கொண்டு தாழ்ந்த குரலில் எதிர் காலத்தைப் பற்றிப் பேசிக்கொண்டு படுத்திருக்கும்போது அவன் மனதிற்குள் சொல்லிக் கொண்டான். நான் தேவனுக இருக்கிறேன்.

மூன்ருவது நாள் காலையில் பயணம் சொல்லிக்கொள்ளும் போது கதவுக்கு அப்பால் அவளது கலங்கிய கண்களைக் கண்டான். அப்போது வேதனை ஒரு கறுத்த மேகம்போன்று மனதிற்குள் கடந்து வந்தது.

''அம்மாகிட்டே குறிப்பா சொல்லணும். சமயம் கிடைக்கும் போதெல்லாம் வரணும், சேது.''

சிரிக்க முயன்றபோதிலும் கண்ணில் ஏதோ உறுத்தல்கள் இருப்பதுபோல் தோன்றியது.

வயல் கடந்து மறு கரையை அடைந்து திரும்பிப் பார்க்கும் போது நாற்றங்கால்களுக்கிடையில் குளக்கரை வீட்டின் முன் புறத்திலிருந்து நீலப் பாவாடையின் நிறம் போய்க்கொண்டிருப் பதைக் கண்டான்.

[3]

திரும்பும்போது வீட்டிற்குப் போக வேண்டுமென்று நினைக்க வில்லை. நேரிடையாகக் கல்லூரிக்குப் போக வேண்டுமென்பது தான் உத்தேசம். கையில் இரண்டரை ரூபாய் இருக்கிறது. இரண்டரை ரூபாய் கொடுத்தால் நேர் பஸ்ஸில் நகரத்தை அடைய லாம். பதினொரு மணிக்கு வரவேண்டிய பஸ் பன்னிரண்டு மணி யாகியும் வரவில்லை. வடக்கன் பாட்டுகளும் ஹரி நாம கீர்த்தனையும் மிதியடியோசைகளும் கைத்தட்டில் பொருள் விற்பவன் தட்டைக் கீழே இறக்கி வைத்துவிட்டு சிரமப் பரிகாரம் செய்து கொள்வதும் சேதுவுக்கு அருகிலேயேதான். அவனைக் கேட்டபோது தான் பதினொன்றுக்கு வரவேண்டிய பஸ் பழுதாகி விட்டது என்ற தகவல் கிடைத்தது. இனி அடுத்த பஸ் மூன்று மணிக்குத்தான். என்ன செய்வதென்று தெரியாது நிற்கும்போது ஊருக்குப்போகும் பஸ் வந்தது. நின்றுகொண்டும், நடந்தும் கால் வலியெடுத்துப்போயிருந்ததால் உட்கார சிறிது இடம் உடனடி யாகத் தேவைப்பட்டது. அந்த பஸ்ஸில் ஏறி உட்கார்ந்தான்.

வீட்டையடைந்தபோது அம்மா கேட்டாள்:

''நீ எங்கேயிருந்துடா இந்த நேரத்திலே வர்றே?''

அம்மாவின் கேள்வியின் தொனியைக் கேட்டபோது பொய் சொல்லத் தோன்றவில்லை.

''பரமேஸ்வரன் பாலக்காடு வந்து உன்னை விசாரிச்சப்போ அங்கே நீ இல்லை'ன்னு சொன்னுங்களாமே?''

''எப்போ அண்ணன் பாலக்காட்டுக்கு வந்தது?''

''முந்தா நாள்.''

பதில் சொல்ல ஆறு நிமிஷம் ஆலோசிக்க வேண்டியிருந்தது.

''எனக்கு திருச்சூரில் ஒரு மீட்டிங் இருந்தது. அங்கிருந்து அப்படியே ஒரு பையன்கூட அவன் வீட்டுக்குப் போயிருந்தேன்.''

அந்தப் பையனின் பெயர், வீட்டுப் பெயர், அவன் அப்பாவின் வேலை இதையெல்லாம் சேர்த்து சொல்ல வேண்டுமோ? வீட்டைப் பற்றி விளக்க வேண்டுமோ? வேண்டாம், அம்மாவுக்கு அவை எதிலும் அக்கறை இல்லை.

மிகவும் உண்மையான ஒரு விஷயத்தை சொல்வதுபோல நம்பும்படியாகச் சொன்னான்.

''நம்முடைய புஷ்போத்தை அடுத்துத்தான் அப்பையனின் வீடு இருக்கு, திரும்பும்போது நான் அங்கேயும் போயிருந்தேன்.''

அம்மாவின் முகத்தைப் பார்க்காமலேயே சொன்னான்.

அம்மாவின் முகத்தில் எப்போதும் காணக்கூடிய வெறுப் புணர்ச்சி மாறும் என்றும், புஷ்போத்து விஷயங்களைக் கேட்பாள் என்றும் கருதினான். அது தவறாகப் போய்விட்டது. வெற்றிலைப் பெட்டியைத் திறந்து வைத்துக் கொண்டு அம்மா எந்த அக்கறையு மில்லாமல் அதைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

மதியச் சாப்பாடு சாப்பிடவில்லை, பசி தீயலை போல வயிற்றுக் குள் எழுந்து திடீரென பரவலாயிற்று.

வரவேற்பறையின் மேலிருந்த மாடிக்குச் சென்று சட்டையை யும் பனியனையும் கழற்றிவிட்டு நாற்காலியில் சாய்ந்து படுத்த போது வெறுமனே கோபம் வந்தது.

'அம்மா எதுக்காகத் தேடி இருக்காங்க?

பரமேஸ்வர அண்ணன் நகரத்துக்கு வந்த சமயம் பார்த்து இப்படி நடந்திருக்கிறது. ஹாஸ்டலில் வந்து முதன் முதலாகத் தம்பியின் சேம விவரங்களை விசாரிக்கத் தோன்றிய முகூர்த்தம் மிக நன்றாக அமைந்திருக்கிறது!

பையிலிருந்து பாக்ஸ் காமெராவை வெளியில் எடுத்துத் திருப்பிப் பிடித்துக்கொண்டு நிற்கும்போது பத்மு ஒரு கிளாஸ் காப்பி கொண்டு வந்து நாற்காலியின் கைப்பிடி மீது வைத்துவிட்டு இறங்கிப் போனாள். கிளாஸைக் கையில் எடுத்தபோது விரல்கள் ஒட்டின. சரியாகக் கழுவவில்லை. சேற்று நீர் நிறத்தில் கறுத்த காப்பிப் பொடிகள் நீரில் மிதந்து கொண்டிருந்தன. ஒரு மடக்குக் குடித்தபோது கருப்பட்டியின் முடக்கு வாசனையோடு கூடிய இனிப்புச்சுவை என்னவோ போலிருந்தது.

கீழேயிருந்து சின்னம்மா அம்மாவிடம் கேட்டாள்:

''மாடியிலே யாரு?''

''சேது.''

''உம்? இப்போ விடுமுறையா?''

அதற்கு அம்மா பதில் சொல்லவில்லை.

வெளியே போய் அலமாரியின் உடைந்த கதவைத் திறந்து கிளாஸை அலமாரியில் கவிழ்த்து வைத்தான்.

வெளியேற மனமில்லை. சும்மா படுத்திருக்கலாம் என எண்ணினான். கடந்த இரு நாட்களாக உள்ளத்தில் படிந்திருந்த மெல்லிய ஓவியங்கள் மறைந்து போகாது, அவற்றை மீண்டும் நினைவுத்திரையில் நிழலாடவிட்டு ரசித்தபடி நாற்காலியில் கண்களை மூடிக்கொண்டு படுத்திருந்தபோது மிக இனிமையாக இருந்தது.

அந்தி நேரம்தான் கீழே இறங்கினான். முற்றத்தில் வெறுமனே நடந்தான். விளக்குக் கொளுத்திய பிறகு கல்லின்மேல் வைத்த திரி நனையாததால் அதனை உதறி மீண்டும் எண்ணெயில் நனைத்துக் கொண்டிருப்பதைப் பார்த்துக்கொண்டு நின்றான். அப்போது தான் மாதவ மாமா படியேறி வந்தார். ஒரு தேக்கு இலைப் பொட்டலத்தை கீழே வராந்தாவில் வைத்துவிட்டு பத்மூவைக் கூப்பிட்டார்.

''அடியே! இதை இங்கே கொண்டுபோ, அங்கேயும் கொண்டு போய்க் குடு.''

மீன். உள்ளே யாரும் மீனை எடுத்துக் கொண்டு போகவில்லை. உள் வராந்தாவுக்கு நேராகக் காலைத் தூக்கி வைத்துக் கொண்டு பீடி குடித்தபடி மாதவ மாமா கேட்டார்:

''நீ எப்ப வந்தே?''

''காலையில்.''

மாதவ மாமா பீடியை அணைத்து எறிந்து விட்டுப் போவதற்கு எழுந்தபோது அம்மா வெளியே வந்தாள்.

''நீ போறியா.''

மாதவ மாமா நின்றார்.

''சாப்பாடு வைக்கட்டுமா?''

''வேண்டாம்.''

''இல்லத்திலிருந்து ரெண்டு மூணு தடவை கூப்பிட்டாங்க. நீ எங்கே போயிருந்தே?''

மாதவ மாமா பதில் சொல்லவில்லை.

''வாயும் வயிறும் வலிக்க அந்த சின்ன குஞ்சாத்தால் தான் வேலியோரம் — வந்து கூப்பிட்டாள்?''

''அதுக்கு நான் என்ன செய்யறது? கோவிந்தனுடைய பத்தாயத்திலே கிடக்கிற நெல்லு நான் கேட்டா கெடச்சிடுமா? எனக்கு என்ன சம்பளம் கொடுத்தா காரியஸ்தன் வேலைக்கு வச்சிருக்காங்க? ஒண்ணொண்ணுக்கும் ஒவ்வொருத்தன் இருக்கான்'ல வேலை பார்க்க?''

''உண்ணி நம்பூதிரி இருக்கிறதும் இல்லாததும் எல்லாம் ஒண்ணுதான். இது எல்லார்க்கும் தெரியாதா?''

மாதவ மாமா பதில் பேசவில்லை.

''பாக்கு வித்ததுக்கு ரெண்டுதடவை பணம் வாங்கிக் கொடுத்தாச்சு. இனியும் போய்ப் பணம் கேக்க என்னுலே முடியாது.''

''ஏண்டா ஒண்ணுன்னு பத்தும் தெரிஞ்சிருக்கிற பெண்ணு? பட்டினி கெடந்தா அதுவே ஒரு சாபமாயிடும்.''

''அப்படீன்னு, உங்களுக்கு அவ்வளவு சங்கடமா தோணினு''—

அம்மா அமைதியாகத் தம்பியைப் பார்த்தாள். அதன்பின் அவள் திரும்பி உள்ளே சென்றபோது மாதவ மாமா படி இறங்கினுர்.

உள்ளே இருந்து அம்மா யாரோடு என்றில்லாமல் பேசுவது கேட்டது; ''நீசப்பயல்.''

அம்மாவும் சின்னம்மாவும் உள்ளே பேசுவதைக் கேட்டபோது தான் மீண்டும் வடக்கு வேலி கட்டப்பட்டிருக்கிறது என்பது புரிந்தது.

சுமித்திராவைப் பார்க்க வேண்டும் போலிருந்தது. திருமணமான தேவு எப்படி இருக்கிறுள்? தேவுவை இனி முறைப்படி அத்தை என்றுதான் அழைக்க வேண்டும்.

ஓலைக் கொட்டானும் ஒரு கட்டு முருங்கை இலையுமாகப் படியேறி வந்த வேலைக்காரக் கிழவியோடு இன்னும் தணிந்த குரலில் பேசத் தொடங்கினுள். வடக்கு வீட்டைப்பற்றிய விஷயம் தான். தேவுவைக் கூட்டிக்கொண்டு வந்து நான்கு நாட்கள் சென்றபின் அவர்களுக்குள் தகராறு ஏற்பட்டிருக்கிறது என்பதை ஒருவாறு ஊகிக்க முடிந்தது.

''பாட்டி நீயே சொல்லு; அக்காவும் நானும் அவங்களை ஏன் அழைக்கணும்? அதனுலே என்ன வரப் போவுது? பூஜிக்கவா? மனுஷர்'ஞ முன்னுலே நடந்ததை மறந்துடக் கூடாது.''

பத்மு ''தேவக்கா'' என்று கூப்பிட்டது மற்றொரு தவறு.

''ஒரு அத்தையம்மா வந்திருக்காள்.''

ஆற்றில் வெள்ளம் பெருகிய சமயம். ஒரே கலங்கல். இல்லத்தின் குளத்திலிருந்து வேட்டியை அடித்துத் துவைக்கும் சத்தமும் கேட்கவில்லை. ஒருவேளை நனைத்து எங்கேயோ சுருட்டி வைத்திருந்ததால் ரொம்பவும் நாற்றமெடுத்திருந்தது.

இல்லத்துக் குளத்தின் மேற்கரையை அடைந்தபோது ஆள் அரவம் குறையவில்லை என்பது தெரிந்தது.

கமுகுத் தோட்டத்தில், கீழேயுள்ள கள்ளிக்கு வழியிறங்கும் இடத்திலிருந்த கல்லின்மேல் உட்கார்ந்தான்.

கள்ளிக்கு அப்பால் இரண்டு கஜம் அகலமுள்ள வரப்பின்மேல் கடைச் சாமான்கள் வாங்கிச் செல்வோர் பேசுவது தெளிவில்லாமல் கேட்டது,

''யாரது?''

''நான்தான்.''

எழுந்து நின்றான்.

''ஆ! சேதுவண்ணுவா? எப்ப வந்தே?''

உண்ணி நம்பூதிரிதான்,

''காலேயிலே, குளம் காலியாகட்டும்'னு காத்திருக்கேன்.''

சேது இருந்த கல்லினருகில் சென்று உண்ணி நம்பூதிரி உட்கார்ந்தான்.

''அப்போ, சேதுவோட படிப்பு முடிஞ்சு போச்சு?''

''இல்லே இந்த வருஷம் கூடப் படிக்கணும். இந்த தடவை பி.ஏ. பரீட்சை எழுதறேன்'' உண்ணி நம்பூதிரி அதற்கு ஒன்றும் சொல்லவில்லே.

குளத்திலிருந்து யாரோ ஜபம் செய்துகொண்டு வெளியேறிப் போவதைப் பார்த்தான்.

''குளம் காலியாயிடிச்சு.''

சேது நடந்தபோது உண்ணி நம்பூதிரியும் கூடவே வந்தான்.

தண்ணீரில் இறங்க என்னவோபோல் இருந்தது. நாற்ற மடிக்கும் துண்டை நனேத்து கருங்கல்லில் அடித்து துவைக்கத் தொடங்கினன். உண்ணி நம்பூதிரி குளத்தின் முகப்பில் உட்கார்ந் திருந்தான்.

''அம்மா சாகும்போது சேது இங்கே இல்லே.''

''இல்லியா?''

''பெரிய குஞ்சாத்தாலு இறந்துடுச்சு.''

எனக்குத் தெரியாதே!

''துலாம் மாசத்தில் நான் இங்கே இல்லே; ஆமக்காவிலே இருந்தேன். நான் இருந்த இடத்துக்கு ஆளு வந்தது.''

அப்போது ஒரு காரியம் சட்டென்று நினேவுக்கு வந்தது. உண்ணி நம்பூதிரி முன்புபோல உரக்கச் சிரிக்கவில்லே. முள்ளம்

பன்றியின் மயிர்போலச் சிலிர்த்துக்கொண்டிருக்கும் முடியைத் தடவிக்கொண்டிருக்கும் நம்பூதிரியின் முகத்தைத் தெளிவாகக் காணமுடியாது. மொத்தத்தில் உண்ணி நம்பூதிரி மாறியிருப்பதாகத் தெரிந்தது.

''சேது, இனி டாக்டருக்குப் படிக்கணுமில்லியா?''

''எப்படி உண்ணி நம்பூதிரிக்குத் திடீரென்று இப்படித் தோன்றியது?''

"ரொம்பப் பணச் செலவாகும் உண்ணி நம்பூதிரி. நம்மலாலே முடியாது?''

''இல்லே, டாக்டர்களுக்குச் சொன்ன காசு. வீட்லேருக்கிறவங்களோட பிரசவத்துக்கு—''

உண்ணி நம்பூதிரியின் வீட்டுப் பெண்ணுக்கு நான்கு நாட்கள் பிரசவ வேதனை நீடித்தது. மூன்று முறை ஆறு மைலுக்கப்பால் உள்ள டாக்டரை அழைத்து வந்தார்கள்.

டாக்டர் ஒரு வாரியார் வைத்தியம் செய்ய வந்தவர், கடைசியில், ''குழந்தை வேண்டுமா, தாய் வேண்டுமா?'' என்று கேட்டார். குழந்தையை எடுத்தப்போ அதுக்கு உயிர் இல்லே. அதன் பிறகும் வாரியருடைய வைத்தியம் தொடர்ந்தது.

தீப்பெட்டியை எடுத்து பீடி பற்ற வைத்ததைப் பார்த்தான். உண்ணி நம்பூதிரி முதியவனாகிவிட்டான்.

மூழ்கிக் குளிர்த்தான். வெயில் சூடு இல்லாத தண்ணீர் மிகவும் குளிர்ச்சியாக இருப்பதுபோல் தோன்றியது.

தலை துவட்டும்போது உண்ணி நம்பூதிரி கேட்டது காதில் விழவில்லை.

''என்ன?''

''ஒண்ணுமில்லே. பி.ஏ. யானல் என்ன உத்தியோகம் கிடைக்கும்?''

''ஏதாவது பார்க்கணும்.''

''இல்லே, எவ்வளவுதான் சம்பளம் கெடைக்கும்'' சேது உண்ணி நம்பூதிரியின் விவரமறியாத்தனத்தை நினைத்து மெதுவாகச் சிரித்துக்கொண்டான்.

''அதெல்லாம் அதிர்ஷ்டத்தைப் பொறுத்து இருக்கும்'' உண்ணி நம்பூதிரி வெறுமனே சூள்கொட்டினன். என்றாலும் முன்பு போல ஒரு போலிச் சிரிப்பு சிரித்துக் கூறினன்:

''நீங்களெல்லாம் அதிர்ஷ்டசாலிகள்.''

குளித்துப் படியேறி மேற்கரைக்கு வந்தபோது உண்ணி நம்பூதிரி கூறினன்:

''டார்ச்சில் பேட்டரியில்லே. கெட்டுப்போய்க் கெடக்கு.''

கமுகுத் தோட்டத்தில் இருட்டு கனத்திருந்தது. இல்லத்தின் வடக்குப் புற வழியாகத்தான் திரும்பிக்கொண்டிருந்தான். வடக்கு முற்றத்திலிருந்து உண்ணிநம்பூதிரியோடு பயணம் சொல்லிக்கொள்ளும்போது ஒருவிதத்தில் மரியாதை உணர்வு உண்டாகியது. அதனுல் ஆதி காலத்தோடு கூடிய விதத்தில் கூறினன்:

''அடியேன், போறேன் நாளைக் காலேயில் புறப்படறேன்.''

''பின்னே—உண்ணிநம்பூதிரி தலேயில் கொட்டிக்கொண்டு எதையோ நினைத்துக்கொண்டவன்போல நின்முன்.''

''நிலத்தையெல்லாம் குத்தகைக்காரங்க எடுத்துக்கலாம்'னு பத்திரிகைகள்'லே வந்திருக்கிறதா சொல்ருங்க சேது பார்த்தியா?''

சேது பதுங்கினன். எனினும் சொன்னன்:

''குத்தகைக்காரங்களுக்குச் சொந்தமாக்கணும்'னு இல்லே. குத்தகை குறையும். நிறைய நிலம் இருக்கிறவங்கதான் பயப் படணும்.''

''குன்னம் பிள்ளையிடம் கேட்டேன். கோட்டுக்குப் போனு லும், ஒண்ணும் நடக்காதுன்னர். கோவிந்தனின் பாகத்தைக் கவர்ன்மெண்ட் எடுத்தால் என்ன செய்யறது? சுதந்திரம் சுதந் திரம்'னு கேட்டப்போ இப்படியெல்லாம் நடக்கும்'னு தெரியலே.''

பதில் ஏதும் பேசாமல் நின்முன்.

''அடியேன் போறேன்.''

இருட்டினிடையே நடக்கும்போது இறந்துபோன குஞ்சாத் தாலினைப்பற்றிச் சிந்தித்தான். பெரிய காதுகளை ஆட்டிக் கொண்டு கதவுக்கு அப்பால், கிராமபோனிலிருந்து கதகளிப் பதம் கேட்பதற்காக நிற்கும்போது பிரகாசிக்கும் அவளுடைய நரைத்த புருவக் கண்களை இப்போதும் மனத்திரையில் காண முடிந்தது.

குஞ்சாத்தாலின் நோய் எதுவாக இருக்கும்? உண்ணி நம்பூதிரியைக் கேட்க தவறிவிட்டது.

இரவில் இல்லத்தின் கஷ்டநஷ்டங்களைப்பற்றி அம்மாவும் சின்னம்மாவும் பேசிக்கொண்டிருப்பதைக் கேட்டான். மாதவ

மாமாவைப்பற்றித்தான் தொடக்கத்தில் பேச்சு. மாதவ மாமா இல்லத்துக்குள் நுழைவது பாக்குப் பறிக்கும் நாளன்று மட்டுமே. கண்டங் குளங்கரைக்காரர்களின் நாற்று வட்டியை மாதவ மாமா முன்புபோல் கொடுத்து வாங்கியிருந்தார். ஐந்து ரூபாய்க்கு விறகு விற்கமுடியும். வடக்கு வீட்டுக்கு ஓடு போட யோசனை செய்து கொண்டிருப்பதாக யாரோ சொல்லக் கேட்ட விவரத்தைச் சின்னம்மா சொன்னபோது அம்மா திடுக்கிட்டாள்.

''மாளிகை கட்டி வைக்கட்டும் கண்டவங்க எச்சியை வாரிக் கிட்டு நடக்கும் பொட்டையன், தூ.''

சாப்பிட்டுக்கொண்டிருக்கும்போது சின்னம்மா அன்பொழுகக் கேட்டாள்:

''நீ புஷ்போத்துபோயிருந்தேன்'னு அம்மா சொல்லிச்சு.''

''உம்.''

''ஏதாவது விசேஷம் உண்டா?''

கிண்ணத்திலிருந்து தலையை உயர்த்தாமலே கூறினன்:

''விசேஷமா ஒண்ணுமில்லே.''

''கோயிந்தார் காசு பணமெல்லாம் அனுப்புறரில்லையா?''

''இருக்கலாம், நான் கேட்கலே.''

''மூத்தவ இங்கே இருக்காளா, வேறெங்கே—''

விசாகப்பட்டினத்திலாம்.''

''சின்னவ ஒருத்தி இருந்தாளே! என்ன அவளோட பேரு—அவளிப்போ பெரியவளாயிருப்பாள்.''

(சின்னப் பெண், உங்களுக்குப் பெயரை நினைத்துப் பார்க்க முடியாத பெண்! அவளுடைய பெயரிலிருந்துதான் இந்த வீட்டில் புயலடிக்கப்போகிறது.)

''பத்தாவது படிக்கிறள்'ன்னு நெனக்கிறேன்.''

''எல்லாத்துக்கும் சிறியது ஆண் தானே?''

''நம்ம பத்மூவும் அவனும் ஒரே வயசு.''

''விஷயத்தை மாற்றவேண்டி சேது கூறினன்:

''உண்ணி நம்பூதிரி சொன்ன பிறகுதான் குஞ்சாத்தாலு இறந்தது தெரிந்தது.''

''பாவம், நோயிலே படுத்தவ எழுந்திருக்கவே இல்லே. அதுக்கே பலியாயிட்டாள்.''

இரவில் முன் அறையின்மேல் மாடியில் சாய்வு இருக்கையை விரித்துப் போட்டு சாய்ந்தான்.

நேற்று கண்ணாடித்துண்டுகள் பதிக்கப்பட்டிருந்த ஜன்னல்களுக்கு உட்புறத்தில் இரட்டைப் படுக்கைக் கட்டிலில் படுத்திருந்தான். தென்னந் தோட்டத்துக்கிடையே காணப்பட்ட ஆகாயம் அழகாகத் தோற்றம் அளிக்கவில்லை. அங்கே படுத்தபடி சாளரத்தின் வழியே பார்க்கும் போது இரண்டு இரவுகள்—தாழ்ந்த குரலில் காதோடு கிசு கிசுத்துக் கொண்டு படுத்திருந்த இரண்டு இரவுகள்—இப்போது நம்புவதற்கே சிரமமாக இருந்தது. கனவாக இருந்ததோ என்றும் நம்பமுடியவில்லை. இல்லை இதோ இந்தக் கைகளுக்கு இடையே இங்கே மார்பிலே முகத்தைச் சேர்த்து வைத்து தங்கம் சாய்ந்திருந்தாள். இளம் சூடுள்ள அவளது சுவாசம் இன்னும் நெஞ்சில் இருப்பது போல் தோன்றியது. இங்கே என்னுடைய இந்தக் கைகளுக்குள்தான் இருந்தாள்.

காலையில், ஒன்பதரை மணி வண்டியைப் பிடிக்கத் தக்க வகையில் போகத் தயாரானான். பயணம் சொல்ல வேண்டி அடுப்பங்கரையில் கத்தரிக்காயை நறுக்கி முறத்தில் போட்டுக் கொண்டிருக்கும் அம்மாவின் முன்பாகச் சென்று நின்றான்.

"நான் போறேன். ஒன்பதரை மணி வண்டி கெடைக்கணும்."

" உம். "

"காசிருந்தால் அஞ்சு ரூவா கொடு." அப்போது தான் அம்மா நேருக்கு நேராக முகத்தை உயர்த்திப் பார்த்தாள். காய் அரிந்த கத்தியை முறத்தில் வைத்து விட்டு காய்க் கறை படிந்திருந்த கையை அழுக்கடைந்த முண்டு ஆடையின் இடுப்புப் பகுதியில் அழுத்தித் துடைத்தபடி தென் புறமாக வீட்டினுள்ளே போய் விட்டுத் திரும்பி வந்தாள். அழுக்கடைந்த மூன்று ஒரு ரூபாய் நோட்டுகளை நீட்டிக்கொண்டு சொன்னாள்:

"இதுதான் இருக்கு."

அதை வாங்கித்தலை முட்டாமலிருக்க கவனமாக தலைகுனிந்து வாசற்கதவைக் கடக்கும்போது அம்மா சொன்னாள்:

"கொட்டி வச்சிக்கிட்டு உன்னைப்படிக்க வைக்கலே, வெளியூரில் கெடந்து அப்பா கஷ்டப் படறது உங்களுக்காக வேண்டித்தான்."

மொத்தத்தில் கோபம் வந்து விட்டது. திரும்பி நின்று கோபத்தால் பதறும் குரலில் கேட்டான்:

"அதுக்கு நான் என்ன செய்ய?"

''படிக்க வேண்டிய நேரத்திலே படிக்காம கண்டவங்க கூட யெல்லாம் சர்க்கோடு அடிச்சா, நீயும் உன் அண்ணனுக்குத் துணையாயிடுவே!''

வெறுப்பையும் மனச் சங்கடத்தையும் ஒதுக்கிக் கொண்டு படியிறங்கினன். ரெயில் நிலையத்தை நோக்கி நடக்கும்போது அம்மா சொன்னது ஒரு கரடுபோல நெஞ்சில் அழுத்திக்கொண் டிருந்தது.

உயர்நிலைப் பள்ளி வகுப்புகளில் எல்லாத் தேர்வுகளிலும் மிக அதிக மார்க்குகளே வாங்கியிருந்தான். யாரும் முதலாவதாக வரவேண்டும் என்று விரும்பியது கிடையாது. பள்ளி முற்றத்தில் ஆண்டு விழா நடக்கும் போதெல்லாம் எல்லா ஆண்டுகளிலும் மேடையேறிப் பரிசுகளை வாங்கி வந்தவன். யாரும் அதைப்பற்றி ஆராய்ந்ததில்லை. காலா காலத்தில் கட்டணம் கட்டியாயிற்ரு, ஹாஸ்டல் பாக்கி கட்டியாயிற்ரு, வழிச் செலவுக்குப் பணமுண்டோ என்று யாரும் கேட்டதில்லை.

கல்லூரியைப் போய்ச் சேர்ந்த மறுநாள் கிருஷ்ணன் குட்டி கிடைத்தான். ஒன்ருகச் சேர்ந்து நடந்தார்கள். நிரம்பப்பேச வேண்டியிருக்கு என்று சொல்லித்தான் கிருஷ்ணன் குட்டியை அழைத்தான், இறுதியில் தனக்கு வாழ்க்கை ரகசியங்கள் ஏற்பட் டிருக்கின்றன. கோட்டை நிழலில் ஆட்கள் நடமாட்டமல்லாத ஓரிடத்தில் இருந்தபோது கிருஷ்ண குட்டியின் ஆழ்ந்திருக்கும் கண் களுக்கு முன்னல் எதனுலேயோ எப்படியோ இருந்தது.

உள்ளே கனத்த வேதனையில் ஆட்பட்டவனுயிருந்தான். தனக் கொரு காதல் இருக்கிறது. உலகம் அதற்கு எதிராக நிற்கின்றது. விஷயத்தை எடுத்து விளக்க ஆரம்பித்தான். தொடங்கியபோது நிறைய பேசலானுன்.

''யார் எதிர்க்கிறது?''

கிருஷ்ணன் குட்டி கேட்டான்.

''அம்மாவுக்கு விருப்பமில்லே. அப்பாவும் எதிர்ப்பார்''

''சகோதரர்?''

''விருப்பமிருக்காது''

''அவளைச் சார்ந்தவங்க எப்படி?''

''அவளோட அப்பாவும் எதிர்ப்பார்.''

சொல்லிக் கொண்டு வந்தபோது உறுதிப்பாட்டைத் தெளிவு படுத்தினன். குடும்பத்தார்களிடையே தனது காதல் விவகாரம் ஒரு விவாத விஷயமாகயுள்ளது. எதையும் சமாளிக்கும் நிலையில்

தான் அவள் இருக்கிறாள். ஒரு வேளை அவளை நிர்ப்பந்தம் காரணமாக யாருக்காவது விரைவாக விவாகம் செய்து கொடுக்க அவள் தந்தை ஏற்பாடு செய்யலாம்.

எல்லாவற்றையும் கேட்டு முடிந்தபோது எங்கேயோ பார்த்துக் கொண்டிருக்கும் தன்னை கிருஷ்ணன் குட்டி கூர்ந்து கவனிப்பது தெரிந்தது.

''வெளிப்படையாகச் சொல்லணும், நீ தீவிரமாக இருக்கியா? அல்லது ஏதோ ஒரு பொழுது போக்குச் செயலாகக் கொண்டிருக்கிறாயா?''

''கிருஷ்ணன் குட்டி, நீயும்—?'' என்ற பாவனையில் அவனது கால்களை உற்று நோக்கினான்.

''கோபப்படவேண்டாம். பல பேரை நான் பார்த்திருக்கிறேன். இந்த வயதில் இரண்டு நிலையும் குழப்பமுண்டாக்கும்.''

''கிருஷ்ணன் குட்டிக்குத் தெரியுமா? நான் நிம்மதியாகத் தூங்கிப் பல இரவுகளாகிறது. படிப்பில் கூட முழுக் கவனம் செல்லவில்லை. கிருஷ்ணன் குட்டி எழுந்தான்.

''உனக்கு அந்தப் பெண்ணிடம் நம்பிக்கை இருக்கா?''

''நூற்றுக்கு நூறு. ஆனால் மற்றவர்கள் நிர்ப்பந்தப் படுத்தினால் அவள்—.''

தொடர்வதற்குக் கிருஷ்ணன் குட்டி அனுமதிக்கவில்லை.

''இல்லை. நான் அதைக் கேட்க விரும்பவில்லை. நீயும் அதைச் சொல்ல வேண்டாம்.''

திரும்பிப்போகும்போது மனதுக்குள் நிராசை தோன்றியது. கிருஷ்ணன் குட்டியோடு இவ்வளவு பேசியும் அவனிடத்தில் முழு அக்கரையையும் அனுதாபத்தையும் நான் உருவாக்கவில்லை என்று தோன்றியது.

''சேதுவிடம் ஒரு விஷயம் சொல்லணும். நான் காதலில் இறங்கியவனில்லை. என்னுடைய வாழ்க்கையை என்னால் கற்பனை செய்யவே முடிந்தது. யாரிடமாவது எனக்கு நம்பிக்கை ஏற்பட வேண்டுமென்று தோன்றியது. அந்த நம்பிக்கை ஒரு பெண்ணிடம் எனக்கு ஏற்பட்டது. அவளை எனக்குப் பிடித்திருந்தது.'' அவன் நிறுத்தினான். தெரிந்தவர்கள் குசலம் விசாரித்தபடி கடந்து போனார்கள். அவர்கள் தனிமையில் இருந்தபோது மீண்டும் தொடர்ந்தான்: ''நான் ஒரு கவிஞன். கற்பனைக் கண்ணோட்டத்தோடு எதையும் பார்ப்பேன். அடுத்த வீட்டிலே மூன்று பிள்ளைகளைப் பெற்ற வேலைக்காரி அம்மிக்கல்லில் உட்கார்ந்து தலையைக்

கோதிக் கொண்டிருப்பதைக் கண்டுவிட்டுத்தான் 'நீலச் சிலா தலத்தில் நீயொரு சொப்பனம் போல' என்றெல்லாம் பாடியது.''

ஏதும் பேசவில்லை, தனக்குக் கவிதையுணர்வு உண்டென்றாலும் தனக்குள்ள முரட்டுத்தனத்தில் அது பயனற்றதாகி விடுகிறது. அதுதான் அவனுக்குள்ள ஆயாசம்.

ஒரு வாரம் சென்ற பிறகு ஒருநாள் அப்பாவிடமிருந்தும் நளினி யிடமிருந்தும் ஒரே சமயத்தில் கடிதங்கள் வந்திருந்தன.

நளினியின் கடிதத்தைத்தான் முதலில் படித்தான்.

''சேது புஷ்போத்து வந்திருந்தான் என்பதை ரவி சொன்ன போதுதான் எனக்குத் தெரிந்தது. இவ்வளவு பக்கத்தில் வந்தும் கூட இங்கே வராமல் போனது எங்களுக்கெல்லாம் மனச்சங்கடம். புஷ்போத்துக்கு இனியும் வருவாய் என்று எனக்குத் தெரியும். அறிமுகப்படுத்தியது நான்தான் என்பதை மறக்க வேண்டாம்.''

நளினி எழுதியிருப்பதில் தவறில்லை. புஷ்போத்து வருகையின் நோக்கத்தை நளினி ஊகித்திருக்கிறாள். அதில் மகிழ்ச்சியே ஏற் பட்டுள்ளது. தெரியட்டும். உலகம் முழுக்கத் தெரியட்டும்.

அப்பாவின் கடிதத்தில் தேர்வுக்கட்டணம் விஷயம் பற்றி எழுதியுள்ளார். அம்மா சொன்ன அதே விஷயத்தையே மீண்டும் வற்புறுத்தி எழுதியுள்ளார். படிக்க வேண்டிய சமயத்தில் அங்கு மிங்குமாகப் பயணம் செய்து நீ வெறுமனே காலத்தை வீணாக்க வேண்டாம் என்பதுதான் விஷயம்.

மீண்டும் படித்தபோது சத்துருவைச் சந்திக்கும் மனஉணர்வே பட்டது. உபதேசிக்க ஆள் வந்திருக்கிறார்.

அப்பா தனக்கு என்றுமே பழக்கமில்லாதவரைப் போலவே இருந்து வருகிறார். மாதந்தோறும் அனுப்பித்தரும் அறுபது ரூபாயிலும் அதோடு சேர்ந்து வரும் கஷ்டங்களைப்பற்றி விவரிக்கும் கடிதத்திலும் உறவை ஒதுக்கியே வைக்கிறார்.

ஏழாம் வகுப்புப் படித்த காலம்தொட்டு அப்பாவுக்குக் கடிதம் எழுதத் தொடங்கினான். ஒரு சமயம் ஊருக்கு வந்தபோது பொதுப் படிப்புக்கும் பொது அறிவுக்கும் கிடைத்த பரிசுகளை அப்பாவின் முன்பாக ஆர்வத்தோடு கொண்டுபோய் வைத்தான். புத்தகங்கள் இரண்டை பிரித்துப் பார்த்தார். சாய்வு நாற்காலியின் கைப்பிடி யில் வைத்துவிட்டு அப்பா சொன்னார்:

''இப்போ வந்த புஸ்தகங்களின் பைண்ட் எல்லாம் ரொம்ப மோசம்.''

நல்ல வார்த்தைகளைச் சொல்ல எப்போதும் மறந்துபோகும் அவர் இப்போது தவறுகளைக் கண்டுபிடிக்கத் தொடங்கியிருக்கிறார்.

''யாரிடமிருந்து கடிதம்?''

கிருஷ்ணன் குட்டி விசாரித்தான்.

''அப்பாவிடமிருந்து.''

''விசேஷம்?''

''ஒன்றும் பேசவில்லை.'' கிருஷ்ணன் குட்டியை உறுத்துப் பார்த்தான். உங்களுக்கு நம்பிக்கையில்லை; இல்லையா? பார்த்துக் கொள்ளுங்கள், போராட்டம் ஆரம்பிச்சிருக்கு!

[4]

பள்ளியில் படிக்கும் காலத்தில் பெரும்பாலான நேரங்களில் சேது ஆர்வத்தோடு பார்த்துக் கொண்டிருக்கும் வீடு ஒன்று உண்டு. அரளிக்கரை கோவிலை அடுத்து அந்த வீடு இருந்தது. முடமானஒரு காலை இழுத்து இழுத்து நடக்கும் சந்திரசேகரன் எனும் ஆசிரியர் அதில் குடியிருந்து வந்தார். சிறியதோர் வாய்க்காலின் கரையில் அவ்வீடு அமைந்திருந்தது, அதன் பின்புறம் பாறைகள் இருந்தன. கோவிலுக்கு வழிபாட்டுக்கென பெண்களுடன் வரும் சிறுவர்கள் அந்தப் பாறைகளில் ஓடி நடந்து விளையாடுவதைக் காணலாம். வேலியில் மஞ்சள் பூக்களுள்ள கருஞ்சீரகச் செடிகள் வரிசையாக நடப்பட்டு அழகாகக் காட்சி தரும். தோட்டம் ரொம்பப் பெரிதல்ல. ஆனால், இளங் கன்றுகளாகவுள்ள கமுகு மரங்கள் பூத்துக் குலுங்கும் அழகிகளைப்போலக் காட்சிதரும். அதன் மத்தியிலுள்ள ஓடு போட்ட சிறிய வீடுதான் அது.

தான் உருவாக்கப் போகும் குடும்பத்தைப் பற்றிச் சிந்திக்கும் போதெல்லாம் அந்த வீட்டின் சித்திரம்தான் முதலில் அவன் மனத்திரையில் தெளிவாகத் தோன்றும்.

படிப்பை முடித்து சொந்தக் காலில் நிற்கும் காலம் அவ்வளவு நெடுந்தொலைவில் இல்லை என்பதை சேது நம்பிக்கையோடு நினைத்துக் கொண்டான்.

அப்படிப்பட்ட ஒரு வீடு போதும்.

கமுகுத் தோட்டத்தில் கமுகு மர உச்சாணிகள் காற்றில் ஆடியலைந்து கொண்டிருக்கும் சிங்க மாத நிலாவில் மட்டை மடல்களின் நிழல்கள் நாணிக் கொண்டிருக்கும். துலா வருஷத்தில் கால்வாய் நீர் நிறைந்து கரை புரண்டு ஓடும்போது அருகம்புல்

பகுதிகளில் அலைகள் முட்டி மோதிக் கொண்டு ஓடுவதைப் பார்த்த படி ஆலயத்தில் மணி நாதம் முழங்குவதையும், குளக் கரையில் நடக்கும் உரையாடல்களையும் கேட்டபடி வீட்டின் முன்னறையில் அமர்ந்திருக்கலாம் என எண்ணிக் கொண்டான்.

''தங்கமணி, நம்ம வீட்டுக்கு ஒரு பெயர் வைக்கணும்.''

''சொல்லுங்க.''

''உம், நீ சொல்லு.''

''சொல்லட்டுமா கவிதை.''

தேர்வுக்கு பணம் அனுப்பியதோடு அப்பா கடிதமும் எழுதி யிருந்தார். 'எக்ஸ்டென்ஷன்' விஷயம் இப்போதும் ஆலோசனை யில் தான் இருக்கிறது. பெரும்பாலும் மார்ச் 3ம் தேதி ரிட்டையர் ஆக வேண்டி வரும்.

நூலகத்திலிருந்து எடுக்கும் கவிதைப் புத்தகங்களும் தங்க மணியின் கடிதங்களும்தான் படிக்கும் பொருள்கள். கடைசியாகத் தேர்வு அடுத்து வந்த போதுதான் திகைப்பும் மலைப்பும் ஏற்பட்டது. நோட்ஸ்களுமில்லை. 'ரூ ர ல் எக்னுமிக்ஸ்'சுக்கும், பப்ளிக் பைனன்ஸ்சுக்கும் டெக்ஸ்ட் புத்தகங்கள் இல்லை. முதல் பகுதி யிலோ இரண்டாவது பகுதியிலோ முதல் வகுப்புக் கிடைத்தால் போதும். ஏதாவது ஒரு கல்லூரியில் டியூட்டர் வேலையாவது கிடைக்கும்.

மார்ச் 15ம் தேதி தனது தேர்வு தொடங்குகிறதென்று தங்க மணி கடிதம் எழுதியிருந்தாள். அவளுக்கும் அரசுத் தேர்வுதான். பதில் கடிதத்தில் அவளுக்கு வெற்றிகிட்ட வாழ்த்தியிருந்தான். அடுத்த சில நாட்களில் மிகுந்த அக்கரையோடு படிக்கப் போவதாக எழுதியிருந்தாள். ''படிப்பில் அக்கரை செலுத்தாததற்கு முழுப் பொறுப்பும் தங்கமணிதான். படிக்கும்போதும் தூங்கும்போதும் தங்கம் என்னைச் சலனப்படுத்துகிறாள். இந்தக் குற்றத்திற்கு அடுத்து நேரில் சந்திக்கும்போது உனக்குக் கடினமான தண்டனை தரப்போகிறேன்.''

அதை எழுதியபோது சுவையாக இருந்தது. அவள் அதைப் படிக்கும்போது சிரிப்பை அடக்கிக் கொண்டு உள்ளூறப் பூரித்துப் போவாள்.

இறுதியில் எழுதினான்: ''என் நினைவை எனக்காக வேண்டு வாயன்றோ?''

தேர்வு முடிந்தபோது ஹாஸ்டலின் திடீர் மாற்றத்தைச் சேது கவனித்தான். சீனியர் மாணவர்கள் கல்லூரியிலுள்ளோர் களிடம் பயணம் கூறிக் கொண்டார்கள். விலகியிருந்தவர்கள்

கூட நெருங்கி விடுகிறுர்கள். பயணத்துக்கிடையில் சந்திப்பவர் களிடம் விடை பெறும்போது மிகுந்த வேதனையே உண்டாக்கியது' இனி ஒரு போதும் கிடைக்காத வலுவான உறவுகளிலிருந்து அகன்று போவது போன்று தோன்றியது. ''ஆட்டோகிராஃப்'. வண்ணத்தாள்களில் வாழ்க்கையின் நோக்கங்களையும் தத்துவ வாசகங்களையும் ஒருவருக்கொருவர் எழுதி பரிமாறிக்கொண்டனர். பலபேருடைய முகவரியை வாங்கிக் கொண்டான். பலருக்கும் தனது முகவரியை எழுதிக் கொடுத்தான்.

கடைசித் தேர்வுத்தாளை எழுதி முடித்து ஹாஸ்டலை அடையும் போது யாரோ கூறினுர்கள்:

''பாலகிருஷ்ணன் உங்களைத் தேடிக்கொண்டு போகிறுர்.''

கடைசியில் பாலகிருஷ்ணன் அறையை அடைந்தான்.

''அரை மணி நேரம் ஆகட்டும் என்று காத்திருந்தேன். இல்லா விட்டால் தேர்வு மண்டபத்தை விட்டு வெளியேற அனுமதிக்க மாட்டார்களே. நான் செப்டம்பரிலே பார்த்துக்கறேன்.''

பாலகிருஷ்ணன் எவ்விதக் குழப்பமும் இல்லாதிருந்தான்.

''ஏன் தேடுனீங்க?''

''நான் ஒரு ஏற்பாடு செஞ்சிருக்கேன். மாலையிலே எங்கும் போக வேண்டாம்.''

''என்ன ஏற்பாடு.''

''அதை அப்போ சொல்றேன். கிருஷ்ணன் குட்டியோடு பேசணும். பையன்கள் கலவரமுண்டாக்குவார்கள்.''

''என்ன விஷயம், சொல்லு.''

வராந்தாவினிடையே பாட்டும் கூச்சலுமாக வந்த ஒரு கூட்டம் அறைக்குள் நுழைந்தபோது சேது வெளியேறினுன்.

கிருஷ்ணன் குட்டி அறையிலிருந்தான். அவன் அலமாரியி லிருந்த புத்தகங்களையெல்லாம் எடுத்து பெட்டியின் அடியில் அடுக்கிக்கொண்டிருந்தான்.

''பாக்கிங்கா?''

''எப்படி எழுதியிருக்கீங்க? கிளாஸ் கிடைக்குமா?''

''தெரியலே. பாஸாவேன்.''

''தேட் கிளாஸ்லே எவ்விதப் பயனுமில்லே. பி. டி.க்குப் போகலாம். இல்லாட்டி ரெக்கமண்டேஷனுக்கு ஆள் வேணும். உங்க அப்பா முயற்சி செஞ்சா உங்களுக்கு எஸ்டேட்டில் பெரிய வேலை கிடைக்குமில்லையா?''

''அப்பா ரிடையர் ஆகப்போகிறுர்.''

''என்றுலுங்கூட தொடர்பு இருக்குமில்லையா? தொடர வில்லேன்னு பெரிய சாய்பு கம்பெனிகள்'லே போய்ச் சேர்றது தான் நல்லது.''

சேது எதுவும் பதில் பேசவில்லே.

மாலேயில் கிருஷ்ணன் குட்டி வழக்கம்போல உலாவ வெளி யேறிஞன். சேது போய்விட்டான். எல்லோரும் தேர்வு முடிந்த நாளேக் கொண்டாடவேண்டி வெளியேபோய் இருக்கிறுர்கள். பால கிருஷ்ணன் அறைக்குச் சென்றபோது அரவிந்தனும் டானியல் ஜோனும் அங்கே இருந்தார்கள். ஜன்னல் மூடப்பட்டிருந்தது. கதவை அடைத்துத் தாழ்ப்பாள் போட்டுக்கொண்டு பால கிருஷ்ணன் அலமாரியிலிருந்து ரயில் வண்டியில் மருந்து விற்பவனேப் போல சிறிய பாட்டில்களே வெளியே எடுத்தான். அழகான லேபில் களேக்கொண்ட ஐந்து சிறிய பாட்டில்கள். சேது படித்துப் பார்த் தான் பஞு எஸ்ஸென்ஸ், ஸ்ட்ரோ பெரி எஸ்ஸென்ஸ், டொமட்டோ எஸ்ஸென்ஸ்.

''பயப்படவேண்டாம் . . . மதுவல்ல.''

''மதுவிலக்கு இருக்கில்லியா?''

அதுதான் முதலில் ஏற்பட்டது. நட்புக்கொண்டிருப்பது பழக்கமுள்ளவர்களோடுதான்.

''புரோஹிபிஷன் இதுக்கு பாதகமானதல்ல. எல்லாக் கடை களிலும் விற்கப்படுது. நல்ல பொருள்.''

டானியல் பல மதுவகைகளேப்பற்றி சிறப்பாக எடுத்துக் கூறிஞன். வீட்டில் பெரிய பார்ட்டிகள் நடக்கும். இரண்டு, மூன்று ரவுண்டு முடியும்போது அப்பாவே சொல்வார்.

''ஃபுல் அப் எ ஷேர் அண்ட் ஹேவ் ஏ ஸ்மால்.'' பாலகிருஷ்ணன் கூறிஞன்: ''கள்ளுதான் உடம்புக்கு ரொம்பவும் நல்லது.''

''என்னுடைய வீட்டுக்கு வா. பெஸ்ட் கள் தர்றேன்.''

கிளாஸில் எஸ்ஸென்ஸ் பாட்டில்களேத் திறந்து ஊற்றி மண் கூஜாவிலிருந்து தண்ணீர் ஊற்றி நிரப்பி முதலில் டானியலிடம் நீட்டிஞன்.

ஒரு மடக்குக் குடித்து ருசி பார்த்துவிட்டு டானியல் கூறிஞன்:

''நல்ல மணம். மோசமில்லே.''

ஒரே கிளாஸ்தான் இருக்கிறது. அரவிந்தனுக்குப் பிறகு கிளாஸ் நிரப்பி சேதுவுக்குக் கொடுத்தபோது சேது அதை ஏற்க மறுத்தான்.

''தயவு செய்து வேண்டாம். நான் இதுவரை இதைத் தொட்டதில்லே.''

''அப்படியானல் இன்று இதைத் தொடணும்.''

அரவிந்தன் எப்படிக் குடிக்கவேண்டும் என்பதை விளக்கிக் கூறினன்.

''ஒரு 'சிப்' எடுத்து இரண்டு பஃப் எடுத்தால் போதும்.''

சேது மீண்டும் மறுத்தான்.

''வேண்டாம் . . .''

பாலகிருஷ்ணன் கூறினன்:

''எனக்கு இதில் எவ்வித ஆர்வமும் இல்லே. ஊர்லே என் நண்பன் ஒருவன் இருக்கான். அவன்தான் இதை ஆரம்பத்திலே எனக்குக் கொடுத்தான். மதுவிலக்கு அமுலான நாள். அவனுக்குப் பயங்கர பிடிவாத குணம் இருந்தது. இதைக் குடிக்கணும், இதைக் குடிக்கவேண்டாம்'னு சொல்ல சர்க்கார் யார் என்பதுதான் அவனோட கேள்வி.''

''இருந்தாலும்கூட இதைப் பழக்கப்படுத்திக்கறது மோசம்.''

சேது இளம்மஞ்சள் நிறத்தில் சங்கணப்புல்லின் வாசனேயுள்ள திரவம் நிரம்பிய கிளாஸை அச்சத்தோடு பார்த்தபடி சொன்னன்:

''எனக்கு வேணும்.''

பாலகிருஷ்ணன் கிளாஸ் வாங்கி ஒரே மடக்காகக் குடித்துவிட்டு மேசை மேலே வெறுங் கிளாசை வைத்துவிட்டு ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்றவைத்தான். யாருக்கும் பாவபேதம் இல்லே.

''நான் மதுவிலக்குக்கு எதிரி. சட்டத்தைக் கொண்டு நம்மையெல்லாம் மகாத்மா காந்திகளாக்கப் பார்க்கவேண்டாம்.''

அரவிந்தனின் கண்கள் சற்று சிறியதாக இருப்பதுபோல் தோன்றியது. கிளாஸ் மீண்டும் கைமாறியது.

பாலகிருஷ்ணனுக்குப் பேசவேண்டுமென்ற ஆவேசம் திடீரென ஏற்பட்டுவிட்டது போன்று தோன்றியது.

''என்னுடைய நண்பன் சொல்வான்: பட்டினி கிடக்கும்போது சர்க்கார் சோறுதரும் பொறுப்பை ஏற்கிறதா? படித்து முடித்து வேலேதேடி அலேயும்போது வேலே தர்றேன்'னு அறிவிச்சிருக்குதா? பின்னே, என்ன சட்டம் வேண்டிக்கிடக்கு!''

தான் அவர்களிடமிருந்து விலகிச் செல்வதுபோல் சேதுவுக்குத் தோன்றியது. கட்டிலில் உட்கார்ந்தபடி முட்டுக்குத்தி மடக்கி

வைத்துள்ள கைகளுக்கிடையே தலையைத் தாழ்த்திப் புதைத்தபடி அவர்களுடைய பேச்சை கவனமாகக் கேட்டுக்கொண்டிருந்தான். கடைசி எஸ்ஸென்ஸ் பாட்டில் திறந்து ஒரு அவுன்ஸ் கிளாஸில் பகிர்ந்து தண்ணீர் ஊற்றி மீண்டும் பாலகிருஷ்ணன் நீட்டியபோது, சேது கையில் வாங்கினுன். குடித்தபோது பெரிய போதை ஏதும் ஏறவில்லே. அமைதியாக சிகரெட் புகைத்துக்கொண்டிருக்கும் டானியலின் முகத்தைப் பார்த்தபடி ஒரு புன்சிரிப்பை வெளிப் படுத்தினுன். ஒரு பகுதியைக் குடித்துவிட்டு கிளாஸை பால கிருஷ்ணனிடம் நீட்டினுன்.

"போதும் மீதியை நீ குடிச்சுக்கோ."

டானியலின் பாக்கெட்டிலிருந்து ஒரு சிகரெட் எடுத்து பற்ற வைத்தபோது சமாதானப்படுத்திக்கொண்டான். இல்லே, எதுவும் ஏற்படவில்லே.

"போகட்டும்."

அறையினின்றும் வெளியேறியபோது பாலகிருஷ்ணன் கூடவே வந்தான். தோளேப் பிடித்து சொந்த விஷயம் பேசினுன். "இரவு கல்பாத்தியில் ஒரு இடத்துக்குப்போக வாச்மேன் ராமகிருஷ்ணனே ஏற்பாடு செய்து வைத்திருக்கிறேம். ஐந்து ரூபாய் நீ வர்றீயா?"

"இல்லே."

"டேய் சும்மா வாடா."

"நான் வரலே."

அறைக்கு வந்து ஜன்னல்களேத் திறந்து வைத்து படுக்கையை விரித்து அதில் படுத்துக்கொண்டான். தலே சுற்றத் தொடங் கினுல்?

கிருஷ்ணன் குட்டி வந்தபோது, பேசத் தொடங்கியபோது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. இல்லே. தலேசுற்றல் முதலிய குழப்பங்கள் ஏதும் இல்லே.

இதை அறிந்தால் தங்கமணி என்ன நினேப்பாள்? தங்கமணி யின் தேர்வு முடிந்திருக்கும். அவள் தேறிவிடுவாளா? நல்ல மதிப் பெண்களோடு அவள் தேர்வு பெற்றுல் கல்லூரியில் சேர அவள் பிடிவாதம் பிடிப்பாள். வீட்டின், பாதுகாப்புச் சூழலிலிருந்து மாறி அவள் கல்லூரிக்குப் போவதைப்பற்றி சிந்தித்தபோது அதில் அவனுக்கு விருப்பம் ஏற்படவில்லே. பெண்கள் உணவு விடுதியில் தங்கியபோதிலும் ஹாஸ்டலிருந்து தனது சிநேகிதிகளுடன் வெளி யேறி வரும்போது, சாலேயோரங்களில் நடந்துபோகும்போது வட்டமிடும் சைக்கிள்களிலும் வழித் தடங்களிலும் காத்து நிற்கும் கண்களே எண்ணிப் பார்த்தபின்.

''நீ என்ன யோசிச்சுக்கிட்டிருக்கே?''

அப்போது அவன் சிரித்துவிட்டான்.

''உம்.''

''உண்மையைச் சொல்வதானுல் நான் மனதில் பிரார்த்தனே செய்துகொண்டிருந்தேன்.''

''பாஸாகவா?''

''இல்லே என்னுடைய சிநேகிதி பாஸாகக்கூடாது என்று.''

''கிருஷ்ணன் குட்டி புரியாமல் நெற்றியைச் சுழித்தபடி நோக்கினுன். அவன் விளக்கிக் கூறத் தொடங்கினுன். பாஸானுல், அவள் கல்லூரிக்குப் போவாள். நகரத்தில் நான்காண்டுகள் தங்கி திரும்பி வரும்போது அவள் மாறிப்போய்விட்டால்?''

கிருஷ்ணன் குட்டி சிரிப்பை அடக்கிக்கொண்டு நாடக பாணி யில் பேசினுன்:

''சுயநலமே உன் பேர்தான் சேதுவோ?''

அடுத்த நாள் பயணம் கூறும் நாளாக அமைந்திருந்தது. பால கிருஷ்ணன் முகவரி வாங்க அவன் அறைக்குச் சென்றபோது சொந்த விஷயமாகக் கூறினுன்.

''நீ வராமல் இருந்துட்டே. ரொம்பப் பாதுகாப்பாப் போச்சு. அந்தக் கட்டையில போவான் ராமகிருஷ்ணன், அதைக் கொஞ்சம் முன்னுலேயே சொல்லியிருக்கப்படாதோ?''

ஞாயிற்றுக்கிழமை இரவில் பாலகிருஷ்ணன் குட்டியும் சேது வும் ஒன்ருகச் சேர்ந்து புறப்பட்டார்கள். குதிரைவண்டியில் சாமான்களே ஏற்ற நண்பர்கள் உதவி செய்தார்கள். தியரி முடிந்து பிராக்டிக்கல் தேர்வுக்காகக் காத்திருக்கும் மாணவ நண் பர்கள் பலரும் ஹாஸ்டலில் தங்கியுள்ளார்கள்.

கைகுலுக்கிப் பயணம்கூறும்போது முகம் என்னவோபோல் மாறியிருந்தது. குறிப்பு மொழிகளால் பேசுவதும் உள்ளூர மனக் கஷ்டம் ஏதும் இல்லாதவர்களேப்போல நடிப்பவர்களுமாக இருந் தார்கள்.

பஸ் நிலேயத்தில் கிருஷ்ணன் குட்டியை இறக்கி விட்டு விட்டுப் போகும்போது சேது கேட்டான்:

''இனி எப்போ பார்க்க முடியும்?''

''எப்ப வேண்டுமானுலும். ஒருவேளே சமீபத்திலேயே பார்க்க நேரும். ஒருவேளே நீண்ட காலம் ஆனுலும் ஆகும். ஒருவேளே பார்க்க முடியாமல் போனுலும் போகும். இதையெல்லாம் இப்பவே உறுதிப்படுத்த முடியாதல்லவா?''

“ஹேய் நாற்பது மைல் தூரம்தானே இருக்கு? எப்போது வேண்டுமென்ருலும் பார்க்கலாம். நான் எழுதறேன்.''

கிருஷ்ணன் குட்டி சிரித்தான்.

''நாலு பர்லாங் தூரத்தில் இருக்கிற பலரை நான் பார்த்துப் பல வருஷங்களாகுது.''

என்ன சொல்வதென்று தெரியாமல் சேது ஐயப்பாட்டோடு நின்ருன்.

''குட்லக்.''

“அதிர்ஷ்டத்தை நான் நம்புவதில்லே. அதனுல் நமக்குப் பெரும் பேறு எதுவும் ஏற்படுவதில்லே.''

பாக்கெட்டிலிருந்து சில்லறையைத் தடவி எடுத்துக் குதிரை வண்டிக்காரனுக்குக் கொடுக்கக் கிருஷ்ணன் குட்டி முயலும்போது சேது அவனைத் தடுத்தான்:

''நான் கொடுக்கறேன்.''

“நோ, வி வில் ஷேர். நீங்க எட்டணு தந்தாப் போதும்.'' அவன் சில்லரைக் கொடுப்பதை ஒரு மாதிரியாகப் பார்த்துக் கொண்டு நின்ருன்: மூன்று ஆண்டுகள் ஒன்ருகச் சேர்ந்து வாழ்ந்தவர்களிடையே வாழ்க்கை ரகசியங்கள் கைமாறிக்கொண்டிருப்பவர்களிடையில் எட்டணு கணக்குப் பார்க்கலாமோ?

அவனுடைய சிந்தனைகளை அறிந்துணர்ந்தவன்போன்று கிருஷ்ணன் குட்டி கூறினுன்: ''நட்பில் எனக்கு நம்பிக்கை உண்டு. கடன்கள் வேண்டாம். எட்டணுவானுலும் கடன்தான், நாம் ஒன்றேயானுலும்கூட.''

என்ன சொல்வதென்றே தெரியாமல் மலேத்துப்போய் நிற்கும் சேதுவின் தோளில் கைவைத்து கிருஷ்ணன் குட்டி கூறினுன்:

''நீங்க போங்க. வண்டியை விட்டுவிடவேண்டாம்.''

வெயிலில் உருகத் தொடங்கிய தார் ரோட்டில் களேத்துப் போன வண்டிக் குதிரை மெதுவாக நடைப்போட்டுச் சென்றது. சாட்டை அடியினுல் ரத்தம் பொங்கும் தடிப்புகள் நிறைந்த முதுகின்மீது வண்டிக்காரனின் சாட்டை பயங்கர ஆல வட்டமாகச் சுழன்றுகொண்டிருந்தது. காற்றில் சுழற்றியடிக்கும்போது உண்டாகும் சாட்டையின் ஓசையைக் கேட்டபோது, குதிரையின் கருத்த உடலின் தோல்கள் சுழிந்து நெளிவதை அவனுல் நன்கு காண முடிந்தது. இயலாமையின் காரணமாக வேகம் அதிகரிக்காத நிலேயில் லாடம் தேய்ந்த குளம்புகளுடன் இழுத்து இழுத்து மெதுவாக அது நடைபோடலாயிற்று.

[5]

மூன்று மணிக்குத்தான் ஸ்டேஷனில் போய் இறங்கினன். முன்னதாகவே அம்மாவுக்குக் கடிதம் எழுதியிருந்ததால் வேலைக்காரன் காத்துக் கொண்டிருந்தான். பெரிய குட்டைப் பற்களும் சிறிய தலையுமுள்ள தாமி நல்ல வலுவுள்ளவன்.

நான்கு ஆண்டுகட்கு முன்பு மழைக்கால இரவில் பெட்டியைச் சுமந்துகொண்டு ஸ்டேஷனுக்குக் கூட வந்தவன் தாமியின் தந்தை. அவன் இப்போ வேலை செய்யவில்லை. முடியை நீள வளர்த்து வேலைக்காரர்களின் கோலமேற்று மாறியிருக்கிருன் போலும்.

ஆறு மணல்வெளிபோன்று வரண்டு கிடக்கிறது. நீர் ஓடாத நிலையில் ஆங்காங்கே சேற்று நீராகத் தேங்கிக் கிடந்தது. செருப்பு அணிந்திருந்த போதிலும் தகிக்கும் மணலின் சூட்டை உணர முடிந்தது. உடைகளும், புத்தகங்களும் நிறைத்து வைத்திருந்த கனத்த இரும்புப் பெட்டியையும் அதற்கு மேலே அழுக்கடைந்த ஜமுக்காளத்திற்குள் பொதிந்து வைக்கப்பட்டிருந்த படுக்கையையும் சுமந்துகொண்டு தாமி சூடு பறக்கும் மணலினிடையே கூசாது முன்னல் நடந்து போனன்.

வீட்டை அடைந்தபோது வராந்தாவில் சாய்வு இருக்கையில் அப்பா இருந்தார்.

அதைரியத்தோடேதான் ஒவ்வொரு தடவையும் அவர் முன்பாக வருவான். இப்போது தெளிவான ஆத்ம நம்பிக்கை ஏற்பட்டிருந்தது. நான் இப்போது ஒரு ஆண் மகனுகியுள்ளேன். நான் என்னைக் கொண்டே வாழப் போகிறவன்.

பெட்டியையும் படுக்கையையும் ஒருகை பிடித்து இறக்க தாமிவுக்கு உதவி செய்து, முன்னறையை அடைந்தபோது, அப்பா எழுந்து, விழுந்து விட்ட மேல் துண்டை எடுத்து மீண்டும் மார்பில் போட்டுக் கொண்டு வராந்தாவுக்கு வெளியே போய் எச்சிலைத் துப்பிவிட்டுக் கேட்டார்.

''நேற்றே தேர்வு முடிந்துவிடும்னு தானே நீ கடிதம் எழுதியிருந்தே?''

''நேற்றே முடிந்து விட்டது.''

ஒருநாள் எதற்காகத் தங்கிவிட்டுத் தாமதமாக வருகிருய் என்பதாக இருந்தது கேள்வி கேட்ட தொனி.

உள்ளே சென்றபோது சின்னம்மாதான் முதலில் பார்த்தாள்.

''அப்பா, எப்ப வந்தாங்க சின்னம்மா?''

''நேத்து அப்பா ரிடையராயி இங்கே வந்துட்டார். இனிப் போக வேண்டாம்.''

அப்பா ஓய்வு பெற்றுத் திரும்பி வந்ததில் வீட்டில் எல்லோருக்கும் மகிழ்ச்சியே. வீட்டின் வைக்கோல் கூரையை மாற்றி ஓடு போட வேண்டும் என்று அம்மா எப்போதும் சொல்லிக் கொண்டிருந்தாள். ஆற்றுப் பக்கத்தில் கொஞ்சம் உழவு நிலம் வாங்க முடிந்தால், விலை அதிகமில்லையென்றால் ஆண்டு முழுவதும் அதிகக் கஷ்டமில்லாமல் சாப்பிட நெல் கிடைக்கும்.

''வயசாயிருச்சில்லையா? வெளியூர்லேயும் காட்டிலேயும், மேட்டி மலையிலேயும் கிடந்து கஷ்டப்பட வேண்டாம்.''

வேலையிலிருந்து ஓய்வு பெற்று வரும்போது ஓடு போட்ட வீடும், ஆற்றுப்படுகையில் கொஞ்சம் விவசாய நிலமும் ஏற்பாடாகி விடும் என்ற நம்பிக்கைதான் ஓய்வைப் பற்றிப் பேசும் போதெல்லாம் அம்மாவின் மனதில் ஏற்படும்.

அடுப்பங்கரை ஜன்னல் பிடிமேல் இருந்து கொண்டு அம்மாவிடம் கூறினாள்:

''வேலைக்கார தாமிக்கு ஒண்ணும் கொடுக்கலே.''

''உம் கொடுக்கலாம்.''

அம்மா அப்பாவுக்காகப் போட்ட டீயை இரண்டு கிளாஸ்களில் பகிர்ந்தாள். ஒன்றை சேதுவின் முன்பாக வைத்தாள்.

பத்மூ! இதைக் கூடத்தில் கொண்டுபோய் கொடு.

''அப்பா வேலையை விட்டு வந்துட்டாரா?''

அம்மா கேள்வியை கேட்பதாகவே காட்டிக் கொள்ளவில்லை.

அலுமினியப் பாத்திரத்தை ஒதுங்க வைத்தாள். டீப்பொடியும் சர்க்கரையும் கொண்ட பழைய டின்களை சுவரின் மூலையில் பலகை மேல் வைத்துவிட்டு, அம்மா அடுப்பங்கரைக் கதவின் பக்கத்தில் முழங்கையைச் சொரிந்துகொண்டு வெளியே பார்த்துக் கொண்டு நின்றாள்.

''உம், வேலையை விட்டு வரும்போது தங்கம் வேற கொண்டு வந்திருக்கார், தங்கம். என்னோட நாக்கும் பல்லும் ஒவ்வொண்ணும் வீழ்ந்துடக்கூடாதேன்னுதான் பிரார்த்தனை செஞ்சுக்கிட்டிருக்கேன்.''

அம்மாதான் கோபத்தை அடக்க ரொம்பவும் முயற்சி செய்கிறாள் எனத் தோன்றியது.

''பெண் பிள்ளைங்களோட தேவையை எல்லாம் நிறைவேத்திட்டுத்தானே வந்திருக்கார்?'' அவன் எடுத்துச் சொன்னான்.

''பேங்கிலே இருக்கும். அம்மாவுக்கு எப்படித் தெரியும்.''

அம்மாவைக் கோபம் முழுமையாக, ஆட்கொண்டிருப்பது போல் தோன்றியது.

''எனக்கு எதுக்கு சம்பாத்தியம்! எனக்கு ரெண்டாங்கெட்ட ஆளுகள்தானே இருக்கு?''

அப்பாவின் குரலேயும் பாவத்தையும் அனுசரித்துக்கொண்டு தான் அம்மா கூறினுள்.

சின்னம்மா ஒரு உலகவத்தும் கூறினுள்:

''அனுபவிக்க வேண்டியவங்களுக்கு யோகம் வேணும்!''

இதற்கு எவ்வளவோ விளக்கமுண்டு. உத்தியோகம் ஒண்ணு மில்லாமல் ஊரில் வீணே கழித்து வரும் மாதவமாமா நேந்திர வாழையும் கொள்ளிக்கிழங்கு விவசாயமும் செய்து, வடக்கு வீட்டுக்கு ஓடு போட்டிருக்கிருர். அவருடைய சிறிய தோட்டத்தில் நிறையப் புதிய தென்னங்கன்றுகள் வைத்திருக்கிருர்.

வீட்டுக்கு முன்னறையின் மேல் மாடியில் அப்பாவின் சட்டை யும் வேட்டியும் மாட்டப்பட்டிருக்கின்றன. அங்குள்ள பலகையில் தோல் பெட்டி வைக்கப்பட்டிருக்கின்றது. திறக்க முயன்றபோது பூட்டப்பட்டிருப்பது தெரிந்தது. கட்டிலின் அடியில் தேங்காய் நாரினுல் மூடப்பட்டிருந்த கண்ணுடி பாட்டில் அப்போதுதான் அவன் கண்களில் பட்டது. ஒரு பகுதி காலியாகியிருந்தது. அதை எடுத்துக் கவிழ்த்து வைக்கப்பட்டிருந்த கண்ணுடி கிளாஸை எடுத்து முகர்ந்து பார்த்தபோது அதிலிருந்து மது வாடை வீசியது.

இருமிக் கொண்டு அப்பா மேலேறி வரும் சப்தம் கேட்டபோது அப்பால் நகர்ந்தான். மாடிப்படியோரமாக ஒதுங்கி நின்று கொண்டான்.

அப்பா நின்று அவன் முகத்தை ஏறிட்டுப் பார்க்காமலே கேட்டார்:

''எப்போ ரிஸல்ட் வரும்?''

"ரெண்டு மாசமாகும்.''

தனிமை இன்பத்தில் இருந்த ஒரு இடமும் பறிபோய்விட்டதே என்ற மன வேதனையில் மிதந்தவனுகக் கீழே இறங்கி வந்தான்.

வெயில் மங்கலாக அடித்துக்கொண்டிருந்த முற்றத்தில் தளர்ந்தவனுக நடந்தான். அப்பா மீண்டும் கீழே இறங்கி வந்திருக்கிருர். மேல் துண்டு கொண்டு அடிக்கடி வாயைத் துடைத்தபடி சாய்வு நாற்காலியில் படுத்தபடியே முற்றத்தில் காரித் துப்பினுர்.

''பி.ஏ. வரை ஒருத்தனைப் படிக்க வைத்தால் இந்தக் காலத்திலே அது சின்ன விஷயமில்லே. சுற்று வட்டாரத்திலே எத்தனை பணக்காரங்க இருக்காங்க! எத்தனை பேர் தங்களோட பிள்ளைகளைப் படிக்க வச்சிருக்காங்க? பிள்ளைகளாலே உபகாரம் கிடைக்கும்'ங்கிறதுக்காக அல்ல இதெல்லாம் செய்யறது. எனக்கு அப்படி ஆசையேதும் இல்லே.''

மீண்டும் துப்பியபோது அது வராந்தாவில் விழுந்தது. எரிச்சலோடும் அருவருப்போடும் சேது பார்த்துக் கொண்டு நின்றான்.

அப்பா பேசவேண்டியது யாரோடு? தன்னோடவா? அம்மாவோடா? இந்த உலகத்தோடவா?

''ஒருத்தனைப் படிக்க வச்ச அனுபவம் எனக்குண்டு. அந்தக் காசைக்கொண்டு அன்று நான் ஒரு தென்னந் தோட்டம் வாங்கியிருந்தால் அது இன்று மாசம் நூறு ரூபாய்க்குக் குறையாமல் கொடுத்துக் கொண்டிருக்கும்.''

''மர உலக்கைதான் கெடைக்குது. அதுக்கு எங்களை ஏச வேண்டாம்.''

அம்மா நடுமுற்றத்துக்கு வந்தாள்.

அப்பா நிசப்தமாக இருந்தார். மூக்கைச் சிந்தியும், தொண்டையைக் கனைத்துக்கொண்டும் இருந்த இடத்திலேயே இருந்தார் என்றாலும், சாவதானமாக எழுந்து உத்திரத்தில் வைத்திருந்த செருப்புகளை ஓசையோடு கீழே போட்டுக் காலில் மாட்டிக்கொண்டு வெளியேறினார்.

வராந்தாவின் மேற்கு ஓரத்தில் இருந்தபோது கிருஷ்ணன் குட்டி கூறிய கடமை பற்றிய விஷயங்களை நினைவுபடுத்திக் கொண்டான். அப்பா அனுப்பித் தந்த பணத்தின் கணக்கெழுதி வைத்திருக்கிறான். மீண்டும் ஒரு முறை எடுத்துச் சரி பார்க்க வேண்டும். அப்பா மூலதனம் போட்டிருக்கார். வட்டிக்காக வேண்டி மாலை நேரங்களில் வீடுதோறும் ஏறி இறங்கும் வட்டிக்கார சேட்டுவின் சித்திரம்தான் இப்போது மனதில் தெளிவாகத் தோன்றியது.

''அப்பா''வைப் பற்றி பலரோடும் பேச வேண்டியதாயிருந்தது.

வீட்டு முகவரியைக் குறித்துக் கொண்டவர்களைப் பற்றி மிகுந்த பயத்தோடு நினைத்துக்கொண்டான்.

இங்கேயா டானியல் படியேறி வரப்போகிறான்!

ஹலோ மீட் மை ஃபாதர்!

திஸ் ஈஸ் மை மதர்.

என்னுடைய அப்பாவை அறிமுகப்படுத்திக் கொள்க.

இதுதான் என்னுடைய அம்மா!

தெற்கே உள்ளே இருந்த பலகை இருக்கைக்கு இடத்தை மாற்றிக்கொண்டான். ஒரு விளக்கு வேண்டும் என்று பத்மூவை அழைத்தபோதுதான் அம்மா கூறினுள்:

''பரீட்சை முடிந்து வந்துட்டே இல்லையா? ஒரு நாளைக்குப் படிக்கல்லேண்ணு ஒண்ணும் கெட்டுப்போயிடாது.''

ஒரு போத்தல் மண்ணெண்ணெய் வாங்கி நாள் மூணுயிடுச்சு. இன்னிக்கு ஒரு துளியாவது பாக்கியிருக்கா?

இருட்டில், அமைதியான நேரத்தில் கடபடவென ஓசை எழுப்பும் பலகை இருக்கையில் மல்லாந்து படுத்துக்கொண்டு சேது முணு முணுத்தான்.

''ஹோம், ஸ்வீட் ஹோம்!''

## [6]

மறு கரையிலிருந்து தோணி இழைந்து இழைந்து வந்து சேரும் வரை காத்திருந்தான்.

அப்போது மனதில் சட்டென்று ஒரு யோசனை உதித்தது. நினைக்கத்தக்க பயணங்களின் தொடக்கத்திலெல்லாம் தோணி மறு கரையில்தான் இருந்திருக்கின்றது. புகை வண்டி நிலையத்தில் வந்திறங்கி உச்சி வெயிலில் நடந்து மறுகரையை அடையும் போதோ? தோணியை துடுப்புக் கோலால் சிரமத்தோடு தள்ளவேண்டும்?

—இங்கு மட்டுமோ?

—இது என்னுடைய அனுபவம் மட்டுமா?

கிழக்கே போகும் வண்டி காத்து நிற்கும்போது போர்ட்டர் கூறினுன்: மேற்கே போகும் வண்டியோட கிராஸிங் இன்று இங்கே தான். மணியடிப்பதை கவனமாகக் கேட்டான். நல்ல வேளை கிழக்கே போகும் வண்டிதான் ''பிளாக்'' ஆகிறது. பேக்கைத் தூக்கிக்கொண்டான். முண்டியடித்து ஏறுவதற்குத் தயாராக நின்றபோது வண்டி வந்து நின்றது. இரண்டாவது லைனில் மேற்கே போகும் வண்டி ஆட்களைக் கக்கிவிட்டு ஏற்றிப்போகும் வரை யாரோடு என்றில்லாமல் பொறுமையாக காத்துக்கொண்டு நிற்கும்படியாகியது.

—எனது தோணி மறுகரையில், நான் போகவேண்டிய வண்டி இரண்டாவது லைனில்!

அடைக்கப்பட்டிருந்த லெவல் கிராஸிங்குக்கு முன்பாக பஸ்ஸில் வியர்த்துப்போய்த் தாகத்தோடு இருக்கும்போது, வருஷம் கழித்துத் திறப்பதுபோல் தோன்றும் வகையில் கேட்டு திறக்கப்பட்டதும் எதிர்ப்புறத்தில்தான். எதிர்ப்புறத்தில் அணி யணியாய் நிற்கும் வாகனங்கள் கடந்து போகும் வரை சோர்ந்து போயிருந்தான். தனக்குள் சொல்லிக்கொண்டான். ''நான் ஏறியதனுல்தான் போலும்.''

# VI

## [1]

ஒரு நாள் மாலை வடக்கு வீட்டிலிருந்து வழக்காடும் சத்தம் கேட்டது.

அம்மா சொன்னாள்: ''தொடங்கியாச்சு.''

வாக்கு வாதம்தான் ஆரம்பத்தில் கேட்டது. வார்த்தைகள் சத்தமாகவும் தடித்துக்கொண்டும் போவதுபோல் தோன்றியது. தேவுவின் சத்தம் உயர்ந்துகொண்டே போய் கூக்குரலாக மாறிய போது அத்தையின் சத்தம் உயர்ந்தது. அந்தச் சத்தங்களுக்கு இடையிடையே சுமித்திராவின் குரலும் கேட்டது. மாதவ மாமாவின் குரல் கூக்குரலாக இருந்தது. ''அடிச்சு நொறுக்கிடு வேன். நான் எல்லாத்தையும் அடிச்சு நொறுக்கிடுவேன்.''

கூக்குரல்கள் தேம்பல்களாக மாறின. வடக்குக் கதவுகளைத் திறந்து காதைத் தீட்டிக்கொண்டு சின்னம்மா எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்தாள். அவ்வப்போது அம்மாவிடம் விவரித்துக் கூறிக்கொண்டிருந்தாள்.

இறுதியில் எல்லாம் சாந்தமாகியபோது அம்மா மெதுவாகக் கூறினாள்: ''தனி வேலைக்காரனைப்போல ஆயாச்சு. ஒண்ணு இருக்கிறதுனாலேதானே இதுகளுக்கெல்லாம் செலவுக்குக் கொடுக்க வேண்டியிருக்கு.''

சேது வெளியேற பயப்பட்டான். பார்ப்பவர்களெல்லாம் கேட்கக்கூடிய ஒரே விஷயம்:

''உத்தியோகம் ஒண்ணும் ஆகலையா?''

''பார்த்துக்கிட்டிருக்கேன்.''

''என்ன 'லைன்'லே?''

அப்போது எதையாவது சொல்லவேண்டும். தப்பிக்கவேண்டி ரயில்வேயில் இல்லாவிட்டால் கஸ்டம்ஸில் என்று சொல்வான்.

அஞ்சலக அறையின் கதவுக்கருகில் நின்றுகொண்டு தபால்காரன் முத்திரை குத்தும்போது எட்டி எட்டி பார்ப்பான். ஆபீஸ் கவர்கள் இருக்குமா? அடுத்துக் கூப்பிடப்போவது தன்னுடைய பெயராகத்தான் இருக்கும் என்ற ஆசையை வெளியே

காட்டாமலே அலட்சிய பாவனையில் வெளியே காத்துக்கொண் டிருப்பான். இறுதியில், வெறுமனே நடக்கவேண்டிய இடங்களில் அஞ்சலகமும் ஒன்று என்றமட்டில் வெளியேறி நடக்கும்போது நெஞ்சிலும் நெற்றியிலும் வியர்வை பொங்கி பழுத்திருக்கும். ஆட்களின் கவனத்தில் படாதிருக்கவேண்டும் என்று பிரார்த்திக் கொண்டு தென்னங் கன்றுகளுக்கிடையே தணல் மிகுந்த இடங் களின் வழியே நடக்கும்போது எழும் கேள்வி,

''இல்லே, சேது மாதவனுக்கு உத்தியோகம் ஏதும்
கிடைப்பதாக இல்லே?''

பலருக்கும் உத்தியோகங்களைப் பற்றி தெளிவான கருத்துண்டு. ரயில்வேயில் வேலே பெற முயற்சி செய்துகொண்டிருக்கிறேன் என்ருல் பலருக்கும் திருப்தி ஏற்படுகிறது. நிறையப் பணம் பண்ணலாம். திருச்சூரிலோ தானூரிலோ ஸ்டேஷன் மாஸ்டர் வேலே கிடைத்தால் தினந்தோறும் நூறு ரூபாய் நம்மையறியா மலே நம் கைக்கு வந்து சேரும். பெரிய ஸ்டேஷன்களிலென்ருல் குட்ஸ் அல்லது பார்சல் செக்ஷனிலே வேலே இருக்கவேண்டும். நேரிடையாக வாங்கவேண்டாம்.

சாமான்களே ஏற்ற வருகின்றவர்கள் கொடுக்கும் மாமூலில் மாலேயில் எல்லோருக்கும் பங்கு கிடைக்கும். ரயில்வேயில் உத்தியோகம் பார்த்துப் பணம் திரட்டியவர்களின் கதைகள் பல வற்றையும் ஊரிலுள்ளவர்கள் சொல்லக் கேட்டிருக்கிருன்.

தேர்வு முடிவு வரும்வரை வேலே முயற்சிகளேப் பற்றிச் சொல் வதற்குச் சௌகரியமாக இருந்தது. தேர்வு மட்டுமே முடிந்து இருக்கிறது. தேர்வுப் பலன் தெரியவில்லே.

அஞ்சலக யாத்திரையை நிறுத்திக்கொண்டான். அப்படி ஏதாவது இருந்தால் அடுத்த நாள் காலேயில் டெலிவரி ஏஜெண்ட் கொண்டு வந்து கொடுப்பான். தேர்வு முடிந்து வந்த சமயத்தில் நண்பர்களின் கடிதங்கள் நிறைய வந்தன. நாளடைவில் கடித வெள்ளங்கள் குறையலாயின. தேர்வு முடிவு வந்தவுடனேயே பாராட்டுகள் வரலாயின. வெற்றி பெற்றவர்கள் தங்கள் திட்ட நடவடிக்கைகளேப் பற்றி எழுதியிருந்தார்கள்.

பாராட்டுரைகளேப் படித்தபோது எவ்வித வேறுபாடும் தோன்றவில்லே. முதல் பிரிவிலும் இரண்டாம் பிரிவிலும் இரண் டாம் வகுப்பில் வெற்றி கிடைத்துள்ளது. முக்கியப் பாடத்தில் மூன்ரும் வகுப்பே கிடைத்துள்ளது.

கிருஷ்ணன்குட்டி வெற்றி பெற்றுள்ளான். வகுப்பு ஏதும் கிடைக்கவில்லே. கிருஷ்ணன்குட்டியிடமிருந்து கடிதம் ஏதும்

வரவில்லை. கிருஷ்ணன்குட்டிக்கு எழுதவேண்டும் என்று எப்போதும் ஒத்திப்போட்டுக்கொண்டே வந்தான். ஆகட்டும் கிருஷ்ணன்குட்டிக்கு எழுதும் கடிதம் வேலை பார்க்கும் இடத்திலிருந்து எழுதப்பட்டதாக இருக்கவேண்டும் என்று எண்ணிக் கொண்டான்.

தங்கமணியின் கடிதங்கள் தவறாமல் வந்தன. பதில் எழுத ஒவ்வொரு வாரமும் நாலணு வேண்டும். இனி அப்ளிகேஷன் அனுப்பவேண்டும். ஒரு ரூபாய் வேண்டும், இரண்டு ரூபாய் வேண்டும் என்று கேட்கும்போது எல்லாம் அம்மா தருவாள். சர்டிபிகேட்டுகளின் பிரதிகள் 'அட்டஸ்டு' செய்துகொள்ள ஆறு மைல் போகவேண்டும். ஆறு மைல் தூரத்தில்தான் 'கெஸட்டட்' ஆபீசர் இருக்கிறார். அவர் கவர்ன்மெண்ட் ஆஸ்பத்திரி மருத்துவர். அம்மா எவ்வித எதிர்ப்பும் காட்டாமல் இச் செலவுகளுக்குப் பணம் தந்துகொண்டிருந்தாள். கொஞ்ச நாளைக்குப்பின் ஒரு சமயத்தில் அம்மா கேட்டாள்:

''நேத்துத்தானடா நீ சர்டிபிகேட் வாங்கணும்'னு சொல்லிப் போனே?''

''அதுவேறே? இதுவேறே? இல்லையா?''

அம்மாவின் முகம் மாறுவதைக் கண்ணுற்றான். உத்தியோக விஷயமாக இருப்பதனால் அதை எதிர்த்துப் பேசும் தைரியம் அம்மாவுக்கு ஏற்படவில்லை.

தேர்வு முடிவு தெரிந்த பிறகு ஒருமுறை தங்கமணியை நேரில் பார்த்தான்.

உத்தியோக விஷயமாக அப்பாவோடு பேச வேண்டியிருந்தது. அம்மாவிடம் சொன்னபோது கேட்டார்:

''தோட்டத்தில் எல்லாமே ஆயிடிச்சா?''

''ஆயிடிச்சு.''

வழிச் செலவுக்குத் தர பணமில்லை. பத்மூவைப் பணத்துக்காக இல்லத்துக்கு அனுப்பினார்கள். இல்லத்திலும் பணமில்லை. அக்கம் பக்கத்திலுள்ள பெண்களிடம் எல்லாம் கேட்டுப் பார்த்தாயிற்று. சின்னம்மாவின் ஆலோசனைக்கிணங்க ஆந்துரை மீனாட்சியம்மாவின் வீட்டிற்கு பத்மூவை அனுப்பினார்கள். களத்தில் விலை கூடிய காரணத்தால் ஆந்துரைக்காரர்களின் கையிலெல்லாம் இப்போது காசு வேண்டிய அளவு உண்டு என்ற சின்னம்மாவின் கணிப்பு சரியாகவே இருந்தது.

நாளைக்கு வேண்டாம், இன்னும் இரண்டு நாள் கழித்துப் போனால் போதும் என்று அம்மா கூறிவிடுவாளோ என்று பயந்தான். காரணம் அப்பாவின் வீட்டிற்கு வரும் விவரத்தை முன்னதாகவே தங்கமணிக்கு எழுதியிருந்தான். அதனால் அவள் காத்துக்கொண்டு நின்றாள். அங்கு சென்றபோது தங்கமணியும் உண்ணியும் வந்து சேர்ந்திருந்தார்கள்.

உண்ணியிடம் கேட்டான்:

''நீங்க எப்ப வந்தீங்க?''

''காலையிலே.''

நளினியின் கண்களும் மற்ற பெண்களின் பார்வையும் தன்னை நோக்கியே திரும்பி இருப்பதை உணர்ந்தான். அதனால் தங்க மணியை விட்டுச் சற்று விலகி நின்றான். மாலையில் ரவியுடன் வீட்டுக்கருகில் இருந்த மரத்தடியில் வெறுமனே பேசிக்கொண் டிருந்தான். அப்போது மேற்கு முற்றத்து உரல் மேட்டின் முன்பாக வாடிய மடலையும் ஓலையையும் பின்னிக்கொண்டிருந்த ஆசாரிப் பெண்ணிடம் பேசிக்கொண்டு தங்கமணி நிற்பதைக் கண்டான்.

வராந்தாவிலும் முற்றத்திலும் அவள் நடக்கும்போது அவளது சலனங்களை சிரத்தையோடு கவனித்தான். அதிர்ஷ்டவசமாகக் கிடைத்த ஒரு நிமிடம் சட்டென்று மறையலாயிற்று.

''மாடி சிம்னி விளக்கில்—எண்ணெய் இருக்கா'ன்னு பார்த் தியா? துடைச்சு எத்தனையோ நாளாச்சு. நளினி—என் தலைவலி தொடங்கியாச்சி. எனக்கு ஏனோ இந்தக் கஷ்டம். தங்கம் போயி அதை எடுத்துக்கிட்டு வாம்மா.''

ரவியிடம் கூறினான்:

''ஆங், நான் ஒன்றை மறந்துட்டேன். நான் உனக்கொரு பொருளைக் காட்டறேன்.''

உண்ணி உடன் வரப் புறப்பட்டபோது அவனிடம் ஒரு வேலை யைச் சொன்னாள்:

''அப்பாவோட அறையில் நேத்தைய கடிதாசி இருக்கு. அதைக் கொஞ்சம் எடுத்து வா உண்ணி.''

ரவிக்குக் காட்டவேண்டிய பொருளை எடுத்து வருவதற்காக உள் வராந்தா வழியாகக் கடந்து சென்றான். கீழ் தளத்தில் நல்ல வேளையாக யாருமில்லை. வெளி வராந்தாவில் இருந்தபடி பெரியண்ணன் நளினியைத் திட்டிக்கொண்டிருந்தார்:

''உன் தலைவலியை யாரு பார்க்கணும்'டி நீ மூஞ்சியையும் முகரையையும் காட்டறே?''

ஓசை இல்லாமல் கோணிப் படிகளில் ஏறி அண்ணி அறையின் வாசற் கதவருகில் காத்து நின்றபோது கோணிப் படிகள் மீண்டும் சத்தம் எழுப்பியது.

தங்கமணி.

நீட்டிய கைகளுக்குள் அபயம் தேடிய பறவைக் குஞ்சைப் போன்று அவள் பறந்து வந்து வீழ்ந்தது போலானுள்?

''கடிதங் கிடைச்சுதா?''

''காலையிலே கிடைத்தது. அப்பவே புறப்பட்டுட்டேன்.''

''நான் நாளை போறேன்.''

''வீட்டிலே வரலையா?''

''இம்முறை தங்கம் வரலை.''

''எவ்வளவு நாளா காத்திருக்கேன் தெரியுமா? அப்போ, என்மேலே உனக்கு இஷ்டமில்லே. அப்படித்தானே?''

சின்னப் பிள்ளையைப் போலவே தான் அவள் இப்போதும் பேசுகிருள்:

அவள் கண்கள் நனைவதுபோல் தோன்றியது.

''வர்றீயா'ன்னுதானே கேட்டேன்? தங்கத்தோட எண்ணம் உனக்குத் தெரியலே?''

கழுத்தெலும்பை மெதுவாகத் தடவினுன்.

வேதனைக் குரலில் கூறினுள்:

''வெறுமனே ஆட்களைக்கொண்டு சொல்லச் சொல்லணுமா? எதையும் கேட்க நான் தயாராக இருக்கேன். ஆனுல், தங்கத்தைப்பற்றி ஆட்கள் அதையும் இதையும் சொல்வது—''

முகத்தைத் திருப்பாமல் கண்களை வலது பக்கமாக உருட்டி நிறுத்தி எதையோ சில நிமிஷங்கள் உறுத்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் முன்பாக கண்ணீர் உருண்டோடுவதைப் பார்க்க விரும்பியவனுய் நின்றுன்.

அப்போதுதான் வெளி வராந்தாவில் காலடி ஓசை கேட்டது. சட்டென்று விலகி நின்றுர்கள். உள்ளே நளினிதான் வந்தாள். வெறுப்புக் கலந்த கோபம் வந்தது. பூனையைப்போல ஓசை உண்டாக்காமல் கோணிப் படி ஏறி வந்திருக்கிருள்.

''தலைவலி தொடங்கியாச்சு.''

யாரோடு என்றில்லாமல் சொல்லியபடி சேதுவை உராய்ந்த படி அவளது அறைக்குள் போகும்போது தங்கமணியோடு ஏதும் பேசாமல் கதவு நிலையைத் தாண்டிச் சென்றாள்.

தன்னைத் தானே குற்றப்படுத்திக்கொண்டான்.

''எடுக்கணும், சேது அத்தான்?''

அப்போது தான் சொல்லியிருந்த பொய்யை நினைத்துக் கொண்டான், திருத்தினான்.

''ஒரு போட்டோ காட்டறேன். போகும்போது எடுக்க மறந்துட்டேன்'னு நினைக்கிறேன்.''

மாலையில் மாடி வராந்தாவிலிருந்து அப்பா கூப்பிட்டுக் கேட்டார்.

''சேதுமாதவன் குளிச்சாச்சா?''

''குளிச்சுட்டேன்.''

''நீ அங்கேயே படுத்துக்கோ—''

அப்பாவின் அறையில், அதற்கு ஒன்றும் கூறவில்லை.

கீழே இறங்கிவந்து அப்பா முற்றத்தில் நடக்கத் தொடங்கிய போது இருக்கைக் கல்லின் தூணில் சாய்ந்தபடி நின்றான். அப்பா ஏதாவது சொல்வார் என்று கருதினான்.

''மதராஸ் விஷயம் என்னாச்சு?''

''பதில் வரலை.''

''உம்''

சிறிது நேரம் கழித்து உத்தியோகம் விஷயம் முடிவடைந்து விட்டது என்று எண்ணிக்கொண்டிருக்கும்போது கேட்டார்: ''என்னது?''

''டி. பி. ஐ. எஜுகேஷன் டிபார்ட்மெண்டில் டியூட்டர் போஸ்ட் கிடைத்தால் இரண்டு வருஷம் வேலை செய்தால் பிறகு பிரைவேட்டாகவும் எம்.ஏ.க்கு எழுதலாம்.''

''நல்ல நல்ல டிபார்ட்மெண்ட் எத்தனை கெடக்கு? அங்கேயெல்லாம் ஒண்ணும் செலக்ஷன் ஆகலையா?''

அப்போது உள்ளூறப் புகைந்து கொண்டிருந்த ஒரு விஷயம் வெளிவந்தது. 'வாண்டட்' காலம் பார்க்க ஒரு ஆங்கிலப் பத்திரிகையை வரவழைக்கவேண்டுமென்று சொன்னபோது சம்மதிக்கவில்லை. பரமேஸ்வரன் பார்ப்பார். ஏதாவது விசேஷம்

உண்டென்றால் பரமேஸ்வரன் எழுதி அறிவிப்பார். என்றாலும் எல்லா மாலை நேரங்களிலும் வயல் வரப்புகளில் காத்து நிற்பான். மூன்று நாட்கள் இங்கிலீஷ் பத்திரிகையை எடுத்துக்கொண்டு ஹையர் எலிமென்டரி ஸ்கூல் ஆசிரியர் கிருஷ்ணன் போகும்போது அவரைத் தடுத்து நிறுத்தி வாங்கிப் பார்ப்பது உண்டு.

கொஞ்ச நாள் கழிந்த பின்னர் அப்பாவுக்கு நினைவூட்டினான்:

''அப்ளை செய்வதனாலே மட்டும் இக்காலத்தில் காரியம் கைக் கெட்டுவதில்லை. யாராவது தங்கள் செல்வாக்கைப் பயன்படுத்திச் சிபார்சு செய்யணும்.''

சாயபுவின் தேயிலைத் தோட்டத்தில் ஒரு கிளார்க் வேலை கிடைத்தால் போதும். நூற்றைம்பது ரூபாயாவது தொடக்கத்தில் சம்பளமாகக் கிடைத்துவிடும். தெரிந்தவர்கள் யாருக்காவது அப்பா எழுதினால்? அப்பாவின் மனதில் படட்டும் என்று கருதித்தான் சொன்னான்.

இரவில் அப்பாவோடு சாப்பிட அமர்ந்தான். நளினி அண்ணி தளத்தைக் கடந்து செல்லும்போது இலையிலிருந்து தலையை உயர்த்தாமலே இருந்தான்.

சாப்பாடு முடிந்து முற்றத்துக்கு வந்தபோது வராந்தாவின் ஓரத்து வெளிச்சத்திலிருந்து சற்று அகன்று அமர்ந்து இருந்தான். நளினி அண்ணி தேடி வந்து கண்டுபிடித்தாள்.

''ஏன் இருட்டிலிருக்கே?''

''ஒண்ணுமில்லே.''

''விளக்கை அங்கே கொண்டு வரட்டுமே?''

''வேண்டாம்.''

அவள் கீழே நிலத்தில் திறக்கப்பட்ட ஜன்னல் கதவுக்குக் கீழாக இருந்த சுவர்க்கட்டையோடு தலையைச் சேர்த்து வைத்துக் கொண்டாள். அவளுக்கு எத்தனையோ விஷயங்களைச் சொல்ல வேண்டும்போல் தோன்றியது.

சேது மெதுவாக எழலானான்.

''நேரத்தில் போய்ப்படுக்கிறேன்.''

''என்ன உடம்புக்குச் சுகமில்லையா?''

''தலைவலி.''

நளினி அண்ணி சிரித்தாள்.

''எனக்கு எப்போதும் தலைவலிதான். சும்மா அப்படியொரு மனப்பிரமைன்னு அம்மா சொல்லுவாள். வீட்டு வேலை

யைச் செய்யாமலிருக்கச் சொல்லும் பொய் என்பதுதான் சின்னம்மாவின் அபிப்பிராயம்.''

அண்ணியின் அறை காலியாகக் கிடந்தது. என்ருலும் மாடி வெளியறையில் அப்பாவின் கட்டிலுக்குக் கீழாக படுக்கை விரித் திருப்பது அப்பா கூப்பிட்டுச் சொல்லியதனுலோ என்னவோ? உள்ளே தங்கமணி இருப்பதனுல் எல்லோரும் சேர்ந்தே தீர்மானித் திருப்பார்களோ?

உண்ணி ரவியுடன் சேர்ந்து முற்றத்தில் படுத்திருக்கிருன். ரவியை அவனுடன் படுக்க வைக்குமாறு கூறியிருக்கிருர்கள்.

அப்பா படுக்கும் அறையின் உள்ளே சென்றபோது ஸ்ரீ கிருஷ்ணன் ஓவியத்துக்கு முன்பாக மாலையில் வைக்கப்பட்ட விளக்கில் எரிந்து அணைந்துபோன திரியின் ஒருவித வாடை அப் போதும் அங்கு தங்கியிருந்தது. அதோடுகூட ஊதுபத்தியின் சுகந்த மணமும் வீசிக்கொண்டிருந்தது.

உறக்கத்தின் பிடியில் முழுமையாக மூழ்கிவிட்டார் என்று தோணுகின்றபோது அப்பா படுத்திருக்கும் கட்டில் அசையும். அப்படி இடையிடையே புரண்டு படுத்துக்கொண்டிருப்பார். ஏதோ முணுமுணுப்பு ஓசை. உறக்கத்தில் ஒருவேளை பிரார்த்திக் கிருரோ?

''அம்மே குருவாயூரப்பா.''

''ஈஸ்வரா.''

உடனே திடுக்கிட்டுக் கண்விழிப்பார். காலையில் முகம் கழுவிச் சட்டையை எடுத்து அணிந்து முதல் நாள் அணிந்திருந்த சட்டையையும் வேட்டியையும் பையில் திணித்து வைத்துவிட்டு அப்பாவிடம் சொன்ஞன்.

''நான் போகட்டுமா?''

''நாளைக்குப் போகலாம். என்ன அவ்வளவு அவசரம்?'' குரல் தொனியைக் கேட்டபோதுபோனுலும் போகாவிட்டாலும் வேறு பாடு ஏதும் ஏற்படப்போவதில்லை எனத் தோன்றியது.

''தபாலில் ஏதாவது 'இன்ஃபர்மேஷன்' வரும்.'' அதன் பிறகு கட்டாயப்படுத்தவில்லை.

வழிச் செலவுக்கு ஐந்து ஒற்றை நோட்டுகளை எடுத்துக்கொடுத் தார். படியிறங்கும்போது சொன்ஞர்:

''வர்ற வாரம் நான் வர்றேன்.''

பலகாரம் தயாராகிக் கொண்டிருந்தது. சாப்பிட்டுவிட்டு போக வேண்டுமென்று நளினி அண்ணியும் அப்பா பெண்களும் வற்புறுத்தினர்கள்.

ஒன்பதரை மணி பஸ்ஸைப் பிடிக்கவேண்டும். வழியில் ஒன்றிரண்டு சர்டிபிகேட்டுகளைச் சரி செய்து இன்றையத் தபாலில் சிலவற்றை ரிஜிஸ்டர் செய்து அனுப்பவேண்டும். இன்னும் என்னென்னவோ எல்லாம் சொன்னன்.

வெறும் சாயா குடித்தான். யாரிடமும் ஏதும் பேசாமல் படியிறங்கினன். இடைவழியினூடே நடந்து போகும்போது உரல் மேடைக்குப் பின்னல் களஞ்சியத்தின் அடியில் தங்கமணி நின்றுகொண்டிருப்பதைக் கண்டான்.

[2]

ஒரு வாரம் கழித்து அப்பா வீட்டிற்கு வந்தபோது வழக்கம் போலக் கேட்டார்:

''உன்னுடை, அப்ளிக்கேஷன் என்னுச்சு?''

''எந்த அப்ளிக்கேஷன்?. எங்கெங்கேயோ அனுப்பப் பட்டிருக்கு.''

''ஒண்ணும் ஆகலையா?''

குன்னத்துப்பரம்பில் அப்பு நாயர் ஒரு செய்தி கொண்டு வந்தார். ஹைகோர்ட் ஜட்ஜ் நாராயணன்மேனன் வீட்டிற்கு வந்திருக்கிருர். நல்ல மனிதர். அவர் பலபேருக்குச் சிபார்சு கடிதங்கள் கொடுத்திருக்கிருர்.

அப்பு நாயருடைய அண்ணன் ஜட்ஜ் வீட்டுக்காரியம் பார்ப் பவர். அவர் ஜட்ஜிடம் சிபார்சு செய்யச் சொல்லியதால் பல பேருக்கு உத்தியோகம் கிடைத்திருக்கிறது.

''அவரை எனக்கு ரொம்ப நல்லாத்தெரியும். அவருக்கு நான் கற்றுக்கொடுத்திருக்கிறேன்.'' இவ்வாறு அப்பா அவ்வப்போது சொல்லக் கேட்டதுண்டு. பள்ளிக்கூடக் காலத்தைப் பற்றிச் சொல்லும்போதெல்லாம் அப்பா ஜட்ஜ்மேனன் தனது மாணவராக இருந்த கதையைச் சொல்வார்.

அப்பு நாயர் அறிவுறுத்தினர்.

"அண்ணன் காலையில் நேரத்திலேயே எழுந்து போவார். அதுக்கு முன்னதாக அங்கே வந்தாப்போதும். அண்ணன் கூடவே போனுல் அதையெல்லாம் வேணுங்கிறபடி செய்து முடிப்பார்.''

அப்பாவும் அப்பு நாயரும் சேர்ந்து ஜட்ஜ்மேனனின் அதிர்ஷ்டம், தருமம், பரோபகார விருப்பம் முதலான பல விஷயங்களைப் பற்றிப் பேசத் தொடங்கியபோது சேது அங்கிருந்து கிளம்பினான்.

வெறுமனே குறுக்கு வழி ஏறி குன்றின் பக்கமாகச் சென்றான். தூரத்தில் பாலத்தின் மேலே கடந்து சென்றான். ரயில் வண்டியில் சிவப்பு நிறத் தபால் பெட்டியைக் கண்டான். மெயில் தாமதமாக வந்திருந்தது. இன்றைய தபாலில் ஏதாவது வரும்.

ஒவ்வொரு நாளும் நினைப்பதுதான் . . . காலையில் டெலிவரி ஏஜென்ட் குட்டி நாராயணன் போவதை கமுகுத் தோட்டத்தின் மர இடைவெளிக்கிடையே பார்த்துக்கொண்டு நிற்பான்.

முகவரி தெரிந்த கம்பெனிகளுக்கெல்லாம் விண்ணப்பம் அனுப்பப்பட்டிருக்கிறது.

எழுதி எழுதி விண்ணப்ப வாசகங்கள் ஒரே மாதிரி ஆகியிருக்கின்றது. ஒரு நிமிஷங்கூட யோசனை செய்யாமல் விண்ணப்பத்தை எழுதி முடித்துவிடுவான்.

''ஹேவிங் கம்டு அண்டர்ஸ்டேன்ட் தட்தேர் ஆர் ஃப்யூ வேகன்ஸீஸ் இன்யுவர் கம்பெனி, ஐ பெக்டு—''

சிலர் தங்கள் இயலாமையை வருத்தத்தோடு தெரிவிக்கும் அச்சடித்த கார்டுகளை அனுப்பினார்கள். சாயபுகளின் கம்பெனிகள் தாம் அவை. காத்திருப்பதற்கும் ஒரு எல்லையைச் சுட்டிக்காட்டும் பெருந்தன்மை இவர்களிடம் தான் காணப்பட்டது.

நாவல் மரக் கூட்டத்தைக் கடந்து சென்றான். பாதையைக் கடந்து, மேலே சென்று கடும் பாறைகளின் மேல் ஏறி நின்றான், தூரத்தில் புல்மூடிக் கிடந்த மேய்ச்சல் நிலங்கள் வேலி போடப்பட்டு சர்க்கரைவள்ளிக்கிழங்குத் தோட்டங்களாக மாறியிருந்தன. காயும் வெயிலின் ஒளிக்கற்றைகள் கால் நடைகள் மேயும் குன்றின் சரிவில் சக்தியிழந்து ஒடுக்கிக் கொண்டிருந்தன.

பாறையின் மேலிருந்து இறங்கி வேட்டியை மடித்துக் கட்டி திரும்பி நடந்தான். பாதையையடைந்து நாவல் மரக்கூட்டத்தை அடைந்தபோது கேட்டது:

''என்னிக்கு அப்பாட்டே இருந்துவந்தீங்க.''

சுமித்திராதான்.

மங்கிய வெளிச்சத்தில் அவளை நோக்கினான். சுமித்திரா கருத்துப் போயிருக்கிறாள், புள்ளிபோட்ட ஜாக்கெட்டிற்கு வலிவு அதிகம் போல் தோன்றியது.

''வெள்ளிக்கிழமை திரும்பினேன். சுமித்திரா எங்கே இப்படி?''

''நான் மாணியோடு போயிருந்தேன்.''

சுமித்திராவின் விழித்தடங்களில் கறுத்த நிழல்கள் வீழ்ந்து கிடப்பதுபோல் தோன்றியது.

''சேதுவைப் பார்க்கவே முடியலையே.''

ஏதும் பேசாமல், நின்று சிரிக்க முன்முன், என்ருலும் விஷயத்தை மாற்ற வேண்டிக் கேட்டான்.

''கலகமெல்லாம் எப்படி இருக்கு?''

''சேது இப்பத்தானே கேட்கிறே? அது இப்ப வழக்கமான ஒண்ணுச்சே?''

''நான் பல சமயங்கள்லே பொறுத்துக்கிட்டு போயிடுவேன். பேசாமல் இருந்தால்கூட அக்கா வக்காலத்து வாங்கிக்கிட்டு வந்தா என்ன செய்யறது? குறைகண்டபோது நானும் எதிர்த்து ஏதாவது பேசிடுவேன்.''

''உங்கிட்டே என்ன அக்காவுக்கு?''

''எனக்குத் தெரியலே?''

சேது பதிலேதும் பேசவில்லை.

''இப்பல்லாம் தபாலாபீசுக்குப் போறதில்லே?''

''எதுக்காக?''

''இல்லே சும்மா கேட்டேன். தபாலுக்காகப் போனு, நான் பார்ப்பேன். படியிறங்கி நின்னுல்கூடச் சேதுவைப் பார்க்க முடியறதில்லை.''

இயலாமையைத்தான் சுமித்திரா கூறினுள். ஆனுல், வார்த்தைகளில் தென்பட்ட பரிவு சேதுவுக்கு மீண்டும் கேட்கவேண்டும் போலிருந்தது.

''சுமித்திரா நிற்பதை நான் பார்க்கலே.''

''உம் கண்டிருக்க மாட்டீங்க.''

நாற்றங்கால்களிலும் நாவல் மரத்தோப்பிலும் இருள் கவியத் தொடங்கியிருந்தது.

''சேதுவுக்கு என்ன உத்தியோகம் கிடைக்கவிருக்கு?''

''முயற்சி செஞ்சுக்கிட்டிருக்கேன்.''

''ஆண்கள் வெளியூரிலோ எங்கேயோ போயிடுவாங்க. அது தானே பெரிய காரியம்?'' நடந்து சேதுவின் முன்பாகக் கடந்து

திரும்பிப்பார்க்காமலே சுமித்திரா கேட்டாள். ''உத்தியோகம் கிடைத்துப் போகும்போது, சேது கூட நானும் வரட்டுமா?'' அவளுடையமுகத்தைக்காணவில்லை. சுமித்திரா விளையாடுகிறுளோ?

''ஏ, பின்னே?''

''நான் காரியமாத்தான் கேக்கிறேன். மனசிலுள்ளதை சொன்னுல் போதும். சமைக்கவும் பரிமாறவும் மற்றபடி கவனித்துக்கொள்ளவும் உரியவங்க ஒருத்தர் வேணுமில்லோ?''

எல்லாம் தமாஷ் எனக்கொண்டு உரக்கச் சிரிக்க இயலாதபடி ஏமாற்றமாகத் தோன்றியது.

மங்கிய இருளில் பரஸ்பரம் அருகருகே நடந்தார்கள். சேது வுக்கு தான் வழிமாறி நடக்க வேண்டிய இடம் வந்தபோது திரும்பி நின்முன்.

சுமித்திரா அருகிலிருந்தாள். மிக மிக நெருக்கமாக நின்முள். காய்வதற்கு முன்பு பகலில் எப்போதோ முடிந்த தலே முடியினுடை யவும் வியர்வையினுடைய ஒருவித வாடை அடித்துக் கொண்டிருந்தது.

அப்போது அவன் வியப்போடு நினைவுகூர்ந்தான். ரத்தத்தில் நரம்புகளில், மயிர்க்கால்களைக் காணும்போது தீ ஜ்வாலையைப் போலிருந்தாள், சுமித்திரா முன்பு. இல்லே தன்னை அடுத்து சுமித்திரா நிற்கும்போது சலனமேதும் ஏற்படவில்லே. இதயத் துடிப்பு அதிகரிக்கவில்லே.

ஏதேதோ நோக்கில் அவளேத் தட்டினுன்.

''போகட்டுமா?''

இடது கையின் இரண்டு விரல்களைக் கூட்டிப் பிடித்து சுமித்திரா கூறினுள்.

''எப்ப பார்க்கிறது?''

''பார்க்கலாம்.''

''எப்போ?''

''பார்க்கிறதுக்கான சந்தர்ப்பம் வாய்க்க வேண்டாமா?''

அவள் கையை விடவில்லே, நடந்தபோது ஏதோ ஒருவித இன்பவேதனை. அதோடு கூடவே நடந்தாள். அழிந்து கிடக்கும் தோட்ட வேலியைக் கடந்து சென்றனர். புல்பூண்டுகளுக்கிடையே நடந்தபோது கையை விடுவிக்க முயற்சிக்கவில்லே. பழைய தேக்கு மரம் இலேகளே உதிர்த்து ராட்சதனின் உருவமாக நிற்பதைக் கண்டாள். அதன் அடியை அடைந்தபோது கீழே எங்கேயோ

இருந்து பொட்டக்காவளைப் பூக்களின் நறுமணம் காற்றில் கலந்து பரவிக்கொண்டிருப்பதுபோல் தோன்றியது. சுமித்திராவின் பிடியை விடுவித்துக் கொண்டான். ஒரு கையால் அவளைச் சுற்றிப் பிடித்து மெதுவாகக் கன்னத்தில் தட்டிக் கூறினான்:

''நேரம் இருட்டாகிவிட்டது, சுமித்திரா நடந்துபோ.''

சுமித்திரா — சிரித்தாள்.

''உம், அது எல்லாம் நடக்க முடியாது'ன்னு உங்களுக்கே தெரியும்.''

அவள் தன்னையே புரிந்துகொள்ளத் தொடங்குகிறாள் என்பதை உணர்ந்தபோது சேது திகைப்படையலானான். வெறி உணர்வு கலந்த கருத்தோடு அவளை இறுகப் பற்றிப் பிடித்தான்.

''என்ன சொன்னே! என்ன சொன்னே!''

அர்த்தமற்ற முறையில் பலவற்றைக் கூறினான்.

அவள் அவைகளைக் கேட்கிறாளோ?

உதிர்ந்த இலைகள் வீழ்ந்து கிடக்கும் ஈரப்பசையுள்ள மண்ணில் அவளைப் பிடித்துக் கீழே தள்ளியபோது அவள் மறுப்பேதுங்காட்டவில்லை.

தேக்குமரத்தில் ஒட்டியிருந்த மழைத்துளிகள் காற்றின் வேகத்தால் மொத்தமாகக் கீழே பொழிந்து வீழ்ந்தன. ஆவேசம் ஏற்படவில்லை. மனதில் வெறி உணர்ச்சியே நிறைந்திருந்தது.

கீழே முள் இருப்பதுபோலத் தேன்றியது. ''சேது, நில்லு.''

சேது அதைக் கேட்டதாகவே காட்டிக் கொள்ளவில்லை.

எங்கேயோ இருந்து திடீரென வீசிய பெரும் காற்றில் சுற்றியிருந்த கிளைகளும் செடிகளும் ஆடி ஒலி எழுப்பின.

தேக்க மரத்தோடு சாய்ந்து நின்ற சுமித்திராவிடம் நிசப்தம் பயணம் கூறிக்கொண்டது.

ஏதும் பேசாமல் அவள் இருட்டினிடையே இறங்கிப் போவாள் என்று கருதினான்.

கை முட்டைத் தடவிக்கொண்டு அவனையடுத்து வந்து இருட்டில் தனது முகம் தெரியாதபடி உடம்பை அணைத்தபடி நின்று சுமித்திரா கேட்டாள்.

''ஏன் அப்பாவோடு வேகமாகத் திரும்பீட்டிங்க?''

''ஒண்ணுமில்லே.''

''புஷ்போத்து போயிருந்தீங்க, இல்லையா?''

''உம், உம்.''

''பின்னே இல்லியா?''

''உம்?''

''யாருக்கும் தெரியாதுன்னுதானே இருக்கீங்க?''

''என்ன தெரியும்?''

உள்ளூர அப்போது இன்பவேதனையாக இருந்தது, சுமித்திராவுக்குத் தெரியும். இனி நான் வஞ்சிக்கப்பட்டுவிடுவேன் என்று சொல்ல அவளால் முடியவில்லை. ஒரு குற்றத்திலிருந்து விடுபட்டு விமோசனம் கிடைத்த ஆறுதல் தோன்றியது.

''தங்கமணியிடம் இதையெல்லாம் செய்வீங்களா?''

''வெறுமனே எதையாவது பேசவேண்டாம்.''

''அடிக்கப் போவதுபோல் கையை ஓங்கிக் காட்டினன்.''

''நேரமாயிடிச்சு சுமித்திரா போகவேண்டாமா?''

வேகமாக அவள் போவதை காத்து நின்று பார்க்காது நடந்தான். அழிந்து கிடந்த வேலியின் பாதையைக் கண்டுபிடிக்க இருட்டில் பெரும் பிரயாசைப்படும்படி ஆகியது.

முற்றத்தில் அப்பா நடப்பதைக் கண்டபோது வழிமாறிச் சென்றான். இல்லத்தின் குளத்தில் காலையும் முகத்தையும் கழுவிக்கொண்டு வரும் பாவனையில் தெற்குப் பக்கமாக இருந்து படியேறி உள்ளே போகும்போது அப்பா சொன்னர்:

''காலையில் ரொம்ப சீக்கிரம் எழுந்திருக்கணும் வெயிலேறதுக்கு முன்னடியே போகணும்.''

''எங்கே?''

''அக்கரைக்கு மேனன் கிட்டே போய்ச் சொல்லணும். இனி அதில்லாம முடியாது.''

உள்ளே இருட்டு கவிழ்ந்து கிடக்கும் அறையின் வாசற்படியை அடைந்தபோது காதில் கேட்டது.

''படிக்க வைச்ச ஒவ்வொண்ணையும் கரையேத்தினு மட்டும் போதாது. உத்தியோகம் தேடிக்குடுக்கணும். ஒவ்வொண்ணுக்கும் நான்தான் வேணும். அவனவனுக்கு, அவங்கவங்க காரியத்தைக் கவனிக்கத் தெரியவேண்டாம்? உத்தியோகத்தை யாரும் கையிலே கொண்டு வந்து தரப்போவதில்லை.''

அம்மா முற்றத்திலிருந்து வந்தபோது சொன்னன், ''அப்பா போனப் போதும், நான் போகல்லே.''

"அது சரி, அவர் போகட்டும். நீ நடுவீட்டிலே உட்கார்ந்து படிச்சுக்கிட்டு மூக்கு முட்டச் சாப்பிட்டு உட்கார்ந்திரு.''

ஆத்திரத்தில் உரக்கக் கூச்சலிட்டு கூறியபடி அம்மா போனுள்.

திறந்த கதவை ரோஷத்தோடு, தள்ளித் திறந்து உள்ளே சென்ருன்.

[3]

படி இறங்கும்போது அப்பா கேட்டார்:

''சர்டிபிகேட்டு எல்லாம் எடுத்துக்கிட்டியா இல்லே—எடுத் துக்கறணுமா?''

அப்பா ஏதோ வெறுப்போடு முணுமுணுத்தார்.

சரியாகக் கேட்கவில்லே. அதனுல் கூறினுன்:

''எடுத்துக்கிட்டு வர்றேன்.''

திரும்பி ஓரடி வைத்தபோதுதான் அப்பா தடுத்தார். ''திரும்பிப் போகவேண்டாம், ஆமா.'' அதன் பிறகு சற்று உற்சாகமற்று கோபத்தோடு கூறினுர். 'உம், என்னவாஞலும் திரும்பிப் போய்த்தானே ஆகணும்? போய்க் கொண்டுவா.'

விரைவாகச் சென்று படி ஏறி ஓடி உள்ளே சென்று இரும்புப் பெட்டியிலிருந்த எல்லா சர்டிபிகேட்டுகளும் வைக்கப்பட்டிருந்த கவரை எடுத்துக்கொண்டு திரும்பி வந்தான். இதனுலெல்லாம் ஒன்றுமில்லே, வெறும் நம்பிக்கைகள்தான் என்று தன் மனதுக்குள் திட்டப்படுத்திக்கொண்டான். தைரியத்திற்காகத்தான் வீட்டை விட்டு வெளியே கிளம்பிவிட்டால் தடுத்துக் கூப்பிடக்கூடாது. திரும்பி வரக்கூடாது. இதெல்லாம் பழங்காலத்தவர்களின் பைத்தியக்காரத்தனம். தனது வேலே விஷயமான காரியம் என்பது நினேவுக்கு வந்தபோது மீண்டும் ஒருவித அதைரியம் ஏற்படவே செய்தது. உலகத்திலுள்ள மற்ற எல்லோரும் இதையெல்லாம் ஒதுக்கித் தள்ளிவிட்டுத்தானே காரியம் பார்க்கிருர்கள். அதை ஒருமுறை எண்ணிப் பார்த்தபோது மனதுக்கு மகிழ்ச்சியாக இருந்தது.

கஞ்சிப்பசை அதிகமுள்ள அப்பாவின் வெள்ளேச் சட்டையில் அங்கங்கே நீலம் அதிகமாக அப்பியிருப்பது திட்டுத்திட்டாகத் தெரிந்தது.

நீளவாட்டில் மடித்துத் தோளில் போடப்பட்டிருந்த கருப்புக் கரை அங்கவஸ்திரம் நடக்கும்போது மெதுவாக ஆடியபடி ஏறி இறங்கும். பத்தடி நடந்தால் அப்பா அதைத் தோள்மேல் தூக்கிப்போட்டுக் கொள்வார். வேஷ்டியின் கீழ்ப்பகுதியின் இரு முனைகளையும் தூக்கிப் பிடித்துக்கொண்டுதான் விரைவு நடை போடுவார்.

இரவு படுத்திருக்கும்போது ஜட்ஜ் மேனன் அல்ல, கவர்னராகவே இருந்தாலும் காணப்போவதில்லை என உறுதிப்படுத்திக் கொண்டார். ஆனால் எண்ணிப் பார்த்து சிந்திக்குந்தோறும் அதைரியம் தோன்றியது. ஒருவேளை அவன் இப்போது அதிர்ஷ்ட தேவதையின் வாசற்படியைச் சென்று சேர்ந்திருக்கிறானோ என்னவோ? அவரது ஒரு சிபார்சுக் கடிதம் புதிய உலகங்கட்கு முன்பு கதவு திறந்துவிடுகிறதோ? நட்டமேதுமில்லை, பின்பு வருத்தப்பட நேர்ந்தால்? இறுதியில் ஜட்ஜைப் பார்க்கப் போக வேண்டுமென்று தனக்குள் தீர்மானித்துக்கொண்டார்.

வயல் வரப்புகளைத்தாண்டிச் சாலை வழியே போகும்போது மாதவ மாமா எதிரே வந்தார். அப்பாவுக்கு வழிவிட்டு வினயமாக மாதவ மாமா கேட்டார்:

''எங்கே?''

''அக்கரைக்கு.''

மாதவ மாமா பெரிதும் மாற்றமடைந்திருப்பதுபோலச் சேதுவுக்குத் தோன்றியது. இரட்டை வேட்டிக் கட்டியிருந்தார். தையல்காரன் கொண்டுவந்து கொடுத்த பனியனல்ல இப்போது அவர் போட்டிருப்பது. பட்டணத்திற்குச் சென்றிருந்த யார் மூலமோ வாங்கிய புதிய பனியனை அணிந்திருந்தார். கையிலும் கழுத்திலும் வெள்ளை சில்க் நூல்கள் கொண்டு தைக்கப்பட்டிருந்தது.

ஆற்றில் புதுவெள்ளத்தின் வேகம் அடங்கியிருந்தது. தோணி மறுகரையில் இருந்தது. தோணி வரும்வரை காத்துக்கொண்டு நின்றிருந்தபோது பலரும் விசாரித்தார்கள்.

''அப்பாவும் மகனும் சேர்ந்து எங்கே போறீங்க?'' கேட்டவங்களிடம் எல்லாம் அப்பா விவரித்துக் கூறியதைக் கேட்டபோது நாணம் ஏற்பட்டது. ஜட்ஜ் மேனனை பார்க்கவேண்டும். இவனது வேலை விஷயமாகப் பேசவேண்டும்.—இதையெல்லாம் பார்க்கிறவங்ககிட்டேயெல்லாம் சொல்லவேண்டுமா? முடிந்தபாடில்லை. மேனனுக்கு முன்பு நான்தான் படிப்புக் கற்றுக்கொடுத்தேன் என்பதை இறுதியாகக் கூறியே தன் பேச்சை முடிப்பார் அப்பா.

முப்பது ஆண்டுகள் அப்பா வெளியே பல இடங்களிலும் வேலை செய்துள்ளார். ஆனால் இப்போதும் அப்பா ஒரு தனி ஊர்க் காரராகவே உள்ளார். பேச்சில், பழக்கவழக்கத்தில் எல்லாம் கேட்பவர்களிடம் இந்த வரலாற்றை முழுவதுமாக விவரிப்பதில் இவனுக்கு மிகுந்த வருத்தமுண்டு.

போஸ்ட் மாஸ்டர், ஜட்ஜ் மேனன் வீட்டிற்குப் போவதுண்டு. அன்று ஹைகோர்ட் ஜட்ஜ் ஆகியிருக்கவில்லை. அந்தப் பழக்கத்தை வைத்துக்கொண்டு கூறினார்.

''ஐயாவோட நிலையென்ன? சென்னையிலே ஒரு பங்களா கட்டியிருக்கிறார். பார்க்க வேண்டியதுன்'னு சொல்றாங்க! ஐயா மனசு வச்சா இது ஒண்ணும் பெரிய காரியமில்லே.''

ஓடைப் பாலத்தின்மீது ஒரு கிழிந்த போர்வையை நன்கு போர்த்திக்கொண்டு வந்த ஒரு ஆள் அதை ஆமோதித்து தொடர்ந் தான்.

''ஊர்க்காரங்களுக்கு உதவிசெய்ய இயலாது'ன்னு சொல்லிட முடியாது. நம்ம சங்குண்ணியோட மகன் சாத்துக்குட்டிக்கு வேலை தேடிக்கொடுத்தது ஐயா தானே? அவனுக்கு இப்போ ஒத்தப்பாலத்துக் கோர்ட்டிலே அமீன் வேலையாக்கும்.''

முகத்தை ஏறிட்டுப் பார்க்காமலே காலுக்கடியில் கிடக்கும் கருங்கல் ஜல்லிகளைப் பார்த்துப் பேசுபவன் போலப் பேசிக்கொண் டிருக்கும் இந்த வயதானவனை தபாலாபீஸ் அலுவலகத்தில் பல சமயங்களிலும் பார்த்திருக்கிறான். பேர் தெரியவில்லை. பக்கத்தில் எங்கேயோ இருக்கவேண்டும்.

எதுவானாலும் அப்பா தன்னுடைய வேலை விஷயத்தை ஊர்க் காரர்களின் விவாதத்துக்கென வெளிப்படுத்தியிருக்கிறார்.

சர்டிபிகேட்டுகளின் கவரைப் பார்த்து யாராவது ''அதென்ன?'' என்று கேட்பார்கள். உண்மையைச் சொன்னால் தீர்ந்தது. பலரும் அதைப் பார்க்கவேண்டுமென்று கேட்பார்கள். யாரும் அதைப் பார்த்து புரிந்துகொள்ளப்போவதில்லை. இருந்தா லும் காகிதத்தைப்பற்றி அதன் நிறத்தைப்பற்றி அச்சடிக்கப்பட் டிருக்கும் எழுத்துக்களைப்பற்றி வேண்டுமானால் அபிப்பிராயம் சொல்லுவார்கள். அதை சட்டையின் கழுத்துப்பக்கம் வழியாக பனியனுக்குள் திணித்து மறைத்து வைத்துக்கொண்டான்.

தோணி வந்தபோது அப்பா அவர்களோடு பயணம் கூறிக் கொண்டார். மறுகரையை அடைந்தபோது புதிதாகத் தோணிக்

காகக் ஊத்திருப்பவர்களில் சிலர் அப்பாவைக் கேட்டார்கள், ''அப்பாவும் மகனும் சேர்ந்து எங்கே கிளம்பிட்டீங்க?''

வேனில் காலத்தில் காய்கறித் துண்டுகளைப்போல வெடிப்பு ஏற்பட்டிருக்கிறது. பள்ளங்கள் மழைக் காலத்தில் பாய்ந்து வந்த நீரால் சேருக மாறியிருக்கின்றது. எங்கும் ஒரே சேறு மயம். பழைய பாதைகள் எல்லாம் சேறு மூடிக்கிடக்கின்றன. சேறு படிந்து கிடக்கும் வயல் வரப்புகளின்மீது ஏறியபோது நடை வேகம் தடைப்பட்டது. மெதுவாக நடக்கவேண்டியதாயிற்று. அப்பா சற்று முன்னுல் போய்க்கொண்டிருந்தார்.

முன்பு சித்தப்பா வியாபாரம் செய்த கடைவீதிக் கட்டிடங்களைத் தாண்டிப் போகவேண்டும். கட்டிடத்தில் மாற்றமேதும் ஏற்பட்டிருக்கவில்லை. பலசரக்குக் கடை ஒரு பகுதியில் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. பெட்டிக்கு முன்பாக வட்டத் தாடிக்கார மாப்பிளா இருப்பதைக் கண்டான். மற்ருெரு பகுதியில் சாயாக் கடை அமைந்துள்ளது. நெசவுத் தொழிலைச் சேர்ந்த ராவுத்தர்களின் வீடுகளைக் கடந்து குறுக்குப் பாதை வழியே இறங்கி வேலி ஏதும் இல்லாமல் கிடக்கும் வெளி வயல்களின் குறுக்காகக் கடந்து மீண்டும் குறுக்கு வழியைக் கடந்தபின் கோயில் பாதை வந்தது. அப்பா செருப்பைக் கழற்றி, முன்னதாகக் கிடந்த கருங்கல் படியின் மேல் ஏறி நின்ருர். மேல் துண்டை இடுப்பில் கட்டிக் கண்களை மூடிச் சாமி கும்பிட்டார்.

அங்கே நின்ருல் கோயில்களைக் காணமுடியாது. இடிபாடுகளாகக் கிடக்கும் கருங்கல் படிகள் முடிவுறும் இடத்திற்கப்பால் உயரத்தில் ஒரு பெரிய ஆலமரம் இருந்தது.

வணங்குகின்ருரோ? ஒரு நிமிஷம் பிரார்த்தனை செய்தார். பகவதிதான் காப்பாற்றவேண்டும். அப்போது மனத்தால் வணங்கிஞல் போதும். பக்தி மனதில்தான் ஏற்படவேண்டும்.

அப்பா கும்பிட்டு முடித்தார். சேது தன்னேடு இருக்கிருனு என்பதை திரும்பிக் கண்ணேட்டமிட்டார். பிறகு மீண்டும் நடக்கலாஞர்.

ஒரு மணி நேரம் நடந்தபின் வயலின் கரையில் ஓடு வேய்ந்த ஒரு பெரிய வீடு காணப்பட்டது.

அப்பா நடையின் வேகத்தைக் குறைக்காமலே திரும்பிப் பார்த்துப் பேசிஞர்:

''அதோ, அதுதான் வீடு.''

அப்போது, வெயில் வெப்பம் ஏறத் தொடங்கியது. வீட்டு வாசற்படியை அடைந்தபோது வராந்தாவில் யாரெல்லாமோ

காத்து நிற்பதைக் கண்டார். காதில் துளசிப் பூவும் நெற்றியில் பெரிய சந்தனப் பொட்டுமாக ஈர வேட்டியைக் கட்டிக்கொண்டு எதிரே இறங்கிய நம்பீசனிடம் அப்பா விசாரித்தார்:

பெரியவர் இருக்கிறாரா?''

''ஓ, இருக்கார்.''

நடை வழியின் இடப்புறம் பெரிய குதிரைவால் செடிகள் வளர்ந்திருக்கும் பூச் சட்டிகள் இருந்தன. சிமெண்ட் போடப்பட்ட முற்றத்தை அடைந்தபோது வராந்தாவிலும் வெயிலிலும் காத்து நிற்பவர்களின் கண்கள் புதிதாக வந்து அவ்விடத்தைக் கடந்து செல்பவரைக் கேள்விகள் கேட்பதுபோல் தோன்றின. கூட்டத்தை அடைந்தபோது சேது திடீரெனத் தைரியமிழந்தவனானான். வராந்தாவிலிருந்து கடந்து செல்லவேண்டிய பெரிய அறையில் சாய்வு நாற்காலியில் சாய்ந்திருப்பவர் சிறிதளவு நரையேறிய கண்ணாடிக்காரராகக் காட்சியளித்தார். அவர்தான் ஜட்ஜ் மேனனாக இருக்கவேண்டும். யாரெல்லாமோ அந்த அறையின் உள்ளிருந்தபடி பேசிக்கொண்டிருந்தார்கள்.

அப்பாவின் முதுகுப்புறமாக ஒதுங்கி நின்றான் சேது.

வராந்தாவில், திறந்து கிடந்த வாசல்படிக்கு நேராக அப்பா கை கூப்பி வணங்கி நிற்பதைக் கண்டான்.

முன்பு நாலாம் வகுப்பில் படித்த வஞ்சிப்பாட்டின் வரிகள் தான் இப்போது நினைவுக்கு ஓடி வந்தது. ''மார்பில் வடியும் வியர்வை நீர் நாறும் சீடனை இருதயத்தோடு அணைத்துக்கொண்டு'' —கிருஷ்ணன் உபாத்தியாயர் சொல்லும் வரிகள் இவை.

உடன் படித்த சீடனல்ல. குருநாதரே இங்கு உள்ளார்.

ஜட்ஜ் மேனன் யாருடனோ பேசிக்கொண்டிருப்பதற்கு இடையில் அப்பாவைச் சரியாகப் பார்க்கவில்லை. பார்க்காமலும் இருக்க முடியவில்லை. நேராக அவருக்கு முன்னாலே வாசற்படிக்கு இப்பாலும் அப்பாலும் நின்றுகொண்டிருந்தார். அவருக்குச் சரியாகத் தெரியவில்லை. வாசற்படிக்கு முன்னாலிருந்து திரும்பி வராந்தா ஓரமாக நடக்கலானார்.

அப்பா ஆர்வத்தோடு சில நிமிஷங்கள் கைகூப்பிக்கொண்டு காத்திருந்தார். அதன்பின் சாவதானமாக கிழக்கு வராந்தாவில் நின்றுகொண்டிருந்த சேதுவின் பக்கம் நடந்து வந்தார். வராந்தாவின் ஓரமாக இருந்த தூணைப் பிடித்துக்கொண்டு, தோட்டத்தைப் பார்த்தபடி சேது நின்றான். வெளியே அடக்க ஒடுக்கமாக நின்றுகொண்டிருப்பவர்கள் இப்போது அவனையும் அவனது அப்பாவையும் கவனிக்கலானார்கள். திரும்பிப் பார்க்க தைரியம் ஏற்பட

வில்லை. வேலை விஷயமாக சிபார்சுக் கடிதம் வாங்குவதற்காகத் தன்னைப்போல இளைஞர்கள் யாராவது அக்கூட்டத்தில் வந்திருக்கிறார்களா என்று நோட்டமிட்டான்.

வராந்தா கிழக்கு முற்றத்துக்குப் போகும் படியோடு சென்று முடிவடைகின்றது. அந்தப் பக்கத்தில்தான் சமையலறை இருக்க வேண்டும். வராந்தாவை நோக்கித் திறக்கப்படும் கதவு வழியாக வெளியேறிய ஆட்களைக் கண்டபோது அது உறுதியாகியது. கால் முட்டிக்குக் கீழாக பெரிய துண்டை உடுத்திக்கொண்டு, சற்றுக் கூனோடு விரைந்து நடக்கும் அவர்தான் காரியஸ்தன் கோவிந்த நாயராக இருக்கவேண்டும். மூன்று நான்கு தடவை அவர் முற்றத்திற்கு இறங்கிப்போனார். மீண்டும் உள்ளே போனார். அப்பா சற்று தாமதித்துதான் அவரைக் கண்டார். ஆசுவாசத் தோடு அப்பா வராந்தாவினூடே அவ்வாசற்படியை விட்டு அகன்றார்.

கோவிந்தன் நாயர் செம்புப் பாத்திரத்தை கதவுக்கு அப்பால் வைத்துவிட்டு அப்பாவின் பக்கமாக வந்தார். அவர் பேசுவதை சேது பார்த்துக்கொண்டு நின்றான். மனதிற்கு என்னவோ போலிருந்தது. சிபாரிசு செய்ய கடைசியில் இந்த கூனன் வேலைக் காரன்தானா கிடைத்தான்!

அப்பாகூடவே கோவிந்தன் நாயர் அடுத்து வந்தார். சேது சிரிக்க முயன்றான்.

வராந்தாவில் போடப்பட்டிருந்த பெஞ்சியில் அப்பாவை அமரும்படி அவர் கூறினார். அப்பா தயங்கியபோது அவர் உட்காரும்படி வற்புறுத்தினார். அப்பா பெஞ்சியில் உட்கார்ந்த போது அப்பாவின் பக்கமாக இடம் மாறி நின்றான்.

கோவிந்தன் நாயர் தன் குரலைத் தாழ்த்திப் பேசலானார்: ''காலை முதலே ஆட்கள் வந்துகொண்டிருக்கிறார்கள். சொல்லிப் பயனில்லை அப்பவும் சொல்றதுதான் இப்பவும் நடக்கும். நான் போய் பெரியவர்கிட்டே சொல்றேன்.'' அதன்பின் சேதுவை நட்புணர்வோடு பார்த்தார்.

''நீ இங்கே ஒரு பக்கமாக இருந்துக்கோ.''

சேது வேண்டாமென்று சொன்னான்.

அப்பாவிருக்கும் பெஞ்சியின் பக்கத்தில் நின்றால் முன்புறமுள்ள வராந்தாவில் நிற்பவர்களைப் பார்க்காமலிருக்க முடியும். அவர்களில் சிலர் மெதுமெதுவாக கிழக்கு மூலைக்கு வருவார்கள். சிறிது நேரம் பார்த்துவிட்டு மீண்டும் முன் பக்கமாகத் திரும்பிப் போவார்கள்.

வாழைத் தோட்டத்தில் எச்சில் இலைகள் கிடக்கும் குப்பைக் குழியில் மண் கவ்விய நாய்க்குட்டிகள் ஒன்றை ஒன்று கடிப்பது போல் விளையாடிக்கொண்டிருந்தன. கண் திறந்து அதிக நாட்கள் கூட ஆகியிருக்கவில்லை. எலும்புந் தோலுமான ஒரு பெரிய நாய் பக்கத்தில் கண்களை மூடியபடி படுத்துக் கிடக்கின்றது.

வியர்வையில் பனியன் நனைந்துபோயிருந்தது. பனியனுக்குள் வைத்திருந்த சர்டிபிகேட்டுகளைக் கொண்ட பாக்கெட்டை வெளியே எடுத்தான். கவர் ஈரமாகி இருந்தது. மெதுவாகக் காகிதங்களை வெளியே எடுத்தான். யூனிவர்சிட்டி சர்டிபிகேட்டு களில் ஈரம் பட்டிருக்கவில்லை. பேராசிரியர் தந்த காண்டெக்ட் சர்டிபிகேட் நனைந்து மை பரவியிருந்தது.

அந்த சர்டிபிகேட்டை ஆரம்பத்தில் படித்தபோது ஒரு பெரிய நிதியே கிடைத்ததுபோல் இருந்தது.

பயணம் கூறிக்கொள்ள மாலையில்தான் பேராசிரியர் வீட்டுக் குப் போயிருந்தான். காச நோயாளியாக இருந்த பேராசிரியர் மிகவும் தணிந்த குரலில் பேசும்போது அவர் மிகவும் வேதனையோடு பேசுவதுபோல் தோன்றியது. பேராசிரியரின் இளைய மகள்தான் ஓவல் கலந்த பானத்தைக் கொண்டு வந்து தந்தாள். ஒரு சர்டிபிகேட் வேண்டுமென்று சொன்னான். கண்ணாடியை எடுத்து வைத்துக்கொண்டு, மகளைக் கூப்பிட்டு 'லெட்டர்பேடு' கொண்டு வரச் செய்து எழுதலானார். அவர் அதை எழுதி முடிக்க அரை மணி நேரம் பிடித்தது. திரும்பி வந்து அறையில் அதைப் படித்துப் பார்த்தபோது மகிழ்ச்சியினால் மனம் உருகிப்போய் விட்டான். பிரிலியண்ட், இமாஜினேட்டிங், மேன் ஆப் புஷ் அண்ட் இனிஷியேட்டிவ்—போன்ற வார்த்தைகளை சர்வ சாதாரண மாக அவர் பயன்படுத்தியிருந்தார். கல்லூரி மாளிகையில் வந்திருந்த அவன் கவிதைகளை முன் வைத்து அதன் உயர்வையும் சிறப்பையும் பற்றி விவரிக்கவும், பேராசிரியர் மறக்கவில்லை.

அவனைப் பற்றிய சுய உருவைப் பலருக்கும் அது தெளிவாகக் காட்டியது. விண்ணப்பங்கள் கூடவே அதன் உண்மை நகலையும் இணைத்து அனுப்பும்போது பெரு மகிழ்ச்சியாக இருக்கும். இதான் நான், நான்தான் வேலைக்கு விண்ணப்பிக்கிறேன்.

ஆனால் யாருமே படிப்பதில்லை. கம்பெனிகள் அலுவலகங்களி லுள்ள மேதாவிகளின் அறைகளைக் கூட்டிப் பெருக்கும் பணி யாளர்கள் கூட்டிக் குவித்து வாரிக்கொண்டு போகும் காகிதக் குப்பைகளில் இந்த விண்ணப்ப மனுக்களும் இடம் பிடித்துக்கொள் வதைக் காணலாம்.

சமையற்கட்டின் வாசற்படியைக் கடந்து விரைவாக வந்த கோவிந்த நாயரின் இரண்டு கைகளிலும் கண்ணாடி கிளாஸ்களில் டீ இருந்தன. அப்பாவின் அருகே பெஞ்சியில் நிரம்பி வழியுங் கிளாஸ்களை வைத்து அவர் வேண்டிக்கொண்டார்.

''இந்தா டீ குடியுங்க. ஐந்தே நிமிஷம் ஒத்தப்பாலத்து அட்வகேட் மாதவ மேனன் வந்திருக்கார். பெரியவர் வெளியே வரும் சமயம்.''

மனமில்லா மனதோடவே டீயை உதட்டில் வைத்தபோது ததும்பிக் கொட்டியது. மீதமுள்ள டீ கிளாஸை கீழே வைத்த போது, கீழே சிந்திச் சிதறிய டீயைத் துடைத்தான்.

தோட்டத்தில் ஓடிப் பிடித்துக் கடித்து விளையாடிக்கொண் டிருந்த நாய்க் குட்டிகள் விளையாட்டை நிறுத்திவிட்டு, கால்களை நீட்டியபடி வாயைத் திறந்து சிரித்துக்கொண்டு படுத்திருந்தன. தாய் நாயின் முலைக் காம்புகளை இழுத்துச் சுவைத்துக் குடித்துக் கொண்டிருந்தன.

யாரெல்லாமோ படியிறங்குகிறார்கள். படி ஏறி வருகிறார்கள். ஜாக்கெட் அணிந்த வயதான ஒருத்தி வராந்தாவில் ஓரமாகவுள்ள வாசற்படியைக் கடந்து வெளியே வந்து கைவிரலில் சுற்றிய துணிச் சுற்றைக் கழற்றி சுருட்டி முற்றத்தில் போட்டுவிட்டு உள்ளே போய்விட்டாள்.

கோவிந்தன் நாயர் எந்த நிமிஷமும் வருவார் என்று கருதி காத்திருந்தார்கள்.

''நேரம் என்ன ஆகுது?''

அப்பா கேட்டார்.

வீட்டை விட்டுப் புறப்பட்ட பிறகு அப்பா முதன் முறையாக தன்னிடம் இப்போதுதான் நேரிடையாகக் கேட்கிறார் என்பதை அப்போது எண்ணினான்.

தன்னுடைய கையில் கடிகாரமில்லை என்று சொல்லத் தோன்றியது. ஆனால் வெளியே வெயிலைப் பார்த்து சொன்னான்.

''பதினொன்று இருக்கலாம்.''

படித்த காலமெல்லாம் எப்பவும் பணக் கஷ்டமாகவே இருந்து வந்தது. எல்லாக் கஷ்டங்களையும் தானே சுமப்பதுபோல் தோன்றியது. யார் யாரிடமெல்லாமோ, வெறுப்புத் தோன்றி யது. வசதிக் குறைவுதான் இதற்கெல்லாம் மூல காரணம் என்று இப்போது புரிகிறது. படிக்கின்றாயா என்று கேட்கும்போது தலையை உயர்த்தி நிற்பான்.

''என்ன செய்யறே?''

''பி.ஏ படிக்கிறேன்.''

வராந்தாவுக்கு வெளியே காரியஸ்தன் கறுத்து வளைந்த உருவம் தியானித்துக்கொண்டு இருக்கும்போது பலவற்றை நினைக்கத் தோன்றியது.

உயர்நிலைப் பள்ளி சொற்பயிற்சிக் கழகத்திற்காக வேண்டிப் படிக்கவேண்டியதைப் பாராமல் சொற்பெருக்காற்றும்போது—

''இன்றைய மாணவர்கள் நாளையப் பெரியவர்கள். பெரும் இன்ஜினியர்களும், ஆராய்ச்சி மேதைகளும், தேசத் தலைவர்களும் இந்த இளம் தலைமுறையினின்றே உருவாகிறார்கள்.''

யார் இதையெல்லாம் எழுதித் தந்தது?

—கை தட்டல்கள்.

பள்ளிக்கூட முற்றத்தில் நடந்த ஆண்டுவிழாவில் பேரார்வத் தோடு கேட்டு நிற்போர்களின் கை தட்டல்கள்.

இரண்டு ஷெட்டுகளுக்கு இடையிலுள்ள காலியிடமெல்லாம் கூட்டம் நிறைந்திருக்கும். முன்வரிசையில் நாற்காலிகளில் உட்கார்ந்திருப்போர், மெயின் ஹாலின் வராந்தாவோடு சேர்த்து உயரமாகக்கட்டி அமைக்கப்பட்டுள்ள மேடையிலிருந்து தலைமை ஆசிரியர் பரிசுக்குரியவர்களின் பெயர்களை வாசிக்கத் தொடங்கும் போது நெஞ்சுத் துடிப்போடு காதைத் தீட்டிக்கொண்டு கேட்பான்.

''ஆறுவது படிவம் 'ஜெனரல் ஃப்ரௌஃபிஷன்ஸி' முதற் பரிசு சேது மாதவன்—''

பையன்களும் பெண்களுமாகக் குழுமியிருக்கும் கூட்டத்தி னிடையே கயிறுகட்டி, தனிவழி அமைத்திருக்கும் பாதை வழியே மேடையை நோக்கிப் போகும்போது ஆறும் படிவ ஏ-ப் பிரிவைச் சார்ந்தவர்கள்தான் கைத்தட்டலை முதலில் ஆரம்பிப்பார்கள். அதைத் தொடர்ந்து பலரும் கை தட்டுவார்கள், கடலோசையைப் போல.

திரும்பிவந்து, பரிசுப் புத்தகங்களைப் புரட்டிப் பார்க்கும்போது, அடுத்தும் அவன் பெயரையே சொல்லி அழைப்பது கேட்கும்.

'பொது அறிவு' முதற் பரிசு, சேது மாதவன் ஆறும் படிவம் 'ஏ' பிரிவு.

பரிசு வாங்கி விழாத் தலைவர் டாக்டரையும் அவையோரையும் வணங்கி இறங்கும்போது தலைமை ஆசிரியர் கூறுவார்:

''போகவேண்டாம் இரு.''

பேச்சுப் போட்டி முதற் பரிசு.

மீண்டும் மேடையில் ஏறும்போது நண்பர்களிடையே சிரிப்பு அலைமோதும். கை தட்டல்கள் வானைப் பிளக்கும்.

கையெழுத்துப் பத்திரிகை நடத்துவதற்காக மாணவர்களை அழைத்து ஏற்பாடு செய்த பிஷாரடி வாத்தியார் நினைவுபடுத்தினார். ''சேது மாதவனுக்கு நல்ல எதிர்காலம் உண்டு.''

நல்ல பதவிகள் அவனுக்காகக் காத்திருக்கின்றன. ஹரிதாசன் சொல்லியிருந்தான். கல்லூரியிலும் இதையே பலரும் சொல்லி யிருந்தார்கள். தேர்வு ஒருபோதும் அச்சமூட்டியதில்லை. படிக்கும் நேரத் தொடக்கத்தில் நோட்டுகளையும் புத்தகங்களையும் தேடும் மற்றவர்கள் தங்களுக்குள் பேசிக்கொள்வார்கள்: ''நாம் என்ன தான் படிச்சாலும் முப்பத்தஞ்சு தேர்றது கஷ்டமாயிடுது. அவன் பாடத்தை அப்படி ஒரு நோட்டம்விட்டாப்போதும்.''

—யூ ஹேவ் எ பிரைட் ப்யூச்சர்.

—ஒய் டோண்ட் யூ ட்ரை ஃபார் ஐ. ஏ. எஸ்.?

இதோ காரியஸ்தன் கோவிந்த நாயர் மீண்டும் முன்னால் வந்து நிற்கிறார்.

''வாங்க. அவரு போவதாகத் தெரியலே. உங்க வேலையும் நடக்கலே, என் வேலையும் நடக்கலே.''

அப்பா அதுவரை கையில் வைத்திருந்த குடையை பெஞ்சியில் வைத்துவிட்டு எழுந்தார். மேல் துண்டை எடுத்தார். காலில் அணிந்திருந்த செருப்பைக் கழற்றிவைத்துவிட்டு முன்னேக்கி நடந்தார்.

கோவிந்தன் நாயர் வற்புறுத்தினார். ''வாங்க ரெண்டுபேரும் சேர்ந்து வாருங்க.''

அவர் பின்னால் அப்பா நடந்தார். கூடவே சேதுவும் நடந் தான். கூச்சத்தை வெளிக்காட்டாமல் இருக்க முயற்சித்தான். அப்பாவுக்குப் பின்னால் பெரிய அறையினுள் நுழைந்தபோது, அறையில் ஜட்ஜைத் தவிர மூன்றுபேர் இருந்தனர். ஜட்ஜை பக்க மாக இருந்து இப்போதுதான் பார்க்கிறான். வெள்ளை அரைக்கை சட்டையும் டர்க்கி டவலும் போட்டிருந்தார். தடித்த கண்ணுடி வழியே—உயிரோட்டமில்லாத கண்கள்—அவர்களை உறுத்துப் பார்ப்பதுபோல் தோன்றியது.

''என்ன?'' சிரிக்க முயன்றவராக அவர் நிமிர்ந்தார். கோவிந் தன் நாயரையும் அப்பாவையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டே மீண்டும் கேட்டார்:

''என்ன?''

அப்பா அவரை கும்பிட்டார்.

கோவிந்தன் நாயர் அறிமுகப்படுத்தினார். ''அக்கரையைச் சேர்ந்தவர். நாங்க பக்கத்துப் பக்கத்துலே இருக்கிறவங்க.''

சேது தலைகுனிந்தபடி நின்றான்.

கோவிந்தன் நாயர் அறிமுகப்படுத்தியது போதாது என்று கருதிய நிலையில் மீண்டும் கூறினார்:

''முன்பு அதிரட்டக்கோடு குன்னிம்புறத்தில் பள்ளி ஆசிரியராகக் கொஞ்ச காலம் இருந்தவர்.''

அப்பா தன் கைகளைத் தாழ்த்தி பேச முயன்றார்.

''நான் இங்கேதான்—''

முடிக்கவில்லை. கண்ணாடியைக் கழற்றினார். மூடிய கண்களைக் கசக்கிவிட்டுக்கொண்டு அவர் கேட்டார்:

''என்ன விஷயம்?''

அப்பா சொன்னார். ''இவன் என் மகன். இவன் இப்போ பி. ஏ. பாஸாகியிருக்கான். வேலை ஒண்ணும் அமையலே.''

''டீச்சர் டிரெயினிங்குக்கு போகக்கூடாதா?''

அவனிடம்தான் சொன்னார். சேது ஒன்றுமே கூறவில்லை. முகத்தில் வினய பாவத்தைக் காட்டினான்.

சிரிக்க முயன்றான்.

''ஊரிலேயே நல்ல வேலை கிடைக்க அதுதானே சுலபமான வழி?''

அப்பா சொன்னார். ''எங்கேன்னாலும் பரவாயில்லே. நான் ரிடையராகிவிட்டேன்.'' பிராப்தங்களைப்பற்றிச் சொல்லத் தொடங்குவதுபோல் தோன்றியது.

''முன்புபோல இல்லை. வெளியே ரொம்பப் பிரயாசைப்பட வேண்டியிருக்கு.''

அவர் நினைவூட்டினார்.

''அவனுக்கு நல்ல மதிப்பெண்கள் கிடைச்சிருக்கு. சர்டிபிகேட்டுகளையெல்லாம் கொண்டுவந்திருக்கிறான்.'' அப்பா கவரை வாங்குவதற்காக சேதுவுக்கு நேராகக் கையை நீட்டினார்.

அவர் டர்க்கி டவலால் முகத்தைத் துடைத்தபின் மீண்டும் சிரிக்கலானார்.

''நான் பார்த்துப் பயனில்லை. உனக்கு வேலை தர்ற அதிகார மும் இல்லே. மற்றொரு ஆளுகிட்டே சிபார்சு செய்யவும் என்னாலே முடியாது.''

கோவிந்தன் நாயர் பவ்வியமாக உள்ளே போய்விட்டார்.

''சரி சரி. நான் யோசிக்கறேன்.''

அதன்பின் இடதுபக்கமிருந்த தடித்த உடம்புக்காரனிடம் கேட்டார்: ''தென்? வாட் வாஸ் தி இம்மீடியேட் ப்ரொவொக் கேஷன்?''

சேது பிரார்த்தனை செய்யலானான். அப்பாவுக்கு விரைந்து வெளியேறிவிட வேண்டாம் என்று தோணுகிறதோ? இல்லா விட்டால், ''போ, போ'' என்பதாக இருக்கும். அடுத்துக் கூறப் போகும் வார்த்தை. நல்லவேளை அப்பா மீண்டும் அவரைக் கும்பிட்டு வணங்கினார்.

''நாங்க போறோம்.''

வெளியே வந்தபோது மொத்தத்தில் வியர்வையில் குளித்திருந் தான். வாழத் தோப்பிலிருந்து வரும் குளிர் காற்று வீசியபோது, நின்றுவிட்டதுபோலத் தோன்றிய ரத்தம் மீண்டும் முகத்தில் வலுவோடு பாயத் தொடங்கிவிட்டதுபோல் தோன்றியது.

கிழக்கு வராந்தாவிற்குப் போய் கழற்றிப் போட்டிருந்த செருப்பை மாட்டிக்கொண்டு, வைத்துவிட்டுப் போயிருந்த குடையையும் கையில் எடுத்துக்கொண்டார். அப்பாவின் முகத்தை ஏறிட்டுப் பார்க்கவில்லை. அப்போது சமையற்கட்டு வாசற்படியைக் கடந்து கோவிந்தன் நாயர் வந்தார். பெரியதொரு காரியத்தைச் சாதித்துக் கொடுத்துவிட்ட திருப்தி அவருடைய முகத்தில் பிரதி பலித்துக்கொண்டிருந்தது.

''என்ன புறப்பட்டாச்சா?''

''போய் வர்றேன்.''

''ஆ, அது முடியாது. சாப்பாட்டு நேரம் ஆயிடிச்சு. இங்கே பதினொரு மணிக்கெல்லாம் சாப்பாட்டு நேரம். சாப்பிட்டுப் போகலாம். அதுக்கெல்லாம் இங்கே எந்தக் குறையும் இல்லே.''

அப்பா மேல் துண்டை வெறுமனே விரித்து உதறி தோளில் போட்டுக்கொண்டு, அதைக் காதுகொடுத்துக் கேட்காதவருகப் பயணம் கூறிப் புறப்பட்டார்.

''பெரியவர்கிட்டே எல்லாம் சொல்லீட்டிங்கல்ல.''

''உம்.''

''பெரியவரோடெ அபிப்பிராயம் என்ன?''

அப்பா அப்படியொன்றும் நம்பிக்கையில்லாதவராகச் சொன்னார்:

''யோசிக்கிறேன்'னு சொல்லியிருக்கார்.''

''அதுபோதும், அப்படித்தான் சொல்லுவார்.''

''ஆனல், சொன்னது சொன்னதுதான். பெரியவர் அப்படியே தான் செய்வார். ஊர்க்காரங்க'ன்னு அப்படியொரு தனிப் பாசம் அவருக்கு. நாளைக்குப் போவார், ஒய்வு கிடைக்கும்போது நான் அவருக்கு நினைவூட்டறேன்.''

கோவிந்தன் நாயரோடு சிரித்துக்கொண்டு தலையாட்டிப் பயணம் கூறியபடியே அப்பாவின் பின்னலேயே இறங்கி நடந்தான்.

வெயில் கொளுத்தத் தொடங்கியிருந்தது. கோயில் வட்டத்தை அடைந்தபோது கருங்கல் மதில் ஓரமாகச் செருப்பைக் கழற்றி வைத்துவிட்டு அப்பாசாமி கும்பிட கோயில் படியேறிய போது, சேது காத்து நிற்காமல் நடக்கலானன்.

[4]

அறுபது மைல் தூரத்திலுள்ள அந்த நகரத்தைப்பற்றி எப்போதும் கேள்விப்பட்டுள்ளான். ஆனல் இப்போதுதான் முதன் முறையாக அங்கே வந்து இறங்கியுள்ளான். படிக்குங் காலத்தில் அந்நகரைச் சேர்ந்தவர்கள் பல பேர் உடன் படித்திருக் கிருர்கள். பல பேரையும் நினைவுபடுத்திப் பார்த்தான். கடந்து போவோர்களுக்கிடையில் பழக்கமான முகம் ஏதாவது தென் படாதா என்று ஆவலோடு கவனித்தான்.

மழைத் தூறல் போட்டுக் கொண்டிருந்தது. குண்டு குழிகள் நிறைந்த சாலையில் நேற்றுப் பெய்த மழைநீர் தேங்கி நின்றது. புகைவண்டி நிலையத்திலிருந்து பயணிகளை வழியனுப்பிவிட்டுக் கடந்துபோகும் வாகனங்களுக்கு வழி விடவேண்டி இடுங்கிய வழி யருகில் மாறி நின்ருன். ஒரு குதிரை வண்டி கடந்து போன போது, குழியில் குளம்புகள் வேகமாகப் பட்டவுடனே தெரித்த செம்மண் நீர் நாலாபக்கமும் சிதறியது. இல்லை, நல்ல வேளை யாக மேலே படவில்லை. முன்னல் போய்க் கொண்டிருந்தவர் தன் மேல் பட்ட செம்மண் நீரைத் துடைத்தபடி திட்டிக்கொண்டிருந்த போதே வண்டியும் குதிரையும் வெகு தூரம் போய்விட்டது.

ஓடைமீது போடப்பட்டிருந்த சிறிய மரப் பாலத்தில் ஏறி இறங்கும்போது ஒரு ஹோட்டலின் விளம்பரப் போர்டைப் பார்த் தான். ''ஜூபிலி ஹோட்டல் — போர்டிங் அண்டு லாட்ஜிங்''

நடுத்தரமான ஹோட்டல் என்ற எண்ணத்தின் முடிவில் ஹோட்டலில் ஏறி விசாரித்தான். அறை இருக்கிறது, இரண்டரை ரூபா வாடகை.

ஆஸ்பெஸ்டாஸ் துண்டுகளைக் கொண்டு அடைக்கப்பட்டிருந்த அந்த அறை ஒரு பெரிய பெட்டிபோலக் காணப்பட்டது. எண்ணெயும் அழுக்கும் படிந்திருந்த மோசமான படுக்கையில் பணியாள் மறக்காமல் ஒரு நீலத் துணியைக் கொண்டுவந்து விரித்தான். ஒரேயொரு ஜன்னல் மட்டுமே இருந்தது. அதைத் தள்ளித் திறந்தான். வெண்மை கலந்த தவிட்டு நிறத்திலான நகரத்தின் கூரைகள்தான் கண்ணுக்கெட்டிய தூரம் வரை.

நாளைக்குத்தான் இன்டர்வியூ. காலையில் ஒன்பது மணிக்கெல்லாம் கலெக்டரேட் போய்ச் சேர்ந்துவிட வேண்டும் என்பது கண்டிப்பான அறிவிப்பு.

எத்தனையாவது அறிவிப்பு இது?

நூற்றுக்கு மேற்பட்டவர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டியிருந்தது. அதனுல் கிடைக்கும் என்ற நம்பிக்கையுண்டு. கல்வித் தகுதி எஸ்.எஸ்.எல்.சி. இருந்தால் போதும். பி.ஏ. படித்தவர்கள் குறைவுதான். ஆறு மாதங்கள் பயிற்சிக் காலம் ஆகும். பயிற்சிக் காலத்திற்கு உபகாரச் சம்பளம் தருவார்கள். அதை முடித்தபின் நூற்றிஐந்து ரூபாய் கிடைக்கும். தேர்ந்தெடுக்கப்பட்டவர் நேராகத் தொழிற்களம் போகத் தயாராயிருக்க வேண்டும் என்பது அறிவிப்பில் கண்டிருந்தது. கொண்டுவர வேண்டிய சாமான் என்னென்ன என்பதைக்கூட சைக்ளோஸ்டைல் செய்து அனுப்பியிருந்தார்கள். பக்கெட்—1, சூலம்—1, கதர்ச்சட்டை—2 ஜதை, படுக்கை—1, பீங்கான் தட்டு பெரியது—1, சிறியது—1.

விண்ணப்பமனு அனுப்பும்போது ஒருவேளை தபால்தலை வாங்கிய பணம் வீணுகப் போகிறதோ என்றுதான் தோன்றியது.

இன்டர்வியூவுக்கு அறிவிப்பு வந்தபோது மனதிற்குச் சங்கடம் தோன்றியது. ஒருவேளை, கிடைக்கலாம், போகவில்லை என்று சொன்னுல் வீட்டில் ஒரு கலகமே நடந்துவிடும்—சர்க்கார் வேலை வேண்டுமென்று கேட்டுவிட்டுப் போகாதிருப்பதாவது!

உத்தியோகம் கிடைத்துவிட்டால், வீட்டிற்கு வருபவர்கள் அப்பாவோடு — அம்மாவோட கேட்கும் கேள்விகளை ஒருமுறை எண்ணிப் பார்த்தான்.

''சேது இப்போ எங்கே?''

''எடம் எங்கே! ஏதோ ஒரு பேரு சொன்னுன்.''

''எதுவரைக்கும் படிச்சிருக்க?''

''பி.ஏ.''

''என்ன வேலை?''

அப்பாவிடம் கேட்பதாக இருந்தால் பதில் சொல்லிவிடுவார். நாஷனல் எக்ஸ்டென்ஷன் ஸ்கீமில் என்று அம்மாவுக்கு அதெல்லாம் தெரியாது. அதனாலே அம்மா சொல்வார்.

''கிராம சேவகனோ என்னவோன்னு சொல்லக் கேட்டேன்.

டியூட்டர் வேலைக்கு இன்டர்வியூவுக்குப் போகும்போது மனம் நிறைய பிரார்த்தனை செய்து கொண்டான். ஊரில் அது ஒரு முக்கிய நிகழ்ச்சியாய் இருந்தது. சேது சென்னைக்குப் போகிறான்!

ரயில்வே நிலையத்திலும் ரயில் பெட்டியிலும் கை நீட்டிய பிச்சைக்காரர்களுக்கெல்லாம் தானம் கொடுத்தான். உலகம் முழுவதும் செய்யும் பிரார்த்தனையின் சக்தி தனக்குப் பின் துணையாக இருக்கும் என்று எண்ணிக்கொண்டான்.

முன்னதாகவே சென்னையில் தெரிந்தவர்களுக்கெல்லாம் கடிதம் எழுதியிருந்தான். கிறித்தவக் கல்லூரியில் எம்.எஸ்ஸி. படித்துவரும் டானியலுக்குக்கூடக் கடிதம் எழுதியிருந்தான். சென்ரல் ஸ்டேஷனில் போய் இறங்கும் வரையில்தான் மனக்கவலை. டானியல் தன்னை வரவேற்க வந்து தயாராக நிற்பதைக் கண்ட போது பெருமகிழ்ச்சியோடு பெருமூச்செறிந்தான். டானியலின் ஹாஸ்டலில் அவன் விருந்தாளியாகத் தங்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அவன் அதற்கு அடுத்த நாள் லீவு எடுத்துக் கொண்டான். ஆறு மாதத்தில் நகரத்தின் மூலை முடுக்குகளையெல்லாம் டானியலுக்குத் தண்ணீர் பட்ட பாடாக இருந்தது. டி. பி. ஐ. அலுவலகத்துக்கு முன்பாக டானியல் சேதுவை டாக்ஸியில் கொண்டுவந்து இறக்கினான். இரண்டு மணிக்குப் பிறகு அங்கு திரும்பிவருவதாக 'பெஸ்ட்ஆஃப் லக்' என்று அவன் வெற்றிக்கு வாழ்த்துக் கூறி டானியல் பிரிந்து சென்றான்.

தமிழரும் தெலுங்கரும்தான் அதிகமாக வந்திருந்தார்கள். மலையாளிகள் குறைவாக வந்திருப்பதுபோல் தோன்றியது. டைரக்டர் ஒரு மலையாளி.

ஃபுல்சூட்டில் வந்தவர்கள்; முழுக்கை சட்டையும், காபர்டீன் பாண்ட்டும், அழகான டையும் அணிந்தவர்கள்; அமெரிக்க உச்சரிப்பில் ஆங்கிலம் பேசுபவர்கள், இப்படிப் பலவிதமாக இருந்தார்கள். யாரோடும் பேச தைரியம் வரவில்லை. அவர்கள் எத்தனை பேர் முதல் வகுப்போ?

இரண்டாம் வகுப்புதான் என்றாலும் 57 சதவீதம் மதிப்பெண் இருக்கு. சமாதானப்படுத்திக்கொள்ள முயன்றான்.

முதன்முறையாக பேண்ட் போட்டுக்கொண்டிருந்தான். மூர் மார்க்கெட்டிலிருந்து, முதல் நாள் வாங்கிய ஏழரை ரூபாய் மதிப்புள்ள காட்டன் பேண்ட், ஆறு ரூபாய்க்குச் செருப்பு வாங்கிப் போட்டுக் கொண்டிருந்தான். நடக்கும்போது என்னவோபோல் இருந்தது. பட்டன்கள் போடாமல் இருக்கிறதோ? புதிய செருப்பு வார் உராயும் இடத்தில் கடித்து தோல் உரிந்துவிட்டதுபோல் தோன்றியது. நிழல் தரும் மரங்கள் வளர்ந்துள்ள இடத்தின் பெரும் மதில் கட்டிற்குள் அங்கும் இங்குமாக நேரம் போக்கும் நிலையில் காத்து நிற்கும் இளைஞர்களை ஆர்வத்தோடு நோக்கினன். தனக்குத் தானே சமாதானம் செய்து கொண்டான். சூட்டிற்கும் டைக்கும் அல்ல முக்கிய இடம். விவரமுள்ள டைரக்டர் என்ருல் இவர்களைப் பார்க்கும்போது தோன்ற வேண்டியது வெறுப்புதான். ஆசிரியனுக்கு வேண்டிய குணம் ஒழுக்கம்தான். அறிவும் ஒழுக்கமும் உள்ளே ஒன்றுமில்லாதவர்கள்தான் வேஷம் போட்டுக் கொண்டு வந்திருக்கிருர்கள்.

அகர வரிசையின்படிதான் பெயர் அழைக்கப்பட்டது. பேட்டி தொடங்க பதிஞெரு மணியாயிற்று. இறுதியில் தைரியம் குறைந்தவஞக ஸ்பிரிங் கதவைத் திறந்துகொண்டு அறையினுள் நுழைந்து, ''குட்மார்னிங்'' என்று சொன்னபோது குரல் தடுமாறியது.

உட்காரும்படி ஜாடை காட்டினர்.

இவர்தாஞ டைரக்டர் மேனன்? சுழல் நாற்காலி நிறைய உட்கார்ந்திருக்கும் இந்தக் கறுத்த மனிதருக்குச் சிறு வயதில் வீட்டிற்கு மந்திரிப்பதற்காக வந்த கல்லடிக் கோட்டுக்காரன் குருப்பின் சாயலிருப்பதுபோல் தோன்றியது.

மேசையின்மீது கைவைப்பது ஒழுங்கான செயலல்ல என்று கேள்விப்பட்டிருக்கின்ருன். கைப்பிடியில்லாத நாற்காலியாகையால் இருபுறத்திலும் தொங்கப் போட்டுக்கொண்டிருந்த தனது கைகளுக்குக் கனம் கூடிக்கொண்டு வருவதுபோல் தோன்றியது. மேசைமீது விரித்து வைக்கப்பட்டுள்ள சிறிய பச்சைநிறத் தாள்கள் தன்னுடையவைகள்தான்.

''சர்டிபிகேட்ஸ்.''

கவரை அவருக்கு நேராக எடுத்து நீட்டினன். கேள்விகள் எப்படி இருக்கும்? மார்லோவைப் பற்றியா? மில்டனைப் பற்றியா? தற்கால கவிதையினைப் பற்றியா?

முதல் கேள்வி வெளிப்பட்டது:

''ஹௌ டிட் யூ மிஸ் யுவர் ஃபர்ஸ்ட் கிளாஸ்?''

தீர ஆலோசித்திராத கேள்வியாக இருந்தது. ஏதும் சொல்ல இயலவில்லை. காரணமொன்றுமில்லை. பதில் சொல்லாதிருப்பது சரியல்லவென்று உணர்ந்தான்.

''ஐ டோன்ட் நோ.''

தனித் தகுதிகள் ஏதேனும் இருந்தால் எழுதும்படிக் குறித்திருந்த பகுதியில் தனக்குக் கவிதை எழுத வரும் என்ற தகவலைக் குறித்திருந்தான்.

''யு ரைட் பொயட்ரி?''

''யெஸ் ஸார்.''

''எதைப்பற்றிக் கவிதை எழுதியிருக்கீங்க?''

''குப்பென்று துளிர்த்த வியர்வையினால் உடலெல்லாம் தெப்பமாக நனைந்துவிட்டது, சொல்ல முடியாது.''

''டெல் மி ப்ரீட்ப்ளி எபௌட் யுவர் லேடஸ்ட் போயம்.''

ஒரு கவிதை — தெய்வமே, ஒரு கவிதையின் சாரம்.

நீலப் பாவாடையின் சுருள்களை நீ மடித்துக்கொண்டு அழகோவியமான நீ முன்னால் வரும்போது எனது இதயம் புல்லாங்குழல் இசைக்கிறது. அதைக் கேட்ட புற்றில் வாழும் அரவங்கள் சுற்றிலும் வந்து குழுமி நிறைந்துவிட்டன.

''இல்லை, ஆங்கிலத்தில் விவரிக்க முடியாது.''

''தாகூர் கவிதைகளின் மொழிபெயர்ப்பாக அமைந்தவையே பெரும்பாலான கவிதைகள்.''

சர்டிபிகேட்டுகளை முன்பாக நீட்டியபடி டைரக்டர் கூறினார்: ''தட்ஸால், யூ கேன் கோ.''

சர்டிபிகேட்டுகளைக் கவரில் போட்டுக்கொண்டு வெளியே வந்தபோது தலை சுற்றுவதுபோல் இருந்தது. பேராசிரியர் மேனக்கெட்டு எழுதிய சர்டிபிகேட்டுகளில் ஒன்றைக்கூட பார்த்ததாகத் தெரியவில்லை.

வராந்தாவில் காத்து நிற்போரை ஏறிட்டுக்கூடப் பார்க்காமல் வேகமாகப் படி இறங்கினான். கீழே இறங்கிய பிறகு தனது முகத்தில் துளிர்த்திருந்த வியர்வையைத் துடைத்துக் கொண்டான். மாடிப்படி அடியில் காத்து நிற்கும் டானியலை அடுத்துச் சென்றபோது அவன் ஒரு சிகரெட்டை நீட்டியபடிக் கேட்டான்.

''எப்படி?''

''பரவாயில்லை.''

சிகரெட்டைப் பற்றவைத்து புகை விட்டபோது முறுக்கேறி யிருந்த நரம்புகள் சாதாரண நிலேக்குத் திரும்புவதுபோல் உணர்ந் தான். மீண்டும் நகரத்தைச் சுற்றிப் பார்த்தான். இரவில் இருவரும் சேர்ந்து ஒரு ஹிந்தி திரைப்படத்துக்குப் போனுர்கள். காட்சி முடிந்ததும் மங்கிய வெளிச்சமும் மெல்லிய இசையும் காற்றில் மிதந்துகொண்டிருந்த ரெஸ்டாரெண்டிற்குள் போய் பலகாரம் சாப்பிட்டார்கள். அப்போது டானியல் ஒரு பெண் சிநேகிதியைப் பற்றிச் சொன்னுன். குயின் மேரீஸ் கல்லூரியில் படிக்கும் தன் சித்தப்பா பெண்ணேடு ஒரு சமயம் ஹாஸ்டல் விருந்துக்கு வந்திருந்த தகவலேத் தெரிவித்தான். அதன் பிறகு சர்ச்சில் பார்த்ததுண்டு. நான்கைந்து முறை தொலேபேசியிலும் பேசியதுண்டு. இப்போது எல்லா ஞாயிற்றுக்கிழமைகளிலும் சந்திப்பதாகக் கூறினுன்.

''அவளே 'எர்த்' ஆக்க பலரும் முயற்சித்தார்கள், முடியவில்லே.''

''எர்த்'' ஆக்குவது? டானியல் புதியதொரு சொல்லேயே பயன்படுத்துகிருனே!

டானியலோடும் புதிதாக அவன் பழக்கப்படுத்திய நண்பர் களோடும் பயணம் கூறிய பின்பு, மலபார் மெயிலில் தட்டுத்தடு மாறி இடம் பிடித்தபோது 'அப்பாடா' என்று பெருமூச்சு விட்டான். மீண்டும் ஊருக்குப் போய் அஞ்சலகத்தில் தபாலுக் காகக் காத்திருக்கும் வேலேயை மீண்டும் தொடங்க வேண்டியது தான் என்பதை ஒருமுறை நினைவுகூர்ந்தான்.

இப்போது மற்ருெரு இன்டர்வியூவுக்கு போகவேண்டி வந்துள்ளது.

சென்னேயில் தன்னுடன் டானியல் இருந்தான். இங்கே யாரு மில்லே. ஜன நெரிசலுள்ள ஒடுங்கிய ஒவ்வொரு வீதியின் ஓரமாக நடக்கும்போது அயர்வு தோன்றும். முற்றிலும் தனியஞக இங்கே இருக்கும்படியாயிற்று. காலேயில் பேட்டிக்குப் போகவேண்டிய கலெக்டரேட் கட்டடத்தைப் பார்த்து வைத்துக்கொண்டான். ஜூபிலி ஹோட்டலிலிருந்து ஒரு பர்லாங் தூரம்தான் நடக்க வேண்டும்.

வெயில் மங்கும்போது கடற்கரையைச் சென்றடைந்தான். வேங்கை மரங்களின் அடியில் கார்களின் நீண்ட வரிசை நெளிந்து நெளிந்து காணப்பட்டது. ஈர மண் திட்டுகள் காணப்பட்டன. ஓரிடத்தில் இருந்தால் என்ன? இரைச்சலிடும் கடல் அலேகளி லிருந்து நீர்த்திவலேகளேச் சுமந்துகொண்டு குளிர் காற்று வீசியது.

வாஸ்கோடகாமாவின் பாய்மரக் கப்பல்கள் கரையைக் கண்டது இங்குதானே? நகரத்தைச் சுற்றிப் பார்க்க ஆர்வம் ஏற்படவில்லை.

திருப்பத்தில் இரண்டு இடங்களில் ஹோட்டலுக்குப் போக வழி கேட்கும்படியாயிற்று.

இரவில் ஒடுக்கமான அறையில் பரவியிருந்த நாற்றமும் இருட்டும்கூட பகலில் கண்ட உணவு பரிமாறும் ஆளைப்போலவே இருந்தது. கனம் குறைந்த ஆஸ்பெஸ்டாஸ் தடுப்புகளுக்கு அப் புறத்தில் சோடா புட்டிகள் திறக்கும் சப்தம் கேட்டது. மெது வாகத் தொடங்கிய பேச்சுக் குரல் உச்சக்கட்டத்தை அடைந்தது.

''நல்லதாக்கும். இன்னுங் கொஞ்சம்.''

''உம், உம்.''

அது பெண்ணின் குரல்.

''இன்னுங் கொஞ்சம்.''

''எனக்கு மனதைப் பிரட்டும்.''

''ஏ பிள்ளே!''

ஓட்டின்மீது மழைத்துளிகள் விழும் சத்தம் கேட்டது. குளிர்ந்த காற்றில் திறந்து வைத்திருந்த ஜன்னல் கதவுகள் பெரும் சத்தத்தோடு மூடிக்கொண்டன. மீண்டும் திறந்து கொண்டன.

மழை ஓசை அதிகரிக்கலாயிற்று. அது பெருஞ் சத்தத்தோடு கூடிய இசையாக உயர்ந்தபோது அடுத்த அறையிலிருந்து வந்த குரல்கள் கொஞ்சங் கொஞ்சமாக அகன்று போவதுபோல் தோன்றியது.

சுமித்திராவைப் பற்றித்தான் நினைத்துக்கொண்டான்.

நல்ல இருட்டில் சுமித்திராவின் அருகில் இருக்க உணர்ச்சித் துடிப்பாக இருக்கிறது. சுமித்திராவைப் பார்ப்பது இப்போ தெல்லாம் அபூர்வமாகிவிட்டது. வடக்கு வீட்டில் வழக்கு வம்புகள் அதிகரித்துக்கொண்டே வருகிறது. சுமித்திராவும் தேவுக்கு மிடையே, சுமித்திராவுக்கும் அம்மாவுக்குமிடையே, மாதவ மாமாவுக்கும் தேவுவுக்குமிடையே தகராறு.

மாதவ மாமா எப்போதாவதுதான் வீட்டிற்கு வருவார். சுமித்திராவுக்கு திருமணப் பேச்சுகள் நடப்பதாகக் கேள்வி. உறுதியாக முடிக்கலாம் என்ற கட்டம் முதுதலையிலிருந்து வந்த திருமணப் பேச்சின்போது உண்டாகியது. ஜாதகம் பொருத்த மாக இருந்தது. பெண் பார்க்க வந்தவர்களுக்கும் திருப்தி. மாதவ மாமா முதுதலை போய் வந்த பிறகு அந்தச் சம்பந்தம் வேண்டாம் என்று கூறிவிட்டார்.

காரணம் வரனோட அம்மாவும் சகோதரிகளும் ஏதோ ஒரு பெரிய இடத்து வீட்டிற்கு வேலைக்குப் போவதுதான்.

அதைக் கேட்ட அம்மா, அச்செய்தியைக் கொண்டுவந்த பெண்ணிடம் கேட்டாள். ''வடக்கு வீட்டுக்காரங்களுக்கு இல்லத்திலே விருந்தா வைப்பாங்க?''

''அது அப்போ. இப்போ மாதவ நாயரோட வீட்டுக் காரியா ஆனதுக்கப்புறம் நிலை உயர்ந்திருக்கில்லே.''

அடுப்பங்கரையில் தாழ்ந்த குரலில் சத்தம் எழுந்தது. ''யாரும் இங்கே வந்து கூட்டம் போடறது அவனுக்குப் பிடிக்கலே.'' அதன் பிறகு சத்தம் தாழத் தொடங்கி முணு முணுப்புகளாக மாறியது.

தூங்குவதற்காக காத்துக்கொண்டிருக்கும்போது அவனுக்கே வியப்பாக இருந்தது. அற்புதமான இந்த இரவு நேரத்தில் எதனாலே தங்கமணியின் நினைவு வரலே?

தங்கமணியின் கடிதம் வந்து நாட்கள் பலவாகிவிட்டன. பதில் எழுதவில்லை. ஓரிரு தடவைகள் எழுத முனைந்தான். பிறகு வேண்டாம் என்று இருந்துவிட்டான். அவள் பரிதவித்திருப்பாள்.

''என்னத்தை எழுதுவது? கடைசியில் நான் ஒன்றுமில்லாமல் போய்விட்டேன் என்றா எழுதுவது? நகரத்தின் கல்லூரியில் சுறு சுறுப்புடன் வகுப்பறைகளுக்குப் போகும் டியூட்டராக இன்னும் ஆகவில்லை. பிரைவேட்டாகவும் எம். ஏ. தேர்வு இன்னும் எழுதவில்லை. லெக்சரரும் ஆகவில்லை. தீஸிஸ் எழுதி எம். லிட். வாங்கியதன் பேரில் பத்திரிகைகளில் படம் அச்சேறி வரவும் இல்லை.

## [5]

கலெக்டரேடின் முகப்பு வராந்தாவில் எல்லோரும் கூடி நின்றார்கள். கதர்ச் சட்டையணிந்தவர்கள்தான் அதிகம். டைரக்டர் அலுவலகத்துக்கு முன்னால் இரவில் வாங்கிய 'காபர்டீன்' சூட்டு மாட்டி வந்தவர்கள் யாராவது கதர்ச் சட்டையும் வேட்டியுமாக இங்கே வந்திருக்கின்றார்களா? சேதுவுக்கு ஆச்சரியமாக இருந்தது.

வெளுப்பு நிறமும் அழகும் நிறைந்த ஒரு இளைஞன் சேது வருகில் வந்து கேட்டான்:

''சேதுமாதவன்தானே?''

''ஆமா.''

''பாலக்காட்டிலே பார்த்திருக்கிறேன். அரவிந்தனுடன் நான் ஹோட்டலுக்கு வந்திருக்கேன்.''

அரவிந்தன் ஒரே வகுப்பில் படித்த நண்பன். அரவிந்தனின் உறவினன் கோபி. தபாலாபீசுக்குப் பக்கத்தில் எங்கேயோதான் அரவிந்தனின் வீடு.

''அரவிந்தன் என்ன செய்யறுன்?''

''செப்டம்பரும் மார்ச்சும் எழுதினுன். வெற்றி கிடைக்கல்லே.''

எஸ். எஸ். எல். சி.-க்காரனுன கோபி இரண்டு ஆண்டுகள் பல இடங்களில வேலை செய்துள்ளான். கோவாப்பரேடிவ் ஸ்டோரில், பெட்ரோல் பங்கில், கைத்தறி சொசைட்டியில் எல்லா இடமும் 'லீவு' காலியிடங்களாகக் கிடைத்தவைதான்.

பட்டதாரிகள் கொஞ்சம்தான். இதை அந்த ஹெட் கிளார்க் சொன்னுர். அதனுலே சேதுமாதவனுக்கு சான்ஸ் உண்டு. அவன் இதற்குப் பதிலேதும் கூறவில்லை. பெரிய பலன் ஒண்ணுமில்லே. எஸ். எஸ். எல். சி.-க்காரர்களைவிட பட்டதாரிகளுக்கு இருபது ரூபாய் தொடக்கத்தில் அதிகமாகக் கிடைக்கும், இல்லையா?''

சேது சொன்னுன்.

கோபி இந்த யோகத்தைப் பற்றியெல்லாம் நன்ருகத் தெரிந்து வைத்திருக்கிருன். கிரேடு ஒன்ருனல் நூற்றிருபது ரூபாய் கிடைக்கும். எச். டி. ஸி. சம்பள விகிதம் எஸ்.ஈ.ஓ.பி.டி.ஓ. தொடங்கிய போஸ்ட்களுக்கு பிரமோஷன் வாய்ப்புகள் உண்டு. ஐம்பது சதவிகிதம் 'ரெக்ரூட்மெண்ட்' டிபார்ட்மெண்டிலிருந்து தான்.

கோபி முன்னும், கீழுமாக முற்றத்திலும் கூடி நிற்பவர்களுக்கு இடையேயெல்லாம் சுற்றி நடந்தான். ஆள் கூட்டம் ஒவ்வொரு நிமிடமும் கூடிக்கொண்டே வந்தது. எவ்வளவு பேர் இருப்பார்கள் முந்நூறு? நானூறு?

கோபிக்கு ஒரே அச்சமாக இருந்தது. எதையெல்லாம் பேட்டியில் கேட்கப்போகின்ருர்களோ!

வராந்தாவின் ஓரத்தில் நின்ருல் அப்பாலிருந்த திறந்தவெளியில் சலவையாளர்கள் துணிகளைத் துவைத்துக் கொண்டிருப்பதைக் காணலாம். அதற்கப்பாலுள்ள கட்டிடத்தின் முற்றத்தில் போலீஸ் காரர்கள் பயிற்சி செய்துகொண்டிருப்பதைப் பார்க்கலாம்.

பரபரப்போடு வந்த கோபி கையைப் பிடித்துக்கொண்டு ஆள் அரவமற்ற ஒரு மூலைக்குக் கொண்டுபோய் சொன்னுன்:

''ஐந்தாண்டுத் திட்டத்தைப்பற்றிக் கேட்பார்கள்.''

''யாரு சொன்னது?''

''அதெல்லாம் எனக்குத் தெரியும். ஐந்தாண்டுத் திட்டத் தைப்பற்றியெல்லாம் எனக்கொன்றும் தெரியாது. ஐந்தாண்டு திட்டம்'ஞ என்ன?''

''நான் அதைப்பற்றிப் படித்ததில்லே!''

''முதல் இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்திற்கிடையேயுள்ள வித்தியாசம் என்ன?''

''எனக்குத் தெரியாது.''

''தெய்வந்தான் காப்பாத்தணும்!''

கோபி விவரந் தெரிந்தவர்கள் என்று கருதிய பலரையும் தனியே அழைத்துக் கேட்டுப் பார்த்தான். அவன் கீழே இறங்கிய போது மைதானத்தில் வரிசை வரிசையாகத் துவைத்துக் காயப் போட்டிருந்த துணிகள் உற்சவக் கொடிகள் போல பல வண்ணங் களில் ஆடிக் கொண்டிருப்பதைப் பார்த்துக் கொண்டு சேது நின்ருன். வருவது வரட்டும், என்ன வேண்டுமாளுலும் கேட்கட்டும்.

கோபி மகிழ்ச்சியோடு திரும்பி வந்தான்.

''கிடைச்சிருச்சு.''

''உம்.''

முதல் ஐந்தாண்டு திட்டத்தில் தொழில் துறைக்கு முக்கியத் துவம், இரண்டாவது திட்டத்தில், விவசாயம், குடிசைத்தொழில், கிராம முன்னேற்றம் ஆகியவற்றிற்கு முக்கியத்துவம்.

''உம்.''

தேசிய விஸ்தரிப்புத் திட்டத்தைப் பற்றிக் கேட்டால்? கிராம அபிவிருத்திக்கு வேண்டித்தானே?

''இருக்கலாம்.''

''சொல்லுங்க, கேட்டால் என்ன சொல்வீங்க.''

''சேதுவுக்கு ஆரம்பத்தில் ஆச்சரியம் தோன்றியது. எல்லாம் படித்து வந்த நான் மற்றவர்களுக்குக் கிடைக்கக் கூடாதென்று கருதி வாயை மூடிக்கொண்டு நிற்பதாகத் தோன்றியது, கோபியின் போக்கைப் பார்த்தால்.''

''சொல்றேன். நான் வேறு யாரிடமும் சொல்லமாட்டேன்.''

''தேசிய விஸ்தரிப்புத் திட்டம் நடைமுறைக்கு வந்தால் கிராமங்களெல்லாம் வளர்ச்சி பெற்று குழந்தைகள் விளையாட

பூங்காக்கள், எங்கும் நல்ல சாலைகள், எல்லோருக்கும் வேலை வாய்ப்பு—சுருக்கத்தில் நம்முடைய நாடு சொர்க்க பூமியாகும். பாலும் தேனும் ஓடும். உம் தட்டிக்கொண்டு போங்க.''

விளையாட்டோ விஷமமோ? கோபி ஒரு நிமிஷம் ஐயப்பாட்டோடு நின்றான். சேதுவின் முகத்தில் மகிழ்ச்சி ஏற்பட்டிருக்கிறதென்று உறுதி செய்து கொண்டான்.

ஆட்களைக் கூப்பிடத் தொடங்கிவிட்டார்கள். இன்டர்வியூ முடிந்துவிட்டது. வெளியேறி வருபவர்களைப் பிடித்துக் கோபி கேள்விகளைக் கேட்டறிய பெரும் சிரமம் எடுத்துக்கொண்டான்.

கோபியைத்தான் முதலில் கூப்பிட்டார்கள். திரும்பி வரும் போது சிரித்துக் கொண்டு வந்தான்.

''பிழைத்துவிட்டேன்.''

''என்ன கேட்டாங்க.''

''நம் தாய் மொழியில் தான் கேட்டாங்க. இந்தியாவின் சமூக நிலை உயர என்ன செய்ய வேண்டுமென்று மட்டுமே கேட்கப் பட்டது. காந்தியடிகளின் ஒரு பொன்மொழியைத் தட்டிவிட்டேன். தரித்திர நாராயணர்களின் நாடாகிய இந்தியா வளர விவசாயமே சரியான வழி. ஆர். டி. ஓ. தான் இன்டர்வியூ செய்கிறார் எனத் தோன்றியது.''

நீண்ட நேரம் காத்திருந்தபின் கடைசியாக அவன் பெயர் அழைக்கப்பட்டது. மஞ்சள் நிறக் காகிதக்குவியலுக்குப் பின்னால் உட்கார்ந்திருந்த தேர்வாளர்களின் முகங்கள் ஒவ்வொரு பாவத்தில் தோன்றின. கவலை தோய்ந்த மடிப்புகள். டைரக்டரின் முன்னால் சென்றபோது தோன்றிய அச்சம் இப்போது இல்லை.

''பட்டதாரிதானே?''

''ஆமா.''

''நீங்க இந்த வேலைக்கு விண்ணப்பிக்கக் காரணம்?''

''தெரியாதோ?''

வேறொரு வேலையும் கிடைக்காததினால், தன் முயற்சி வீணானதால், வேலை கிடைத்தால் ஐம்பது ரூபாயாவது சொந்தமாகக் கிடைக்கத் தொடங்கினால் எவ்வளவோ நல்லது என்று கருதித் தான், உத்தியோக முயற்சியைப் பற்றிக் கேட்பவர்களிடமிருந்து,

வீட்டார்களிடமிருந்து தப்பித்துக் கொள்ளலாம் என்று கருதித் தான்.

''கம்மான் ஆன்ஸர் மீ.''

''நான்—'' ஒரு நிமிஷம் மனதிற்குள் வாதப் பிரதிவாதங்கள் நடந்தன.

''நான் கிராம சேவை செய்ய விரும்புகிறேன். பிற்போக்கான நிலையில் இருக்கும் கிராமங்களில் சென்று வேலை செய்வதை நாட்டுக்குச் செய்யும் மிகப்பெரும் சேவையாகக் கருதுகிறேன். பசி, பட்டினி, வேலையின்மை, ஆவநம்பிக்கைகள் ஆகிய இவைகளை—''

யாருடைய குரல் இப்போது கேட்கிறது? எட்டாம் வகுப்பு டிபேட்டிங் சொசைட்டியில் நிற்கிறுனுக்கும் அவன். இன்னும் கேட்கிறீர்களா?

''—அந்தகாரத்தில் ஆழ்ந்து கிடக்கும் நம்முடைய கிராம சகோதரர்களை கை தூக்கிவிடுவது, படித்த ஒவ்வொருவரின் தலையாய கடமை என்று நம்புகிறேன்.''

நரைப்புருவங்களுக்குள் உள்ளே இருக்கும் குழிந்த கண்கள் சாவதானமாக அவன் முகத்துக்கு நேரே உயர்ந்து வருகின்றது.

மீண்டும் தொடரலாமா என்று ஆலோசித்தபடி ஒரு நிமிடம் நிறுத்தியபோது ஆபீஸர் கூறினுர்:

''சரி, நாங்க உனக்குத் தகவல் தர்ரோம்.''

''வெளியே வந்து, படியிறங்கித் தெருவை அடைந்தபோது கூடவே மூச்சுவாங்கிக் கொண்டு வந்த கோபியின் குரலைக் கேட்டான். நில்லுங்க நானும் வர்றேன்.''

''எப்படி இருந்தது?''

சேது சிரிக்கத் தொடங்கினுன்.

ஜுபிலி ஹோட்டலுக்குக் கோபியும் கூடவே வந்தான். அசல் காந்திய வாழ்வாக இருக்கும். சாயா, காப்பி, இதேதும் கூடாது. சிகரெட் கூடாது. காலையில் பிரார்த்தனை. அதன் பிறகு கூலிப் பணி.

''உத்தரவு வருமில்லையா.''

''எனக்குத் தெரியலே.''

''அப்படிச் சிலபேர் சொன்னுங்க.''

மிக அமைதியாக நடந்த பிறகு கோபி சொன்னுன். ''சாயாவுக்கும் காப்பிக்கும் பதிலாக பானகம் தான் குடிக்க வேண்டும். 'மலம்' வாரவேண்டும் என்றுல் என்ன செய்வீர்கள்?''

''மலம் வாரவேண்டும் என்று முன்பே காந்தியடிகள் கூறியிருக்கிருரல்லவா, கோபி?''

அதுவரை மகிழ்ச்சியும் ரத்தத் துடிப்பும் கொண்டு சிவந்திருந்த கோபியின் முகம் சட்டென்று கருத்து விட்டதுபோல் தோன்றியது. அவன் தலை தாழ்த்தியவனுக அமைதியாக கூடவே நடந்தான்.

[6]

ஹோட்டல் கௌண்டருக்கு அருகே ஒரு இடத்தில் புகை வண்டி புறப்படும்—வந்து சேரும் நேரங்களைப்பற்றிய அட்டவணையை தினசரிப் பத்திரிகையிலிருந்து வெட்டியெடுத்து ஒட்டி வைத்திருந்தார்கள். அதை அனுசரித்து பதினைந்து நிமிட நேரத்தில் புகைவண்டி நிலையம் போய்ச் சேரவேண்டும் என்று மனதிற்குள் கணக்கிட்டுக்கொண்டான். ரிக்ஷா ஒன்றைக் கூப்பிட்டுப் பெட்டியையும் படுக்கையையும் ஏற்றித் தானும் ஏறியமர்ந்து ஸ்டேஷனை அடைந்தான் சேது. டிக்கட் வாங்கிய பின்னர் போர்ட்டரைத் தொடர்ந்து புகைவண்டி நிலையத்திற்குள் போய்க்கொண்டிருக்கும்போது கறுப்பு நிற அறிவிப்புப் பலகையில் வெள்ளைச் சாக்குக் கட்டியால் என்னவோ எழுதப்பட்டிருந்ததைக் கண்டான். அதன் அருகே சென்று பார்த்தான். இரண்டாம் நெம்பர் மெயில் அறுபது நிமிடங்கள் தாமதம்.

பிளாட்பாரத்தில் நல்ல கூட்டம், பயணம் செல்லும் பயணிகளைக் காட்டிலும் வழியனுப்ப வந்தவர்களும், வந்திறங்குவோரை வரவேற்க வந்தவர்களுமே மிக அதிகமாக இருப்பதுபோல் தோன்றியது. புக் ஸ்டாலின் மறைவில் தெரிந்த சிறு காலியிடத்தில் பெட்டியையும் படுக்கையையும் வைத்துவிட்டுப் போர்ட்டரை அனுப்பிவிட்டான். நாலணு கொடுத்தபோது போர்ட்டர் கிழவன் மறுகி நிற்காமலும் முணுமுணுக்காமலும் போனுன். இது தெரிந்திருந்தால் நாலணு சேர்த்தே கொடுத்திருக்கலாம் என்று மனதிற்குள் எண்ணிக்கொண்டான். குழிந்த உள்ளங்கையில் வைத்த நாலணு நாணயத்தைக் கிழவன் சரியாகக் கவனிக்கவில்லையோ என்னவோ?

அதிருப்திதான் எங்குமுள்ள போர்ட்டரிடம் காணப்படுவது, முகத்தைச் சுழிக்காமல், பிசுகாமல், முணுமுணுக்காமல் கூலி வாங்கிச் செல்லும் ஒரு ஆளைப் பார்ப்பது இதுதான் முதல் தடவை. ஓலவக்கோடு போர்ட்டர்களைப்பற்றியும் குதிரைவண்டிக் காரர்களைப்பற்றியும் இவன் கேள்விப்பட்டதில்லை போலும்.

ஃபிராக் அணிந்த அழகான சிறுமிகள் புத்தக ஸ்டாலின் கௌண்டரில் முழங்கைகளை ஊன்றியபடி ஆங்கில இதழ்கள் பலவற்றை விரித்து வைத்துக்கொண்டு வாங்கலாமா என்று நோட்டமிட்டுக் கொண்டிருந்தார்கள். கான்வெண்டிற்கேயுரிய சுவையான ஆங்கிலத்தில் பேசிக்கொண்டார்கள். வாங்குவதுபற்றிய தீர்மானத்தை எதிர்நோக்கியவனுய் மத்திய வயதுடைய ஒருவர் கைவிரல்களுக்கிடையே நான்காக மடித்து வைக்கப்பட்டிருந்த பத்து ரூபாய் நோட்டைப் பிரித்துப் பிடித்துக்கொண்டு சற்று தூரத்தில் நின்றுகொண்டிருந்தார்.

''யூ பை தட். ஐ வில் எ டெனிஸ் ராபின்ஸ்.'' பார்ப்பதற்குக் குட்டையாக இருந்தாலும் அவளே மூத்தவளாக இருக்க வேண்டும்.

''ஓண்டெட் பார்ட்டுண்டோ?''

தான் பாவம் செய்வது போன்ற உணர்வோடவே அவள் மலையாளம் பேசினுள்.

''ஹரி அப் கேர்ல்ஸ்.''

தனது உடையைச் சற்றுத் தளர்த்திக்கொண்டு மத்திய வயதுக்காரன் கூறினுன்.

''ஒன் மினிட் டாடி.''

''லவேர்ட்ஸ் ஃபெய்ட் இருக்கா? வேண்டாம் இதை படிச்சிருக்கேன்.''

'ஃபிளமிங்ஹார்ட், லோன்லி கேர்ல், இல்ஃ பெய்ட்டட் அஃபயர்' விற்பனையாளன் டெனிஸ் ராபின்ஸனின் புத்தகங்கள் பலவற்றையும் எடுத்துக் காட்டினுன். அவனுக்கு அதில் எதுவுமே வேண்டாம்.

பின்புறத்தில் தூசி படிந்த கை துடைத்துப் போட்டிருக்கும் பத்திரிகைத் துண்டை எடுத்துப் படித்தபடி சற்று விலகி நின்றுன்.

அப்போது யாரோ - தோளில் கை வைப்பதுபோல் இருந்தது. திரும்பிப் பார்த்தான்; கோபிதான் அது.

''நல்ல ஆளு—நான் இங்கே முழுவதுமாக மூன்று நான்கு தடவைகள் நடந்துவிட்டேன், காணுதபோது பஸ்ஸில் அடிபட்டு விட்டாயோ என்று சந்தேகித்து விட்டேன்.'' கோபி கௌண்டரிலிருந்து ஒரு பத்திரிகையை எடுத்து வாங்கப் போகின்றவனைப் போன்ற பாவத்தில் உன்னிப்பாக வாசிக்கத் தொடங்கினுன்.

கோபிதான் நேற்று ஹோட்டல் அறைக்குச் செய்தி கொண்டு வந்தவன். கலெக்டரேட்டில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுடைய

பட்டியல் வெளியிடப்பட்டிருந்தது, அப்பட்டியலில் அவன் பெயரும் இருந்தது.

அப்போது வியப்பேதும் ஏற்படவில்லை, அவன் அதை எதிர் பார்த்தே இருந்தான். யாருக்கும் எதுக்கும் வேண்டாதவர்கள் இதில் இடம் பெற்றுள்ளார்கள்.

''இதில் நாற்பது பேர்களே இருக்கிறார்கள். இரண்டாவது பட்டியல் இனிமேல்தான் வரும் என்று சிப்பாய் கூறினான்.''

கோபி மிகவும் மகிழ்ச்சியோடு காணப்பட்டான்.

''எனக்கு இவர்கள் அளிக்கப்போகும் பயிற்சி விஷயத்தை நினைக்கும்போது 'பண்டாரம்' நினைப்புத்தான் வருகிறது. பக்கெட்டும் துடைப்பமும் அங்கு போனபிறகு வாங்கினால் போதாதா?''

சேது எதுவும் பேசவில்லை.

"இல்லே, போதாதான்னேன்.''

"போதும்.''

சீருடைக்காக கதரை இங்கேயே வாங்கிக் கொள்ளலாம். இங்கே மலிவாகவே கிடைக்கும். நாம் சேர்ந்தே வாங்கிக் கொள்ளலாம்.

''பார்க்கலாம்!''

''ஏன், இப்படி சும்மா படுத்திருக்கீங்க?''

கண்களை மூடிக்கொண்டு கன்னத்தைக் கைவிரல்களால் அழுத்திப் பிடித்துக்கொண்டு கூறினான்:

''தலைவலி, கொஞ்சம் படுக்கட்டுமா?''

கோபி போனபிறகு தூங்கினால் என்ன என்று எண்ணிக் கொண்டிருந்தான். வியர்வையையும் எண்ணெயையும் குடித்து விட்டு மரத்துண்டைப்போலக் கடினமாகக் கிடந்த தலையணையில் என்னென்னவோ ஊர்ந்து கொண்டிருப்பதுபோலத் தோன்றியது. எழுந்து உட்கார்ந்தான். வேட்டி மாற்றிக்கொண்டான். சட்டையைப் போட்டுக்கொண்டான். வெயிலில் கான்கிரீட் பாதையில் இறங்கி நடந்தான்.

''என்னுடைய பெயர் வந்திருக்கிறது''

இறுதியில் தேர்ந்தெடுக்கப்பட்ட அதிர்ஷ்டசாலிகளின் கூட்டத்தில் என்னுடைய பெயர் வந்திருக்கிறது. அதிர்ஷ்டப் பலகையில் ஏறியமரும் காலத்தை நோக்கிக் காத்திருந்த பெயர். அவனுக்குச் சிரிக்க வேண்டும்போல் தோன்றியது. அழ வேண்டும் என்றும் தோன்றியது. வாழ்க்கையில் போற்றத்தக்க ஒருநாள் உண்டென்றால் அதுதான் தன் முன்பாக உள்ள இந்நாள்.

கலெக்டரேட்டின் வளைவைக் கடந்து சந்தேகத்தோடுதான் வராந்தாவை அடைந்தான். யாருமில்லை என்ற உணர்வு உறுதிப் பட்டபோதுதான் அறிவிப்பு பலகையை அடுத்துச்சென்று நின்ருன். இருக்கிறது. தனது பெயர் ''டைப்'' செய்யப்பட்டு வந்திருக் கிறது. நடந்து நடந்து மாலை நேரமாகியபோது சோர்வடைந் திருப்பதுபோல் தோன்றியது. முஸ்லிம் ஹோட்டல் ஒன்றிற்குள் நுழைந்தான். தாழ்ந்திருந்த பகுதியில் சாதாரணமான பொது மக்கள் இருக்கக்கூடிய இடமாகக் காட்சியளித்தது. காலியாகக் கிடக்கும் மேசைகளைக் காண முடியவில்லை. காலியாகக் கிடந்த ஒரு பெஞ்சியில் சென்று அமர்ந்தான். எதிர்ப்பக்கத்தில் இருந்த வசதிபடைத்தவர்களுடன் பலகாரம் சாப்பிட அவனுக்கு என்னவோ போலிருந்தது. மணியடித்து பரிமாறுவோனை அழைத்து ஏதோ கூறிய மானேஜர் சந்தேகத்தோடு நிற்கும் சேதுவை நோக்கி,

''மேலே இடமிருக்கு'' என்ருர்.

ஹாலின் இருபுறமும் வர்ணமடிக்கப்பட்ட, கண்ணுடி பதிக்கப் பட்டு, மறைவிடங்களாக உருவாக்கப்பட்டிருந்த சின்னச்சின்ன அறைகள், ஹாலில் யாருமில்லை. சிறிய அறைகளுக்கு மேலே மின் விசிறி இருந்தது. வெள்ளிய நிறமுடைய கொழுகொழுவென்றிருந்த பணியாளன் அறையின் ஒற்றைக் கதவைத் திறந்துவிட்டான். மின்விசிறியைச் சுழல விட்டான். நான்குபேர் சேர்ந்து பலகாரம் சாப்பிடக்கூடிய சிறிய அறையில் தான்மட்டும் தனித்து அமர்ந்திருந்தான். மின்விசிறியைச் சுழலவிட்டு, மேசையைத் துடைத்த பணியாளன் 'ஆர்டர்' எடுப்பதற்காகக் காத்து நின்ருன்.

''என்ன சாப்பிடறீங்க?''

''என்ன இருக்கு?''

அடுத்த அறையில் சோடா பாட்டில் சத்தமாகத் திறப்பது கேட்டது. தலைவரையுள்ள தடுப்புப் பலகைக்கு அப்புறத்திலிருந்து மது வகைகளின் வாடையும் இழைந்த உரையாடல்களும் காற்றில் மிதந்து வந்தன.

கெட்டுப்போன உடைகளை அணிந்திருந்த பையன் தலையிலே கட்டியிருந்த துண்டைக்கழற்றிக் கழுத்திலே கட்டிக்கொண்டு பலகார வகைகளின் பெயர்களை ஒப்புவிக்கலானுன். நடக்கும் போது சதைகள் ஆடும் அளவுக்குப் பருத்த சரீரம், நீலநிறக் கண்கள், நல்ல முறையில் உடையணிந்திருந்தான். இவனைக் காண்ப வர்கள் எவ்வளவு அழகான பையன் என்று வியப்படைவார்கள். அவனைப் பார்த்தபோது கல்லூரியில் கால்பந்து விளையாட்டுக்காரர்

களின் கூடவே போகும் பாலனின் நினைவுத்தான் வந்தது. பலரும் பாலனைக் கேலியாக 'பிலிமத்' என்றுதான் அழைப்பார்கள்.

இன்று விழாக் கொண்டாட வேண்டிய நாளாகும். முதலில் இரண்டு சிகரெட்டுகள், பிறகு பிரியாணி, அப்போது மனதிற்குள் வேகமாகக் கூட்டல் கணக்கு நடக்கலாயிற்று. வீட்டிலிருந்து புறப் படும்போது மாதவ மாமாவிடம் வாங்கியது உட்பட எழுபது ரூபாய் கையில் இருந்தது.

கதர்ச்சட்டைகள், வேட்டிகள், பக்கெட், கிண்ணம். பையன் நாணம் கலந்த ஒரு பூஞ்சிரிப்புடன் கேட்டான், "வேறொன்றும் வேண்டாமா?"

"என்ன இருக்கு?"

"நாட்டுச் சரக்கு இருக்கு."

சப்ளையர்களின் தலைவனைப்போலத் தோற்றமளித்த ஒரு ஆள் அரைக்கதவைத் திறந்து பார்த்தபடி:

"ஆர்டர் எடுக்கல்லியா?"

தலைவன் போனபின்பு பையன் கேட்டான்,

"சோடா வேணுமா, ஐஸ் வாட்டரா?"

"ஐஸ் வாட்டர்."

பிளாஸ்டிக் தட்டில் இரண்டு சிகரெட்டும் தீப்பெட்டியும் கொண்டுவந்து வைத்துவிட்டுப் பையன் போனபின்பு சேது, ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்தான்.

பெரிய கண்ணாடி கிளாஸ்கள் மேஜைமீது வைக்கப்பட்டபோது அவனுக்குப் புரிந்தது. நாட்டுச் சாராயத்தின் மணம் குபீரென்று பரவத் தொடங்கியது.

ஒருவித நடுக்கத்துடன் சேது கேட்டான்.

"இது—."

"கால்தான் கொண்டுவந்திருக்கேன்."

பையன் போகவில்லை. சரி, அவனுக்குத் திருப்தி ஏற்படட்டும். ஒரு மடக்குக் குடித்தபோது தொண்டையும் நாக்கும் எரிவது போல் தோன்றியது. நெருப்புக் கங்குகள் உள்ளே எங்கெங்கேயோ சென்று உலவுவதுபோல் இருந்தது.

"முகத்தை உயர்த்தாமலே சொன்னன்."

"சாப்பிடக் கொண்டுவா."

பிரியாணியையும் அதற்குரிய பதார்த்தங்களையும் மேஜை மேற் பரப்பி எங்கும் நிறைத்து வைத்தான் அப்பையன்.

''சாருக்கு இன்னிக்கு என்ன விசேஷமோ?'' சுடுநீர் கிளாஸை நிரப்பினான். அதை அவன் முன்பாகத் தள்ளிவைத்துக் கூறினான்: ''ஒரு துளி நானும் அடிக்கட்டுமா?''

ஒரு பகுதியை அவனுக்குக் கொடுத்துக் குடிக்கச் செய்தான். அவனும் மகிழ்ச்சிப் பெருக்கடையலானான். கிளாஸில் கொஞ்ச நஞ்சமிருந்ததையும் ஒரே மடக்கில் அவன் குடித்து முடித்தான். வாயைத் துடைத்துக்கொண்டு தலையைத் தடவினான்.

சேது கேட்டான்:

''இங்கே மதுவிலக்கு இல்லியா?''

பையனின் நீலக் கண்கள் பிரகாசமடைந்தன. முகம் சிவந்தது. பிறகு ''அந்தப் பக்கத்தில் இன்ஸ்பெக்டரெல்லாம் இருக்காங்க. இதுவரை மூணு கிளாஸ் முடிஞ்சு போச்சு'' என்று அவன் கூறி முடித்தான்.

சேது எதுவும் பேசவில்லை.

சிறிய பீங்கான் கிண்ணத்திலிருந்த பதார்த்தத்தில் போடப் பட்டிருந்த பூண்டுத் துண்டுகளைப் பொறுக்கித் தின்றான். மீண்டும் கிளாஸில் நிறைத்தான். முகத்தைச் சுழித்துக்கொண்டு, மூச்சைப் பிடித்துக்கொண்டு கிளாஸைக் காலி செய்தபோது ஒருவித சுக மேற்பட்டது. நுண்மையான அதன் கருத்த வாடையை அவன் லட்சியம் செய்ததாகத் தெரியவில்லை. கதவைத் திறந்துகொண்டு பையன் வெளியே போன பிறகு பலகாரங்களைச் சாப்பிடத் தொடங்கினான். உள்ளே உமித்தீயைப்போல் ஏதோ கனன்று கொண்டிருப்பதுபோல் தோன்றியது. நெற்றியில் வியர்வைத் துளிகள் பூத்திருந்தன. நாலைந்து கவளம் வாரித் தின்றபோது மனத்தைப் பிரட்டிக்கொண்டு வந்தது. தலை கனத்துக் கொண்டு வந்தது. எழுந்தபோது கால்கள் தள்ளாடுகின்றதோ? பேஸினில் கையைக் கழுவினான். கையைத் துடைத்துக்கொண்டு இரண்டாவது சிகரெட்டைப் பற்ற வைத்தான்.

பையன் பில் கொண்டுவந்து வைத்தான். இரண்டரை ரூபாய், மீண்டும் ஒருமுறை உற்றுப் பார்த்தான், இரண்டரை ரூபாய்தான்.

''மேலும் ஒரு ரூபாய் தரணும். அதைப் பில்லிலே எழுதல்லே.''

ஐந்து ரூபாய் நோட்டை தட்டில் வைத்தபோது பையன் அதை எடுத்துக்கொண்டு போகாமல் மேஜைமீது கையை ஊன்றிய

படி என்னவோபோல் பார்த்துக்கொண்டு நின்முன். சற்றுக் கோபக் குறியோடு அவனே முறைத்துப் பார்த்தான், அவன் தலே யைக் குனிந்து கொண்டான்.

''பாக்கி கொண்டா?''

டிப்ஸாக நாலணுவைத் தட்டில் வைத்துவிட்டு மீதியை கையில் எடுத்துப் பாக்கெட்டில் போட்டுக்கொண்டு வெளியேறிஞன்.

நியான் விளக்குகள் ஒளியுமிழ்ந்து கொண்டிருந்தன. நகரம் சிரித்துக்கொண்டிருந்தது. வீதிகளில் ஜனக்கூட்டத்தின் கனம் கூடிக்கொண்டிருந்தது. ஓடையின் ஓரத் தடுப்பைப் பிடித்தவாறு நடந்தபோது, கால்கள் பலமிழந்து வருவதுபோல் உணர்ந்தான். விரைவில் அரையை அடைந்துவிடவேண்டும்போல் இருந்தது. அம்மாவுக்கு, அப்பாவுக்கு, பரமேஸ்வர அண்ணனுக்கு, எல்லோ ருக்குமே கடிதம் எழுதவேண்டும் என்று எண்ணிஞன்! உங்கள் எல்லோருடைய நல்லாதரவிஞலும் ஆசியாலும் கடைசியில் அரசாங்கத்தின் உப்பும் சோறும் உண்ணுவதைத் தொடங்கு கிறேன் என்பதைப் புலப்படுத்தவேண்டும் என உறுதிசெய்து கொண்டான்.

வர்ணம் பூசப்பட்ட ஆஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் பலகையால் அமைக்கப்பட்டிருந்த கதவைத் திறந்து அறைக்குள் சென்றபோது படுக்கவேண்டும்போல் இருந்தது. கடிதம் எழுதும் காரியத்தை ஒரு நிமிஷம் ஆலோசனே செய்தான். தங்கமணிக்கும் கடிதம் எழுத வேண்டும். டிரயெனிங் சென்டர் போய்ச் சேர்ந்த பிறகு எழுதிக் கொள்ளலாம் என்று முடிவு செய்துகொண்டான். காலேயில் கோபி கதவைத் தட்டியபோதுதான் அவன் கண்களேத் திறந்தான்.

படிப்பை மூடிவிட்டு, லேடீஸ் வெய்ட்டிங் ரூம் எல்லாம் சுற்றி யடித்துவிட்டு, திரும்பி வந்த கோபி கேட்டான்.

''இங்கே எப்படியிருக்கிறது? வேமுெரு மூலேக்குப் போயிடு வோம், நம்ம ஆளுங்க இங்கே இருப்பாங்க.''

தூக்கத்துக்காகக் காத்திருக்கத் தேவையில்லாது போய்விட்ட இரவைப்பற்றி அப்போது சேது நினேவுபடுத்திக்கொண்டான். யாரைப்பற்றியெல்லாமோ கனவு கண்டான்.

யாருடனே வாதிடும்போதுதான் காலேயில் கோபியின் சத்தங் கேட்டு கண்விழித்தான். கனவில் கண்ட முகங்களெல்லாம் தெளி வாக இருக்கவில்லே.

பிளாட்பாரத்தின் மறுமுனேயை அடைந்தபோது நிறைய ஆட்கள் தென்பட்டார்கள். எல்லோருமே டிரெயினிங் சென்ட ருக்குப் போகின்றவர்கள். தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். குடி

யேறும் ஒரு கூட்டத்தைப்போல பெட்டி படுக்கைகளோடு அங்கே இடம்பிடித்துக் கொண்டிருந்தார்கள். பக்கெட்டுகள், துடைப்பங்கள், பல்வகையான படுக்கைப் பொருட்கள், பெட்டிகள்,—நடுவில் லக்கேஜ்ஜுகளைக்கொண்டு ஒரு பெருங்குவியலையே உருவாக்கியிருந்தார்கள்.

''பெட்டி படுக்கை எங்கே?''

கோபி சுத்தமான பாலக்காட்டுக்காரர்களின் பேச்சு வழக்கையொட்டிக் கேட்டான்:

''அங்கே இருக்கு. அந்த புக் ஸ்டாலுக்குப் பக்கத்தில்.''

''நாம எடுத்திட்டு வரலாம்.''

சேது உடன் செல்ல முயன்றபோது கோபி தடுத்துவிட்டு தானே சென்றான். ஒரு கையில் இரும்புப் பெட்டியையும் மற்றொரு கையில் படுக்கையையும் தூக்கிக்கொண்டு அவனாகவே கொண்டு வந்து லக்கேஜ் குவியலின் அருகே வைத்தான்.

''மெயிலாச்சே, நல்ல கூட்டமிருக்கும்.''

''பெட்டியில் எல்லோரும் ஒன்றாக இருக்க இடம் கிடைக்காது. இடம் கிடைக்கும் பெட்டி பார்த்து ஏறிக்கொள்ள வேண்டியது தான்.''

கோபி எல்லோரிடத்திலும் நன்கு பழக்கப்பட்டிருக்கிறான். சேதுவுக்கு ஒவ்வொருத்தருடைய பெயரையும் ஊரையும் எடுத்துக் கூறியது கோபிதான்.

திருநாவாய்க்கார நெடுங்காடி கேட்டான்:

''நீங்க பட்டதாரி தானே? பி.டி.க்குப் போகல்லியா? இதைவிட அதிகமாகச்சே சம்பளம்.''

பரப்பனங்காடிக்கார சங்கரன் குட்டி கேட்டான்:

இந்த வேலை எனக்குப் பிடித்தமானதில்லே. டி.டி.சிக்கு விண்ணப்பித்திருந்தால் கிடைச்சிருக்கும். நான் முயற்சி பண்ணலே. ''மகா போர்.''

வீட்டுக்குப் பக்கத்திலேயே ஒரு செகண்டரிப் பள்ளி ஆசிரியரானால் இதைவிட மிகவும் நல்லது என்று கொழிந்தம் பாரக்கார வெங்கடசாமி கூறினான். அவன் இரண்டு ஆண்டுகள் முயற்சி செய்து பார்த்திருக்கிறான். அரசாங்கப் பட்டியலில் தேர்வு பெற நல்ல மதிப்பெண்கள் வேண்டும், மதிப்பெண்கள் குறைவாக இருந்தால் நல்ல சிபாரிசு வேண்டும், தனியார் நிர்வாகத்திலுள்ள பயிற்சிப் பள்ளியில் இடம்வேண்டும் என்றால் பணங்கொடுக்க வேண்டும்.

முரட்டுக் கதர்ச் சட்டை அணிந்த ஒரு இளம் வயதினன் சொன்னான்: ''ஆரம்பப் பள்ளிகளில் கிடைக்கும்.''

''நெடுங்காடி பெட்டி படுக்கைக் குவியலிலிருந்து எழுந்தான். சேதுவின் பெட்டி இடம் மாறியிருந்தது. 'ஆரம்பப் பள்ளியிலும் ஐந்நூறு ரூபா. ஆனால், அவங்க அதைக் கைக்கூலின்'னு சொல்லறதில்லே, வேறு என்னவோ பெயர் சொல்வாங்க. என்னோட பெரியம்மா மகனுக்கு அமைச்சர் சங்கரமேனனின் மகனின் பள்ளியில்தான் இடங்கிடைத்தது. அங்கே ஐந்நூறு ரூபா கொடுத்திட்டுத்தான் சேர்த்தோம்.''

சேது சிரித்தான்.

''காணிக்கையாயிருக்கும். தேசிய புனர்நிர்மாணப் பணிக்குக் காணிக்கை.''

''இல்லே. இப்படிச் சொன்னா அது மலையாளமாச்சே? சர்வோதயக்காரர் அவ்வாறு சொல்லமாட்டாங்க. குடிசைத் தொழில்'னு சொன்னால் மக்களுக்குச் சுலபமாக புரியாதோ? அதனால் தானே 'கிராமோத்யோக்'ன்னே அவங்க சொல்றுங்க. ஆதாரத்துக்கு என்ன பேர் மிஸ்டர் ராமகிருஷ்ணன்?''

நெற்றியில் காலையில் போட்ட சந்தனக் குறியின் அழகிய தோற்றமும் சிறிய கண்களுமுள்ள நெடுங்காடிமீது சேதுவுக்கு மிகுந்த விருப்பம் ஏற்பட்டது.

கதர்ச் சட்டைக்கார ராமகிருஷ்ணன் தாமதியாமல் சொன்னான்:

''நயீ தாலீம்.''

அவன் பிளாட் பாரத்தின் விளிம்புக்குச் சென்று தண்டவாளத்தின்மீது காரித் துப்பிவிட்டு, மூக்கையும் பலமாகச் சிந்திவிட்டு திரும்பி வருவதற்குள் கோபி முணுமுணுத்தான்.

''அவன் பயங்கர சர்வோதயன். அவனது அப்பா ஒரு ஜீவன் தானியாயிருப்பார்?''

''ஜீவன் தானம் செய்தால் பிறகு என்ன செய்யணும்.''

''ஒண்ணும் செய்யாது இருக்கவேண்டியதுதான். மடியிலிலே கையை வச்சிக்கிட்டுத் தூங்கு, முடிஞ்சா பொய்க் கேஸுகள் உண்டாக்கணும்.''

ராமகிருஷ்ணன் திரும்பி வந்து, வாதிடத் தயாரானான்.

''நான் ஆரம்பப் பள்ளியில்தான் படிச்சேன். எனக்கு அதில் அதிக ஆர்வமுண்டு, ஒரு வேலைக்கும் அருகதையில்லாத ஆட்களை வெளியே அனுப்பும் இன்றைய சம்பிரதாயத்துக்கு,—''

கோபி இடையில் புகுந்து தடுத்தான்.

''ஒரு சின்ன கேள்வி: கொத்தமல்லி நீர்விட்ட தண்ணி குடிச்சா அதுக்கென்ன பேர்?''

நெடும்பாடிக்குத் தெரியும், '' 'ஜாப்பி' மகாத்மா காந்திக்குப் பிடித்தமானது.''

''அந்த ஜாப்பிக்குப் பதிலாகச் சாயா குடிச்சா சர்வோதயம் ஆகுமோ?''

ராமகிருஷ்ணன் விடுவதாகத் தெரியவில்லை. இந்தியனுக்கு ஏற்ற பானம் அதுதான். காந்தி, விநோபா, சங்கரராவ் தேவ், கேளப்பன்ஜி—ராமகிருஷ்ணன் பல பெயர்களையும் உச்சரித்தான். அவர்களெல்லாம் அதன் மகத்துவத்தைப்பற்றிச் சொல்லியிருக்கிறார்கள்.

''நண்பர்களே, ஒரு சுவையான செய்தி கேக்கிறீங்களா?'' நெடுங்காடி இப்போது முக்கிய இடத்தைப் பிடித்துக்கொண்டிருப்பதுபோல் சேதுவுக்குத் தோன்றியது: ''என்னுடைய கிராமம் தானம் செய்யப்பட்டதாகும். அங்குள்ள ஒரு பகுதியினர் ஜீவன் தானம் செய்திருக்கிறார்கள். அதில் குட்டி சங்கரனைப்பற்றி எனக்குத் தெரியும். அவன் இரண்டு ஆண்டுகள் ஜீவன் தானம் செய்துவிட்டு, இப்போது சாராயம் காய்ச்சுகிறான். பரவாயில்லை, வீட்டைவிட்டுப் போய்விட்டான். இப்போது தாராளமாகப் பண வசதி இருக்கு. அதல்ல நான் சொல்ல வந்தது, சங்கர் ராவ்தேவ் தானம் வாங்க வேண்டி அங்கே வந்தார். ஆளைப் பார்த்தாலோ.''

ராமகிருஷ்ணன் கோபத்தை அடக்கிக்கொண்டு முணுமுணுத்தான்.

''எனக்குத் தெரியும், எங்க வீட்டுக்கு வந்திருந்தார். அப்பா சொன்ன வார்த்தைகளிலிருந்து தெரிந்தது.''

''பார்க்காதவங்களுக்குச் சொல்லலாம். வேட்டி மாத்திரம். சட்டையில்லை. மூன்று மாதம் சேர்ந்தபோதுதான் தாடி எடுப்பது வழக்கம். பெரியவர் தங்குவதற்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த இடம் ஒரு சிங்கப்பூர்காரனின் வீடு. அங்கு 'செப்டிக் டாங்க்' மலக் கழிப்பிடம் இருந்தது. வேறு ஒரு வழியும் இல்லை, அது சர்வோதயக் கொள்கைக்கு விரோதமானதாகும். மூன்று நாட்களை எப்படியோ போக்கிவிட்டார். நாலாம் நாள் எல்லோரும் சேர்ந்து வெளியேயுள்ள வளைவில் மலக்குழி அமைத்துக் கொடுத்தார்கள்.''

எல்லோரும் ராமகிருஷ்ணன் நேராகத் திரும்புவதைக் கண்டபோது, அவன் தன் குரலை மாற்றிக்கொண்டு ஒரு கேலிச் சிரிப்புடன் கூறினான்.

''பயிற்சிக்கு போகும்போது பார்க்கலாம். அது வரை பொறுமையாக இருப்போம்.''

பயிற்சிக் கால வாழ்க்கையைப் பற்றியும், பரிசோதனைக் காலச் சங்கடங்களைப்பற்றியும், பலருக்குப் பயம் ஏற்பட்டிருந்தது. சந்தேகமும் பலருக்கும் இருந்தது.

''ஆறு மாசமல்லவா? அது கழிந்த பின்னர் நாம் சுதந்தர வான்களாக ஆகிவிடுவோம் அல்லவா?''

''பட்டதாரிகள் இதற்கும் போட்டி போட்டுக்கொண்டு வருகிறார்களே! அதுதான் கஷ்டம்'' வெங்கிடசாமி தன் மனக் கஷ்டத்தை வெளிப்படுத்தினான்.

கோபி சேதுவைச் சமாதானப்படுத்தும் வகையில் கூறினான்.

''நாம் ரெண்டாவது 'பா'ட்ச் இல்லையா? பட்டதாரிகளுக்கும்' பிரமோஷன் சான்சுகள் உண்டு.''

குன்னம் குளத்துக்கார தாமஸ் ஒரு சாயா குடிக்குமாறு வேண்டினான். சேது வேண்டாமென்று கூறிவிட்டான்.

''வண்டி இன்னும் 'பிளாக்' ஆகவில்லை, வா போய் ஒரு சாயா குடிக்கலாம்.''

வெங்கிடசாமியும் நெடுங்காடியும் புறப்பட்டார்கள். ராம கிருஷ்ணனின் தோளில் கைபோட்டுக்கொண்டு நெடுங்காடி வற்புறுத்தினான். அவனும் அவர்களுடன் சேர்ந்துகொண்டான். அப்போது கோபி கூறினான்.

''ஜாப்பி கிடைக்குமா'ன்னு பாருங்க, பயப்படவேண்டாம்.''

கடைசியில் ஒண்ணே முக்கால் மணிக்குப் பிறகு வண்டி 'பிளாக்' ஆகிவிட்டது என்பதற்கு அறிகுறியாக மணி அடிக்கப் பட்டது. திடீரென பிளாட்பாரத்தில் பரபரப்பும் ஆரவாரமும் எழத் தொடங்கின. அழுக்கடைந்த கெட்ட நீலநிறச் சட்டையும் சிவப்பு நிறத் தலைப்பாகையும் கொண்ட போர்ட்டர்கள் இருந்த இடங்களிலிருந்து திடீரென வெளிப்பட்டு பிளாட்பாரத்தின் விளிம்பிலே தயாராக நிற்கத் தொடங்கினார்கள். அவர்களை யடுத்து பலரும் நின்றுகொண்டிருந்தார்கள். மூட்டை முடிச்சுக் குவியலைச் சுற்றிலும் கழுகுகளைப்போல வட்டமிட்டபடி அவர்கள் பின் தங்கி நின்றார்கள்.

பஞ்சடைந்த கண்களோடு தாங்கித் தாங்கி நடக்கும் போர்ட்டர் கிழவன், மற்றவர்கள் அகன்றபோது மெதுவாக அடுத்து வந்தான். அவனுடைய கெட்டி நீலச் சட்டை வெளிறிப் போயிருந்தது. காவிநிறத் தலையில் முண்டாசுக் கட்டு, உதடுகள்

சிவந்திருப்பதுபோல் தோன்றியது. சுழிவுகளிலுள்ள குறுமயிர்கள் நரையேறிப் போயிருந்தன. அப்பகுதிகளைச் சொறிந்தபடி தேய்ந்து போயிருந்த பற்களை வெளிக்காட்டிக் கொண்டு சிரித்தபடி மெது வான குரலில் கேட்டான். ''உங்களை ஏற்றிவிடட்டுமா முதலாளி?''

சேது ஏதாவது சொல்லவேண்டுமென்று எண்ணிப் பேசு வதற்கு முன்பு கோபி இடைமறித்துக் கூறினான்:

''வேண்டாம் பெரியவரே, நாங்களே ஏறிக்கறோம்.''

கிழவன் திறந்த வாயை மூடாது ஏதோ ஒருவிதமா சிரித்தபடி நிற்பதைக் கண்டபோது சேதுவுக்கு என்னவோபோல் இருந்தது. கொஞ்ச நேரம் கழித்து அவன் சாவதானமாகத் தாங்கி தாங்கி கூட்டத்திற்கிடையே நடந்து போனான்.

வண்டி வந்தபோது அளவுக்கதிகமான கூட்டம் கூடியிருப்பது போல் தோன்றியது. மூன்று கம்பார்ட்மெண்டுகளில் இவர்கள் கூட்டம் இடம் பிடித்திருந்தது. கோபியும் இராமகிருஷ்ணனும் தாமஸூம் சேதுவின் கூட்டத்தில் சேர்ந்திருந்தார்கள்.

''நெடுங்காடி எங்கே?''

''கடைசிக் கம்பார்ட்மெண்டிலே.''

உட்கார இடம் கிடைக்கவில்லை. கோபி நெருக்கியடித்துக் கொண்டும் மற்றவர்களை இடித்துக்கொண்டும் எப்படியோ உட்காரும் இடம் பிடித்திருந்தான். அதில் சேதுவுக்கு சிறிது இடம் கிடைத்தது.

பயணம் தொடங்கிவிட்டது. அலுவலாற்றப் போகும் இடத்தை நோக்கிப் பயணம் தொடங்கிவிட்டது. வண்டி நகரும் போது மனதில் மகிழ்ச்சி பொங்கி நிற்கவில்லை. கருமேகக் கூட்டம் கவிந்துகொண்டிருப்பதுபோல் ஏதேதோ கவலைகள் அவன் மன தைக் கப்பிக் கொண்டிருந்தன.

தனக்குள் கூறிக்கொண்டான். ஆறு மாதங்கள். ஐம்பது ரூபாய்கள் பெறும் ஆறு மாதங்கள் கழிந்தால், நீ ஒரு உத்தியோ கஸ்தன் ஆகிவிடுவாய். சுதந்தரவானாக விளங்குவாய்!

கம்பார்ட்மெண்டில் பயிற்சிக் காலத்திற்குப் போய்க்கொண் டிருக்கும் மற்றொருப் பயணியையும் கோபி கண்டான். கருத்த சுருள் முடியுள்ள ஒரு கன்னடக்காரன். கோபி பலவற்றையும் அவனிடம் கேட்டான். தான் படித்திருந்த 'ஹிந்து' நாளிதழை மடித்து மடியில் வைத்துக்கொண்டு கண்களைக் கசக்கிக்கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தான்.

''இந்த உண்ணி நாராயணனும் பட்டதாரி. உங்களுக்கிடையே பரிச்சயமில்லே. இல்லையா.''

அவன் கேட்டான்:

''எந்தக் கல்லூரியில்?''

சேது பெயரைக் கூறினன்.

''51-ல் நான் அங்கே வந்திருக்கேன்.''

''அப்போ நானும் அங்கேதான் இருந்தேன்.''

உண்ணி நாராயணன் திருச்சூரிலிருந்து இண்டர் காலேஜ் பேச்சுப் போட்டிக்காக வந்திருக்கிறன். அந்த ஆண்டு தேவர்க்குத் தான் முதற் பரிசு கிடைத்தது. உண்ணி நாராயணனுக்கு இரண்டாம் பரிசுதான் கிடைத்தது. அதற்கு அடுத்த ஆண்டு எர்ணுக்குளத்தில் போட்டி நடந்தபோது அவனுக்குத்தான் கேடயம் கிடைத்தது.

சேது கேட்டான்: ''எந்த ஆண்டில் செய்தீங்க?''

ஆண்டைச் சொன்னபோது மனதிற்குள் கணக்கைக் கூட்டிப் பார்த்துக்கொண்டான். தன்னைவிட ஒரு ஆண்டு முந்தியவன்.

''எங்கேயும் வேலை கிடைக்கலியா?''

''கொஞ்சம் முயற்சி செய்தேன், ஒண்ணும் சரியா அமையலே'' என்று கூறிவிட்டு முன்பு கல்லூரி பிரதிநிதியாக பேச்சுப் போட்டிக்குப் போய் கேடயங்களைப் பெற்று வெற்றி வீரனுக வந்த இளைஞன் வெளிறிய சிரிப்போடு நிசப்தமாக அமர்ந்திருந்தான்.

''இதோ இந்தப் பேப்பரைப் பார்த்தபோது சிந்திச்சேன். எல்லா வேலைக்குமே இரண்டு மூன்று வருஷ வேலைப் பயிற்சி ரொம்பவும் அவசியம்னு போட்டிருக்கு. வேலை கொடுத்தாத் தானே பயிற்சி கிடைக்க முடியும்?''

பேசும்போதே கண்ணாடி வில்லைகளுக்கு அப்புறத்தில் உண்ணி நாராயணனின் கண்கள் கலங்கின.

அவர் கல்லூரிக் காலத்து வாழ்க்கைக் கதைகளை சொல்லத் தொடங்கியபோது கோபியும் நண்பரும் சிரத்தையில்லாதவர்கள் போல் காணப்பட்டார்கள்.

''அந்தோணியைத் தெரியுமில்லே? நாங்க அதை விட்ட பிறகு எங்க கல்லூரியிலேதானே இருந்தான்?''

''ஃபுட்பாலா?''

''யெஸ், என்கூடப் படிச்சவன். என் வீட்டுக்குப் பக்கத்து வீடு. ஜூனியர் இண்டர்லே மூணு வருஷம். அதன்பின்தான் அங்கே வந்தான்.''

சேது பார்த்திருக்கிறான். யாரோ அவனை பல்கலைக் கழக விளையாட்டு வீரனாகத் தேர்ந்தெடுத்தபோது, பாராட்டுரையோடு காண்பிக்கப்பட்டான்.

''எனக்கு அவன் பழக்கமில்லே. அங்கிருந்துதான் பல்கலைக் கழகத்தில் விளையாடியது.''

கல்லூரி மாசிகையில் தனது கவிதை வெளியிடப்பட்டிருந்த பக்கத்துக்கு அடுத்த பக்கத்தில் அந்தோணியுடைய படம் போடப் பட்டிருந்தது. பல்கலைக் கழகத்தின் பேர் எழுதிய பனியனும் புள்ளி போடப்பட்ட சில்க் கழுத்துப் பட்டையும் அணிந்திருந்தான்.

அவன் இப்போது மபத்லாலில் இருக்கிறான். விளையாட்டு மட்டும் போதும். எழுநூறு ரூபாய் சம்பளம். அடுத்த சீசனில் கல்கத்தாவுக்குப் போனால் இதைவிட அதிகமாகக் கிடைக்கும். கிளப்புக்காரர்களின் அன்பும் ஆதரவும் அதிகமாக இருக்கும் என்று அவனது சகோதரன் சொன்னான்:

''வெளிநாட்டுக்கு எங்கேயோ போயிருக்கான்லே?''

''பாங்காக்கில் இந்தியன் டீமில் விளையாடினான். அது முடிந்த பிறகு அவன் ஸ்டார் ஆகிவிட்டான்.''

படிக்காமல் தேர்வில் தோல்வி கண்டே வந்த அந்தோணி ஃபுட்பாலால் பெரிய ஆளாக ஆகிவிட்ட கதையைச் சொல்லும் போது உண்ணி நாராயணன் சினங்கொண்டவனைப்போல் காணப் பட்டான். வெறும் பட்டதாரியாகி வெளிவந்த மற்றொரு வகுப்புத் தோழனைப்பற்றி அவன் கூறினான்: சாயபுகளின் கம்பெனி யைச் சேர்ந்த ரப்பர் தோட்டத்தில் அஸிஸ்டெண்ட் மானேஜர். எழுநூறு ரூபா சம்பளம். நான்கு மாத போனஸ். ஜீப்பும் உண்டு.

சேது சமாதானப்படுத்தினான்.

''சிலபேருடைய அதிர்ஷ்டம்தான் அதெல்லாம்.''

''அதிர்ஷ்டம்! அவனை எனக்கு ரொம்ப நல்லாத் தெரியும். முட்டாள் என்று வைத்தால் அசல் முட்டாள். ஒரு வாசகம் தவறில்லாமல் ஆங்கிலம் எழுத வராது. காக்காய் பிடிச்சும் காசு கொடுத்தும் முப்பத்தைந்து சதவீதம் மதிப்பெண் வாங்கி கரை யேறியவன். தகப்பனார் சிங்கப்பூரில் இருந்தார். அம்மா சொசைட்டி லேடி ஜெனரல் மேனேஜருக்கு டின்னரும் பார்ட்டியும் கொடுப்பாள். தொழிலாளர் அமைச்சரைக் கொண்டு சாயபுக்

குச் சிபார்சு செய்யச் சொன்னுள். அரிச்சுவடிகூடத் தெரியல் லேன்னு என்னு?''

அவன் கசப்புணர்வு பொங்கும் முகத்தோடு சொல்லி நிறுத்திய போது சேது, ஜன்னல் வழியே வெளியே பரந்து கிடக்கும் வயல் வழியே ஏரியை நோக்கிப் பார்த்துக்கொண்டிருந்தான்.

''பி.டி.க்கு முயற்சி செய்யலியா?''

''செலக்ஷன் கிடைக்க வேண்டாமா? பயிற்சியில்லாமல் வேலை பார்க்கலாம் என்று பார்த்தேன். ஜில்லா போர்டு ஆபீஸில் வேலை போட்டுத் தரும் பணியைச் செய்துவந்தவர் ஹெட் கிளார்க் உண்ணி கிருஷ்ணன் நாயர். கேள்விப்பட்டிருக்கீங்களா?''

''இல்லை.''

''பிரசிடெண்டால்கூட முடியாது. வேறு யாரு சொன்னுலும் உண்ணிகிருஷ்ணன் நாயர் செய்யமாட்டார். சாயபுவின் சார்புள்ளவர்கள்'னு தெரிஞ்சா அவர்களைச் சுவரோடு சேர்த்து வைத்து சுட்டுத் தள்ளிவிடுவாராக்கும். ஆசிரியர்களுக்கு வேலை மாற்றல் வேண்டுமென்ருல், அவருடை வீட்டுக்குச் சென்று பார்க்க வேண்டும். அப்பாயிண்மெண்டுக்கு ஆண்கள் என்ருல் காசு போதும். ஒன்பது பி. சர்வீசில் கொஞ்ச காலம் இடங் கிடைத் தால் பி. டி.க்குப் போகலாம். இவனெல்லாம் இருக்கும்போது எப்படிக் கிடைக்கும்?''

நெரிசலாக இருந்த கம்பார்ட்மெண்ட் திடீரென நிசப்தமாக இருந்தது. மற்ற பயணிகளைப் பற்றி சேது அப்போதுதான் நினைத்துப் பார்த்தான், நண்பனும் அதேபோன்று அப்போதுதான் எண்ணிப் பார்த்தான். அந்த நிமிஷ சிந்தனைக்குப் பின் கசங்கிய பத்திரிகையை மீண்டும் விரித்து, அவன் படிக்கத் தொடங்கிய போது சேது ஓடி மறைந்துகொண்டிருக்கும் தென்னந்தோப்பு சக்கரங்களையும் வயல் வரப்புகளையும் பார்த்துக்கொண்டிருந்தான்.

வருகிறேம், வருகிறேம், வருகிறேம். . . வண்டியின் வேகம் அதிகரித்திருக்கிறது. சக்கரங்களின் ஓசையைக் காது கொடுத்துக் கேட்டபோது தாளம் தவருததுபோல் தோன்றியது. இரும்புச் சக்கரங்களினுடையவும் தண்டவாளத்தினுடையவும் இசை.

வருகிறேம், வருகிறேம், வருகிறேம், நாங்கள்.

இரும்புத் தண்டவாளத்தின் இசையிலிருந்து வாக்குகள் உரு வெடுப்பதுபோல் தோன்றியது. நாங்கள் வருகிறேம், இருண்ட கிராமங்களைத் தட்டியெழுப்ப நாங்கள் வருகிறேம்!

மதிய உணவை முடித்துக்கொண்டு மேல் மாடியின் நேர்த்தி யான சிமெண்ட் தரையில் படுத்துக்கொண்டிருப்பாள் தங்கமணி.

இப்போது தலையணையைச் சுற்றிலும் சிவப்பு நிறச் சிமெண்ட் நிலத்தில் அவளது முடிச் சுருள்கள் சிதறிக் கிடக்கும்.

அவனுக்கு எழுதவேண்டும்! சுதந்தரப் பயணத்தில் உன்னைப் பற்றி நான் கனவு கண்டுகொண்டு இருக்கிறேன்.

பெருமிதத்தோடு உரத்த விசில் ஒலி எழுப்பிய பின்னர் வண்டிச் சக்கரங்கள் மீண்டும் பாடுகின்றன.

''வருகிறோம், வருகிறோம். . . வருகிறோம், நாங்கள்.''

[7]

ஆற்றுக்கப்பால், குன்றுகளுக்கிடையே எங்கேயோ அரசாங்கத்தின் புகழ்பெற்ற விவசாயத் தோட்டம் அவர்களுக்காகக் காத்துக் கிடந்தது.

வெகு தொலைவில் மேற்குக் கோடியில் அழகுமிழும் கதிரவனின் மஞ்சள் ஒளிக் கதிர்களைக் கண்டபோது மனதில் மகிழ்ச்சி துளும்பியது. வாழ்க்கையின் எல்லைக்கோடுகள் போலத் தெளிவில்லா உருவங்களாக கார்மேகக் கூட்டங்கள் காணப்பட்டன. வீட்டின் மேற்புறக் குன்றின் முகட்டிலிருந்து, ரெயில்வே பாலத்திலிருந்து, ஹாஸ்டலின் தாழ்ந்த வராந்தாவிலிருந்து வெகு தூரம் விலகி வந்துவிட்டான்.

நான்கு மணிக்குத்தான் வண்டியை விட்டிறங்கினான். கோபியின் மேற்பார்வையில் கைவண்டிக்காரனின் கூலி கறாராகப் பேசி முடிக்கப்பட்டது. ஊர்வலமாக அதன்பின்னால் நடக்கும்போது நெருக்கமாகப் பயணம் செய்யும் துடிப்புடைய இளைஞர்கள் உணர்ச்சி மயமாயினர். பஸ் நிலையத்தை அடைந்தபோது மழைவரத் தொடங்கியது. சாலையோரத்தில் தாழ்வாகக் கட்டியிருந்த நிழற் கூரைகளுக்குக் கீழே அவர்கள் அபயம் தேடிக்கொண்டார்கள்.

வட்டிக் கடைக்காரர்களுக்கு அவன் கடையின் நிழற் கூரையின் அடியில் இவர்கள் ஒதுங்கி நிற்பது அசௌகரியமாக இருப்பதை அறிந்த சேது அரைப் பாக்கெட் சிகரெட் வாங்கினான். உண்ணி நாராயணனுக்கு நேரே பாக்கெட்டை நீட்டியபோது அவன் வேண்டாமென்று கூறிவிட்டான். அவன் இதுவரை சிகரெட் புகைத்ததில்லை. இது ஒரு ஆடம்பரப் பழக்கம் என்பது அவன் நம்பிக்கை. சொந்தமாகப் பணம் சம்பாதிக்கும்போது இப்படிப்பட்ட ஆடம்பரங்களைப்பற்றி சிந்திக்கலாம் என்பது அவன் எண்ணம்.

உண்ணி நாராயணனோடு உரையாடும்போது கிருஷ்ணன் குட்டியைப்பற்றி நினைத்துக்கொள்வான். ஒரே ஒரு வேறுபாடு

தான் உண்டு. உண்ணி நாராயணன் முகத்தில் வெறுமையிருக்கும், கிருஷ்ணன் குட்டியின் முகத்தில் ரோஷம் மாருமல் இருக்கும்.

நிழற் கூரையைத் தாங்கி நின்ற மூங்கில் கொம்பில் கட்டித் தொங்கவிடப்பட்டிருந்த நார்க் கயிற்றின் நுனியில் கனன்று கொண்டிருந்த நெருப்பில் சிகரெட்டைப் பற்றவைத்துப் புகைத்த படி எண்ணிக்கொண்டான்: கிருஷ்ணன் குட்டி எப்போதாவது தன்னை நினைப்பாஞே?

கோபி பஸ் ஸ்டாண்டில் விசாரித்துவிட்டு வந்து சொன்னுன்:

''பஸ் இப்போ வரும். மணிக்கு ஒரு பஸ் இருக்கு. நகரத்தி லிருந்து புறப்பட்டு வரும் பஸ். பாதிக்குமேல் சீட்டுகள் காலியாகக் கிடந்தன. சாயாக்கடைக்கு உள்ளும் கடைத் திண்ணைகளிலும் ஒதுங்கியிருந்த நண்பர்கள் ஓடிவந்தார்கள். இரண்டடி முன்வைத்த பின் திருப்தியற்றவனுக நின்ருன். பார்த்துப் பழகி, ஒன்ருக இணைந்து பயணம் செய்து ஒரே இடத்தைப் போய்ச்சேர ஒன்ருகக் கூடியவர்கள் தங்கள் நோக்கத்தையே மறந்துவிடுகின்ருர்கள்.

வெறுப்போடு அவன் பார்த்துக்கொண்டு நின்ருன். கோபம் அல்ல. மனதுக்கு வேதனையாக இருந்தது.

ஃபுட்போர்டில் விரல் ஊன்ற வேண்டிய இடத்துக்காக வேண்டி எல்லாவற்றையும் மறந்துவிட்டுப் போர்புரிந்துகொண் டிருக்கிருர்கள். வேதனைப்படுத்துகிருர்கள். தள்ளி மிதிக்கிருர்கள். அவர்களின் கூட்டத்தில் இணையாமல் விலகி நின்ருன்.

கூட்டத்தில் முண்டியடித்து ஏற முயன்றபோது தள்ளப்பட்டு பின்னடைந்த உண்ணி நாராயணன் இறுதியில் எப்படியோ முண்டி யடித்து வண்டியின் படிமீது கால் வைத்தபோது கண்டக்டர் அவசர அவசரமாகக் கத்தினுன். ''போதும், இனி யாருக்கும் இடமில்லே.''

எப்படியோ வண்டிக்குள் ஏறிவிட்டவர்கள் கோபியிடம் கேட்டார்கள்: ''என் பெட்டி? என் பக்கெட்'' சாமான்கள் ஏற்றப்பட்டன. மழை தூறலில் பெரிதும் நனைந்து குளித்து விட்டிருந்த கோபி பலரும் நெருக்கியடித்துக்கொண்டிருந்த வாசற் படியை நெருங்கியபோது விஷயத்தைப் புரிந்துகொண்டு யாரோடு என்றில்லாமல் திட்டினுன்.

சேது அவனைச் சமாதானப்படுத்தினுன். நாம் அடுத்த பஸ்ஸில் போகலாம்.

கோபியும் உண்ணி நாராயணனும் சேதுவுக்கு இன்னும் பெயர் தெரியாத இருவரும்தான் எஞ்சியிருந்தனர். சேது இரண்டாவது

சிகரெட்டைப் பற்றவைத்து கடையின் நிழற் கூரைக்கு அடியில் சென்று நின்முன்.

ஆனுல் கோபி தோற்றுப் பின்வாங்கத் தயாராக இல்லே. கண்டக்டரின் அருகே சென்று என்னவெல்லாமோ சொன்னுன். இறுதியில் சம்மதங் கிடைத்தது. ''ஏறிக்கொள்ளுங்கள்; நிற்கும் படியாயிருக்கும்.''

மீதமிருந்தவர்களும் ஏறிக்கொண்டார்கள். மேலேயுள்ள கைப்பிடிக் கம்பியைப் பிடித்துக்கொண்டு தொங்கியபடி முப்பது மைல் தூரம் பயணம் செய்யவேண்டும்.

பஸ் இடுங்கிய தெருவுகளேக் கடக்கும்போது நகரம் கற்பனே செய்து இருந்ததற்கும் சிறியதாகத் தோன்றியது. கல்லூரியில் கால்பந்து விளேயாடுவோர் பலரும் இவ்வூர்க்காரர்களேயாவர். ரோடும், ரெயில் பாதையும் சேர்ந்திருந்த நீண்ட பாலத்தை அடைந்தபோது இருக்கையைப் பிடித்தபடி குனிந்து நின்று வெளியே நோக்கினுன்.

குன்றுகளுக்கிடையே இருந்து குதித்தோடி வந்த ஆறு வாய் பிளந்து கிடக்கும் கடலின்முன் பயத்தால் அடங்கி ஒடுங்கி அமைதி யாகச் சலனமற்றுப் பாய்ந்துகொண்டிருந்தது. நெடுங்காடிக்கு நன்றி; அவன் ஒடுங்கி அமர்ந்துகொண்டு கொஞ்சம் இடமுண் டாக்கி உட்கார இடமளித்தான்.

ஆற்றின் மறுகரையிலிருந்து, குன்றுகள் தொடங்குகின்றன. குண்டும் குழியுமான பாதை குன்றுகளேச் சுற்றிவருகின்றது. இரு புறமும் தரிசாகக் கிடக்கும் குன்றுப் பகுதிகள்.

நனேந்துபோன கருத்த வேலேக்காரப் புலேயப் பெண்ணின் மார்பகத்தில் வியர்வை நீர்ப் பெருக்கெடுத்தோடுவதுபோல் குன்று களிலிருந்து மழைநீர் பாய்ந்துகொண்டிருந்தது.

கிராமம் பின்னடைந்தபோது வயல் வெளிகளேக் கண்டான். மற்ருெரு மேட்டைத் தாண்டியபோது மாந்தோப்புக்கள் தொடங்கின. மழை நீரில் குளித்த காட்டிலிருந்து ஒருவித மணமும் காய்ந்த சருகுகளின் வாடையும் எங்கும் பரவியிருந்தன.

மரக் கூட்டங்களுக்கிடையே, குன்றுகளின் முகடுகளுக்கு மேலே, மேற்குப் பக்கத்தில் கரிய மேகங்கள் நிழலாகப் படர்ந் திருந்தன.

கரு மேகக் கூட்டங்களிடையே சிறிது சிறிதாக மஞ்சள் நிறக் கீற்றுகள் உருவாகி, சிறு சிறு படலங்களாக உருவெடுத்துப் பரந்து காணப்படலாயின.

மைல்கள் ஓடி அகன்றுகொண்டிருப்பதைக் கவனிக்கவில்லை. 'பஸ் நின்றது.'

எல்லோருடைய கண்களும் இறங்கும் வாசல்படியிலேயே நிலைத்து நின்றன. காத்திருந்து கடைசியில் வாழ்க்கைக்கு முன் பாகக் காலம் திறந்துவிடப்போகும் வாயிலை வந்தடைந்துள்ளன.

''வருக வருக சகோதரர்களே!''

''வீர இளைஞர்களே!''

யார் இவ்வாறு முழக்கமிட்டது என்பது தெரியவில்லை.

கோபி மீண்டும் தலைவனாக மாறிவிட்டான். சாமான்களை இறக்க தொடக்கத்தில் மேலே ஏறியது கோபிதான்.

உள்ளே செல்லும் செம்மண் பாதையின் தொடக்கத்தில் கான் கிரீட் தூணின் தலைப் பகுதியில் தோட்டத்தின் பெயர் எழுதப் பட்ட சிறிய போர்டு இருப்பதைக் கண்டனர். கீழே ஒரு பக்கத்தில் மரக்கட்டையின்மேல் பயிற்சிக் கேந்திரத்தின் சிறிய போர்டு இருந்தது.

வலது காலை எடுத்து வைத்தபோது இடைமறித்து, 'ஞாபகத் தில் வைத்துக்கொள். வலது காலை எடுத்து வைத்து வா' என்றான்.

கேட்டைக் கடந்தபோது உரக்கப் பேசிக்கொண்டு வந்தவர் களெல்லாம் நிசப்தமாகிவிட்டனர். ஆரம்பத்தில் பார்த்த கட்டடத் தில் காலியாகக் கிடந்த வராந்தாவில் சாமான்களையெல்லாம் ஒன்றாக வைத்துவிட்டு யாரோ சிலர் ஆபீஸை விசாரித்துக்கொண்டு போனார்கள்.

முன்பாக மிளகுக் கொடிகள் படர்ந்திருந்த மரங்கள்.

ஆபீஸை விசாரித்துக்கொண்டு போனவர்கள் திரும்ப வந்து அறிவித்தார்கள். ''குவார்ட்டர்சுக்குப் போகணும், எல்லோரும் குவார்ட்டர்சுக்குப் போகணும்.''

''யார் சொன்னது?''

''டைரக்டரைப் பார்த்தீங்களா?''

''குவார்ட்டர்ஸ் எங்கே இருக்கு?''

''அங்கே!''

யாருக்கும் தெளிவாகத் தெரியவில்லை. அப்போது காக்கிச் சட்டை அணிந்த ஒரு தலைப்பாகைக்காரன் தொலைவிலிருந்து நடந்து அவர்களை அடுத்து வருவது தெரிந்தது. பெரிய இரும்பு வளையத்தில் கோர்க்கப்பட்ட சாவிக் கொத்துக்களை ஆட்டிக் கொண்டு அவன் இறக்கத்தில் வந்து நின்றபோது சிலர் அவனை

அடுத்துச் சென்ருர்கள். மீண்டும் மகிழ்ச்சி தலைதூக்கியது. ஆள் வந்திருக்கிருன். இடத்தைக் காட்ட ஆள் வந்திருக்கிருன்.

இரும்புப் பெட்டியையும் படுக்கையையும் இரண்டு கைகளால் தூக்கிப் பிடித்துக்கொண்டு சேது மிகுந்த பிரயாசையுடன் நடந்து சென்ருன். பப்பாளித் தோட்டம் கடந்து, தென்னை நெற்றுகள் குவியலாகக் காணப்பட்ட இடத்தையும் கடந்து, உழவு இடங்களின் நடுவே சென்று மீண்டும் செம்மண் பாதையைப்போய் அடைந்தபோது, அங்கு குவார்ட்டர்ஸ் இருந்தது.

ஓடுபோடப்பட்ட நீளமான வீடு, கற்கள் பதிக்கப்பட்ட சிமெண்ட் நிலப் பகுதியை அடைந்தபோது காக்கிச் சட்டை அணிந்த ஆள் திரும்பி நின்ருன்.

''ஒவ்வொரு அறையிலும் நான்குபேர் வீதம் தங்கணும், பெரியவர் சொன்னுர்.''

மூன்ருவது அறையைச் சென்றடைந்தான். வார்னிஷின் நாற்றம் அறையெங்கும் பரவியிருந்தது. சிறிய ஜன்னல் கதவுகளைத் திறந்தபோது உள்ளே நல்ல வெளிச்சம் ஏற்பட்டது.

உண்ணி நாராயணன், வெங்கிடசாமி, கோபி, நெடுங்காடி எல்லோரும் அந்த அறையில்தான். வேறு அறைகளில் இடம் கிடைக்குமா என்று விசாரித்து அறிந்த பின்னர் வெங்கிடசாமி அந்த அறையைவிட்டுப் போய்விட்டான்.

களைப்பும் அதைவிட அதிகமாகப் பசியும் ஏற்பட்டது. மதியம் யாரும் சாப்பிடவில்லை. சுவர் ஓரமாகப் பெட்டி படுக்கையை அடுக்கி வைத்துவிட்டு சேது அமர்ந்தான்.

எல்லோரும் வசதிகளைப்பற்றி மனதில் எண்ணிக்கொண்டிருக்கும்போது காக்கிச் சட்டைக்காரன் திரும்பிவந்தான். பூட்டையும் சாவியையும் உண்ணி நாராயணன் பெற்றுக்கொண்டான். அவன் வெளியே வராந்தாவை அடைந்தபோது சேது கூப்பிட்டான்.

''பாரு.''

அவனுக்குக் கேட்கவில்லை.

''ஏய்.''

சேவகன் சிறிதளவு வெறுப்போடு திரும்பி நின்ருன்.

''மேசை, நாற்காலி, பர்னிச்சர் எதுவும் இல்லையே?''

''இல்லே, அதுதான் ரூல்.''

கோபி வாசற்படியை அடுத்துச் சென்ருன்.

''படுக்க?''

''ஆர்டர்'லே சொல்லியிருக்கே. எல்லோரும் கொண்டு வரணும்'னு.''

''படுக்கை இருக்கு, கட்டில் ஒண்ணுமில்லையா? இந்தச் சிமெண்ட் தரையில் விரிச்சுப் படுக்கவா?''

சேவகனின் முகத்தில் எவ்வித வேறுபாடும் உண்டாகவில்லை.

''எல்லாத்தையும் பெரியவர்கிட்டே சொல்லிக்கிங்க. அது தான் ரூலு.''

சேவகன் போனபோது கோபி யாரோடு என்றில்லாமல் கேட்டான்:

''அடிவாதம் உள்ளவர்கூடக் கட்டிலில் படுக்கக்கூடாதுன்னு மகாத்மா காந்தி சொல்லியிருக்காரே.''

கிணற்றை அடுத்துக் குளியலறைகள் இருந்தன. ஒரு பர்லாங் குக்கு அப்பால் காந்தீயக் கழிப்பிடங்கள் இருந்தன. வராந்தாவி லிருந்து பார்த்தால் சாப்பாட்டுக் கூடத்தைக் காணலாம். உயரத் தில் காணப்படும் அலுவலகக் கட்டிடத்தை அடுத்துள்ள ஹால் தான் வகுப்புகள் நடத்தப்படும் இடம்.

கோபியும் உண்ணி நாராயணனும் பயிற்சிக் களத்தைக் காணப் புறப்பட்டார்கள். நெடுங்காடி குளிக்கப்போனான். படுக்கையை விரித்துப்போட்டு சேது படுத்துக்கொண்டான். நெற்றியில் வெப்பம் மிகுந்திருந்தது. நல்ல தலைவலி. அடுத்த அறைகளில் இடம் தேடி வந்தவர்கள் பலரும் வந்து சேர்ந்திருந் தார்கள். தலை வலிக்கிறது என்று சொன்னபோது அவர்கள் அதைப் பொருட்படுத்தாமலே போய்விட்டார்கள்.

வெளியே விரைவாக இருட்டிக்கொண்டு வந்தது. லேசான காய்ச்சல். யாரோ வெளியில் வராந்தாவில் விளக்கைப் போட்ட போது அந்த வெளிச்சத்தின் சாயல் உள்ளேயும் பரவி நின்றது.

வெளியே சென்றவர்கள் வந்து அறிவித்தார்கள்:

''ஏழு மணிக்கு எல்லோரும் ஹாலில் கூடவேண்டும் என்று சொல்லியிருக்கார்.''

''நேரம் என்னுச்சு?''

''ஏழுக்கு இன்னும் பத்து நிமிஷம் இருக்கு'' எல்லோரும் சட்டையும் வேட்டியும் மாற்றி சிரத்தையோடு ஒன்று கூடினார்கள்.

''உடை மாற்றிக்கொள்ளலையா?''

சேது எழுந்து சொன்னான்:

''என்னாலே எதுவும் முடியலே. இழுத்துப் போர்த்திக்கிட்டு தூங்கவே தோணுது!'' வெளியே சென்றபோது குளிர்ந்த காற்றுக்கு கூர்முனை இருப்பதுபோல் தோன்றியது.

கூடத்தில் விரிக்கப்பட்டிருந்த கோரைப் பாயில் இருக்கும்போதும் முன்னால் இடம் பெறப் போட்டி ஏற்பட்டது.

வாசற்படியை அடுத்து சேது உட்கார்ந்து கொண்டான். வெளியிலிருந்து நீர்த் திவலைகள் நிறைந்த குளிர் காற்று அடிக்கடி வீசும்போது உடல் நடுங்குவதுபோல் தோன்றியது. முன்னால் இருந்த மேடை காலியாகக் கிடந்தது. சுவரில் கதர் மாலைகள் அணிவிக்கப்பட்ட தலைவர்களின் படங்கள் சட்டங்கள் போடப்பட்டு மாட்டப்பட்டிருந்தன. ஏழு மணி, காத்திருக்கும் நேரம் நீண்டு கொண்டிருந்தபோது மடக்கியிருந்த விரல்களை விரித்து நீட்டினான். இறுதியில் தெளிவற்ற நிலையில் நேரம் போய்க்கொண்டிருந்தது. மேடைக்குப் பின்னால் கை கூப்பிக்கொண்டு நிற்கும் காந்தியடிகளின் வண்ண ஓவியத்துக்குச் சமீபத்தில் தொங்கவிடப்பட்டிருந்த கடிகாரம் ஏழரையைக் காட்டியபோது, வெளியே வராந்தாவிலிருந்து ஏதோ சப்தம் கேட்டது. எல்லோரும் எழுந்து நின்றார்கள். காற்றில் ஆடிக்கொண்டிருந்த மேலே மாட்டப்பட்டிருந்த ஒளியுமிழ் பல்பின் வெளிச்சத்தில் அவர் மேடைமீது நிற்பதைக் கண்டான். கெட்டிப் பச்சை நிறத்திலான கதர் பேண்ட்டும், தவிட்டு நிறத்திலான புஷ்கோட்டும், சப்பையான மூக்கின் அடிப்புறத்தில் நீட்டிக்கொண்டிருக்கும் ஹிட்லர் மீசையும் இவருக்குத் தனிக் கவர்ச்சி நல்குவதாக இருந்தன.

''உட்காருங்க.''

எல்லோரும் உட்கார்ந்தார்கள்.

மேடைமீது போடப்பட்டிருந்த மேசைமீது இரண்டு கைகளையும் ஊன்றி முன்னால் வளைந்து நிற்கும் அந்த மனிதரைப் பார்க்கும்போது ஏதோ ஒரு விளம்பரத்தில் பார்த்த ஒரு கார்ட்டூன் சித்திரம் தான் சேதுவுக்கு நினைவு வந்தது.

மலையாளத்தில்தான் பேசத் தொடங்கினார்.

''இன்று முதல் நீங்கள் அரசாங்கப் பணியாளர்களாகின்றீர்கள்.''

உள் காய்ச்சல் அடிக்கிறதோ? வெளியே கையை வைத்துத் தொட்டுப் பார்த்தான். குளிரினால் உடல் ஒடுங்குவதுபோலிருந்தது.

அரசாங்கப் பணியாளர்களின் கடமைகள், அரசாங்கம் இந்தப் பயிற்சித் திட்டத்துக்காக வேண்டி செலவிடும் தொகை, பயிற்சிக் காலத்தில் தேவைப்படும் அச்ச அடக்கம்.—

ஆரம்பம் முதலே சிரத்தையோடு கவனிக்க முற்பட்டான். வடக்குப் பகுதியினர் பேசும் ஒரு வகையான மொழி உச்சரிப்பிலே பேசுவதைக் கேட்டபோது வேடிக்கையாக இருந்தது. கவனம் சிதறிப்போய்விட்டது. தேசிய புனர் நிர்மாணம்...மகாத்மா...ஜி... இந்தியாவின் நிலை—இறுதியில் அறிவுரை.

காலையில் ஏழரை மணிக்கு களப்பணிக்காக ஃபீல்டில் ஆஜராகவேண்டும். மதியம் வரை களப்பணி. அது முடிந்த பின்னர் ஓய்வு, நகரத்திற்குப் போய் அவசியமான சாதனங்களையும் மற்றவைகளையும் வாங்கிக்கொள்ளலாம். எட்டுக்கு முன்னதாகத் திரும்பிவிடவேண்டும். பசி தாளமுடியாததாயிருந்தது. உணவுக் கூடத்திற்குச் சென்றபோது பீங்கான் தட்டுகள் வாங்காததனுல் ஏற்பட்ட சிரமம் எத்தகையதென்பது புரிந்தது. ஆனுல் வேறுசில நண்பர்களும் இருந்தார்கள். பரிமாறுவோரில் ஒருவன் வெளியே போய் பெரிய தேக்க இலைகள் கொண்டு வந்து தந்தான்.

இளம் வயதுள்ள பயிற்சியாசிரியர் ஒருவர் வந்து கூறினுர்:

''ஆவி பறக்கும் பாசிப் பயிறுக் கூட்டும் சப்பாத்தியும்தான் சாப்பாடு.''

பிரார்த்தனை முடிந்த பின்னர் உணவு உட்கொள்ளலாம். எல்லோரும் பிரார்த்தனைக்கு ஒன்று கூடவேண்டும்.

அள்ளியெடுத்த பாசிப் பயிறைக் கீழே வைத்தான்.

''ஓம் ஸஹநாவது

ஸஹனௌபுனக்து

ஸ ஹ வீர்யம் கரவாவஹை...''

உதட்டசைத்துக்கொண்டு தானும் சொல்வதைப்போலப் பாவனை செய்தான்.

''ஓம் சாந்தி சாந்தி சாந்தி''...

அறைக்குத் திரும்பி வந்து அழுக்கு வேட்டியைப் போர்த்திக் கொண்டு படுத்திருந்தபோது உடனே தூங்கிவிடவேண்டுமென்று கருதினுன். இல்லை, உறக்கம் வரவில்லை. எல்லோரும் ஊருக்குக் கடிதம் எழுதிக்கொண்டிருந்தார்கள். எழுந்து தகரப் பெட்டியை இழுத்துப் பக்கத்தில் வைத்துக்கொண்டு படுக்கையில் காலைப் போட்டபடி கடிதம் எழுதத் தொடங்கினுன்—அம்மாவுக்கும் பரமேஸ்வர அண்ணனுக்கும் அப்பாவுக்கும்.

கிருஷ்ணன் குட்டி, பாலகிருஷ்ணன் டானியல் எல்லோருக்கும் கடிதம் எழுதவேண்டும்.

என்ன எழுதுவது?

''நண்பர்களே, இறுதியில் நான் நமது கிராமங்களை வாழ்விக்க வேண்டி இங்கே வந்து சேர்ந்திருக்கிறேன்'' என்று மகிழ்ச்சிச் செய்தியைத் தெரிவித்துக் கொள்ளலாம்.

வீட்டில் தனது கடிதத்தை பத்மூ தட்டுத் தடவிக்கொண்டு அம்மாவிடம் படித்துக்காட்டும் காட்சியை மனதில் கற்பனை செய்து பார்த்துக்கொண்டான். படித்து முடிக்கும்போதுதான் சின்னம்மா வருவாள்.

''சேதுவின் கடிதமா? இன்னும் ஒரு தடவை வாசிச்சுக் காட்டுடீ.''

இறுதியில் சின்னம்மா சொல்வாள்: ''என்னவானாலும் அவனும் ஒரு ஆளாயிட்டானில்லையா?''

அம்மா நிசப்தமாயிருப்பாள். அன்பை எப்போதும் வெளிக் காட்டாத அம்மா ஊமையாகப் பிரார்த்தனை செய்துகொள்வாள். என்றாலும் சொல்வாள்: ''வெள்ளிக்கிழமை கோயிலுக்கு நாலணா கொடுத்தனுப்பணும். அவன் பிறந்த நாளுக்கு ஒரு புஷ்பாஞ்சலி செய்யணும்.''

அப்பா யாரிடமும் சொல்லமாட்டார். பரமேஸ்வர அண்ணனோ? அண்ணியிடம் சொல்வார்.

எல்லோரும் படுக்கையை விரித்துப் படுத்தார்கள். இப்போது குளிர் நடுக்கம் ஏற்படவில்லை. தலை வேதனைகூட நின்றுபோயிருந் தது.

வெளியே மரஞ் செடிகளைக்கூடத் தெளிவாகக் காண முடியாத அளவுக்கு இருள் கப்பிக்கொண்டிருந்தது. ஜன்னல்கள் மூடப்பட்டிருந்ததனால் மேற்குத் திசையினின்றும் வீசுங் காற்று ஓசையுடன் வெளியே அடித்துக்கொண்டிருந்தது.

''விளக்கை அணைக்கட்டுமா?''

''இருக்கட்டும்.''

சுவரில் சாய்ந்தபடி பெட்டியிலிருந்து வழியில் வாங்கிய வாரப் பதிப்பு இதழை வெளியே எடுத்து சேது வாசிக்கலானான்.

கோபி நினைவுபடுத்தினான்!

''ஒன்பதரைக்கு விளக்கை அணைக்கவேண்டும் என்பதுதான் நியதி.''

அதைச் செவி மடுத்ததுபோல் பாவிக்கவில்லை. காலையில் வாங்கிய சிகரெட்டில் ஒன்று பாக்கியிருந்தது. குளிரில் தளர்ந்து போயிருந்த சிகரெட்டைக் கையில் வைத்து மீண்டும் உருட்டி நேராக்கிப் பற்றவைத்தான்.

தங்கமணிக்குக் கடிதம் எழுதவில்லை.

எழுதவேண்டும். எப்படி ஆரம்பம் செய்வது?

ஒருவேளை, அவள் என்னோடு பிணக்கம் கொண்டிருக்கலாம். விசாலமான ஒரு மலையோரத்தில் இருட்டில் கொடுங்காற்றின் இசையைக் கேட்டுக்கொண்டு இரவின் ஏகாந்தமான தனிமையில் இக் கடிதத்தை எழுதுகிறேன்.

அப்போது லேசாகத் திறந்திருந்த வாசற் கதவு தட்டும் சத்தம் கேட்டது.

''கம்மின்.''

அடுத்த அறையிலிருக்கும் நண்பர்கள் யாராகவாவது இருக்கும்.

கதவைத் திறந்து கடந்து வந்த ஆளை சட்டென்று அடையாளங் கண்டுகொள்ள இயலவில்லை. மப்ளரைத் தலையைச் சுற்றிக் கட்டியிருந்தான். நீண்ட கையுள்ள ஸ்வெட்டர் அணிந்திருந்தான். வேட்டியை மடக்கிக் கட்டியவனாய் நின்றுகொண்டிருந்த இந்தக் கண்ணாடிக்காரனின் முகத்தை உற்றுப் பார்த்த போது புரிந்தது; டைரக்டர்!

சிகரெட்டைக் கீழே போட்டுவிட்டு எழுந்து நின்றான்.

''வாட் ஈஸ் யுவர் நேம்?''

''சேது மாதவன்.''

படுத்திருந்தவர்களெல்லாம் சத்தம் கேட்டுத் தலையைத் தூக்கிப் பார்த்து, விரைவாக எழுந்தார்கள்.

''லைட்ஸ் ஆஃப் அட் நைனோ கிளாக், தட் ஈஸ் த ரூல்.''

''தெரியாது சார்.''

''யூ ஆர் கவர்ன்மெண்ட் சர்வண்ட், இக்னரன்ஸ் ஆஃப் தி ரூல் ஈஸ் நோ எக்ஸ்யூஸ்.''

சேது பதில் கூறவில்லை.

''எந்தப் பள்ளியிலே படிச்சது?''

அவன் கல்லூரியின் பெயரைக் கூறினான்.

''ஹூ ஹூம் ஸ்மோக்கிங் ஈஸ் நாட் அலவ்டு இன் தி காம்பஸ், யூ நோ தட்?''

''இது அறையில்லையா சார்? அறையில்கூட—''

சப்பை மூக்கின் அடியில் நீட்டிக்கொண்டிருந்த சிறு ரோமக் காடு துடிப்பதுபோல் தோன்றியது.

அவர் வாசற் கதவருகில் சென்றபின் மீண்டும் திரும்பி நின்று கேட்டார்:

''வாட் டிட் யூ ஸே யுவர் நேம் வாஸ்?''

''சேது மாதவன்.''

டைரக்டர் வெளியே போனபோது எல்லோரும் ஒன்று கூடினுர்கள். அடுத்த அறையிலிருந்தும் ஆட்கள் வந்திருந்தார்கள்.

''நான் அப்பவே சொல்லலே, விளக்கு அணைக்கணும்னு?''

''சேதுவுக்கு வியப்புத் தோன்றியது.''

''எனக்குப் புரியலேயே. இதென்ன நெப்போலியன் பட்டாளக் கேம்ப்பா? அங்கேயுங்கூட போர்க்காலத்தில் இவ்வளவு கடுமையான விதிகள் இருந்திருக்க முடியாது.''

எல்லோரும் பிரிந்து சென்றுர்கள். விளக்கை அணைத்து விட்டுப் படுத்தபோது தூக்கம் வரவில்லை. மனது என்னவோ போலிருந்தது. சிமெண்ட் தரையிலிருந்து கனம் குறைந்த விரிப்பினூடே குளிர்ச்சியானது அட்டைப் பூச்சிகளைப்போல அரித்து ஏறிக்கொண்டிருந்தது.

உறக்கம் வருவதுபோல் தோன்றிய நிமிஷத்தில் திடுமென விழித்துக்கொண்டான். தூரத்தில் எங்கேயோ ஆந்தை அலருவது கேட்டது. வெளியே காற்று அடங்கியிருந்தது. இப்போது தென்னை ஓலைகள் எழுப்பும் ஓசை மட்டுமே கேட்டது.

யாரோ தட்டியெழுப்பிக் கூப்பிடும்போதுதான் கண் விழித்தான். மேகம் கவிந்திருந்த வானத்தைப் பார்த்தபோது, இன்னும் பொழுது புலரவில்லை எனத் தோன்றியது.

''ஏழே கால் ஆகிவிட்டது. எழுந்திருக்கலேயா?''

''ஏழே காலா?''

எழுந்து கண்களைக் கசக்கிக்கொண்டு மீண்டு ஜன்னல் வழியாக வெளியே நோக்கிக் கேட்டான்:

''எழுப்பியிருக்கக்கூடாதா?''

''கூப்பிட்டது கேட்கலேயா? நான் நூறுமுறைக் கூப்பிட்டேன்.''

அவர்கள் வெளியே போகும்போது சொன்னுர்கள்:

''சீக்கிரம் ரெடியாகு. நாங்க சாப்பாட்டுக் கூடத்தில் இருப்போம்.''

பல் தேய்த்து, முகம் கழுவி முடித்து வேகமாக சட்டையும் வேட்டியும் மாற்றி உணவுக் கூடத்தை அடைந்தபோது அங்கே

யாருமில்லை. காபி குடிக்க நிற்கவில்லை. களப் பணி எங்கே நடக்கிறது. உணவுக்கூடத்தில் வேலை செய்வோருக்கு தெரிந் திருக்க முடியாது. பரபரப்போடு எந்த வழியில் போவது எனத் தெரியாமல் நின்றான். அலுவலகத்துக்கு ஓடினான். சேவகன் வழியைச் சுட்டிக் காட்டினான்.

விரைந்து நடக்கும்போது தன்னைத் தானே சபித்துக்கொண் டான். எப்போதுமே தனிமையாகவே தான் ஆகிவிடுவதாக எண்ணிக்கொண்டான்.

இரண்டு பர்லாங் தூரத்துக்கப்பால் சீமைக்கொன்னை வேலிக் கப்பால் ஆட்கள் நிற்பதைக் கண்டபோது சமாதானமேற் பட்டது.

டைரக்டர் இருந்தார். கூடவே முதல் நாள் பிரார்த்தனை சொல்லித் தருவதற்கு வந்த பயிற்சியாசிரியரும் இருந்தார். சேது அங்கு வந்து சேர்ந்தபோது டைரக்டர் பேசுவதை நிறுத்தினார்.

வரிசையாக நிற்கும் நண்பர்களை அடுத்துச் சென்று தலை குனிந்து நடந்தபோது டைரக்டரின் சத்தம் கேட்டது:

''லுக் ஹியர்.''

தன்னோடு இல்லை, அவர் வகுப்பு தொடங்குகிறார் போலும்.

''ஐ ஸே லுக் ஹியர்.''

சேது நின்றான். எல்லா கண்களும் தன் மீதே பதிந்திருப்பதை உணர்ந்தான்.

''யூ கேன் கோ'' என்று கூறிய டைரக்டர் பயிற்சியாசிரியரின் பக்கம் திரும்பி உத்தரவிட்டார்.

''மார்க் ஹிம், ஆப்ஸெண்ட்.''

ஏதாவது சொல்லவேண்டும்போலிருந்தது. மன்னிக்கணும், ஸார், நாளை முதல்—வார்த்தைகள் பிடி கொடுக்காமல் எங்கோ ஓடி ஒளிந்துகொண்டுவிட்டன.

தலை குனிந்து திரும்பி நடக்கும்போது கண்கள் குடைவது போல் தோன்றியது. வேதனை கண்ணீரைப் பொழிந்தது. மூன்று நிமிடங்கள்? தாமதம் மூன்றே நிமிடங்கள்.

வரிசையில் கடைசியாக நின்ற ஆளின் கடிகாரத்தில் அவன் பார்த்துக்கொண்டிருந்தான். மூன்றே நிமிடங்கள்.

பதினொரு மணிக்கு நண்பர்கள் திரும்பி வந்து சேர்ந்தபோது சேது எழுந்திருக்கவில்லை.

காபி கிடைச்சுதா?

''கிடைச்சுது'' என்று கூறினன்.

காலையில் நடந்த சம்பவத்தைப்பற்றி யாரும் பேசவில்லை. மத்தியானம் நகரத்திற்குப் போகத் தயாராகிக் கொண்டிருந்தார்கள் பலரும்.

அரைமணி நேரம் கழிந்தபோது சேவகன் வந்து சொன்னன்:

''சேது மாதவனை ஆபீஸில் கூப்பிடறுங்க.''

சேதுமாதவன் எழுந்தான், நேராக வெளியேறிச் சென்றபோது கோபி அவன் கூடவே வந்து அவன் விஷயமாகக் கூறினன்.

''வெறுமனே தர்க்கவாதம் செய்ய வேண்டாம். சும்மா அட்ஜெஸ்ட் செய்துகொண்டால் போதும்.''

கோபியின் பயத்தைக் கண்டபோது சிரிப்புத்தான் வந்தது.

''ராணுவக் கோர்ட்டல்லவா? எனக்குத் தூக்குத்தண்டனை விதிக்கும்.''

ஆபீஸின் முற்றத்தைக் கடந்தபோது போர்ட்டிகோவில் ஒரு கார் வந்து நின்றது. வெளுத்த தடித்த ஒரு சிறு வயது ஆள், காரிலிருந்து இறங்கி, சாவியைத் தனியே காரிலிருந்து எடுத்துக் கொண்டு அலுவலகத்தின் உள்ளே ஏறிப் போனர்.

சேவகன் கூறினன்.

''பெரியவர் போறர்.''

பெரியவர் யாரென்று கேட்காவிட்டாலும் சேவகன் கூறினன், ''குஞ்சப்புட்டி முதலாளியோட மகன்.''

வராந்தாவில் இருந்த தூணில் சாய்ந்தபடி காத்துக்கொண்டு நின்றன். பத்து நிமிடங்கள், பதினைந்து நிமிடங்கள் . . . கதவைத் திறந்துகொண்டு சிறு வயதுக்காரர் வெளியே வந்தபோது, டைரக்டரும் கூடவே வந்தார். சேது ஒதுங்கி நின்றன். அவர் அவனைப் பார்த்திருக்கவேண்டும். காரில் சிறு வயதுக்காரரோடு அவர் ஏறியபோது, சேதுவை ஏறிட்டுப் பார்க்காமலே சேவகனைக் கூப்பிடச்சொன்னர்.

''குஞ்சிக்கண்ணு நான் குவார்ட்டர்ஸுக்குப் போயிட்டு வர்றேன்.''

என்ன நடக்கிறது என்பதை அறிந்துகொள்ள அவனது நண்பர்கள் ஒவ்வொருத்தராக உள்ளே வந்தார்கள்.

சேவகன் சமாதானப்படுத்தினன்: ''இப்போ வந்து விடுவார்.''

பன்னிரண்டு.

சேது சேவகனிடம் கேட்டான்: ''எங்கே குவார்ட்டர்ஸ் இருக்கு?''

இப்போ வந்திடுவார்.

வந்தால் என்னைக் கூப்பிடு, நான் அறையிலே இருப்பேன்.

அவன் அறையை நோக்கி நடந்தான்.

அரைமணி நேரம் கழிந்தபோது மீண்டும் சேவகன் வந்தான்.

அலுவலக அறையைக் கடந்து சென்றபோது அவர் தலையை உயர்த்திப் பார்க்கவில்லை, மேசையின் அருகில் சென்று மெதுவாகக் கூறினன்.

''சார்.''

''யூ நோ யூவார் ஏ கவர்ன்மெண்ட் சர்வண்ட்?''

ஆஸ்ட்ரேயில் சிகரெட்டை லேசாகத் தட்டிக்கொண்டு அவர் முன்னல் சாய்ந்துகொண்டு இருந்தபோது சிகரெட்டின் மணம் எங்கும் பரவியது.

''தெரியும் சார்.''

''இங்குள்ள ஒழுங்குமுறைகளை அனுசரித்து நடக்க முடியவில்லை யென்றல்.''

சேதுவின் உடல் விரைக்கத் தொடங்கியது.

''நான் ஒழுங்குமுறை பிசகினேனு—?''

''யூ நோ யூ ஆர் ஏ கவர்ன்மெண்ட் சர்வண்ட்?''

கடவுளே, எத்தனையாவது தடவை?

''உனக்கெல்லாம் யார் டிகிரி தந்து அனுப்பிச்சது?'' அப்போது ஏற்பட்ட சினத்தை அவனல் அடக்க முடியவில்லை.

''உன்னுடை அப்பன்!''

அப்போது கைகளில் ஏதோ ஒருவிதத் துருதுருப்புப் பரவிக் கொண்டிருப்பதுபோல் தோன்றியது. முன்னல் நீண்டு மெலிந்த அந்த உருவம் விரைத்துக்கொண்டு நின்றபோது சேது கோபத்தை அடக்கிக் கொண்டான்.

ஒரு நிமிட நிசப்தத்துக்குப் பின்னர் உரத்த குரலில் டைரக்டர் அலறினர்:

''யூ கெட் அவுட்?''

''நான் சொல்லாமலே போக நிச்சயித்துக் கொண்டிருந்தேன்.''

''ஐ ஸே யூ கெட் அவுட்?''

வெளியே சென்றபோது தலையில் இரத்தம் துரிதமாகப் பாய்ந்து கொண்டிருப்பதுபோல் தோன்றியது. கண்கள் மஞ்சள் பூத்துக்கொண்டிருந்தன.

வராந்தாவில் யாரெல்லாமோ நின்று கொண்டிருந்தார்கள். முகங்கள் தெளிவாகத் தெரியவில்லை. கூடவே அவர்கள் நடந்து வருவதுபோல் இருந்தது.

அறையின் முன்பாக வந்தடைந்தபோது உண்ணி நாராயணனுடையவும் கோபியினுடையவும் தோளில் கையை வைத்துக்கொண்டு கூறினான்.

''ஹெல்ப் மீ, எனக்கு இப்போதே போக வேண்டும்.''

அவர்கள் கூறியபோது எதையும் கேட்கவில்லை.

யாரெல்லாமோ வாக்களித்தார்கள். நிசப்தமாக ஒரு மௌன ஊர்வலம்போல அவர்கள் உடன் நடந்தார்கள், பஸ்ஸுக்குக் காத்து நிற்கும்போது யாரும் பேசவில்லை. பஸ்ஸில் ஏறியமர்ந்து வெளியே தலையை நீட்டி கையை ஆட்டி எல்லோரோடும் பயணம் கூறியபோது சிரிக்க முயன்றான்.

''குட் பை.''

துக்கத்தின் நிழல்கள் காணப்படும் முகங்கள் பின்னடைந்த போது அவன் சீட்டில் சாய்ந்து படுத்தபடி கண்களை மூடிக் கொண்டான்.

''குட் பை.''

# VII

## [1]

இசையோடு முழங்கும் பெல் இரண்டு முறை சப்தமிட்டபோது அவன் எழுந்தான். அவனுக்கு இடப்பட்டிருந்த உத்தரவு அது. ஒருமுறை சப்தமிட்டால் மேனன் எழுந்து போகவேண்டும். இரண்டு முறை என்றால் அவன் எழுந்து போகவேண்டுமென்பது உத்தரவு.

குளிர் சாதனம் பொருத்தப்பட்ட அறையின் கதவைத் தள்ளி திறந்தபடி அவன் உள்ளே சென்றான்.

கண்ணாடி பதிக்கப்பட்ட மேசையின் மேற்புறத்தில் ஒரு கை மூட்டையூன்றி, ஜன்னல் கட்டையில் இரண்டு காலையும் வைத்துக் கொண்டு சீனிவாச முதலாளி கடிதம் வாசித்துக்கொண்டிருந்தார். கடிதத்தைப் பாக்கெட்டில் போட்டுக்கொண்டு, ஜன்னல் கட்டையி லிருந்து கால்களை எடுத்து நாற்காலியைத் திருப்பி அவர் நேராக அமர்ந்தார்.

''காஷ் பாலன்ஸ் சரியாக இருக்கா?''

''இருக்கு.''

''நான் நேத்து எடுத்த ஆயிரம்?''

''அதை சஸ்பென்ஸில் வச்சிருக்கேன்.''

பில்கள், கிரெடிட் லெட்டர்கள், ஓ. டி. அக்கௌண்ட் பில், அக்கௌண்டில் வராத பில் — எல்லாவற்றையும் அவர் அக்கறை யோடு கேட்டார். அவன் திரும்பி நடக்கும்போது முதலாளி கேட்டார்.

''ரைட்டரே—?''

அவன் நினைத்தான், எனக்கு இப்போது பேரில்லாமல் இருக் கிறது. சேவகன் மேனன் அழைப்பது ''ரைட்டரே'' என்றுதான். வெளியே ஆட்கள் சீனிவாச முதலாளியின் ரைட்டர் என்றுதான் அறிந்துள்ளார்கள். அப்படியேதான் பழகுகிறார்கள். அவன் திரும்பி நின்றபோது முதலாளி ஆலோசித்தார். நரையேறிய முடிக்குள் விரல்களை விட்டுக் குடைந்துகொண்டு அவர் எதையோ மறந்துபோனதை மீண்டும் நினைவுபடுத்திக்கொள்ள முயன்று கொண்டிருப்பதுபோல் தோன்றியது.

அம்மை நோயால் ஏற்பட்ட வடுக்கள் தெளிவாகத் தெரியும் முகத்தில் ஒரு அழகிய புன்னகை அரும்பியது. சிரிக்கும்போது சிவப்பு நிறமேறிய கண்கள் பிரகாசிப்பதுபோல் இருந்தது.

''ஆமா, ரைட்டரே, வீடு எங்கே இருக்கு?''

''வீடு இல்லே.''

''சாப்பாடு எங்கே?''

''ஹோட்டலில்.''

''நான் ஒரு ஆளை அனுப்பறேன், அவன் அங்கே உதவியாக இருக்கட்டும்.''

''எல்லாம் அவ்விடத்திய தயவுதான்'' என்ற பாவனையில் நன்றியும் மகிழ்ச்சியும் கலந்த சிரிப்புடன் நின்றான். இருக்கையில் வந்தமர்ந்து பதில் எழுதவேண்டிய கடிதங்களை எடுத்து வைத்தான். தலைக்குள் ஏதோ ஒருவித வேதனை குடைந்து கொண்டிருப்பதுபோல் தோன்றியது.

முதல்நாள் ராஜண்ணன் நிலையாகத் தங்கியிருக்கும் ஒரு மூன்றாந்தர ஹோட்டல் அறையில் பன்னிரண்டு மணிவரை இருந்தான். முதலாளியைப் பார்க்க நாலைந்து தடவை இங்கே வந்தபோதுதான் கார் புரோக்கர் ராஜண்ணன் பழக்கமானார். எல்லோரும் அவரை ராஜண்ணன் என்று அழைத்தார்கள். பின்னர் வெளியே பார்த்தபோதெல்லாம் அறைக்கு வரும்படி அழைத்தார். அவரோடு பேசிச் சிரிப்பதே சுவாரஸ்யமாக இருக்கும். கார் வியாபாரிக்குத் தெரியவேண்டிய எத்தனையோ விஷயங்கள் அவருக்குத் தெரியும். ஐசன்ஹோவரும் குருஷேவும் ஸ்புட்னிக்கும் எல்லாமே அவருக்குத் தெரிந்த விஷயங்கள்தான். ராஜண்ணன் பையனிடம் கூறினார்:

''டேய், அந்த ராமனைக் கூப்பிடு.''

பையன் ஹோட்டல் முற்றத்தைச் சுற்றிச் சுற்றிப் பார்த்துக் கொண்டு நிற்கும் கவலை தோய்ந்த தடித்த கருநிற மனிதனைக் கூப்பிட்டான்.

''என்னடா இருக்கு? தோச்சையா நவஸாரமா?''

அதன்பின் சேதுவிடம் கூறினான்: ''இவன்தான் ஆசிட் ராமன்; மூணு மாசம் ஜெயிலிலே இருந்துட்டு நேத்துத்தான் திரும்பியிருக்கான்.''

தடியன் திரும்பி நின்றான். வேட்டியை அப்புறப்படுத்தி டிரௌசர் பாக்கெட்டிலிருந்து ஒரு பெரிய குப்பியை வெளியே

எடுத்து மேசைமீது வைத்தான். ''முழுவதும் இருக்கட்டும் ராஜண்ணு, எப்போதும் கேக்கிறதுதானே.''

பத்து மணியாகியபோது ராஜண்ணன் உலகத் தலைவர்களின் விஷயத்தையெல்லாம் நிறுத்திவிட்டார்.

''பாப்பம்மாளைத் தெரியுமா?''

''தெரியாது.''

''பின்ன உனக்கு என்னதான் தெரியும்.''

''ஒரு மக்கு.''

அரைக் குப்பி தீரும்போது, ''ஏண்டா நீயெல்லாம் கூப்பிடுவே; பிறகு மன்னிப்புக் கேட்பே.'' ''பாப்பம்மாள் ஊர் கோயம்புத்தூர். இப்போது தங்கியுள்ள முகவரி 21, டெல்லி ஹோட்டல்.'' டெல்லி ஹோட்டலின் மாடிப்படிக்குக் கீழே சிறிய இடத்தில் பாப்பம்மாள் உடைகள், கண்ணுடி, சீப்பு, பௌடர் ஆகியவைகள் அடங்கிய பெட்டி இருக்கும். அந்த முகவரிக்குக் கடிதம் எழுதினுல் கிடைத்து விடும். பதினைந்து வருஷங்களாக நகரத்தில் இருக்கிருள். கோயம்புத்தூரில் படித்துவரும் மாரிமுத்து என்ற மகனுக்கு நிலையாக மணியார்டர் அனுப்பி வருகிருள். முகவரி எழுதிக் கொடுப்பது ராஜண்ணன்தான்.

போதையில் முதலாளி நிலை தடுமாறி நிற்பதுபோல் தோன்றியது. வராந்தாவிற்கு வரும்போது தூணைப் பிடித்து ஒரு நிமிஷம் ஆடியாடி நின்றது நினைவு உண்டு. மதுவின் கசப்பு இன்னுங்கூட வாயில் தங்கி நின்றது. ''மேனன், ஒரு சின்ன எலுமிச்சங்காத் துண்டு கிடைக்குமா?''

அரை கிளாஸ் தண்ணியில் ஒரு எலுமிச்சைத் துண்டை பிழிந்து கொண்டுவரச் சொன்னுன்.

அப்போது வெளியே மாடிப்படியேறி காக்கி டிரௌசரும், அரைக்கைச் சட்டையும் அணிந்த இளைஞன் ஒருவன் வந்தான். மேனனிடம் மலையாளத்தில் முதலாளி இருக்காரா என்று கேட்ட போது வியப்படைந்தான். சிவப்பாகவுள்ள துடிப்புடைய அம் மனிதன் சாயபுவாக இருக்க வேண்டுமென்று கருதினுன். மேனன் மிகுந்த மரியாதையோடு கூடவே நடந்துசென்று கதவைத் திறந்து விட்டு திரும்பிவந்து மெதுவாகக் கூறினுன்.

''வில்ஸன் முதலாளி.''

''சாயபுவா?''

''அப்பா சாயபுவாக இருந்தார். வயநாட்டில் பெரிய காப்பித் தோட்டம் இருக்கு.''

எலுமிச்சை கலந்த நீர் குடித்தபோது கொஞ்சம் சுகமாக இருந்தது.

சாயபு வெளியே வந்து மாடிப்படி இறங்கிப் போகும்போது மேனனிடம் தமாஷாகச் சொன்னர்: ''மேனன் நமக்கெல்லாம் கவலே இருக்கணும்.'' முதலாளி ஆபீஸ் அறையிலிருந்து வெளியே வந்தார். ''செக் எதுவும் கையெழுத்துப் போடவேண்டியுள்ளதா?''

''இல்லே.''

கீழே வண்டியின் கதவு திறக்கும்போது சிமெண்ட் தரையில் சக்கரங்கள் உருளும் கொடூரமான சத்தம் கேட்கும்.

ஜீப் புறப்படுகிறது. வரும்போது வெளியே பாதையின் திருப்பத்தில் கிர்மாறும் சப்தங் கேட்டால் தெரிந்துவிடும், முதலாளியின் ஜீப்தான் அது என்று. வடக்கு ஜன்னலுக்கு வெளியே பார்த்துக் கொண்டு நிற்கும் மேனன் கூறினன். ''முதலாளி நல்லா ஓட்ருர்.'' மேனன் வெளி வேலேகள் முடிந்து திரும்பி வந்தால் சதாகாலமும் ஜன்னல் அருகிலேயே நிற்பான். வடக்கே ஜன்னல் அருகே முதலாளியின் முற்றமும் முதலாளியைப் பார்க்க வரும் ஆட்கள், அவருடைய வியாபாரங்கள், அவர்கள் வந்த கார்கள் எல்லாமே மேனனுக்குத் தெரியும். ''அது ராரிச்சன் முதலாளி கார். இம்பாலா லேட்ஸ்ட் மாடல். விலே முதலாளிக்கு மட்டுமே தெரியும்.'' காம்பௌண்டின் மத்தியில் காரேஜின் மேல்தான் ஆபீஸ் அறை. நாற்காலியில் சாய்ந்து படுத்திருந்தார். ஜன்னலின் மேற்பகுதியில் பங்களாவின் முற்றத்தில் உள்ள குல்மோஹர் மரங்களின் நுனிப்பகுதிகளேப் பார்க்கலாம்.

மத்தியானத்திற்குள்ள தபால்களுங்கூட வந்து சேர்ந்துவிட்டன. அவற்றிற்குத் தபால் எழுதத் தயாராக வைத்துவிட்டால் பிறகு ஒரு வேலேயும் இல்லே. நாற்காலியில் சாய்ந்து படுத்தபடி மரக்கிளேகளில் வந்தமர்ந்து நாட்டுப்புறக் கிளிகளேப் பார்த்துக் கொண்டிருப்பார். இல்லாவிட்டால் மேனன் சொல்லுகிற விசேஷ விஷயங்களேக் கேட்க வேண்டும்.

இங்கே வந்த நாளன்று மேனன்தான் இந்த விஷயங்களேயெல்லாம் எடுத்துச் சொன்னர். நெற்றியில் சந்தனப் பொட்டும் நீட்டிக்கொண்டிருக்கும் இரண்டு பற்களின் காரணமாக எப்போதும் சிரிக்கும் முக பாவமுள்ள மேனனேப் பார்த்தால் பரிதாபமாகத் தோன்றும். விரைவில் மேனனேடு அன்னியோன்னியமாகிவிட்டான். பி. டபிள்யூ. டி. யிலிருந்து பென்ஷன் வாங்கும் கருணுகரன் ரைட்டராக ஆபீஸின் முழுப் பொறுப்பாளியாவார். வரண்ட சிலேட் பென்சில் துண்டுபோல சிறிய

அந்த மனிதர் சிரித்துப் பார்த்ததில்லை. வெள்ளெழுத்துக் கண்ணடி வில்லைகளுக்கு அப்பால் உள்ள மங்கிய கண்களைப் பார்க்கும்போது உடம்பில் எங்கேயோ அசௌகரியமும் வேதனையும் ஏற்பட்டிருப்பதுபோல் தோன்றும்.

ஒருநாள் தெரியாமல் கேட்டுவிட்டான்:

''என்ன, சுகமில்லையா?''

அவர் அதைக் கேட்டதாகப் பாவிக்கவில்லை. நகரத்தையொட்டிய இடத்தில் அழுகிக் கிடக்கும் தேங்காய் மட்டையின் மணம் தேங்கிநிற்கும் தோட்டப் பகுதியில் உள்ள லாட்ஜில் தங்க ஏற்பாடு செய்து தந்தது மேனன்தான்.

முதலாளியின் வீட்டிலும் அலுவலகத்திலும் மேனனுக்குப் பூரண சுதந்தரம் உண்டு. வயதுக்கு மேலாக மதிப்புப் பெற்றிருந்ததாகத் தோன்றிய அந்த மனிதனைப் பற்றிய கணக்குக் கூட்டல்கள் தவறும்படித் தொடக்கத்தில் செய்தது ராஜண்ணன்தான்.

மேனன் முதலாளியைத் தன் கைக்குள் போட்டுக்கொண்ட கதை ராஜண்ணனுக்குத் தெரியும். நம்பமுடியாததுபோல் தோன்றியது.

ராஜண்ணன் சொல்லுவார்:

''எனக்குத் தெரியும், மூத்த பெண்ணின் திருமணத்துக்கு முதலாளி ஆயிரம் ரூபா கொடுத்திருக்கிறார்.''

ஆனால், அடுத்தநாள் மேனனைப் பார்த்தபோது எதையும் வெளியே காட்டிக்கொள்ளவில்லை. ராஜண்ணனின் உபதேசம் வேறு இருந்தது, ''ரகசியமா வச்சிக்கோ, பிறகு, தெரியும்.'' ஒரு சமயம் தியேட்டரின் வாசலில் மேனனும் மருமக்களும் நடந்து போவதைப் பார்த்தான்.

''நேத்து சினிமா பார்த்தீங்களே.''

திங்கட்கிழமை அலுவலகம் வந்தபோது வெறுமனே கேட்டான்.

மேனன் சிரித்தார். ''மருமக்கள் சினிமாவுக்குப் போகணும்'னு சொன்னாங்க. பிறகு என்ன செய்யறது? எனக்கு இதிலெல்லாம் ஆர்வமில்லை.''

ஒரு மணிக்குத்தான் அக்கௌண்டண்ட் நம்பியார் வருவார், பல இடங்களில் பகுதி நேரப் பணியாகக் கணக்குகள் எழுதும் வேலையைச் செய்து வந்தார்.

நம்பியார் தயார் செய்யுங் கணக்குகள் அலுவலகத்துக்கு ஆதாயம் தேடித் தருவதாக அமைவதால் யாரும் கேள்வி கேட்ப

தில்லை. கருணாகரன் ரைட்டர் போன பின்புதான் நம்பியாரை நியமித்தார்கள். ரைட்டர் சாமர்த்தியசாலி. ஸீபரீஸில் ஒரு வாரத்துக்கான பில் தொகை இரண்டாயிரத்து முன்னூறு ரூபாய்க்கு செக் அனுப்பும்போது அவன் ஹோட்டலிலிருந்து வந்த வேலைக்காரனைக் கைக்குள் போட்டுக்கொண்டு விட்டான். அதை ஹோட்டல் உரிமையாளர் அறிந்துவிட்டார். அவன் முதலாளியிடம் சொன்னான். முதலாளி கேட்டபோது ரைட்டர் பழைய பழக்கத்தின் பேரில் முதலாளிக்கு அறிவுரை கூறினார். எல்லாம் மேனன் தந்த தகவல்கள்தான். மறுநாளிலிருந்து ரைட்டர் வரவில்லை.

''முதலாளி திட்டியிருப்பாரோ?''

''ஹேய் திட்டு'ன்னு வச்சுக்கிட்டா—அவன் தர்ற காசிலே தான் நான் குடிக்கிறேன்'னு சொன்னான். அவ்வளவுதான்.''

மேனன் சாப்பிட வெளியே போகும்போது கேட்டான்.

''போகலையா?''

''மேனன் சாப்பிட்டுட்டு வாங்க.''

எழுந்து ஜன்னல் அருகில் நின்று திரைச்சீலையைச் சற்று விலக்கி பங்களாவின் முற்றத்தைப் பார்த்துக்கொண்டு நின்றான். நீண்ட காலத்துக்கு முன்பு கட்டிய மாளிகை. ஆண்டுகள் கடந்து சென்றபோதிலும் கவர்ச்சி குறையாத வீட்டின் முன்புறம் மரத் தூண்களால் அமைக்கப்பட்டிருந்தது. இருபுறமும் வெனிஷிய செடிகள். திரையைத் தாண்டிச் செல்லுமிடத்தில் பெரிய சாய்வு இருக்கையில் புலித்தோல் விரித்துப் போடப்பட்டிருந்தது. குல்மோஹரின் அடியில், நிழலில் தடித்துக் கொழுத்த சயாமீஸ் பூனை மயங்கிக் கிடப்பதைப் பார்த்தான்.

வெனிஷியச் செடிகளுக்கு அப்பால் வேலைக்காரக் கிழவியின் கிழிந்த அழுக்கு முண்டு ஆடையும் அழுக்குப் படிந்த கால்களும் தெரிந்தன. நடை வழியில் போடப்பட்டிருந்த விரிப்பில் சிவந்த செருப்புகள் அணிந்த தடித்த காலணிகள் பதிந்திருந்தன. அருகில் தங்க ஜரிகை கோடு போட்ட சேலைத் தலைப்பு விலகும்போது இளம் மஞ்சள் நிறமுள்ள ஸாட்டின் அடிப் பாவாடையின் சுருள்கள் நிலம் பாவின.

வராந்தாவின் தென் முனையில் உள்ள பூச்சட்டிகளின் அருகே அவள் வந்து நின்றபோது நெஞ்சுத் துடிப்பு அதிகரிப்பது போல் தோன்றியது. மாபெரும் சபைக்கு முன்னே மேடையில் நிற்கும் நாட்டியக்காரியைப்போல இருந்தது அவளது ஒவ்வொரு செயலும் பாவமும்.

திருமதி லலிதா ஸ்ரீனிவாசன்!

மேனன் வெளியே போன பின்பு, தான் தனியாக இருக்கும் போது, ஜன்னலின் அருகில் அவனையறியாமல் பார்த்துக்கொண்டு நிற்கும்போது மனதில் அச்சம் ஏற்பட்டது. ஏதோ ஒருவிதத் தவிப்பு.

வெனிஷியன் செடியின் மறைவில்லாமல் இப்போது அவளைச் சரியாகப் பார்க்க முடிந்தது. எண்ணெய்ப் பசையில்லாமல் கட்டப் படாமல் காற்றில் அலையும்படி விடப்பட்ட சுருள் முடிகளை இடையிடையே ஒதுக்கிக்கொண்டாள். கறுப்பில் தங்க நிறப் பூக்கள் போடப்பட்ட ஜாக்கெட் பிடிப்பாக இருந்தது.

நேற்றையச் செய்தித்தாளில் பார்த்த படத்தைவிட அழ கானது. அவளை நேரில் பார்ப்பதுபோல் தோன்றியது. ரோட்டரி கிளப் அங்கத்தினர்களின் துணைவியர் சுகாதார வாரத்தில் துடைப்பம் பிடித்துக்கொண்டு நிற்கும் படத்தில் அவள்தான் முன்னதாக நின்றாள்.

அப்போது கருஞ் சிவப்பு நிறமுள்ள ஸ்டாண்டர்ட் கார் போர்ச்சில் வந்து நிற்பதைக் கண்டான். கதவு திறந்து வெளியே இறங்கிய காக்கி நிறக் கால்களைக் கண்டபோது சந்தேகம் தோன்றியது.

தூணின் மறைவில் காண முடியவில்லை. அடுத்த ஜன்னல் அருகில் மாறி நின்றபோது புரிந்தது. வில்ஸன் முதலாளி பாண்ட் பாக்கெட்டிலிருந்து கைக்குட்டையை எடுத்து சிவந்த பின் கழுத்தைத் துடைத்துக்கொண்டு உயரமான சிவப்பு நிறச் செருப்பு களை அணிந்து, கார் ஓரமாக நிற்பது மட்டும் தெரிந்தது.

வில்ஸன் முதலாளி உள் வராந்தாவுக்குச் சென்றபோது அவன் மீண்டும் நாற்காலியில் வந்தமர்ந்தான்.

வெளியிலிருந்து மேனனின் குரல் கேட்டது. மாடிப் படியி லிருந்து பீடிப் புகையின் மணம் கடந்து வந்தது. அவன் அவர் முன்னால் பீடி புகைப்பதில்லை.

மேனன் வந்தவுடன் கேட்டார்:

''ரைட்டர் சாப்பிடப் போகலே?''

உள்ளே பசி கிள்ளியது. ஆனால் வாய்க் கசப்பு இன்னும் இருந்துகொண்டேயிருந்தது.

''மேனன் எனக்கு ஒரு காப்பியும் நேந்திரம் பழமும் கொண்டு வரும்படிச் சொல்லுங்க.''

ஜன்னல் அருகில் சென்று பங்களாவின் முற்றத்தைப் பார்த்து மேனன் சொன்னர்:

''முதலாளி வந்தாரு?''

''இல்லே.''

''இல்லே,'' அங்கே கார் நிற்குதே, யாரு வந்தது?

''வில்ஸன்.''

''உம்'' என்று பெருமூச்சு விட்டுவிட்டு மேனன் அபிப்பிராயம் ஒன்று சொன்னர்:

''வில்ஸன் முதலாளி பெரிய வேலேயாளி. தோட்டத்திற்கு வந்து இரண்டு நாள் தங்கிப் போவதற்கு எவ்வளவு ரூபா செலவு செய்வார்னு தெரியுமா?''

வில்ஸன் முதலாளியின் வரலாற்றை விரித்துரைப்பான் என்று பயந்து சேது நினேவூட்டினன், ''காப்பி, அந்த நம்பியார் வந்தால் போகவேண்டும். சுகமில்லே.''

அப்போது உள்ளே அலுவலக அறையில் டெலிபோன் ஒலியெழுப்புவது தெளிவாகக் கேட்டது.

அவன் சென்று போனே எடுத்தான். வருமான வரி ஆபீஸர் பேசினர். முதலாளி எங்கே என்று தெரியாது. கிளப்பிலும், மில்லிலும், ஸீபிரீஸிலும் தேடியுங் கிடைக்கவில்லே.

''ரைட்டர் யார்?''

ஒரு நிமிட தாமதத்திற்குப் பிறகு அவன் சொன்னன்:

''நான்தான்.''

''எனக்கு ஒரு கார் வேணும். ஒரு மணி நேரத்துக்கு.''

பியட் கார் ஓர்க்ஷாப்பில் இருந்தது. பென்ஸ் வண்டியை தூரப் பயணத்துக்குத்தான் முதலாளி எடுப்பது வழக்கம். ஆனல், முதலாளியின் அறிவுரை நினேவிலிருந்தது. மகிழ்ச்சிப்படுத்த வேண்டிய அதிகாரிகளின் பட்டியலில் உள்ளவர்கள் கேட்பதைக் கொடுக்க வேண்டும். அதனல் வினயமாகச் சொன்னன்.

''அனுப்பறேன்?''

கீழே இறங்கி வந்தபோது காரேஜில் டிரைவர் அப்புவைக் காணவில்லே. வேலேயில்லாதபோதெல்லாம் அவன் காரேஜிலேயே படுத்துத் தூங்குவான். இல்லாவிட்டால் சமையல்கட்டுக்கு வந்து அங்குள்ள சமையல்காரப் பெண்களோடு பேசிக்கொண்டிருப்பான்.

பெகேன்வில்லா முன்புறம் காடாக வளர்ந்து கிடக்கும் இடத்தில் உள்ள கேட்டைக் கடந்து, பங்களாவின் முன்பகுதியை அடைந்தபோதும் போர்ச்சில் சிவப்பு நிற ஸ்டாண்டர்ட் கார் நிற்பதைக் கண்டான்.

வராந்தாவை அடைந்தபோது சந்தேகப்பட்டு நின்ருன். சாய்வு இருக்கையில் விரிக்கப்பட்டிருந்த புலித்தோலே விரல்களால் தடவியபடி ஆலோசித்தான். உள்ளே வரவேற்பறையை அடைந்த போது அது யாருமில்லாது காலியாகக் கிடந்தது. சலிப்போடு வெளியே மீண்டும் வந்து பெல்லில் விரலே வைத்து அழுத்திஞன்.

பங்களாவின் உட்பகுதியில் எங்கேயாவது சலன ஒலி ஏற்படுகிறதாவென்று கவனமாகக் கேட்டான். திரும்பிப்போய் மேனன் வந்திருப்பதால் அவரை அனுப்பலாம்.

வில்ஸன் முதலாளியின் ஓசை கேட்டது.

''ஐ வில் டெலிபோன்?''

''வென்?'' பெண்ணின் குரல்.

கற்கோயில் ஓவியம் தீட்டப்பட்ட திரைச்சீலேயை நீக்கிக் கொண்டு வில்ஸன் முதலாளியும் அவருக்குப் பின்ஞல் திருமதி சீனிவாசனும் அவன் எதிரிலேயே வந்துகொண்டிருந்தார்கள்.

அவன் முகத்தை உயர்த்தி பார்க்காமலே வழிவிடவேண்டி சற்று விலகி நின்ருன்.

சிவப்பு நிறக் கார் வெளியே புறப்படும்போது அவன் பார்த்தான். அவள் திரைக்குப் பின்ஞல் நின்ருள்.

''வருமான வரி ஆபீஸர் கார் அனுப்பனும்'னு கேட்டார்.''

''அதுக்கு.''

அந்த ஒலியில் ஏதோ ஒருவித வெறுப்பும் கடுகடுப்பும் கலந்திருப்பதுபோல் தோன்றியது.

''டிரைவர் இல்லே.''

''நான் டிரைவராக இருந்து வண்டியை எடுத்துக்கிட்டு போகட்டுமா?''

அவனுக்குக் கோபம் ஏற்படவில்லே. மனதில் என்னமோ போல் இருந்தது. அதை வெளிக் காட்டிக்கொள்ளாமல் சிரமப்பட்டு அடக்கிக்கொண்டு, புலித்தோல் விரிக்கப்பட்ட சாய்வு இருக்கையை அலட்சியமாக விரல்களால் தட்டி அவன் சிமெண்ட் போடப்பட்ட முற்றத்தில் இறங்கிஞன்.

அப்போது பின்ஞலிருந்து கூப்பிடுவது கேட்டது.

''ரைட்டரே.''

ஒருவேளை நான் இதைச் சொல்லியிருக்கலாம். ''எனக்கொரு பேருண்டு'' என்று.

அந்தக் குரல் சாந்தமானதாக இருந்தது. அவன் திரும்பி நின்றபோது அவர் வாசற்படியைத் தாண்டி வெளியே வந்திருந்தார்.

மீண்டும் அவள் உடைகளை மாற்றியிருந்தாள். கறுப்பில் தங்க நிற நூல்கள் கொண்டு அழகிய பூக்கள் அமைக்கப்பட்டிருந்த சேலையும் தங்க நிறத்திலான ஜாக்கெட்டும் அணிந்திருந்தாள்.

''டிரைவர் இல்லை. ஒரு பிரைவேட் டாக்ஸி பிடித்து அனுப்பிக் கொடு.''

அப்போது அழகிய முக மரு அமைந்த அவளது தசை நிறைந்த முகத்தில் இளமை மிடுக்கு இல்லை.

''மாலையில் டிரைவர் வரவில்லை என்றால் குழந்தைகள் வர கான்வெண்டிற்கு வண்டி அனுப்பவேண்டும்.''

திரும்ப ஆபீஸ் அறையை அடைந்தபோது அக்கௌண்டண்ட் நம்பியார் தயாராக இருந்தார்.

மாலையில் வெளியே போகத் தயாரானபோது மேனன் வந்து சொன்னார்,

''கூப்பிடறாங்க.''

''யார்?''

''பெரியம்மா.''

''என்னையா?''

மேனன் தனக்கு விளையாட்டுக் காட்டுகிறாரே என்று அவருக்குத் தோன்றியது.

''வேலை முடிந்து வந்தால் போதும்'னு சொன்னாங்க.'' பங்களாவின் வராந்தாவிற்குச் சென்றபோது அவள் வெளியே வந்தாள்.

''வாங்க.''

உள்ளே வரவேற்பறையை அடைந்தபோது அவள் சொன்னாள்:

''உட்காருங்க.''

மறுக்கவில்லே. யானைத் தந்தத்தைக்காட்டிலும் வலுவான பெரிய கண்ணுடி பதிப்பிக்கப்பட்ட மேசைக்கெதிரேயுள்ள சோபாவின் பக்கமாக அமர்ந்தான்.

எதிர்ப் பக்கத்தில் உட்கார்ந்திருந்து, நழுவி விழுந்த சேலேயை வலிச்செடுத்துத் தோளிலே போட்டுக்கொண்டபடி காலாட்டிக் கொண்டு இருக்கும் அவளே நேராகப் பார்ப்பது தவறு என்றுணர்வோடவே அவன் தன் கண்களின் பார்வையைப் பின் வாங்கிக் கொண்டான்.

''ரைட்டர் பட்டதாரி தானே!''

''ஆமா.''

''எனக்கு வரும் வாரத்தில் குழந்தைகள் கண்காட்சியில் ஒரு பேச்சு இருக்கு, விஷயத்தையெல்லாம்—நான் சொல்றேன், நீங்க எழுதித்தரணும். நான் மலேயாளம் எழுதிளுல் அவ்வளவு நல்லா இருக்காது.''

''எழுதறேன்.''

கஷ்டமான சொற்கள் ஏதும் அதிகமாக இருக்க வேண்டாம். என்னுடைய மலேயாள மொழி அறிவு ரொம்பக் குறைவு. இல்லேன்ளு நான் ஆங்கிலத்திலே எழுதித் தாரேன்.

''நீங்க மலேயாளத்திலே மொழிபெயர்த்திடுங்க.''

''சரி.''

அவன் எழுந்தான்.

''ஏதாவது சாப்பிடறீங்களா, காப்பி?''

''வேண்டாம்.''

அப்போது வெளியிலிருந்து சிவப்பு டையும் கரும்நீல பிராக்கும் அணிந்த பிள்ளேகள் ஆரவாரமிட்டுக்கொண்டு உள்ளே வந்தார்கள்.

''மம்மீ..மம்மீ........ஸுஸ்மா சொல்ரு?''

''உள்ளே, கோ இன் சைடு.''

சிறிய தகரப் பெட்டிகளேத் தூக்கிப் பிடித்துக்கொண்டு சிறுமிகள் இருவரும் உள்ளே ஓடிஞர்கள். வெளுத்த தடித்த பிள்ளேகள். அம்மாவின் கன்னத்தில் இருந்த மச்சங்கூட மூத்த சிறுமியின் கன்னத்தில் இருப்பதை உன்னிப்பாகக் கவனித்தான். மாநிறத்தில் வட்டமுகமும் வாடிய கண்களும் உள்ள சிறிய மகன் அம்மாவின் அருகே சுற்றிச்சுற்றி வந்தபோது அவள் எழுந்தாள்.

''இவுங்க வந்தாச்சுன்னு ஒரே ஆரவாரம்தான்.''

''வி வில் டிஸ் கஸ் டுமாரோ.''

நெற்றியில் வீழ்ந்து கிடந்த தலைமயிர்ச் சுருள்களை நேராகச் சீர் செய்தாள். மந்தகசித்துக்கொண்டு அவள் உள்ளே போகும்போது கேட்டாள்;

''ரைட்டர் பேர் என்னென்னு சொன்னீங்க?''

''சொல்லலே, சேது.''

விரிப்பின்மீது அவள் தன் மகனின் கையைப் பிடித்துக் கொண்டு உள்ளே நடந்து போனபோது தனக்குத்தானே சிரித்துக் கொண்டு அவன் வெளியேறினன்.

[2]

மாலை நேரம் நெருங்க நெருங்க வீதிகளில் ஜன நெரிசல் அதிக மாகிக்கொண்டே வந்தது. மாசுபட்ட காற்றின் துர் வாடையையும் மிஞ்சிய வண்ணம் வண்டி வாகனுதிகளின் இரைச்சலும் மனிதர் களின் பேச்சு நடமாட்ட ஆரவாரமும் அதிகரித்துக்கொண்டே வந்தன.

கறுப்புச் சட்டைக்காரரர் வாழும் இடுங்கிய சந்து கடந்து, உயரம் குறைந்த மேசைக்குப் பின்னுல் சப்பணம் போட்டபடி சாய்ந்துகொண்டிருக்கும் தொந்தி பெருத்த மூல்தானிகள் வட்டிக்குப் பணம் கொடுப்பதற்காகக் காத்துக்கொண்டிருக்கும் தெருவை அடைந்தபோது, இங்கு தான் எங்காவது இருக்க வேண்டும் எனத் தோன்றியது! நடக்கத் தொடங்கி எவ்வளவு நேரமாகிவிட்டது!

சரக்குகளை இறக்கும் லாரிகளும், டிராலிகளும் கேட்பாரில் லாது கிடந்தன. அந்த வரிசையை அடைந்தபோது யாரோ சொன்னது நினைவுக்கு வந்தது. புழுதியும், குப்பை கூளங்களும் நிறைந்து கிடக்கும் இத் தெருவில் கை வண்டிக்காரரர்களின் பேச் சொலி எப்பொழுதும் கேட்டுக்கொண்டே இருக்கும். இத்தெருவின் இரு புறமும் உள்ள பழைய ஓடு வேய்ந்த வீடுகளின் அறைகளில் லட்சக்கணக்கான ரூபாய் வியாபாரம் நடந்துகொண்டிருக்கிறது. கனமான ஓலைக் கொட்டான்கள் இறக்கப்படும் ஒரு லாரிக்குப் பின்னுல் நிற்கும் காளை மாட்டு வண்டி நுகத்தடியைத் தாண்டிக் கொண்டு நெருக்கடியில்லாத வழியில் செல்லும்போது இடது பக்க மிருந்த வீட்டிலிருந்து இறங்கிய இளம் வயதினன் ஒருவன் வேக மாக இறங்கி முன்னுல் நடந்தான்.

தோளில் துண்டும் கக்கத்தில் ஒரு ஜிப் வைத்த பையுமாக ஒரு நிமிஷம் நேருக்கு நேராக நின்ற அவனைக் கண்டபோது திகைத்துப் போய்விட்டான்.

சுவாமி! சுவாமிதானே?

எனினும் வேகமாக நடக்கத் தொடங்கினான். நாலடி எடுத்து வைத்தபோது மீண்டும் திரும்பிப் பார்க்காமலிருக்க முடியவில்லை. அப்போது அவனும் பார்த்து நின்றான்.

ஒரு கேலிச் சிரிப்புடன் காத்திருக்கும்போது சுவாமி மெதுவாக அடுத்து வந்தான்.

''பாலக்காட்டிலே இருந்தீங்க இல்லியா?''

சுவாமி சந்தேகத்தோடு கேட்டபோது, எங்கெல்லாமோ வேதனை ஏற்பட்டிருப்பதுபோல் தோன்றியது. ஒரு ஆண்டு முழுவதும் ஒரே அறையில் தங்கி வாழ்ந்தவன்.

''சுவாமிக்கு என்னை நினைவிருக்கா?''

''ஹலோ, ரூம்மேட்?''

கையைப் பிடித்துக் குலுக்கி மகிழ்ச்சி ஆரவாரத்தோடு புறப்பட்டார்கள். மறந்துபோன பழைய வார்த்தைகளைத் தேடிப் பிடித்துக்கொண்டு வந்தார்கள்.

சுவாமி கூறினான்:

''நண்பா, எனக்கு முதலில் புரியலே.''

சுவாமியைக் குற்றஞ்சாட்டவில்லை. ''பலருக்கும் என்னைப் புரியலே—ரூம்மேட் உனக்கே என்னை புரியவில்லை!''

''சுவாமி! நீ, தடிச்சுப்போயிட்டே.''

சுவாமி சிரிக்கவில்லை. முன்பெல்லாம் சுவாமி ஈர்க்குச்சி போல மெலிந்து ஒடிசலாக இருப்பான். மல் துணியால் தைக்கப் பட்ட அரக்கை சட்டையே அணிவான். பேசாமல் இருக்கும்போது கூட நாக்கு நுனி உதட்டுக்கு வெளியே உந்திக்கொண்டிருக்கும். இப்போது வயதுக்கேற்ப பெரிய மனுஷத்தனம் உள்ள ஒரு நாட்டுப்புற மனிதனைப்போலவே தோற்றமளித்தான்.

மலைச்சரக்குக் கடையின் பக்கமாக ஒதுங்கி நின்று பேசினார்கள்.

''சேது என்ன செய்யறே?''

''ஒரு கம்பெனியில் வேலை செய்யறேன்.''

அதிகமாகத் தன்னைப் பற்றிக் கேட்காமலிருப்பதற்காக சுவாமியின் சேம நலன்களைப்பற்றி கேட்கலானான். இண்டர் மீடியட்

முடிந்தவுடன் படிப்பை நிறுத்திய சுவாமி வியாபாரத்தில் தந்தைக்குத் துணையாக இருக்க நின்றுவிட்டான். இரண்டு ஆண்டு கட்கு முன்பு அப்பா இறந்துவிட்டார். இப்போது சுவாமி தனியாக வியாபாரம் செய்து வருகிறுன்.

''சேதுவுக்கு திருமணம் நடந்துவிட்டதா?''

மீண்டும் ஒரு வெள்ளைச் சிரிப்பை உதிர்த்தான். பொருளற்ற சிரிப்புகள் எப்போது வேண்டுமானுலும் சிரிக்க முடியும்.

''ஹேய், இல்லே.''

சுவாமி தாழ்ந்த குரலில் சொன்னுன்.

''எனக்கொரு குழந்தை இருக்கு. ஒரு வயசு. திருமணத்துக்கு அழைப்பு அனுப்ப முகவரி கிடைக்கலே.''

அவனுக்கு நிலையான முகவரி ஏதும் இருந்திருக்கவில்லை. வயக் காட்டில், காப்பித் தோட்டத்தில், ஹாஜியாரின் பெட்ரோல் பங்கில், சூதாட்டம் நடத்தும், 'கார்னிவல்' கேளிக்கைக் கழகத்தில்—நிலையாகத் தேங்குமிடமில்லாத மரக் கட்டை ஆற்று வெள்ளத்திலே மிதந்து செல்வதைப்போல நடந்தது அவனது வாழ்க்கை.

''எந்த வழி?''

''ஹேய், அப்படியெல்லாம் ஒண்ணுமில்லே.''

''காரை மார்க்கெட்டுக்கு அருகில் நிறுத்தி இருக்கேன், வா. நான் இறக்கிவிடறேன்.''

''வேண்டாம். நான் அதுவரை வர்றேன்.''

வழியில் சுவாமி கேட்டான்:

''காப்பி?''

''வேண்டாம்.''

தர்மக் கணக்கில் இப்போதும் சுவாமி செலவெழுதுகிறுனே என்பது தெரியவில்லை.

மார்க்கெட் காமன் வளைவினையடுத்துள்ள கேட்டுக்கு அப்பால் உள்ள கடைக்கு முன்பாக கறுப்புநிற ஃபியட் கார் நின்றுகொண் டிருப்பதைப் பார்த்தான். சுவாமி காரின் கதவைத் திறந்தான். ஸ்டியரிங்கைப் போட்டு ஸ்டாட் செய்தபோது ஒரு குலுக்கு குலுக்கிக் கிளம்பியபோது மீண்டுமொருமுறை கேட்டான்:

''நான் விஸ்வநாதய்யரிடம் போகணும். அவர்தான் தேயிலே ஹோல் சேல் டீலர்'னு உனக்குத் தெரியுமே. எனது மனைவியின் தாய் மாமா. சேதுவை நான் எங்கே இறக்கிடணும்?''

''வேண்டாம். எனக்கு இதுக்குப் பக்கத்திலே போனு போதும்.''

''சரி, பிறகு பார்க்கலாம். நான் கடிதம் எழுதுகிறேன்.''

ஃபியட் கார் குதித்தோடியது. சேது தன் வழியே திரும்பி நடந்தான்.

பிரிந்தபோது சுவாமிக்கு ஆசுவாசம் தோன்றியிருக்கவேண்டும். இவனுக்கும் ஆசுவாசம்தான். பார்க்கவும் இல்லை, எழுதவும் இல்லை. ஆறு ஆண்டுகட்கு முன்பு ஏற்பட்ட நட்பு மறைந்துவிடுகிறது. மீண்டும் எப்போதாவது ஒரு முறை நேரில் கண்டால் அந் நட்புறவு மீண்டும் தலைதூக்கும்போலும்...

யாருக்கும் கடிதம் எழுதுவதில்லை. யாரிடமிருந்தும் கடிதங்கள் வருவதுமில்லை. சீனிவாசன் முதலாளியோட ஆபீஸில் வேலையில் சேர்ந்து மூன்று மாதம் கழிந்த பிறகுதான் பரமேஸ்வர அண்ணனிடமிருந்து கடிதம் வந்தது. ஊரில் பலசரக்குக் கடையை அடுத்து உள்ள அறையில் டீக்கடை வைத்து நடத்தும் மாப்பிளாவை ஒரு சமயம் எதிர்பாராமல் சந்தித்துவிட்டான். அதன்பின், எதனால் பரமேஸ்வர அண்ணனுக்கு முகவரி தெரியாமல் போய்விட்டது என்பதைப் புரிந்துகொள்ள இயலவில்லை. முதலாளியின் பெயரை தவறாக அஸீஸ்குட்டி சொல்லியிருக்க வேண்டும். அதன் காரணமாக, துன்பத்தை எப்போதும் அனுபவித்துக்கொண்டிருக்கிறான். சேவகன் மேனன் தபால் கொண்டு வந்து மேசைமீது வைக்கும்போது மனதில் வருத்தம் வெதும்பத் துரிதமாக மேல் விலாசத்தினூடே கண்ணோட்டம் விட்டான். அப்போது தன் பெயரில் ஏதும் தென்படக்கூடாது என்பதுதான் அவன் பிரார்த்தனையாக இருந்தது. தங்கமணி கைப்பட முகவரி எழுதிய கடைசிக் கடிதத்தைத் திறக்கவில்லை.

திறந்து பார்க்காமலேயே பதில் எழுதினான்: ''நான் இவ்விடத்தை விட்டுப் போகிறேன். எப்போது திரும்புவேன் என்பது தெரியாது. ஒரு சமயம் நான் ஒரு நல்ல மனிதனாக இருந்தேன். அந்த மனிதனைத்தான் நீ காதலித்தாய். வாழ்வு தரும் எல்லா வாசல்களும் திறந்திருக்கும்போது, நீ இந்த அவசரத்திலும்கூட மீண்டும் உனக்குரிய தீர்மானத்தை நீ எடுத்துக்கொள்ளலாம்.''

எழுதி முடித்த வாசகங்களை மீண்டும் படித்தபோது பொருளற்றது என்பதை அறிந்து அவற்றைக் கிழித்துக் குப்பைக் கூடையில் போட்டுவிட்டான்.

நகரசபைக் கட்டிடத்தின் முன்னுல் நிறுவப்பட்ட காந்தியடி களின் சிலையின் அடியை அடைந்து, அங்கே நின்ருன். இனி எங்கே? நேராக மேற்கு நோக்கிச் சென்ருன். கடற்கரையைச் சுற்றிச் செல்லும் பாதையை அடைந்தபோது தனிமையில் எங்காவது உட் காரவேண்டும்போல் இருந்தது.

நடைபாதையை ஒட்டியிருந்த பாறைப்பகுதியில் காற்ருடி மரங் களின் குடைக்கீழே சிறுவர்கள் நிறைந்திருந்தார்கள். பாதையின் ஓரமாக தெரு விளக்குகளைக் கடந்து பூட்டிக் கிடந்த இங்கிலீஷ் கம்பெனி கட்டிடத்தின் முன் பகுதியை அடைந்தபோது உட்காரு வதற்கு இடம் தேடினுன். அருகே கீழ்ப்புறத்தில் கொந்தளிப்பான கடல் அலைகள் ஓங்காரமாகத் தரையைத் தொட்டுவிட்டு திரும்பியது. அருகே இருந்த குட்டையின் சேற்றுநீரில் சிறிய வலைத் துண்டை வீசி பொடிமீன்களைப் பிடிக்கும் சிறுவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

சாலை வழியே ஸ்கூட்டர்களும் கார்களும் சாவதானமாகக் கடந்து போய்க்கொண்டிருந்தன. கடலில் யாரோ 'போட்' ஓட்டி விளையாடிக் கொண்டிருப்பது தெரிந்தது. அதற்கு அப்பால் கடலாழம் தொடங்கும் இடத்தில் நிரப்பப்பட்டிருக்கும் சரக்குக் கப்பல்கள் தெளிவில்லாமல் காணப்பட்டன.

எதிர்ப்புறத்தில் பழைய கம்பெனிக் கட்டிடத்தின் சுவரில் சாய்ந்துகொண்டு சாக்குத்துண்டுகளைக் கட்டிய தாடிக்காரப் பைத்தியம் உரத்த குரலில் தாளுகப் பேசிக் கொண்டிருந்தான்.

மாலை நேரம் மயங்கியது. வழியில் எங்காவது பலகாரம் சாப்பிட்டுவிட்டு வீடு போய்ச் சேரவேண்டும். கடைத்தெருவுக்கு அப்பால் உள்ள வீட்டை வசிப்பதற்காக வேண்டி முதலாளி கொடுத்ததிலிருந்து பலகாரம் சாப்பிடுவது ஒரு பிரச்சினையாகவே ஆகிவிட்டது. அழுகிய தேங்காய் நார் துர்வாடையுள்ள லாட்ஜில், உடன்வசித்து வந்த தாலுகா அலுவலக கிளார்க் நம்பியார் வீட்டைப் பார்த்து ஆச்சரியப்பட்டான்.

''வாடகைக்கு கொடுக்கிறீங்களா?''

''தெரியலே.''

''அறுபது ரூபாய் இருக்கும். சிலசமயம் எழுபது ரூபாய் கூட இருக்கும்.''

அறுபது ரூபாய் வாடகை கிடைக்கக் கூடிய வீட்டைத்தான் முதலாளி வசிப்பதற்கெனத் தந்திருக்கிருர்.

அன்பாதரவு என்பது ஒரு கனவு போலிருந்த அவனுக்கு நகரத்தில் ஒரு வீடு!

கண்ணுடிச் சில்லுகள் பதித்த உயர்ந்த மதில் சுவர்கள் உள்ள பெரிய மாளிகைகளின் வாயில்களில் கூர்க்காவையும் அல்சேஷன் நாய்களையும் காவல் வைத்து வாழ்ந்து வருபவர்களுக்கு அன்போ, ஆதரவோ காட்டமுடியுமோ? நம்பிக்கை ஏற்படவில்லை. படித்த புத்தகங்கள் எதிலுமே அன்போ, ஆதரவோ காட்டும் முதலாளியை அவன் கண்டதில்லை.

''வாடகைக்குக் கொடுத்தால் வாடகை சரியாக வருவதில்லை. இதை இடித்து மாற்றித் திருத்திக்கட்டணும்'னு நெனச்சிருக்கேன்.''

முதலாளி கூறினார்.

''மன்னிக்கவும். முதலாளியைப் பற்றிய உன் கணக்கு தவருகி விட்டது.'' மனத்திற்குள் மெதுவாக முணுமுணுத்துக் கொண்டான்.

மாதத்தில் முதலாளியோட பில்கள் ஆபீசிற்கு வந்தவுடன் செக் எழுதி, கையெழுத்திட்டு மேனன் கையில் கொடுத்தனுப்பும் போது வியப்பாக இருந்தது. ஆயிரக்கணக்கில் செக் எழுதி மேசை மேல் வைக்கும்போது பணம் எவ்வளவு முக்கியத்துவம் உடையதாக இருக்கிறது எனத் தோன்றும்.

ஹோட்டலில் கணக்கு, கிளப்பிலும் கணக்கு, சிகரெட் கடையிலும் மாதம் இருநூறு ரூபாய்கள்! கொச்சித் துறைமுகத்துக்கு லாரியில் சென்றுவிட்டுத் திரும்பும்போது பாங்க் கணக்கில் பதினையிரக்கணக்கில் பெருகுகிறது என்பதை நினைத்துப் பார்த்த போது வியப்புக் குறையவில்லை.

ஒரு சமயம் மேனனிடம் இதைக் கூறினான்.

வலைத் துண்டுகளைப்போட்டு மீன் பிடித்திருந்தவர்கள் இடத்தைவிட்டகன்றபோது, கலங்கிப் போயிருந்த நீரில் சேறு இறங்க, கண்ணுடிபோல் நீர் தெளிந்து வந்தது.

அவனுக்குத் தன் முகத்தின் பிம்பத்தை அதில் தெளிவாகப் பார்க்க முடிந்தது. காலையில் வெளியே போகும் சமயத்தில் ஜன்னல் கட்டையின் மேல் கண்ணுடியைத் தூக்கி நேராக வைத்துக்கொண்டு அதன் முன்னுல் சென்று நிற்கும்போது எண்ணிக் கொள்வான்; இரண்டு ஆண்டுகளில் என் முகச்சாயல் மாறிப் போயிருக்கிறது. பசியால் தூக்கமில்லாமல் கழிந்த இரவுகளின் கனத்த இருட்டு முழுவதும் கண்களின் அடியில் தேங்கிக் கிடக்கிறது. மரச்சட்டம் தாங்கிக் கொண்டிருந்த கண்ணுடியைக் கையிலெடுத்துப் பிடித்துக் கொண்டு புன்முறுவல் பூத்தபடி நோக்கினுன்.

'என்னுல் சிரிக்க முடியாது. சிரிக்கும்போது உன் முகம் மேலும் விகாரமாகத் தோன்றுகிறது . . .'

தூக்கமில்லாத இரவுகளிலெல்லாம் மரணத்தின் வாடையை அனுபவித்த ஒரு இருண்ட அறையின் ஓவியம் மனதில் தெளிவாகத் தோன்றும்.

பயிற்சிக்களத்தின் வாசற்படியை விட்டு பஸ் ஏறிய அவன், மழைத்தூரல் போட்டுக் கொண்டிருந்த மாலையில், ஒரு பழைய கட்டிடத்தின் முன் உள்ள ஒன்றரை ரூபாய் வாடகை அறையில் இருந்து கொண்டு மரணத்தைப் பற்றி ஆலோசித்தான்.

கீழேயுள்ள அடுப்படியிலிருந்து வந்த புகை ஜன்னலைக் கடந்து வந்து அங்கேயே தங்கியிருந்தது. ஈரப்புகையின் மணமும், புகை படிந்த மரம், இடிந்த சுவர் இவைகளினின்றும் வீசும் வாடையும் இறந்தவரின் உடலினின்றும் வீசும் துர்வாடையை நினைவூட்டின.

தாளையும், பேனாவையும் எடுத்து வைத்துக் கொண்டான். முதலில் யாருக்கு எழுதுவது. யாருக்கு ஆறுதல் கூறுவது? பேனாவைப் பிடித்திருந்த விரல்கள் வலிப்பது போல் தோன்றியது.

அப்போது விளக்கணைந்தது. வெளியே பார்த்த போது நகரம் முழுவதும் இருட்டில் மூழ்கியிருப்பது தெரிந்தது. வெளிச்சத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். மேசையின் மேல் தலையைச் சாய்த்தான். வெளியே வராந்தாவினூடே மெழுகு திரியோடு கடந்து போகும் உணவு பரிமாறுவோருள் யாரோ ஒருவன் கூறியது காதில் விழுந்தது; விளக்கு வரப்போவதில்லை. எங்கேயோ மரம் விழுந்து ட்ரான்ஸ்ஃபார்மர் கெட்டுப்போய் விட்டதாம்.

பேனாவை மூடி வைத்துவிட்டு அறையை விட்டு வெளியேறினான். பெட்ரோமாக்ஸ் விளக்குகளையும் மெழுகுவர்த்திகளையும் ஏற்றி வைத்துக்கொண்டு வியாபாரம் செய்யும் கடைவீதிகளிடையே இருட்டில் நிழல்போல மெதுவாக நடந்தான். கடல் நீரால் நனைந்த கடற்கரை மேட்டில் நிற்கும் போதும் ரயில்வே பாலத்தைத் தாண்டி நடக்கும் போதும் மனம் என்னவோ போல் இருந்தது. நடந்து நடந்து பழைய பட்டாளப் பயிற்சிக்களத்தை அடுத்திருந்த மைதானத்தை அடுத்து நனைந்திருந்த புல்தரையில் அமர்ந்தான். கடிதத்தின் ஒரு மூலையில் அச்சடித்து வந்திருந்த ஒரு வார்த்தையின் கொட்டை எழுத்துக்கள் கண் முன்னால் நடனமாடுவது போலிருந்தது.

ஓடை மீதிருந்த மரப்பாலத்திற்கு அப்பால் எரியும் அடுப்புகளின் சிவந்த தீ நாக்குகள் அங்குமிங்கும் அடுப்பிற்குள் அலைவதைப் பார்த்துக் கொண்டு அமர்ந்திருந்தான். டயர் தீப்பற்றி எரிவதால் உண்டாகும் துர்வாடை காற்றோடு கலந்து சென்று கொண்டிருந்தது. இருட்டில் எங்கிருந்தோ திக்கித் திணரும்

பேச்சொலி கேட்டது. எழுந்து நடக்கும் போது இருட்டினிடையே யாரோ வருவது போல் தோன்றியது.

''ஸ் ஸ் ஸ் . . .''

நடையில் வேகத்தைக் கூட்டினுன். பயத்தோடும், படபடக்கும் நெஞ்சத்தோடும் தப்பித்துக் கொள்ளவேண்டி போகும்போது அவன் மனதில் தோன்றியது. நான் வாழ்க்கையைப் பெரிதும் விரும்புகிறேன்! நான் எப்படியும் தப்பிக்க வேண்டும்!

பின்னுல் காலடி ஓசை கேட்டது.

''போகட்டுமா?''

ஒரு பெண்ணின் குரல். மைதானத்தின் ஓரமாகச் சென்று சாலையை அடைய வழி கண்டுபிடிக்க நிற்கும்போது அந்தப் பெண் அருகே வந்துவிட்டாள். கருத்த முகத்தில் உந்தி நிற்கும் பற்களின் நிறம் அந்த இருட்டிலேயும் தெளிவாகத் தெரிந்தது.

''ஒரு பீடியிருந்தாக் கொடுங்க.''

அவன் ஒரு சிகரெட்டை எடுத்துக் கொடுத்தான். தீப்பெட்டியில் தீக்குச்சியை உரைத்தபோது அம்மைத் தழும்புள்ள வட்டமான முகத்தையும், நீட்டிக்கொண்டிருக்கும் பற்களேயும் தெளிவாகக் கண்டான். சிகரெட்டை புகைக்கும்போது பற்களுக்கிடையிலே சிவப்பு வெளிச்சம் தெளிவாகத் தெரிந்தது. நெருப்பை உமிழும் கொள்ளிவாய்ப் பிசாசுகளேப்பற்றி அவனேயும் அறியாமல் நினேத்துக்கொண்டான்.

''டீக்குடிக்க காசு கொடு முதலாளி.''

அப்போது சிரிக்க வேண்டும் எனத் தோன்றியது. முதலாளி!

பாக்கெட்டிலிருந்து தடவி எடுத்தபோது ஐந்து ரூபாய் நோட்டு வந்தது. அதை அவள் நம்பாமல் தன் கண்முன்னே தூக்கிப் பிடித்து பரிசோதித்தபோது உரக்கச் சிரித்தபடி நடந்தாள்.

''நான் வரட்டுமா முதலாளி?''

திரும்பிப் பார்க்கவில்லே. மரண வாடை வீசும் அறையின் உள்ளே அழுக்கடைந்த பாயில் குப்புறப்படுத்தபடி கிடந்தான்.

அன்று இரவு வெறுமனே சிரித்து மறைந்தது.

இன்னும் பத்து ரூபாய் இருந்தது. பொழுது விடிந்ததும் கணக்குத் தீர்ந்தால் ஏழரை ரூபாய் மிஞ்சும்; ஏழரை ரூபாயைக் கொண்டு வாழ்க்கையை ஆரம்பிக்கப் போகிருன்!

''ரைட்டரே.''

சைக்கிளிலிருந்தபடி கீழே காலையூன்றிக்கொண்டு முன்னால் நிற்கும் சுருள் முடிக்காரன் மூப்பனைக் கண்டவுடன் எழுந்து பாதையோரமாக ஒதுங்கினான்.

முதலாளியின் மரமேறுவதையும் காய் இறக்கிடுவதையும் செய்துவரும் கறூர் பேர்வழி மூப்பன். சொந்தமாக இரண்டு தோணிகளும் அவனுக்கு உண்டு.

''என்ன விசேஷம் ரைட்டரே?''

''ஒன்றுமில்லே, சும்மாதான்.''

மூப்பன் தேநீர்க்கு ஆர்டர் செய்தான். வெளி வேலைகளுக்குச் சென்றதுமுதல் நிகழ்ந்த பல்வேறு விஷயங்களைப்பற்றி விவரித்தான். வீட்டுக்குச் சென்ற பின்னர் எல்லோரையும் விசாரித்ததாகச் சொல்லும்படியாகவும் ரைட்டர் ஒருமுறை வீட்டுக்கு வந்து போகவேண்டும் என்றும் வேண்டிக்கொண்டான்.

''முதலாளியைப்பற்றி யார் என்ன சொன்னாலும், அவர் அன்புள்ளவர்தான். நமக்கெல்லாம் எவ்வளவோ சௌகரியங்களைச் செஞ்சிருக்கார்.'' முதலாளியோடு சேர்ந்திருப்பவர்களெல்லாம் நன்றாக இருப்பதை மூப்பன் நினைவூட்டினான்.

''ரைட்டருக்கு அதிர்ஷ்டம். முதலாளிக்கு உங்கமீது ரொம்ப நம்பிக்கை.''

''வேறேதும் வேண்டுமா?''

''ஒண்ணும் வேண்டாம், மூப்பா.''

தெரு விளக்குகள் வெளிச்சமாக எரிந்துகொண்டிருந்தன. நடைபாதை வழியே தடித்துக் கொழுந்திருந்த குஜராத்திப் பெண்கள் சிமெண்ட் தரையில் செருப்பை உரசிக்கொண்டு நடந்து சென்றார்கள்.

கருத்த வானத்திற்குக் கீழேயுள்ள கடல், திறந்து வைத்த ஒரு கண் மைச் சிமிழ் போல மின்னிக்கொண்டு இருந்தது. தூரத்தில் நின்றுகொண்டிருக்கும் சரக்குக் கப்பல்களின் விளக்குகளெல்லாம் ஒளி உமிழ்ந்து கொண்டிருந்தன.

இரவில் நகரத்தின் கருத்த ரத்த நாளங்களில் வாழ்க்கை துடித்தெழத் தொடங்கியது. ஆயிரம் ஒலிகள் சேர்ந்த இரைச்சல் ஒரு வகை இசையாக மாறத் தொடங்கியது. இரயில்வே கேட்டைக்கடக்கும்போது கேட் காவலாளி இருப்பிடக் கட்டிடத்திற்குப் பின்னால் முனிசிபல் கொட்டகை வரிசையில் பகலில் உறங்கிக் கிடந்த தெரு விபசாரிகள், ஆட்களை ஈர்க்கக்கூடத் தொடங்கினார்கள். நெருக்கமான வீடுகட்கு அப்பால் சாக்குகள் கட்டித் தொங்கவிடப்பட்ட

சின்னஞ்சிறு பெட்டிக் கடைகள் மறைவாக இருந்தன. அவற்றில் காமுகர்கள் பீடி பிடித்துக்கொண்டு இருந்தார்கள்.

கோலாகலத்துக்கிடையே சாவதானமாக நடக்கும்போது மனதில் ஏதோ ஒருவித அதிருப்தி ஏற்பட்டது. புண்ணில் புழுக்கள் இருப்பதுபோல, குவிந்துகிடக்கும் மனிதர்களுக்கு இடையில் யாருக்கும் தெரியாமல் நடமாடுகிறேன்—யாராலும் என்னைக் கண்டுபிடிக்க முடியாது!

ஓடிக்கொண்டிருக்கும் சாக்கடைகளும் அதைப்போன்ற மனப் பான்மையுள்ள மனிதர்களும் நிறைந்துள்ள இந்த நகரத்தை மனம் விரும்பத் தொடங்கியது.

நடையாக நடந்து இறுதியில் வாசற்படியை அடைந்தபோது குத்துக்கல்லின்மீது யாரோ அமர்ந்திருப்பது தெரிந்தது.

''யாரது?''

''உம் உம்.''

கேட்டைத் திறந்துகொண்டே உள்ளே சென்றபோது முதலாளி அனுப்புவதாகச் சொன்ன பையனின் விஷயத்தை நினைத்துக்கொண்டான். முன்புறத்தில் விளக்கு எரிந்துகொண் டிருந்தது. யாரோ இருப்பதுபோல் தெரிந்தது. அவனுகத்தான் இருக்கும்.

அருகில் சென்றபோதுதான் புரிந்தது. ஆபீஸ் சிப்பாய் மேனன்தான் அது என்பது. பெருமையாக சிகரெட்டை உதட் டோரமாக ஒதுக்கி வைத்துக்கொண்டு அருகில் வந்து கேட்டார்.

''ரைட்டரே பார்த்தீங்களா?''

''என்ன மேனன்?''

அப்போது உள்ளேயுள்ள கதவு திறந்திருப்பது தெரிந்தது.

''அவன் வந்தானு?''

''ஹேய்!''

வாசற்படியைக் கடந்தபோது, மேனன் ஓடிச்சென்று தாழ்ந்த குரலில் கிசுகிசுத்தான்.

''ஸ்ஸ் . . . உள்ளே முதலாளி இருக்கார்.''

அவன் ஆச்சரியத்தால் நின்றுவிட்டான். முதலாளி இங்கேயா?

''வேறொரு ஆளும் உண்டு.''

''யாரது, மேனன்?''

வெளியே வராந்தாவில் இருக்க ஏதுவில்லை. மாலை நேரம் முழுவதும் நடந்து நடந்து சோர்வு ஏற்பட்டிருந்தது. எங்கே இருக்கலாம் என்று ஆலோசித்தபோது முதலாளி கூப்பிட்டார்.

''வாங்க ரைட்டரே.''

அவன் உள்ளே சென்றபோது மேனனின் முகத்தில் வினயம் கலந்த ஒரு சிரிப்புத் தோன்றியது.

உள்ளே இருந்த படுக்கை அறையில் வாசற்படியில் ஒற்றை வேட்டியுடுத்திய முதலாளி சிகரெட் புகைத்தபடி நின்றுகொண்டிருந்தார்.

''உள்ளே வாங்க ரைட்டரே.''

அறையினுள் சென்றபோது மதுவாடையில் கலந்த சிகரெட் புகையினூடே அவன் அவரைக் கண்டான். முழங்காலைத் தொட்டுக் கொண்டிருக்கும் பாவாடையுடுத்தி, பச்சை நிற ஜாக்கெட் அணிந்திருந்த பெண்ணொருத்தி சுவருக்கு அருகில் நின்றுகொண்டிருந்தாள்.

கட்டிலில் இருந்தபடி முதலாளி பணித்தார்.

''உட்காருங்க, ரைட்டரே.''

கிளாஸில் பிராந்தியை ஊற்றிக்கொண்டு முதலாளி கூறினார்.

''போடு.''

அவன் கிளாஸைக் கையில் வாங்கினான்.

''நம்ம ஃபிரெண்ட், பெண் நல்லா இல்லை—ரைட்டர்?''

''உன் பேரு என்னடி? அதை மறந்துட்டேன்.''

பக்கத்தில் தொங்கிக் கிடக்கும் சேலையுடன் நிழலில் சுவரைப் பிடித்துக்கொண்டிருந்த அந்தப் பெண் சொன்னாள்.

''சரோஜினி.''

''ரைட்டரே இரண்டு நாள் இவள் இங்கே தங்குவாள். பையன் காலையிலே வருவான். சோறும், மற்றவைகளும் அவன் கொண்டுவந்து தருவான். அடியே, நம்ம சொந்த ரைட்டராக்கும். இங்கே வந்திடு. வெட்கம் வேறேயாக்கும்!''

மதுவெறியினுள் சிவப்பேறிப் போயிருந்த கண்களால் உறுத்துப் பார்த்தபடி முதலாளி சொன்னார்:

''இங்குள்ள யாருக்கும் சந்தேகம் ஏற்படவில்லை. சொந்தக் காரப் பொண்ணு என்று சொன்னால் போதும், பையனிடமும்.''

அவன் எதுவுமே பேசவில்லை.

''நீ என்னப்பா கிளாஸை வச்சுக் குடிக்கிறதா? போடுப்பா! முதலாளியும், ரைட்டரும் எல்லாமே ஒண்ணுதான். இல்லையாடி?''

சுவரோரமாக தலைகுனிந்து நிற்கும் பெண் எதுவும் பேசவில்லை.

''ரைட்டரே, மேனனிடம் படிக்கல் கார் வந்தால் சொல்லும் படி சொல்லுங்க.''

காலியாக இருந்த கிளாஸைக் கீழே வைத்துவிட்டு வெளியே சென்றபோது நெற்றியில் வியர்வைத் துளிகள் படிந்திருந்தன. மேனன் காணப்படவில்லை. படிவரை நடக்கவேண்டுமோ? அப்போது மேனன் மேலே படியேறி வந்துகொண்டிருந்தார். உதட்டில் புதிய சிகரெட் காணப்பட்டது. பேசும்போது சாராய வாடை வீசியது. மேனன் இன்று கொண்டாட்டத்தில் இருப்பதுபோல் தோன்றியது.

''பழக்கமுண்டோ?''

மேனனின் கேள்விக்குப் பதிலேதும் கூறவில்லை.

மேனன் அலட்சிய பாவத்தோடு பாக்கெட்டிலிருந்து ஒரு புதிய சிகரெட் பாக்கெட்டை எடுத்து நீட்டினன். புகையை வெளியே விட்டபோது வாயிலிருந்து துர்வாடை சற்றுக் குறைவாகவே வீசியது.

''ரைட்டருக்கு அதிர்ஷ்டம். ஹோட்டலுக்கு வரமுடியாது என்று சொன்னபோது நான்தான் முதலாளிக்கு இந்த இடத்தைப் பற்றிக் கூறினேன்.''

சுவரில் சாய்ந்தபடி மேனனின் சிரிப்பையும் பேச்சையும் கேட்டபோது ஏற்பட்ட ரோஷத்தை மிகவும் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டிருந்தான்.

சுற்றிலும் மதிற்சுவருள்ள இந்தச் சிறிய வீடு காலியாகக் கிடைத்தபோது, யாருக்கும் தவருகப்படாமலிருக்க முதலாளிக்கு வேண்டிய ஒருவர் இங்கு வாசம் செய்வது அவசியமாக இருந்தது. ரைட்டருடைய வாசலில் முதலாளியின் கார் கிடப்பதைப் பார்க்கும் யாருக்கும் சந்தேகம் உண்டாகாது. விசுவாசமுள்ள நாயைப் போன்ற மேனன் வெளியே சுற்றிச் சுற்றி வருவார்.

அவன் திடீரென நினைத்துக்கொண்டான்.

''இப்போது மிஸஸ் லலிதா சீனிவாசன் என்ன செய்துகொண்டிருப்பாள்?'' வரவேற்பரையின் சோபாவில் காலை நீட்டிச் சாய்ந்துகொண்டு புன்முறுவல் பூக்கும் மிஸஸ் சீனிவாசனின் இளம் சிவப்பு நிறமுள்ள தடித்த முகமும் கரிய கண்களும் காற்றில் மிதக்கும் எண்ணெய்ப் பசையில்லாத சுருள் முடிகளும் நினைவுக்கு வந்தன.

ஒரு மந்தகாசத்தின் நிலா வெளிச்சம் இப்போதும் உள்ளே வீசிக்கொண்டிருக்கிறது . . .

மயக்கம் வருவதுபோல் அவனுக்குத் தோன்றியது. தன்னுடைய இருப்பிடத்தில் தன்னுடைய படுக்கை காலியாவதை எதிர்நோக்கி அவன் காத்துக்கிடக்கும் படியாக இருந்தது. வேதனையாக இருக்கவில்லை. அவன் நிலைமை அவனுக்கே பரிகாசமாகவும் கேவலமாகவும் தோன்றியது.

''ரைட்டரே.''

''ஷட்டப்.''

''ரைட்டரே—''

''பேசக்கூடாது, பேசினல்—''

தனக்குத் தானே கர்விக்கொண்டான். வியர்வையில் நனைந்து போன விகார முகத்தில் பீதி படிந்திருந்ததைக் கண்டபோது அவன் அமைதியாகத் தனக்குள் சிரித்துக்கொண்டான்.

சூட்டின் அலைகள் ரத்தக் குழாய்களில் ஓடத் தொடங்கியது.

(3)

தூரத்தில் எங்கிருந்தோ பேரிரைச்சல் கேட்பது போலிருந்தது. அது வரவர புகை வண்டிச் சத்தமாக மாறியது. சாளரம் வழியாக வெளியே பார்த்தபோது, கையும் காலும் அற்ற உயிருள்ள உடல்கள்போல பாலத்தைத் தொடர்ந்து செல்லும் இருப்புப் பாதையில் ரெயில் அங்குமிங்கும் லேசாக ஆடியபடி சென்றுகொண்டிருந்தது. கால் எலும்பில் துளையிட்டு மாட்டப்பட்டு இருந்த கம்பி இணைப்பிலிருந்து குதறி வெளியேறித் துடித்துக்கொண்டிருந்த அந்த முண்டத்தின் கருநிற முகத்தில் தீயுமிழும் கண்கள். சத்தம் அகன்றுபோவதும் அடுத்து வருவதுமாக இருந்தது.

யாரோ தொட்டுக் கூப்பிடுவதுபோல் தோன்றியது. எழுந்து உட்கார்ந்தபோது வராந்தாவில் தூசி படிந்த பழைய பல்பின் வெளிச்சம் கரும் மஞ்சள் நிறத்தில் கண்களுக்குப் புலப்பட்டது.

கெட்ட கனவாகக் கண்ட கபந்தங்களின் நினைவு மறையாத மனத்தோடு அவன் கேட்டாள்.

''உம்?''

''ரைட்டரு, உள்ளே போய்ப் படுத்துக்குங்க. நான் காலையிலே வரேன்.'' மேனன்தான் அது. பயணம் சொல்கிறர்.

அவன் எழுந்தான். அப்போது திண்ணைக்கு அடுத்த படியில் சுருண்டு படுத்துக் கிடக்கும் கிழவனைப் பார்த்தான். இவனை இதற்கு முன் எங்கேயோ பார்த்து இருக்கிறோமே எங்கே?

மாலையில் வீட்டிற்கு வந்தபோது வாசற்படி அடுத்து கூனிக் குறுகி அந்த ஆள் நின்றிருந்தது அவனுக்கு நினைவு வந்தது.

"கதவைச் சாத்திட்டு தூங்குங்க ரைட்டரே. முதலாளி போய் விட்டார்.'' புகைப் படலம் போன்றிருந்த தூக்க மயக்கம் ஒரே நிமிடத்தில் மறைந்துவிட்டது. வீட்டில் அவன் தனித்திருக்க வில்லை. வாசற் கதவைச் சாத்திவிட்டு உள்ளேயிருந்து வராந்தா மின் வெளிச்சத்தினை நிறுத்த சுவிட்சை ஆஃப் செய்தான். உள் கட்டில் வெளிச்சமில்லை. திறந்துகிடக்கும் படுக்கையறையினுள்ளே வெளிச்சம் ஒரு மஞ்சற் படலம்போல் தெளிவில்லாமல் இருந்தது.

வாசற்படியைக் கடந்து உள்ளே பார்த்தபோது அது பயணி கள் சென்றபிறகு காணப்படும் மூன்றும் வகுப்பு தங்கும் அறை போல அலங்கோலமாகக் கிடந்தது. மெழுகுப் பசையும், மஞ்சள் நிறமும் கலந்த காகிதங்கள், எலும்புத் துண்டுகள், காலியாகக் கிடந்த சோடா புட்டிகள் கட்டிலில் அவள் தன் மஞ்சத்தில் படுத் திருக்கிறுள். சுவர் ஓரமாக முகத்தைத் திருப்பிக்கொண்டு படுத் திருக்கும் அவளைக் கண்டபோது ஒரு சிறுமியைப் போலக் காணப் பட்டாள்.

டீப்பாய்க்கு முன்னுல் போட்டிருந்த நாற்காலியில் கிடந்த மஞ்சள் பொறுக்குகளைத் தட்டித் துடைத்து அதில் உட்கார்ந்தான்.

அழகான வெள்ளிக் கம்பியால் கட்டப்பட்ட கோப்பைக்குள் இன்னும் கால்பாகம் குடிக்கப்படாமல் அப்படியே மீதமிருந்தது. பிரிக்கப்படாத ஒரு பிரியாணி பொட்டலமும் அப்படியே மிஞ்சி யிருந்தது. கிரீடம் முந்திரிக் குலை ஓவியம் வரையப்பட்டிருந்த குப்பியில் இளம் சிவப்புக் கலந்த மஞ்சள் நிறத் திரவத்தை நேராகப் பார்த்துக்கொண்டிருந்தான். அதன்பின், கீழேயிருந்த மண் கூஜாவை எடுத்து கிளாஸில் நீரை ஊற்றி ஒரு மடக்குக் குடித்தான்.

இவளுடைய பெயர் என்ன?

முதலாளி கேட்டபோது அவள் தன் பெயரைக் கூறியிருந் தாள்.

''சரோஜினி.''

அவள் காதில் விழவில்லை.

''சரோஜினி.''

''உம்.''

''எழுந்திரு.''

அவள் தொடர்ந்து சுவரோடு சேர்ந்து படுத்திருந்தபோது அவனுடைய குரல் சற்று உரக்க ஒலித்தது.

''சரோஜினி.''

கண்ணைக் கசக்கிக்கொண்டு அவள் சாவதனமாக எழுந்தாள். கசங்கிக் கசங்கி மஞ்சள் நிறமாகிவிட்ட உள்பாவாடை, சிவப்புப் புள்ளிகளுள்ள ஜாக்கெட், முகத்தில் சோர்வும், வெட்கமும் கலந்த பாவம்.

தான் படித்த புத்தகங்களிலிருந்தும் கேட்ட கதைகளிலிருந்தும் மனதில் பதிந்த ஒரு சித்திரம் நிழலாடியது.

கட்டிலின் ஓரமாக நிலத்தை நோக்கியபடி உட்கார்ந்திருக்கும் அவளை முன்பு எங்கேயோ பார்த்ததுபோல் தோன்றியது. ஏதோ சிற்றூர் ஒற்றையடிப் பாதையில் ஓலை வட்டியும், எண்ணெய்ப் போத்தலுமாக நடந்துபோகும் ஒரு சிறுமியின் ஓவியம் மனதில் தெளிவாகத் தோன்றியது.

''நீ சாப்பிட்டாயா?''

''உம்.''

''தூக்கம் வருதா?''

கொட்டாவி விட்டபடி, உள்ளங்கையால் கண்ணைக் கசக்கியபடி அவள் இல்லை என்ற பாவனையில் தலையாட்டினாள்.

''உன்னோட வீடு எங்கே இருக்கு?''

அவள் ஊரின் பெயரைச் சொன்னாள். நகரத்திலிருந்து ஏழு மைல் தூரத்தில் உள்ள ஒரு கிராமத்தின் பெயர் அது.

பிரியாணிப் பொட்டலத்தைப் பிரித்து வைத்தபோது பசி இல்லாததுபோல் தோன்றியது.

''நீ படிச்சிருக்கியா?''

''உம்.''

''எந்த வகுப்புவரை?''

''ஏழாம் வகுப்பில் தோல்வியடைந்ததோடு படிப்பை நிறுத்தி விட்டேன்.''

''வீட்டில் யாரெல்லாம் இருக்காங்க?''

அவள் ஏதும் பதில் பேசவில்லை. மீண்டும் கேட்டபோது சொன்னாள்.

"எல்லோரும் இருக்காங்க!"

அவளுக்குப் பதினைந்தோ அல்லது பதினாரோ வயதுக்குமேல் இருக்காது எனத் தோன்றியது. அறிமுகமில்லாத ஒரு ஆடவனின் முன்பு முதன் முறையாக அவள் வெட்கத்தைவிட்ட நாள் மிக அதிக தூரத்தில் இல்லை என்பதாகப்பட்டது. யார் அவளை முதன் முறையாக நகரத்திற்கு அழைத்து வந்தது?

விபசாரியான பெண்ணைப்பற்றி முதலில் அடக்கமுடியாத மனக் கஷ்டம் ஏற்பட்டு இருந்தது. பிள்ளைப் பருவத்தில் வடக் காற்றங்கரையில் வாழ்ந்து வந்த ஒரு பெண்ணைப்பற்றி ஆட்கள் கசமுசாவென்ற குரலில் குற்றங்குறை கூறிவந்ததைக் கேட்டிருக் கிறான். நீண்ட நாட்களுக்குப் பிறகுதான் புரிந்தது, அவள் ஆண் களை வசீகரிக்கும் விஷயம். எலிமெண்டரி பள்ளியில் கடந்த ஆண்டு வைத்தியர் கோவிந்தனின் மகனுடன் சுற்றித் திரிந்தபோது அவனிடம் சொன்னான். "எனக்கு அவளைக் காட்டு." அவன் தயங்கினான்.

கடைசியில் எப்படியோ சம்மதித்தான்.

பயந்து பயந்து ஒற்றையடிப் பாதை வழியே நடந்து போகும் போது ராமன் குட்டி கூறினான்.

"பார்த்துக்கோ."

அப்போது தேய்த்து ஒழுங்குபடுத்தப்படாத சுவருள்ள சிறிய வீட்டின்முன் அறையில் காலை நீட்டிக்கொண்டு தலை சீவிக்கொண்டு இருந்த பெண்ணை நன்றாகப் பார்த்தான். அவளுடைய சிவப்புக்கல் பதித்த மூக்குத்தி மின்னியது.

வாழ்க்கையில் அது ஒரு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகவிருந் தது. மாலை நேரமானால் ஆட்களைக் கவர்ந்திழுக்கவேண்டிப் பனை மரத்தடியில் நிற்கும் மோகினிப் பேயைப்போல குடிசையின் அருகே காவல் நிற்கும் பெண்ணைக் கண்டான்.

தன் முன்னே மெலிந்த கைகளில் போட்டிருந்த கருத்த ரப்பர் வளையல்களை திருகிவிட்டுக்கொண்டே நிலத்தை நோக்கிக்கொண் டிருக்கும் இந்த இளம் பெண்ணின் சித்திரம் அவனைத் திணற அடிக்கவைத்தது. எழுந்து கட்டிலுக்கு அருகில் சென்று, அவளு டைய வியர்த்து ஈரம் படிந்திருந்த கன்னத்தில் கை வைத்தபோது அவள் சிரிக்க முயன்றாள். விபசாரியின் மந்தகாசம் எங்கே?

"எழுந்திரு."

அவள் எழுந்தாள், அவனை நெருங்கி நின்றபோது எதனாலோ கொதிப்பு ஏற்பட்டது.

கட்டிலிலிருந்து விரிப்பை எடுத்து தாழப்பிடித்தபடி கூறினுள்:

"அங்கே எங்கேயாவது படுக்கலாம்."

அவளது கண்கள் ஒரு அமைதியான விஞவோடு மேலே உயர்ந்தபோது அவனுக்குச் சட்டென்று ஆத்திரம் ஏற்பட்டது.

"உன்னிடம் எனக்கு அன்பு, சிநேகிதம் ஏதும் தோன்றியதால் அல்ல நான் உன்னிடம் வந்தது. போய்ப் படுத்துக்கோ."

என்ருலும் மனதிற்குள் கூறிக்கொண்டான்: 'பெரிய ஹோட்டல்களின் பின்புறத்தில் வந்து நிற்கும் டாக்ஸி கார்களில், முசாபரி பங்களாக்களின் அறைகளில், இரண்டு சந்துகளில் கடைசியாக டயர் எரிந்து கரியும் துர்வாடையுள்ள இருப்புப் பாதைப் பாலத்தை அடுத்துள்ள சதுப்பு நிலத்திலெல்லாம் உன்னுடைய முகத்தைப் பார்த்திருக்கிறேன். நீ எனக்கொன்றும் அரிய பொருளல்ல!'

கசங்கிக்கிடந்த ஜமுக்காளத்தை சரிப்படுத்தி, விலே குறைந்த செண்ட் ஆகியவற்றின் மணம் தாங்கி நிற்கும் தலேயணேயைத் திருப்பிப்போட்டு, கட்டிலில் படுத்தபடி கைகளால் கண்களே மூடிக் கொண்டு சொன்ஞன்:

"விளக்கை அணேச்சிட்டியா?"

வெளியே வராந்தாவில் அவள் விரித்துப் படுத்திருந்தபோது, அவன் கண்மூடித் தூங்க முயற்சித்தான்.

சில நிமிடங்களுக்குப் பிறகு அருகிலிருந்து காலடிச் சத்தம் கேட்பதுபோல் தோன்றியது. டீப்பாய்க்குக் கீழே கிடக்கும் சோடா புட்டிகளின் சத்தம் கேட்டது. அப்போது கரும் இருட்டில் அறையில் அவள் நிற்பதைப் பார்த்தான். சுவரில் தொங்கவிட்டிருக்கும் சட்டைப் பையில் இருப்பவைகளேயெல்லாம் எடுக்கலாம் என்று பார்க்கிருளோ? கனத்த கண் இமைகளேச் சிரமப்பட்டுத் திறந்து சத்தமில்லாமல் திரும்பிக் குனிந்து பார்த்தான். திருட்டு, மோசம் செய்யக்கூடிய யாரும் இந்த அறையினுள்ளே இல்லே.

அவள் வெளியே நடந்து சென்றபோது மீண்டும் காது கொடுத்துக் கேட்டான். வெளியே கதவு திறக்கும் ஓசை கேட்டது. சத்தமில்லாமல் மிக ஜாக்கிரதையாகக் கதவைத் திறந்தாலும் பழைய கதவுக் கீல் ஓசை எழுப்பியது. அவள் அவ்விடத்தைவிட்டு அகன்றுகொண்டிருந்தாள். கிடைத்தவை எவையோ அவைகளேத் தட்டிக்கொண்டு இரவில் வெளியே காவல் கிடக்கும் வயதானவனே எழுப்பிக்கொண்டு இடத்தைவிட்டுக் கிளம்புகிருள் என்பதை உணர்ந்தபோது எழுந்தான். கொடிக் கம்பியில் தொங்கவிடப் பட்டிருந்த விலே குறைந்த சில்க் சேலே அப்போதும் அங்கேயே தொங்கிக்கொண்டிருப்பது அவனுக்குத் தெரிந்தது.

ஓசையில்லாமல் இருட்டில் நடந்துசென்று திறந்துகிடக்கும் வாசற்படியை நெருங்கியபோது அவளது சத்தம் கேட்டது.

''என்னப்பா தூக்கம்?''

வாயிலிருந்து முனகலும் முக்கலுமே பதிலாக வந்தது.

''அப்பா! சீக்கிரம் எழுந்திருப்பா.''

பார்க்கும்போது வெளி முற்றத்தில் பழைய பாயில் சுருண்டு கிடக்கும் மனிதனை அவள் குலுக்கிக் கூப்பிட்டுக்கொண்டிருந்தாள்.

''அப்பா?''

''என்னடி?''

உரத்த சத்தமாக இல்லாதபடி மெல்லிய ஓசையாகக் கேட்டது.

''இந்தா, இதைச் சாப்பிடு.''

கட்டிடத்துக்கு அப்பால் வெளியே பாதையோரத்தில் இருந்த முனிசிபல் விளக்கின் வெளிச்சம் வெளி முற்றத்தில் தெளிவாகப் பரவியிருந்தது. அவ்வெளிச்சத்தில் அவன் குந்தியமர்ந்தபடி வாரி வாரித் தின்பதை அவன் கண்டான். விக்கல் வந்தபோது நெஞ்சை யுயர்த்திப் பிடித்துக்கொண்டு ஓசை பலமாக இல்லாத படி கவனித்துக்கொண்டு மீண்டும் ஒரு பிடி வாரியபோது அவன் கேட்டான்.

''ஏன்டீ நீ நல்லா சாப்பிட்டியா?''

''உம்.''

''எப்போ போகலாம்னு முதலாளி சொன்னார்?''

''ஒண்ணும் சொல்லலே.''

''கொஞ்சம் குடிக்கத் தண்ணீர் கிடைக்குமா?''

''இப்போ தண்ணிக்கு எங்கே போவேன்?''

அவளுடைய குரல் பயம் கலந்ததாக இருந்தது. உடனே பதுங்கிய குரலில் பேசினாள்.

''சத்தம் போடாதே அவர் முழிச்சுக்குவார்.''

திரும்பிவந்து கட்டிலில் ஓசையில்லாமல் ஏறிப்படுத்துக் கொண்டான். மீண்டும் மிகுந்த கவனத்தோடு கதவைச் சாத்துவது கேட்டது. நடுமுற்றத்தில் காலடியோசை கேட்டது.

அவனுக்கு அழவேண்டும்போல் தோன்றியது. திறந்துகிடக்கும் கதவுக்கு அப்பால் முணுமுணுத்தாலும் கேட்கக்கூடிய அருகாமை

யில் இஷ்டத்துக்கு இணங்கத் தயாராய்ப் படுத்திருக்கும் சரீரம் பற்றி அப்போது அவன் நினைத்துப் பார்க்கவில்லை.

ஏழுமைல் தூரத்திலுள்ள ஒரு சிறிய வீட்டில் கோரைப்பாயில் படுத்துத் தூங்கும் ஒரு குடும்பத்தின் சித்திரம் எதனுலோ கண் முன்னுல் கடந்து வந்தது.

சிறு பிள்ளைகள் அம்மாவிடம் கேட்கின்றன:

''அக்கா எங்கேம்மா?''

''அப்பாகூடப் போயிருக்கு.''

''அப்பா ஏன் எங்களையும் கூட்டிட்டுப் போகலே?''

''போடா, போய்ப் படுத்துத் தூங்கு.''

காலையில் கடனை வசூலிக்கக் கடைக்காரனும் பக்கத்து வீட்டுக் காரரும் வரும்போது தைரியமாக பதில்கூற முடியும் என்று அம்மா நம்புகிருள்.

அவள் சில நாட்களுக்குப்பிறகு வீட்டிற்குத் திரும்பிவரும் போது, ஒன்பது ரூபாய் சில்க் சேலையை பத்திரமாக அம்மா மடித்து வைக்கிருள்.

கழுத்தில் ரோல்டு கோல்டு நகையை கழற்றி வாங்கி ஸ்ரீகிருஷ்ணன் படத்திற்குக் கீழேயுள்ள பொந்தில் அழுக்குத் துணி யில் சுற்றிப் பத்திரமாக வைத்துவிட்டுத் திரும்பும்போது அம்மா கேட்பாளோ? 'நீ எங்கே இருந்தே?''

வெளி முற்றத்தில் உட்கார்ந்து மடியிலிருந்த காகிதப் பொட்ட லத்தைப் பிரித்து, செலவழிப்பதற்கான வகைகளை நினைவுபடுத்தி அவன் நோட்டுகளைக் கொடுக்கும்போது அவன் மனைவி கேட் பாளோ? எங்கே இருந்தீங்க? யாரிடம்?

விரிக்கப்பட்ட மூன்று பாய்களில் அம்மாவும் அப்பாவும் ஏழு மக்களும் நெருக்கமாகத் திருப்தியோடு ஒரு இரவு உறங்க இருக் கிருர்கள்.

தூரத்திலிருந்து புகைவண்டி எஞ்சின் கூவும் ஒலி கேட்டது.

எப்போது தூக்கம் வந்தது என்பது நினைவில்லை. காலையில் கிணற்றங்கரையில் வாளியும் கப்பியும் எழுப்பிய சத்தம் கேட்ட போதுதான் எழுந்தான். படுக்கையறையிலிருந்து எழுந்து பார்க் கும்போது நடையில் விரிப்பு சுருட்டி வைக்கப்பட்டிருந்தது. மூலையில் பழைய பாய் சுருட்டிச் சாத்தி வைக்கப்பட்டிருந்தது. வெளி வாசலில் யாரும் காணப்படவில்லை. பின்புறத்திலிருந்து முற்றத்துக்கு அவன் வந்தபோதுதான் சரியாகத் தெரிந்தது. இரவு

கருதியதுபோல அவன் வயசானவன் அல்ல. ஐம்பது வயதுக்கு மேல் இருக்காது. தாடியில் நரையேறிருந்த குறுமயிரைத் தடவிய படி அவன் இருக்கைக் கல்லின் அருகில் சந்தேகத்துடன் நின்று கொண்டிருந்தான்.

"உள்ளேயிருந்து பாத்திரம் எடுத்துவா. ரெண்டு மூணு சாயா வாங்கிட்டு வா."

சாயா வரும் வரை பீடி புகைத்துக்கொண்டு முற்றத்தில் நடந்துகொண்டிருந்தான். உள்ளே இருந்து கிளாஸ் கழுவி அவனே சாயா கொண்டுவந்தான்.

துவாலைத் துண்டு எடுக்கவேண்டி உள்ளே சென்றபோது, அவள் சேலையுடுத்தி ஜன்னலின் நடுவில் வைக்கப்பட்டிருந்த கண்ணாடிக்கு முன்பாக நின்று தலை சீவிக்கொண்டிருந்தாள். தரையில் கசக்கி எறியப்பட்டிருந்த எண்ணைபடிந்த காகிதங்களை நோக்கிச் சுற்றிலும் எறும்புகள் சாரை சாரையாக வந்துகொண்டிருந்தன.

"இதையெல்லாம் கூட்டிப் பெருக்கிச் சுத்தப்படுத்து."

கொடிக் கம்பியிலிருந்து துவாலைத் துண்டை எடுத்துக்கொண்டு அவன் குளியறைக்குள் செல்லும்போது அவள் கேட்டாள்.

"பௌடர் இருக்கா?"

அவன் திரும்பி நின்றான். கோபப்புகை கக்கும் கண்களுக்கு முன்னால் எரியும் பொருளாக அவள் நின்றுகொண்டிருப்பதுபோல் தோன்றிய்து. பதிலேதும் கூறிக்கொண்டு நிற்காமல் வெளிக் கதவை திறந்துகொண்டு அவன் கிணற்றை அடுத்துச் சென்றான்.

விரைந்து வெளியே போய்விடவேண்டும்போல் இருந்தது. முகம் கழுவிச் சட்டையை எடுத்து மாட்டிக்கொண்டு தலை சீவி வெளியே போகும்போது அவள் கட்டிலின் அருகே நின்றுகொண்டிருந்தாள். குளித்து ஈரம் உலர்த்தவேண்டி விரித்து விடப்பட்டிருந்த அவளது தலைமுடி கட்டிலின்மேல் பரவிக்கிடந்தது. மினுமினுக்கும் சிவப்புநிற சில்க் சேலை அவளுக்குப் பொருத்தமாக இல்லை எனத் தோன்றியது. உள் பாவாடையும் முண்டும் உடுத்தி, கோடு வடிவில் நெற்றிக் குறியிட்டு அவள் நின்றால் அழகு சுந்தரியாகத் தோற்றமளிப்பாள் எனத் தோன்றியது. ஜடை ரிப்பனால் கட்டப்பட்டுள்ள முடியில் ஒரு மந்தாரப் பூ செருகப்படவேண்டும்.

படியிறங்கியபோது மேனன் நடந்து வருவதைப் பார்த்தான்.

"என்ன இவ்வளவு சீக்கிரமாக?"

"ஒரு ஆளைப் பார்க்கணும்."

மேனனுக்கு மேலும் பேசவேண்டியிருந்தது. அதற்காகக் காத்திருக்காமல் சென்றுவிட்டார்.

[4]

விரசமான மற்ருெரு பகல் தொடங்கியது.

அந்தி மயங்கும்போது மனம் என்னவோ போலிருந்தது. இருட்டின் தன் அறையை அடைந்ததால் தப்பித்தான். சில மணி நேரமாவது தான் தப்பிப் பிழைக்க முடிந்ததே என்று ஆறுதல் அடைந்தான். தான் இருக்கும் இடத்திலும் கூடதான் பாதிப்பாள ஞக வேண்டி நேர்ந்து உள்ளதே என்ற சிந்தனை அடிக்கடி அவனுக்கு ஏற்பட செய்தது.

பதிஞெரு மணிக்கு ஜன்னலருகில் குல்மோஹர் மரங்களின் உச்சியைப் பார்த்துக்கொண்டு நின்றிருந்தபோது முதலாளி வந்தார். அவருடன் அவரது நண்பர் யாரோ வந்திருந்தார். செக்கில் கையெழுத்துப் பெற அறைக்குள் சென்றபோது, முதலாளி தலையை உயர்த்தாமலே கையெழுத்திட்டார். முதல் நாள் இரவில் முதலாளி நடந்துகொண்ட முறை அவனுக்கு இன்னும் நிழலாடிக்கொண்டுதான் இருந்தது.

வெளியேறும்போது முதலாளி ஆபீஸ் விஷயங்களைப்பற்றிச் சொன்னுர். வீட்டைப்பற்றி விசாரிப்பார் என்ற பயம் வீணுனதாக இருந்தது.

மேனன், வெளியே போனபின் மீண்டும் ஜன்னலருகில் சென்று நின்ருன். பங்களாவின் வராந்தாவில் யாருமில்லை. யாரும் காணப்படவில்லை என்று கருதி, தன் சொந்த இடத்திற்கு திரும்பிப் போக எத்தனித்தபோதுதான் போர்ச்சிலே பென்ஸ் கார் ஓடி வந்து நின்றது. சிவப்பு நிறத்தில் அகலமான கறைபோட்ட வெண்மை நிறப்புடவை அவளது உடல் நிறத்தோடு பெரிதும் ஒத்துக் காணப்பட்டது. படியேறும்போது அவளது தோளிலிருந்து கீழே சரிந்த முந்தானையை அவள் மீண்டும் முன் பாகத்தை மறைத்து போட்டுக்கொண்டு நடந்தபோது அவன் இருக்கையில் வந்து அமர்ந்தான்.

மாலையில் வாசற்படியை அணுகியபோது இரண்டு கார்கள் அங்கே நிற்பதைக் கண்டான். இதுக்கு முன் பார்த்து அறிமுகமாகியிருந்த நெம்பர் பிளேட்டுகள் உள்ள கார்கள். யாருடையவை என்பதை எளிதாக நினைவு படுத்திக்கொள்ள இயலவில்லை.

பயத்தோடும், சந்தேகத்தோடும்தான் தன் சொந்த இடத்துக்குச் சென்றான். நடையில் குறுந்தாடியைத் தடவிக் கொண்டு அயர்வோடு பாதிக்கண்ணை மூடியபடி அவன் காவலிருந் தான்.

''யாரது உள்ளே?''

அவன் முக்கி முனகிக்கொண்டு ஏதோ கூறியது தெளிவாகக் கேட்கவில்லை.

வெளியிலிருந்து கேன்வாஸ் பையைத் தூக்கிப் பிடித்தபடி வந்த மனிதன் யாரோட டிரைவர்? அவன் நேரே உள்ளே போன போது பையில் போத்தல் ஒன்றோடொன்று மோதி ஓசையுண்டாக்கின.

''பீடி இருக்கா?''

முற்றத்தில் காரித் துப்பி, பதில் கூறாமல் அவன் நேரே வெளியேறினான். இடைவழி கடந்து மெயின் ரோட்டை அடைந்த போது பெட்ரோல் பங்க்கின் பக்கத்திலிருந்து யாரோ கை கொட்டிக் கூப்பிடுவது கேட்டது. தன்னையல்ல என்று எண்ணி நடந்தபோது ராஜ் அண்ணன் கூப்பிடுவது கேட்டது. ''ரைட்டரே!''

ஒரு பழைய ஃபோர்டு காரின் அருகிலிருந்து ராஜ் அண்ணன் நாலைந்து பேரோடு வாதித்துக் கொண்டிருந்தார். அவனை நெருங்கியபோது ராஜ் அண்ணன் சொன்னார்.

''இதோ, இந்த ரைட்டரோடு எனக்கு மிக அவசியமான ஒரு இடத்துக்குப் போக வேண்டும். பிள்ளை, வீணே நேரத்தைப் போக்க வேண்டாம். சத்தியம் செய்து தாரேன். உம். வேகமாக.''

ராஜ் அண்ணன் விரைவு படுத்தினார்.

''ரைட்டர் நடங்க. நான் கூட வர்றேன்.''

அவன் நாலைந்து வீடுகளைக் கடந்தபோது ராஜ் அண்ணன் கூறினார்.

''கடந்த மூணு நாளாக தொண்டையிலே தண்ணி வறண்டு போச்சு. நூற்றைம்பது லாபம். வாங்கினவனை கடவுள்தான் காப்பாத்தனும்!''

ஹோட்டலின் வாசலில் பல்லைக் குத்திக்கொண்டு இருக்கும் ஆஸிட் ராமனை அதிகாரமாகக் கூப்பிட்டுக்கொண்டு ராஜ் அண்ணன் அறைக்குள் சென்றார்.

''கே—எல்—ஸி எண்பத்தொண்ணு எண்பத்தொண்ணு யாருடைய கார் அண்ணு?''

''உம் . . .?''

''ஒண்ணுமில்லே. சும்மாதான் கேட்டேன். அவ்வளவு தான்.''

''சோயிகுட்டி விற்ற கார்—இப்போது டி.எஸ்.பியிடம் இருக்கு. பாடியிலே கொஞ்சம் ஒட்டுவேலை இருக்கு. எஞ்சின் நல்ல கண்டிசனில் இருக்கு.''

நகரத்தில் உள்ள கார்களின் உள்ளும் புறமும் ராஜ் அண்ணனுக்கு தெரியும்.

ராஜ் அண்ணன் பேசத் தொடங்கியபோது அவனுடைய கவனம் சிதறி விட்டது.

''உனக்கு என்ணு?''

''ஒண்ணுமில்லே.''

இரண்டாவது கிளாஸ் தீர்ந்தபோது நெற்றியின் வியர்வையைத் துடைத்துக்கொண்டு அவன் ஜன்னலின் அருகில் வந்து நின்ருன்.

''என்ன வேணும்?''

அவன் பதிலேதும் கூறவில்லை.

''உனக்கு என்ன வேண்டும் ரைட்டரே?''

''என்னை ரைட்டர்'னு கூப்பிட வேண்டாம். முதல்லே வேண்டியது அதுதான். பிறகு—''

''பிறகு—?''

மூன்ருவது கிளாஸைக் கையில் எடுத்துக்கொண்டு ராஜ் அண்ணன் கேட்டார்;

''பிறகு என்ன வேணும்?''

''கார் வேணும். ஸ்ரீனிவாசன் முதலாளியின் பங்களா முற்றத்தில் சொந்தக் காரில் போய் இறங்கணும்.''

ராஜ் அண்ணன் உரக்கச் சிரித்தபோது அவன் தன்னை தானே அடக்கிக்கொண்டான். என்ருலும் சிதறிப்போன மனத் துயரங்களை இனம் பிரித்து கட்ட முயன்றுகொண்டு மீண்டும் சாய்வு நாற்காலியில் வந்தமர்ந்தான்.

''எல்லா மாளிகைகளும் எரியும்போது என்னுடைய மொட்டை மாடியிலிருந்த நீரோ மன்னனைப்போல் நான் வீணை வாசித்துக் கொண்டிருந்தேன்.''

பலமாகச் சிரித்தார் . . .

உனக்கு வேண்டியது—

ராஜ் அண்ணன் பேச்சு குழறத் தொடங்கியது. இறுதியில் மேசையின்மேல் தலேசாய்த்துத் தூங்கத் தொடங்கியபோது சேது எழுந்தான்.

வீதிகள் ஓய்ந்து கிடந்தன. முனிசிபல் விளக்குகள் மினுமினுத் துக் கொண்டிருந்தன. இடைவழியை அடைந்தபோது மழைத்துளி விழத் தொடங்கியது. இடரும் காலடிகளே நிதானமாக்கிக் கொண்டு வாசலே அடைந்தபோது கார்கள் அங்கிருந்து வெளியேறி யிருப்பதைக் கண்டான். பச்சைநிற மதிலின் மேல் இரண்டு கைகளேயும் வைத்து பெருமூச்செறிந்தான். ஊறி வந்த உமிழ் நீரை காரித்துப்பி சுவாசத்தைச் சரிபடுத்தக் காத்திருக்கும்போது யாரோ கூப்பிடுவது கேட்டது:

''சேது அண்ணு!''

திரும்பி நின்முன்.

வெளியே முனிசிபல் விளக்கு வெளிச்சத்தில் அவன் அருகில் வந்தபோது தான் தெரிந்தது—உண்ணி!

''சேது அண்ணு.''

மதிலோடு நெற்றியைச் சேர்த்து வைத்துக் கொண்டு மீண்டும் காரித்துப்பியபோது அவன் தோளில் கை வைத்தான்.

அவன் வெளி மார்பைத் தடவிக் கொடுத்தபோது குறைந்தது.

அவன் தோளில் பிடித்து ஆடியபடி நடந்தபோது அழுதபடி கேட்டான்.

''உண்ணி, நீ எதுக்கு வந்தே? நீ ஏன் வெறுமனே வந்திருக்கே?''

''தங்கோப்பு சொன்ஞன்.''

நடையில் சுவரோடு சாய்ந்திருந்தபோது ஆசுவாசம் தோன்றி யது. உண்ணி பெரியவஞயிருக்கிமுன். எவ்வளவு வேகத்தில் பிள்ளேகள் பெரியவர்களாகிமுர்கள்.

''ஐந்தரைக்கு வந்தேன். ஆபீஸில் போய் கேட்டபோது இந்த இடத்தைச் சொன்ஞங்க.''

நடையில் நாட்டுப்புறத்து ஆள் காணப்படவில்லே. மூடியிருந்த கதவைத் திறந்து கிரமப்பட்டு உள்ளே சென்முன். இடைவழியில் படுத்து இருந்த கிழவனின் உடலில் மோதி விழப் போனபோது பாயிலிருந்து ஏதோ முனகுவது கேட்டது.

''உண்ணி.''

உண்ணி உள்ளே இருந்தான். அவன் மீண்டும் வெளியே போனபோது உண்ணி தலைதாழ்த்திச் சந்தேகத்தோடு நின்று கொண்டிருந்தான்.

''வரும் விவரத்துக்கு நீ எழுதியிருந்தால் நான் வந்து காத்திருப்பேன், இல்லையா?''

''தங்கோப்பு எழுதியிருந்தான்.''

''ஹூம்.''

அவன் பையிலிருந்து விழுந்த கடிதங்களின் கூட்டத்தில் அவனுடைய கடிதமும் இருந்தது.

அவன் பையைத் திறந்து ஒரு கடிதத்தை எடுத்து நீட்டிக் கொண்டு சொன்னான்:

''தங்கோப்புவின் கடிதம்.''

அவன் அதை முகத்தை உயர்த்தாமலே வாங்கிக்கொண்டான். தெளிவற்ற எழுத்துக்கள். அதைத் திறக்காமலே கையில் வைத்துக் கொண்டு அவன் கேட்டான்:

''உனக்குப் பள்ளிக்கூடம் இல்லையா?''

''இன்னிக்குச் சனிக்கிழமை.''

இனி என்ன சொல்றது? ஓடி விளையாடிக்கொண்டிருந்த சிறு பிள்ளை இன்று வளர்ந்தவனாகியுள்ளான். அவனது கண்களுக்கு முன்பு அவன் மீண்டும் பதறியவனாக இருந்தான்.

''இங்கு படுக்க சௌகரியமில்லே. வா நாம் போகலாம்.''

அவன் தோளைப் பிடித்துக்கொண்டே படியிறங்கினான். இடைவழி கடந்து மெயின் ரோட்டின் முஸ்லீம் ஹோட்டலை அடுத்திருந்த கட்டிடத்தில் அவர் நடத்திவரும் லாட்ஜில் சென்று அறை கேட்ட போது கௌண்டரில் கள்ளித் துண்டைப் போன்று இருக்கும். தடியனின் கண்கள் உண்ணியின் மேல் பதிந்தன.

நிமிர்ந்து நிற்பதில் கருத்தில்லை. எனினும் அவனைக் கொல்ல வேண்டும் போல் இருந்தது. சாவியை வாங்கும்போது பகையுணர்வோடு அவனைப் பார்த்தான். வா, நீ, வா உன்னுடைய சவம் வீழ்றதைப் பார்க்கணும்! வா!

படுத்ததும் தூங்கியதும் நினைவில்லை. இருட்டு என்ற தடாகத்தில் திடீர் என கால் தடுமாறி வீழ்ந்து விட்டதுபோல் தோன்றியது. சுய நினைவின் வேர்களைப் பிடித்துத் தூக்கி நிறுத்த முயன்றபோது எல்லாமே மிக ஆழமாகப் பதிந்திருப்பது போல் தோன்றியது . . .

வெயிலின் வெளிச்சம் கண்ணைக் குத்தியபோதுதான் கண்களை திறந்தான். தான் எங்கிருக்கிறோம் என்பதைத் தெளிவாக்கிக் கொள்ளச் சிறிது நேரம் பிடித்தது. கனவிலிருந்து இருண்ட இரவு விலகியபோது எழுந்தான்.

உண்ணி எங்கே?

வெளியே வராந்தாவுக்கு வந்தபோது சிவப்பேறிய கண்களோடு இருந்த பையனிடம் கேட்டான்.

''இந்த அறையிலிருந்த ஆளைப் பார்த்தியா?''

''வெளுப்பா இருந்த பையன்தானே? அவன் இராத்திரியே பையை எடுத்துக்கிட்டுப் போயிட்டானே?''

அதைச் சொல்லும்போது அவன் முகத்தில் ஒருவித ஏளனச் சிரிப்பு உண்டாயிருந்தது. அவன் கன்னத்தில் ஓங்கி அறைய வேண்டும் எனக் கை துடித்தது. தன் போக்கில் அவனுக்கு வெட்கம் உண்டாகியது. இந்தக் கேடுகெட்ட சிறுவனின் முன்பு கூட நிமிர்ந்து நிற்க முடியவில்லை. தாங்க முடியாத தலை வேதனையோடு இறங்கி நடந்தான். வீடு ஓய்ந்து கிடந்தது.

இடை வழியில் மண்புரண்டு கிடந்தது. தங்கமணியின் கடிதம் வந்திருந்தது. நடுங்கும் கையோடு அதனைக் குனிந்து எடுத்தான். தரையில் உடைந்த கண்ணாடித் துண்டுகளும் காற்றில் மதுபானங்களின் துர்வாடையும் படுக்கையறையில் கரிய இரவுகளின் கறை படிந்த மெத்தையும் . . . மெத்தையில் படுத்து அவன் அழுதான்.

## [5]

நனைந்திருந்ததால் எழுத்துக்கள் பலவிடங்களில் ஊறிப்போய் நீண்டிருந்தன. கண்களில் நீர் தேங்கியிருந்ததால் கடித வார்த்தைகள் உருமாறி, வாசிக்கத் தடுமாறியது.

அவள் கேட்கிறாள், கண்ணீருடன் கேட்கிறாள்: நான் என்ன தவறு செய்தேன்?

தவறு என்னுடையதுதான்!

ஒரு சமயம் நெஞ்சம் முழுதும் அவள் நிறைந்து நின்றாள். தென்னை மர நிழலில் தெளிவாக மின்னிப் பொழிந்த ஒரு முழு நிலா, காற்றில் கலந்து வந்து எங்கும் பரவிய மலர்களின் இனிய நறுமணம். கூட்டத்தின் மத்தியில்கூட ஒரு நிமிஷம் கண்டாலும் என்றென்றும் நினைவில் நிற்கும் முகம்—எல்லாமே அவளை நினைவுபடுத்தின. எல்லோரும் எதிர்க்கிறார்கள் என்பதை அறியும்

போது, பயம் தோன்றவில்லை. மனதில் உறுதி வலுவாகிக்கொண்டிருந்தது. உலகின் முன் தட்டில் நின்றுகொண்டு கூவிக் கூறமுடியும். 'நீ என்னுடையவள்தான் யாரும் என்னைத் தடுக்க முடியாது.'

திருமணப் பேச்சு வார்த்தைகள் எப்படியோ அடுத்துத் தொடங்கும்போது கோபதாபங்கள் வெடிக்கவே செய்யும் எனத் தோன்றியது. கலக்கமான நேரத்தில் மறைவான பிரார்த்தனை எப்போது உருவாகியது.'' அவளைத் திருமணமானவளாகக் காண ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அவன் பிரார்த்தித்தான். அவள் அறியாமல் தூர நின்று விளக்கைச் சுற்றிவருவதைக் காண விரும்பினான். அவளது கணவன் வீட்டில் அவனுக்கு மட்டும் தெரிந்த நிலையில் வேதனைகளை அடக்கிக்கொண்டு விருந்தாளியாகப் போக வேண்டும்.

அவனாலேயே நம்ப முடியாததாக இருந்தது. நானா இதெல்லாம் நினைத்தேன் என்று தனக்குத் தானே கேட்டுக்கொண்டான். எழுதப்படாத பதிலின் வார்த்தைகளை உருப்போட்டபடி நாட்கள் கடந்துகொண்டிருந்தன. இறுதியாகத் தீர்மானித்தான். நாளைக்கு இந்த நகரத்தை விட்டு வெளியேறிவிடவேண்டும். என்னை மன்னித்துவிடு. நான் இதோ திரும்பிவிட்டேன் என்று எண்ணி மனதிற்குள் திடப்படுத்திக்கொண்டான்.

அவளுக்கு கடிதம் எழுதவேண்டும்: இறுதியில் உன் அருமைக்காக நான் திரும்பி வருகிறேன். ஒருவேளை உன்னுடைய தவறு உனக்குப் புரியும். கனவுகளில் மட்டுமல்ல, மனிதன் வாழ முடியும் என்பதைப் புரிந்துகொண்டுள்ளபோது என்னைச் சபிக்காமல் இருக்கவேண்டும்.

அன்று ஞாயிற்றுக்கிழமை. புற்றுள் முடங்கிய பாம்பைப் போல நகரம் சலனமற்றுக் கிடக்கும் ஞாயிற்றுக்கிழமைகள் அவனுக்கு வெறுப்பாயிருந்தன.

நாளைக்கு ஆபீஸுக்குப் போய் கணக்குத் தீர்த்து வாங்கிக்கொண்டு இடத்தைவிட்டுப் போகவேண்டும் என்பதை நினைத்தபோது ஒருவித பரபரப்புத் தோன்றியது. யாரோடு பயணம் சொல்லிக்கொள்வது? ராஜ் அண்ணனிடம் ஒரு வார்த்தை சொல்லவேண்டும். பங்களாவுக்குப் போய் முதலாளி மனைவியிடம் சொல்லவேண்டுமோ? மலையாளச் சொற்பொழிவு எதுவும் பிறகு எழுதும்படி நேரவில்லை. தேவைப்படவும் இல்லை. மீண்டும் ஒருதடவை அந்த அம்மையாரைப் பார்த்துவிட்டுச் செல்ல வேண்டும் என உறுதி செய்துகொண்டான்.

ஷேவ் செய்துகொண்டு, குளித்து உடை மாற்றிக்கொண்டு வெயில் மறைய நிழல் படரத் தொடங்கிய சாலையில் நடக்க ஆரம்பித்தான். தனக்குத் தானே மனதிற்குள் சமாதானம் சொல்லிக் கொண்டான். இன்று தங்கமணிக்கு எழுதிவிடவேண்டும் என்று உறுதி செய்துகொண்டான். இரவில் நீண்ட அமைதியில் தங்க மணிக்கு எழுதினன்.

வீடுகள் அடுத்தடுத்து இருந்தபோதிலும் முக்கியமான தெருக்களில் ஆட்களின் கூட்டம் இருந்துகொண்டுதான் இருந்தது. மூடப் பட்டிருந்த கதவுகளுக்கு வெளியே வராந்தாவிலும், திண்ணை களிலும் காலண்டர்களையும் மயில் எண்ணெயையும் சித்த ஔஷதங்களையும் பரப்பி வைத்து புதிய வியாபாரிகள் இடம் பிடித்துக்கொண்டிருந்தார்கள். பட்சி ஜாதகத்தையும், கைரேகை சாஸ்திரத்தையும் விளக்கிச் சொல்லும் ஜோஸ்யர்களைச் சுற்றி ஆட் களின் கூட்டம் இருந்தது.

மதியம் மழை பெய்ததால் ஈரமான கடற்கரை வெறிச்சோடிக் கிடந்தது. கடல் சோம்பிக் கிடந்தது. நனைந்து கிடந்த ஈர மணலில் இறங்கி நடந்து அலைகளுக்கு நேராக நடந்தான். காலடி பதிந்த கால் சுவட்டு மணலை வாரிக்கொண்டு அலைகள் பின்வாங்கிய போது முன்பொருமுறை ஓய்ந்து கிடந்த கடற்கரையில் மந்தகசித்து நின்ற அவனுடைய முகத்தை நினைத்துக்கொண்டான்.

கடற்புரத்தில் மழை பெய்வதுபோல் தோன்றியது. ஒன்றும் தெளிவாகத் தெரியவில்லை. விளக்குகள் வெளிச்சத்தை உமிழத் தொடங்கியபோதுதான் தான் நீண்ட தூரம் நடந்து வந்தது தெரிந்தது. அப்பால் இருந்த குடிசைகளில் சிம்னி விளக்குகளின் வெளிச்சம் சிவப்புப் பொட்டுகள்போலத் தலை நீட்டின. சாவதானமாகத் திரும்பி நடந்து ஆரம்பத்தில் நடந்த பாதைமூலம் நடைபாதையை அடைந்தபோது சிறுவர் பூங்காவுக்கு அப்பால் முதலாளியின் பென்ஸ் கார் கிடப்பதைக் கண்டான். பாறையை அடுத்துச் சென்றபோதுதான் காரின் மறைவில் ஐஸ்கிரீம் வண்டியை அடுத்து பிள்ளைகள் நிற்பதைக் கண்டான். சால்வாரும் கம்மீஸூம் அணிந்திருந்த பெண் பிள்ளைகள் தங்கள் வயதைக் காட்டிலும் சற்று அதிக வளர்ச்சியடைந்தவர்களைப்போல் காணப் பட்டனர். பெண்களின் கை அசைந்தபோதெல்லாம் விரல் மோதிரங்களின் ஜொலிப்பு மின்னல் வெட்டுப்போல் மின்னின. நடை வழியிலிருந்து மீண்டும் நடை பாதையை அடைந்து கடலைப் பார்த்தபடி மெதுவாக நடந்தான். காரை அடுத்துச் சென்ற போது யதேச்சையாக ஒரு அற்புதத்தைக் கண்டான்.

''ஹலோ.''

அவன் சிரித்தான். அப்பால் ஐஸ்கிரீம் சாப்பிட்டு முடித்த சிறுவர்கள் விளக்குக் கம்பத்தில் வெளிச்சம் வருவதற்கு ஆகும் நேரத்தைக் எண்ணிக் கணக்கிட்டுக்கொண்டிருந்தார்கள்.

''முதலாளியம்மாவா?''

''ஆமா'' என்று கூறிக் காரின் கதவை முழுவதுமாகத் திறந்து ஒரு காலே வெளியே வைத்து அவள் கூறினுள்: ,''இருந்தாலும் இந்த நேரத்தில் குடும்பத்தைக் கூட்டிக்கொண்டு பீச்சுக்கு வரமெனக்கெடணுமே? ரைட்டருக்கு முதலாளியின் பழக்கங்கள் அறிந்துகொள்ளவேண்டிய சமயமாயிற்றே?''

குற்றம் சொல்வதுபோல் இருக்கக்கூடாது எனக் கருதியிருக்க வேண்டும். அவள் ஒரு தமாஷ் செய்ததுபோல் சிரித்தாள்.

''இன்னிக்கு முறை ஒன்றும் இல்லே.'' அவள் கேட்டாள்.

மீண்டும் அவள் சிரித்தாள்.

''சோஷியல் சர்வீஸ் போதுமானதாகிவிட்டது. எங்கே ஓடித் தப்பிப்பது என்பதுதான் இப்போது.''

''பீச்சில் இப்போதுதான் பார்க்கிறேன். அவ்வப்போது வருவதுண்டா?''

''ஐ ஹேட் இட். கூட்டமும் கூச்சலும் எனக்குப் பிடிக்காது. இவர்கள் சம்மதிக்கணுமே? தலேவலியால் பகல் முழுவதும் படுத்துக்கொண்டிருந்தேன்.''

பிள்ளேகள் கசமுசவென்று பேசிக்கொண்டு பக்கத்தில் வந்தபோது அவள் விரட்டினுள். அவர்கள் விலகிப் போய்விட்டார்கள். ஆங்கில மொழியின் அழகே அவள் பேசும்போதுதான் அவனுக்குப் புலனுகியது.

''மழையில் இங்கு எங்காவது காரை நிறுத்திப் பார்த்துக் கொண்டிருப்பதுதான் எனக்கு நிரம்பப் பிடிக்கும். கூச்சல் இல்லே. ஆட்களின் ஆரவாரம் இல்லே.''

அவள் சாவதானமாகக் கதவைத் திறந்து வெளியே இறங்கி வந்தாள். பாறைப் பக்கமாக இறங்கி வந்தாள். வானத்தில் அங்கு மிங்குமாக மங்கிப் பரவிக் கிடக்கும் மேக மண்டலத்தைப் பார்த்தபடி நிசப்தமாக நின்ருள். காற்றில் எண்ணெய் பசையில்லாத அவளது முடிச் சுருள்கள் அலேந்துகொண்டிருக்க அவள் நடந்தாள்.

''ஒதுக்கமான இடங்கள்தான் எனக்குப் பிடிக்கும். ஜய்ப்பூரில் அப்பாவுக்குத் தெரியாமல் காரை எடுத்துக்கொண்டு போவேன். ஜய்ப்பூர் நீர்த் தடாகங்களுக்கும் அரண்மனேகளுக்கும் பெயர்

பெற்ற இடமாகும். அமைதியாகக் கிடக்கும் தடாகக்கரையில் இல்லாவிட்டால் மலேக் குகைகளின் அடிவாரத்தில் காரை நிறுத்தி வெறுமனே கொஞ்ச நேரம் இருந்தால்கூடப் போதும். அப்பாவுக்குத் தெரிந்தால் கோபிப்பார். நோ படி அண்டர்ஸ்டான்ட் தாட். லோன்லினஸ் கிவ்ஸ் யூ பீஸ் ஆஃப் மைண்டு. இரையும் கடலுக்கு நேராக முகத்தைத் திருப்பியபடி நின்று பேசும்போது, அவள் மனக் கஷ்டமுள்ளவளாக இருப்பதுபோல் தோன்றியது. பேச்சு இடறுமல் இருக்கவேண்டி அவள் வேகமாகப் பேசிக்கொண்டிருந்தாள். ஆத்ம நம்பிக்கை இழந்தவளேப்போல அவள் பதற்றமுற்றிருந்தாள்.''

''லேஃப் ஈஸ் மிஸரபிள் ஹியர். நத்திங் டு ஸீ. நோ வேர்டு கோ. யாரையும் நம்ப முடியவில்லே.''

இவ்வாறு கூறிக்கொண்டு அவள் தன்னேத் தானே கடிந்துகொண்டவளாக இரண்டடி நடந்து சொன்னுள். ''டோண்ட் டேக் இட் ஸீரியஸ்லி. ஒரு தமாஷ் கேட்டிருக்கிருயா? பட்டினி கிடந்து கஷ்டப்படுவதாகக் கூறி வந்த ஒரு பெண்ணே நான் வேலேயில் வைத்திருந்தேன். சிறு பெண். பதினேந்து, பதினுறுக்குமேல் இருக்காது. இன்று காலேயில் அவளே நான் டிஸ்மிஸ் செய்துவிட்டேன். ஸீ யூ கான்ட் டிரஸ்ட் எனிபடி.''

இறுதியாகக் கூறிய வார்த்தையால் அவள் அவசியத்தின் காரணமாய் அதிகமாகப் பேசுவதுபோல் தோன்றியது.

அவன் எந்தப் பதிலும் கூறவில்லே.

''உங்களுக்கு இங்கே அதிகமான நண்பர்கள் இருக்கிறுர்களா?''

''இல்லே. யாருமில்லே.''

சிமெண்ட் இருக்கையில் அ ம ர் ந் து அவள் பேசினுள். இளம் பிராயத்தில் உத்தியோகஸ்தரான தந்தையோடு சேர்ந்து வாழ்ந்த மத்திய இந்தியாவின் நகரங்களேப்பற்றி, சுகவாஸஸ்தலங்களேப் பற்றி, ஆட்களேப் பற்றி—

''ஒய் டோன்ட் யூ ஸிட் டௌன்.''

அவன் அவள் பேச்சொலி தெளிவாகக் கேட்கக்கூடிய தூரத்தில் இருந்தான்.

''தனியாகவா தங்கியிருக்கீங்க?''

''ஆமா.''

''நேரம் எப்படிப் போகுது? ஸே ஆன் எ ஸண்டே லேக் திஸ்?''

அவன் சிரித்தான். ''எதையாவது படிப்பேன். இல்லாட்டி வெறுமனே நடந்துகொண்டிருப்பேன்.''

புத்தகங்கள் அவளுக்கு எப்போதும் பிடிக்கும். கண்ணனூரில் குயின் மேரிஸில் படிக்கும்போது நிறைய படிச்சிருக்காள். இப்போது அதற்கு நேரம் வாய்ப்பதில்லை.

''சிலருக்குப் படிப்பதென்றால் அறவே பிடிக்காது. லுக் அட் மை ஹஸ்பெண்ட். பத்திரிகைகூடப் படிப்பதில்லை. எங்களுடைய தேனிலவு சமயத்தில் வற்புறுத்தி ஒரு சினிமாவிற்கு அழைத்துப் போய்ப் பார்த்து இருக்கிறேன்.''

''பெரிய தொழிலாகும்போது ஒவ்வொன்றுக்கும் நேரம் கிடைக்க முடியாமற் போய்விடுகிறது.''

அவளது முகம் ஒரு நிமிஷம் சலனமற்று கருங்கற் பாறைபோல் கடினமாகத் தோன்றியது. மீண்டும் சாந்தமடையச் சில நிமிடங்கள் பிடித்தன. யாரோடு என்றில்லாமல் அவள் முணு முணுத்தாள்.

''யெஸ். யெஸ்.''

அவள் கூறிய எதையும் அவன் கவனிக்கவில்லை. கருத்த ஆகாய மண்டலத்தில், அவள் நெருங்கி முன்பாக வந்திருக்கிறாள்... வார்த்தைகளின் பொருளில் நயம் சேர்ந்த ஒரு இனிய இசையாக மாறியிருந்தது. முன் புறத்தில் ஓடிக்கொண்டிருக்கும் வாகனங் களின் இரைச்சலும், பின் பிறத்தில் கரையை வந்து மோதும் அலைகள் எழுப்பும் ஒலியும் கொஞ்சம் கொஞ்சமாக அகன்றுகொண் டிருந்தது.

''வெளியேறிப் போய்விடவேண்டுமென்பது என் விருப்பமாக இருந்தது. ஃபாரின் சர்வீஸில் ஒரு வேலை பெற முயற்சி செய்யு மாறு அப்பாவிடம் சொல்லியிருந்தேன். அவர் அதை விரும்ப வில்லை.''

ஆயினும் அவள் திடீரென நினைத்துக்கொண்டவளைப்போலக் கேட்டாள்.

''இந்த வேலைக்கு ஏன் வந்தீங்க?''

அவன் மௌனமாகிவிட்டான். சொல்லலாமா?

நகரத்தில் பெரிய ஹோட்டலில் பார்ட் டைம் கணக்கு எழுது பவனாக வேலை கிடைப்பதற்கு முன்பு யோசிக்கவேண்டியிருந்தது. அந் நிலையில்தான் முதலாளி கண்டார். முதலாளி யாருடைய பேரிலோ கொடுத்த திருட்டுக் கேஸுக்கு சாட்சி சொல்லப் போனது அங்கே இருக்கும்போதுதான். ரைட்டருக்கும் டெலி

போன் ஆபரேட்டருக்கும் சாட்சி சொன்னது ஹோட்டல் முதலாளியாகும்.

''—பேரு?''

''—சேதுமாதவன்.''

''—படிச்சிருக்கியா?''

''—பி.ஏ.?''

''—வேலை?''

''—ஹோட்டலில் கிளார்க்.''

''—ம் தேதி மாலை நீங்கள் எங்கே இருந்தீங்க?''

''—கௌண்டருக்கு அடுத்த அறையில்.''

கேஸ் முடிந்தது. ஆனால், சாட்சியைப்பற்றி முதலாளிக்கு மதிப்பு ஏற்பட்டுவிட்டது. ஜன்னல் வழியாகத்தான் கண்டதாக வக்கீலின் அவசியத்திற்கேற்பக் கூறினான். காரில் ஏறிய முதலாளியைத் தடுத்துக் கொண்டு பிரதிவாதி நிற்பதைக் கண்டான். கெட்ட வார்த்தைகளைப் பயன்படுத்தி பேசுவதைக் கண்டான். ஒருவேளை, ஸ்ரீனிவாச முதலாளியை அடித்துவிடுவானோ என்று பயந்து தானும் பி. பி. எக்ஸிலேயுள்ள இளைஞர்களும் ஓடினார்கள் . . . முதலாளி அதற்குப் பிரதிபலனாகத் தந்த ஐம்பது ரூபாய்களை வாங்காமல், மெதுவாகச் சொன்னான்.

''எனக்கொரு வேலை தரணும்!''

சாட்சிக் கூண்டில் நின்ற அந்த நிமிஷங்களை மறக்க முயற்சித்தவனாக அவன் கூறினான்:

''நான் நாளைக்குப் போகிறேன்.''

''எங்கே?''

''எங்கேயாவது போவதற்கு முன்பு அங்கு வந்து சொல்ல வேண்டும் என இருந்தேன். வேறு ஏதாவது வேலை, வேறு ஏதாவது நகரம்.''

பிள்ளைகள் காரில் ஏறிக்கொண்டு ஹாரன் அடித்து ஆரவாரம் செய்தபோது அவன் எழுந்தான்.

''ஓ, நேரம் போனதே தெரியலை.''

அவன் பயணம் சொல்லவேண்டித் தயாராக காரின் அருகில் சென்றபோது அவள் கேட்டாள்.

''எந்த பக்கமாகப் போகணும்?''

''எந்தப் பக்கம்'னு ஒண்ணும் இல்லே. சும்மா நடக்கணும். வீட்டுக்குப் போகணும்.''

''ஐ விஷ் ஐ குட் ரோம் அபௌட் லைக் யூ—

வா, நான் இறக்கி விடறேன்.''

''வேண்டாம், நான் . . .''

''ஓ, கமான், வாட் ஆஃப் தாட்?''

பையன் முன்புறத்தில் டிரைவிங் சீட்டுக்கு அருகில் இடம் பிடித்துக்கொண்டிருந்தான். சிறுமிகள் பின்புறத்தில் இடம் பிடித்துக்கொண்டிருந்தார்கள்.

அவள் ஸ்டீரிங்குங்கு முன்பாக நிமிர்ந்து இஞ்சினை ஆன் செய்த போது அவன் காரையடுத்து தயங்கி நின்ருன்.

''கெட் இன் மோனு கதவைத் திற.''

டாஷ்போர்டுக்கு மேலே சதா தலையாட்டிக்கொண்டிருக்கும் பிளாஸ்டிக் நாயின் மூக்கைத் தட்டி ரசித்துக்கொண்டிருந்த பையன் மனக் கஷ்டத்தோடு கதவைத் திறந்தான். என்ருலும் தொடா திருக்கும் வகையில் முடிந்தவரை அம்மாவை ஒட்டி நகர்ந்து உட்கார்ந்தான்.

பின்புறத்தில் சிறுமிகள் குரலைத் தாழ்த்திக்கொண்டு குசுகுசு வென்று பேசிக்கொள்ளலாஞர்கள்.

பங்களாவின் கேட் முன்பாகக் காரை நிறுத்தினுள். ஹாரன் அடித்தபோது வயதான காவல்காரன் ஓடி வந்து கேட் கதவைத் திறந்தான்.

சிறுமிகள் கீழே இறங்கி, சத்தமிட்டபடி கதவை இழுத்துச் சாத்திஞர்கள்.

''இறங்கிக்குடா.''

''அவனுக்கு வழிவிடுவதற்காக சேது முதலில் இறங்கிஞன். அவனது கையைப் பிடித்தும் பிடிக்காதவஞக அவனது பிடியை விடுவித்துக்கொண்டு சிமெண்ட் தரையில் செருப்பை உரசிக் கொண்டு அவன் உள்ளே ஓடிஞன்.''

அவள் வேலைக்காரனிடம் கேட்டாள்:

''அவள் போயிட்டாளா?''

''இல்லே. முதலாளி வந்த பிறகே போவேன்னு இருக் காள்.—''

அவளுடைய சத்தம் கோபமிக்கதாக வெளி வந்தது.

''இழுத்து வெளியே தள்ளி கதவைச் சாத்து'ன்னு நான் சொல்லலே?—உள்ளே வாங்க.''

''நான் போறேன்.''

''உள்ளே வா, உனக்கு இந்த வீட்டைப் பார்க்கணும். உன்னுடைய சொத்து உன்னுடைய பேர்லே இருக்குன்னு கேள்விப் பட்டிருக்கேன். ஒன்டே ஐ லிவ் தேர். வீடு காலியானதும் சாவி என்னிடம் வந்து சேரணும். ரிப்பேர் செய்து கம்பர்ட்டபிளாக்க வேண்டும்.''

அவன் பின்புறமாக கதவைத் திறக்க முனைந்தபோது அவள் கைநீட்டி முன்புறமாக திறந்தாள்.

கடற்கரையைச் சுற்றிப் போகும் பாதையை நோக்கித் திரும்பி வேகத்தைக் கூட்டியபடி அவள் வெறுமனே சிரித்தாள்:

''ரைட்டருக்கு பென்ஸ் காரில் ஒரு சவாரி நடக்கட்டும். திஸ் இஸ் யுவர் ஸெண்டாஃப் பார்ட்டி. நாளைக்கு இங்கிருந்து போறீங்க இல்லையா? ஐ வில் ஸீ யூ ஆஃப்.''

அருகதையில்லாத இடத்தில் அபத்தமான நிலையில் இருப்பதாகக் கருதி அவன் சுருண்டு கிடந்தான். மீண்டும் நகரத்தின் மத்திக்கு திரும்பவும் வந்தபோது மாலையில் நிறைந்து வழிந்த வீதிகள் வெறிச்சோடிக் கிடந்தன. மெல்லிய கைகள் ஸ்டியரிங் வீலில் அனுயாசமாக சஞ்சரிப்பதை ஆச்சரியத்தோடு அவன் ஓரக் கண்ணால் பார்த்தான்.

மெயின் ரோடிலிருந்து இடை வழிக்குத் திரும்பும்போது அவள் கேட்டாள்:

''கடந்த பார்ட்டி எப்படி?''

''எந்தப் பார்ட்டி?''

''யுவர் பார்ட்டி? வீட்டில் பார்ட்டிக்கு முதலாளியை மட்டும் அழைத்தால் போதுமா?''

அவன் மொத்தத்தில் பிரமித்துப் போய்விட்டான்.

''யாரெல்லாம் இருந்தாங்க?''

''எனக்குத் தெரியாது.''

''யூ ஆர் தி கேர்டேக்கர். யூ ஸெட் நோ'' என்று அவள் கேட்டாள்.

''தாமதாக இருந்தாலும் எல்லாம் உனக்குத் தெரியும். உனக்குத் தெரியாதது ஏதுவுமில்லை.''

குடியிருப்புகளுக்கிடையே வளைந்துபோகும் பாதையில் வழக்கத்துக்கு மாருக இருட்டாக இருந்தது. முனிசிபல் விளக்குகளுக்கு எங்கேயோ பழுது ஏற்பட்டிருக்க வேண்டும்.

பாதை திரும்பும்போதெல்லாம் அவன் எச்சரிக்கை கொடுத்து கொண்டே வந்தான்.

வாசற்படியை அடுத்து நின்றபோது அவன் சந்தேகப்பட்டான். இருட்டில் மூழ்கிக் கிடக்கும் வீட்டைச் சுட்டிக் காட்டிக்கொண்டு சொன்ஞன்:

''அதுதான் வீடு.''

ஸ்டியரிங் வீலின் மத்தியில் பார்வையைச் செலுத்திக்கொண்டிருந்த அவள் அதைக் காது கொடுத்துக் கேட்கவில்லை எனத் தோன்றியது.

''வீடு பார்க்கணுமா?''

நெஞ்சம் படபடக்கக் கேட்டான். வீட்டு வெளி வராந்தாவில் இரவில் காவல் இருந்த ஆள் வரும் விருந்தாளியை வரவேற்பவனுக மாறுவான் என்பதை அவன் எண்ணிக்கூடப் பார்த்தது இல்லை. நெஞ்சத் துடிப்பு அடங்கியபோது எங்கிருந்தோ தைரியம் பெருகி வந்தது. விவரங்காண முடியாத ஆசையும் பீதியும் கலந்த ஒரு வேகத்தோடு பேனட்டை வலம் வந்து மறுபுறத்தை அடைந்து, கதவைத் திறந்து கேட்டாள்:

''இறங்கலியா?''

கதவைத் திறந்தபோது உள்ளே எரிந்த விளக்கு வெளிச்சத்தில் அவளுடைய சோர்ந்த முகத்தை ஒரு நிமிடம் கண்டான்.

காய்ந்த இலைகள் வீழ்ந்து கிடக்கும் முற்றத்தினிடையே இருட்டினூடே நடந்தபோது கால் தடுமாறுவதுபோல் தோன்றியது.

''இங்கே படி உண்டு, மெதுவாக.''

அவள் கை நீட்டினுள். மினுமினுப்பான கையை நடுங்கும் விரல்களுக்கிடையே பற்றியபோது முகத்தில் ரத்தவோட்டம் மிகுந்தது.

வராந்தாவில் ஏறியபோது பிடியை விட்டுவிட்டான். வாசற்கதவைத் திறக்க அதிக நேரம் எடுத்துக்கொண்டபோது தனக்குத் தானே சபித்துக்கொண்டான். உள்ளே விளக்கைப் போட்டான். வீட்டுக்காரனுக மாறி அவன் கூறினுன்: ''வாங்க, பார்க்கணுமில்லியா?''

இடை வழியையும், சமையலறையும் பார்த்துவிட்டு, படுக்கையறையின் வாசற்படியைக் கடந்து அவன் சொன்னுன்:

''இந்த இடத்தைத்தான் நான் பயன்படுத்துகிறேன்.''

சுவரில் பலகையில்லாத அலமாரியிலிருந்து அவள் புத்தகங்களை எடுத்துப் பிரித்தாள்.

ஏதாவது கேட்கணுமே என்று கருதி அவன் பேசினுன்:

''எப்போ இந்தக் கட்டிடத்தை இடிக்கப் போறீங்க?''

அவள் அதைக் கேட்காத பாவத்தில் சொன்னுள்.

''என்னுடைய புத்தகங்கள்லே கொஞ்சம் போயிடுச்சு. கொஞ்சப் புத்தகங்கள்தான் இருக்கு.''

''எனக்கொரு தடவை பார்க்கணும்.''

''வென் ஆர் யூ லீவிங்?''

''நிச்சயிக்கவில்லை. ஒருவேளை நாளை அல்லது நாளை மறு நாள்.''

அறையினுள்ளே அவள் பேசிக்கொண்டிருக்கும்போது அவன் அந்தப்புரத்திலே காவல்காரனைப்போல ஒதுங்கி நின்றுன். புஸ்தகங்களில் இருந்து தலையையுயர்த்தி ஆங்கிலத்தில் சொன்னுள்:

''உங்களுடைய இப்போதைய சிந்தனைகளை என்னுல் யூகிக்க முடியும்.''

ஒன்றும் சிந்திக்கவில்லை என்று சொல்லும் வகையில் அவன் மறுப்பதுபோல் நொச்சுக்கொட்டும் பாவனையில் ஓசை எழுப்பினுன்.

''என்னை மதிப்பாக்கவேண்டாம். டோன்ட் திங்க் ஐயாம் பேட், ஒன்லி திங்க் ஈஸ் ஐயாம் வொரீட், வெரி பேட் டே ஃபார் மீ.''

அவள் எழுந்து வெளியே போகும்போது அவன் கூடவே நடந்தான்.

மீண்டும் இருளடைந்த முற்றத்தில் கூடவே நடந்துபோகும்போது அவன் வழிகாட்டவேண்டிக் கையைப் பிடித்தாள். படியின் தொடக்கத்தை அடைந்தபோது உணர்வு தடுமாறுவதுபோல் தோன்றியது. தனக்கே புரியாத மொழியில் அவன் பேசினுன்.

—இதொரு கனவாக இருந்தது. இடையனின் குடிசைக்கு ராஜகுமாரி வந்த அனுபவமாக இருந்தது. அவன் வேறு யாரு

மில்லை. அவளைப் பார்க்க வேண்டித் தினமும் ஜன்னல் அருகே காவல் நிற்பவன் தான்.

பின்னால் இழுக்க முயன்ற கைகளைச் சுதந்திரமாக விலக விடாமல் பிடியை இறுக்கினான்.

—''ஐ வொர்ஷிப் யூ!''

பல தினமும் நினைத்து வியந்ததுண்டு. எப்படி இவ்வளவு வேகத்தில், வார்த்தைகள் வேண்டாது உயிரும் உணர்வும் ஒத்துப் போயிற்று என்பது விந்தையாயிருந்தது.

காரின் அருகில் நின்று பயணம் செல்லும்போது அவன் சொன்னான்:

''நான் போகப் போவதில்லை.''

''உம் . . .''

''எனக்குப் பார்க்கவேண்டும். இங்கே எனக்குக் கனவு காண வேண்டியது ஒன்றும் இல்லை. இனியும் இடையனின் இருப்பிடத்திற்கு ராஜகுமாரி வரும். நான் அதுக்காகக் காத்திருப்பேன்.''

காரின் ஓசையோடு கலந்தவண்ணம் ஒரு வெடிச் சிரிப்பு அகன்றுபோனபோது, நிமிஷங்களுக்குப் பிறகு தான் வாசற் படியிலேயே இருட்டில் தனியாக நிற்கும் உணர்வு அவனுக்குத் திரும்பியது!

படுக்கையில் வந்து படுத்தபோது ஒரு நிதியைக் கண்டவன் அடையும் ஆனந்தம் மனதில் பரவியிருந்தது. விரல்களை விட்டு மறையாத நறுமணம் இன்னும் தங்கியிருப்பதுபோல் தோன்றியது.

அந்த நறுமணத்தின் நினைவோடு இரவு ஒரு பூபோல சுற்றிலும் படர்ந்து தொங்கியது. கருத்த தாமரைபோல் உலகம் முழுவதும் அது நிறைந்து நின்றது. காற்றின் இனிய நாதத்தை கேட்டுக் கொண்டு, அதன் அல்லி இலையின்மேல் அன்று தலை சாய்த்து உறங்கினான்.

[6]

நகரத்தின் நெருக்கடியில் ஒற்றை அறையுள்ள சிறிய டிராவலர்ஸ் பங்களாவுக்கு ஜீப்பைத் திருப்புமாறு டிரைவரிடம் சொன்னான்.

முதலாளியுடன் பல தடவைகள் இங்கே வந்த பழக்கத்தை உறுதிப்படுத்த வேண்டி டிரைவர் எடுத்துச் சொன்னான்.

''அப்பாலே பெரிய 'டூரிஸ்ட் ஹோம்' உண்டு. ரொம்ப சௌகரியமானது.''

அவன் அதை கேட்காததைப்போல் நடிக்கலானுன். முற்றத்தில் காய்ந்த இலேகள் அங்குமிங்குமாய் நிறைந்து கிடப்பதைப் பார்த்தபோது முசாபுரி பங்களா இருட்டில் மூழ்கிக் கிடந்தது. யாரும் அடுத்துத் தங்க அங்கே வந்திருப்பதாகத் தோன்றவில்லே.

டிரைவர் வராந்தாவின் முன்பாக நிறுத்தி இரண்டு நிமிடங்கள் தொடர்ந்து ஹாரன் அடித்த பின்னர் இருட்டில் புதர் போன்ற செடிகளே விலக்கி வழியுண்டாக்கிக் கொண்டு வாச்மேன் வந்தான். வராந்தாவின் விளக்கை ஏற்றி அறையைத் திறக்க முற்பட்டதைக் கண்டபோதுதான் ஜீப்பிலிருந்து கீழே இறங்கினுன்.

சிதலமடைந்த பொட்டுப் பொறுக்குகளான தரை. ஓட்டை உடைசலுமாக உட்காரத் தகுதியற்ற மேசை நாற்காலிகள். மங்கிய கண்ணுடி, நூல் பிரிந்த பழைய கோட்டை அணிந்து தலேயில் தலேப்பாகை கட்டியிருந்த மீசைக்காரன் காணப்பட்டான். அலமாரியைத் திறந்து மடித்து வைக்கப்பட்டிருந்த விரிப்பை எடுத்து பழைய மெத்தையில் விரித்தான்.

அமைதியாகக் கூஜாவை எடுத்துக்கொண்டு குளியலறையின் பின்புறக் கதவை பெரு முயற்சி செய்து திறந்து வெளியே போனுன்.

மேசையின்மீது காலேத் தூக்கி வைத்து ஒரு சிகரெட்டை பற்ற வைத்து ஆசுவாசத்தோடு இருந்தபோது டிரைவர் அறையின் உள்ளே வந்தான்.

''தூங்குவதற்கு இங்கே வேறுயாரும் டூரிஸ்ட் வரமாட்டார் கள்.''

அப்போது 'இங்கே' என்பதன் பொருள் முழுமையாக உணர வில்லேயோ என்ற அச்சத்திஞல் அவன் அடக்கமாகச் சிரித்தான்.

சுகமில்லே என்பதை முகச் சுழிப்பின்மூலம் தெளிவாக்கினுன்.

இவர் சுதந்திரமாகப் பேசிய காலம் பின்னடைந்திருக்கிறது. அலுவலகத்தில் மேனன்தான் அதை ஆரம்பத்தில் புரிந்து கொண்டவர். கௌண்டருக்கும் பார்முக்கும் மில்லுக்கும் போகத் தொடங்கியபோது அங்குள்ள வேலேக்காரர்களுக்குப் புரிந்தது. இனி இவன்தான் பாக்கி பயணத்தில் பல தடவைகள் அதை நினேத்து இருக்கிறேன். ஒரே வார்த்தையில் பதில் சொல்லவேண்டிய வேலே யில்கூட அவன் அதிக தயக்கம் காட்டுவதுண்டு. இருக்கையில் தான் வைத்த தீப்பெட்டியை எடுத்து அவன் கூச்சமில்லாது பீடி பற்றவைக்கும்போதெல்லாம் உள்ளுக்குள் ஆச்சரியம் புகைந்து

கொண்டிருக்கும். இப்போது விசாரித்ததுபோலவேதான் அவன் அறையில் அதிகாரத்தோடு சுற்றி நடக்கிறுன். அவன் முகம் சுளிக்காமல் குளிர் காற்றில் தங்கி நிற்கும் புகை வட்டங்களைப் பார்த்துக் கொண்டு கூப்பிட்டான்.

''டிரைவர் காரிலிருந்து பெட்டியை எடுத்துவை.''

அதிகாரச் சத்தத்தோடு முன்பாக அவனது முகம் கறுப்பதை இடக் கண்ணுல் பார்த்தான். எதிர்த்துப் பேசுவாஞ என்று அறியும் எண்ணத்தில் ஒரு நிமிஷம் காத்திருந்தான். வா, தைரியமிருந்தால் வா!

தலையைத் தாழ்த்திக் கொண்டு வெளியேறினுன். அவன் பெட்டியைக் கொண்டு வந்து மேசையின் மேல் தேவைக்கு அதிகமான சத்தத்தோடு வைத்தபோது ஆச்சரியமாக அல்ல வினயம் கலந்த ஒரு சிரிப்பு வந்தது.

அலுவலகத்திலும் மில்லிலும் யார்டிலெல்லாம் வந்த மாற்றம் இங்கே எதிரொலித்தது. ஏலத்துக்காக முதலாளியே தன்னை அனுப்பத் தொடங்கிய முதலாவதாக இருக்குமோ?

அதோ, அதற்கு முன்பு? மேனனின் கண்கள் எங்கேயும் செல்லும். வீட்டில் முதலாளியின் மனைவி அவனேடு கூடியிருப்பதும் அவருக்கு தெரியாததல்ல. அடிவார அலைகள் அலைமோதத் துவங்கிவிட்டன என்பதை அறிந்தபோது மனத்திற்கு இதமான இன்பமாக இருந்தது. ஒருவேளை, முதலாளியின் காதை அடையும்போது அரங்கம் மாறுவதை பீதி கலந்த கவலையோடு எதிர்நோக்கலானுன்.

மேனன் வீட்டிற்கு பதபதைக்க ஓடிச் சென்றபோது சொல்ல வந்ததைக் கேட்கத் தயாராக இருந்தார்.

''முதலாளி ஆஸ்பத்திரியிலே சுகமில்லையாம்.''

நர்சிங்ஹோமின் முற்றம் நிறைந்து வழிந்தது. ஏராளமான கார்கள். இரவில் குளியலறையில் வீழ்ந்து விட்டார். மனைவியின் கூக்குரல் கேட்டு வேலைக்காரர் ஓடிச் சென்று பார்த்தபோது நினைவில்லாமல் இருந்தார்.

யாரோ சொன்னுர், 'வலியாம்; பச்சைவாதம்' ஒரு மாத சிகிச்சைக்குப் பிறகு பங்களாவுக்குத் திரும்பி வந்தபோது ஒரு பக்கம் குழைவாகப் போயிருந்தது.

வாச்மேன் குளியலறையில் தண்ணீரைக் கொட்டிக்கொண்டிருந்தான்.

சிதைவான குடகு மலையாளத்தில் அவன் வந்து சாப்பாட்டு விஷயமாக விசாரித்தபோது வாசற்படிக்கு அப்புறத்தில் ரோஷத்தோடு பீடி புகைத்துக்கொண்டிருந்த டிரைவரைக் கூப்பிட்டான்.

''இந்த வாச்மேனேயும் கூட்டிக்கொண்டு டவுனுக்குப் போ.'' அதன் பிறகு கிழவனேடு சொன்னுன்: 'ஆம்லட்டோ, பிரட்டோ போதும். ஏதாவது லேசாக டிரைவர் வேண்டியதைச் சாப்பிட்டு வா.'

ஐந்து ரூபாயை டிரைவருக்கு நேராக நீட்டினுன்.

அவர் வெளியே போனுர். அறையில் தனிமையாக இருந்த போது எழுந்துபோய் ஜன்னல்களைத் திறந்தான். மேகப் படலங் கள் மலையடிவாரத்தில் மரங்களுக்கு மேலாக நினைவலைகள்போல நகர்ந்துகொண்டிருந்தன. குளிர் அதிகமாகிக் கொண்டே வந்தது. சட்டையின் மடக்கி விடப்பட்டிருந்த கையை நீட்டிவிட்டு மற்ருெரு சிகரெட்டை எடுத்துப் பற்றவைத்தார்.

வாச்மேனும், டிரைவரும் திரும்பி வந்தபோது அவன் சொன்னுன்: 'வாச்மேன் டிரைவருக்குப் படுக்க ஏதாவது ஏற்பாடு செய்து கொடு.'

''சரி முதலாளி.''

அறையில் காலியாகக் கிடந்த இரண்டாவது கட்டிலின் நேராக டிரைவர் ஆசையோடு பார்ப்பதைக் கண்டார். வழக்கத் திற்கு மாருன மணமுள்ள கம்பளிக்கு கீழே படுத்துத் தூங்கத் தொடங்கிய சமயத்தில்தான் வெளியே கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது.

வராந்தாவிலிருந்து யாரோ பேசுகிருர்கள். வாசற் கதவை திறந்துகொண்டு வந்தார்.

''ஹலோ.''

ஒல்லூரிலிருந்து கருணுகரன், கொச்சியிலிருந்து முஹம்மது சேட், அறிமுகமில்லா மூன்ருவது மனிதன். கருணுகரன் அறிமுகப் படுத்திவைத்தார். ஐயங்கார். சென்னையிலுள்ள மிகப் பெரும் ஏற்றுமதியாளர்களில் ஒருவர்.

''ஸ்ரீனிவாசனுக்கு எப்படியிருக்கு?''

''சுகமாயிடுச்சு.''

புறப்படுவதற்கு முன்பு பயணம் கூறிக்கொள்ள முதலாளியின் அறைக்குச் சென்றபோது கண்ட காட்சி ஒரு நிமிஷம் மீண்டும் மனதில் நிழலாடி மறைந்தது.

இடது காலையும் கையையும் பயன்படுத்தி கயிற்றில் தொங்கிக் கொண்டு குளியறைக்கு போகும்போது, உதவிசெய்யச் சென்ற பணியாளைத் திட்டி விரட்டினுர்.

''போடா, நாய்ப் பயலே.'' கண்களில் கொடூரமும் நாவில் நஞ்சும் இருப்பதாகத் தோற்றமளிக்கும் வகையில் இருந்தது. உட்காரும் அறைக்கு அருகில் போடப்பட்டிருந்த மெத்தையில் ஆயுர்வேத வைத்தியர் கூறியதற்கிணங்க புறுக்களைச் சேர்த்துப் பிடித்துக்கொண்டு பகலில் படுக்கிறார். மாலை வந்துவிட்டால் பணியாட்களின் துணையோடு படுக்கையறைக்கு இடம் மாறுகிறார்.

''ஏன் இங்கு கூடியிருக்கீங்க.''

''ஒண்ணுமில்லே சும்மா தான்.''

கருணாகரனின் கண்கள் கலங்கியிருந்தது. பேசும்போது விஸ்கியின் வாடை வீசியது.

அவரோடு உடன் வெளியேறும்போது, காரிலிருந்து சேலையின் முந்தானையைக் கொண்டு மார்பு கச்சை கட்டிய குடகுப் பெண்களின் அழகைப்பற்றிப் பேசும்போது, கடந்த ஏலத்துக்கு போயிருந்தபோது நிகழ்ந்த சாகசக் கதைகளைப் பகிர்ந்து கொள்ளும்போதெல்லாம் மனதிற்குள் சொன்னார். இலட்சங்கள் கைமாறுபவர்களுக்கு இடையில் அங்கீகாரம் கிடைத்து இருக்கிறது.

நடு இரவு கழிந்த பின்னர் டி.பி.யின் முன்பாக அவர் கொண்டு வந்துவிட்டபோது ஒரு காரியம் மட்டும் மனதில் உயர்ந்து நின்றது. நாளைக்கு போய்க் கேட்காமலே ஏலத்திலிருந்து பின்னடைந்தால் ஐயங்கார் ஐயாயிரம் ரூபாய் ரொக்கம் தருவார்.

ஐயாயிரம் ரூபாய்கள்!

டெப்போவின் முன்பாகப் பத்து மணிக்கு ஜீப்பைக் கொண்டு போய் நிறுத்தியபோது கருணாகரன் அருகில் வந்து கேட்டார்:

''இரவு சொன்னது நன்றாக நினைவிருக்கில்லையா?''

''அவ்வளவு சீக்கிரம் மறந்துடுவேனா நான்?''

டூரிஸ்ட் ஹோமிலிருந்து பணம் பங்கிட்டு முடிந்தபோது சேட் கேட்டுக்கொண்டார். ''இதோட முடியறதில்லே. ஸ்வாமியின் வகையில் பாட்டில் வரணும்.''

அப்போதே அவ்விடத்தைவிட்டு அகன்றுவிடவேண்டும், என்ற தீர்மானத்துடன் எழுந்தான். எல்லோரும் ஒன்றாகவே செல்ல வேண்டும் என்று அவர்கள் சொன்னார்கள். இரவின் சாத்தியக் கூறுகளை பற்றி அவர்கள் எடுத்துக் கூறினார்கள். நிர்ப்பந்தங்களிலிருந்து எப்படியோ விடுபட்டு விரைவில் வெளியேறினான்.

ஐயாயிரம் ரூபாய்கள் வைக்கப்பட்டிருந்த கவர் பனியனுக்குள் நெஞ்சை ஒட்டியவாறு கிடந்தது.

மலைக் குன்றுகளுக்கிடையே உறுமிக்கொண்டு இறங்கும் ஜீப்பின் வேகம் போதுமானதாகப்படவில்லை.

நகரத்தை அடைய உள்ளம் துடித்துகொண்டிருந்தது, அந்தி மயங்கிய வெளிச்சத்தில்,

ஜன்னலின் திரைச் சீலையை ஒதுக்கி இடைவெளியுண்டாக்கி வாசற்படியை நோக்கி காவல் இருக்கும் நிமிஷங்களைப் பெரிதும் விரும்பியவனாக இருந்தான். காரின் கதவுகளை சாத்தும்போது இதயத்தின் கதவுகள் திறந்துகொண்டன . . . சிமெண்ட் தரையில் ஹைஹீல்ஸ் பதியும் சப்தத்தில் நிமிடத்தில் நேற்றைய பூவின் இதழ்கள்போல ஒவ்வொன்றாக வீழ்ந்தன. வண்ணங்களும் நறுமணங்களிலும் நீட்டிய கைகளுக்குள் கசங்கி வீழ்ந்து மறையும் போது உலகத்தைச் சுமக்கும் ராட்சதனின் கரிய தோள்களின் மேல் நடப்பதுபோல் இருந்தது. நகரப் பகுதியிலுள்ள அந்தச் சிறிய வீட்டை விரும்பத் தொடங்கியிருந்தான்.

ஜன்னல்களுக்கு இளம் பச்சை நிறத்தில் திரைச் சீலைகள் போடலானான். வாசற்படியில் சித்திர வேலைப்பாடுகள் நிறைந்த நடுவில் பிளந்த திரைச் சீலை. மெத்தையில் நெருக்கமான நீலக் கோடுகளுள்ள வெள்ளை விரிப்பு போட்டிருந்தான். கட்டிலிலிருந்து கைநீட்டி போடவோ, நிறுத்தவோ கூடிய குறுகிய தூரத்தில் ரெக்கார்ட் பிளேயர் வைக்கப்பட்டிருந்தது.

''ஐயாம் கோயிங் டு கிவ் யூ சம்திங். எ கம்பானியன் ஃபார்யூ.''

இளம் மஞ்சள் நிறத்தில் உள்ள சார்ட்டின் பெட்டிகோர்ட் மட்டும் அணிந்து நின்று அதன் சிறப்பம்சத்தை எடுத்துக்கூறி படிப்பித்த மாலை நேரத்தில்தான் பார்ட்டியிலிருந்து அளவுகாரன் வந்தது.

வெளியே வந்து பேசிவிட்டுத் திருப்பியனுப்பும்போது அவன் கேட்டான்.

''முதலாளியோட காரை வெளியே பார்த்தேன்.''

''முதலாளி இல்லே. நான்தான் கொண்டாந்தேன்.''

என்ன, வெளிப்படுத்துவது இனியும் அவசியமா என்ற பீதியோடு முகம் கறுத்து நின்றபோது அவன் வேகமாக அவ்விடத்தை விட்டு அகன்றான்.

'பாப்' இசைப் பாடகரைப்பற்றி சொல்லி வந்தபோது அக்கரையும் ஆர்வத் துடிப்பும் உள்ள ஒரு மாணவனைப்போலக் கேட்டுக்கொண்டிருந்தான்.

கோமாளிகளின் புகழ் மண்டலங்களைப்பற்றிப் பாடுவதில் சிறந்தவர் பாட்பியூன் ஆவார். 'இருண்ட சந்திரனைப்பற்றி பாடுவதில் வல்லவர் டோனி பிராண்ட் எனும் இந்தியராவர்.

''—மை பெட், டோன்ட் பி, ஃபோர்மல், கால் தி மை நேம்.''

''என்னால் முடியாது. எப்படியோ இருக்கு.''

—பேரைச் சொல்லிக் கூப்பிடு; அடி பெண்ணே என்று கூப்பிடு ஐ லவ் இட்!''

அப்போது சட்டென்று சிரித்துவிட்டான்.

''—மை பெட். என் தங்கமே!''

பட்டு நூல்கள்போல இசையின் மெல்லிய இழைகள் அறைக்குள் கடந்து வந்தது. சுற்றிலும் குளுமையான விரிப்புகளை நெய்து கொண்டு இருந்தது. தலையணையில் தன் முடிச்சுருள்களின் இனிய மணமும் மெத்தையில் சுழிவுகளும் மீதமாக இருந்தது. சில நிமிஷங்களுக்குப் பிறகு தனிமையாக இருக்கும்போது வேதனை கலந்த இனிய உணர்வு உள்ளத்தில் நிறைந்திருந்தது. கருங்கல் பாவப்பட்டிருந்தது. நடைபாதையில் காலடியோசை கேட்கும், தேதிக்காக, அந்த நிமிஷத்திற்காக காத்திருக்க தொடங்கினான்.

குடகிலிருந்து திரும்பி வந்த மூன்றாவது நாள் . . .

ஞாயிற்றுக்கிழமை காலையில் எழுந்தபோது இன்று மாலை வராமலிருக்க மாட்டாள் என்பதை நினைவுபடுத்திக்கொண்டான்.

மில்லுக்கும், யார்டிக்கும் போய்விட்டு மதியத்திற்கு முன்பே திரும்பிவிட்டான். குளியலறையில் தண்ணீர் அடித்து நிரப்பி விட்டு, டிபன் கேரியரில் பலகாரமும், பிளாஸ்கில் காபியும் கொண்டுவந்து வைத்துவிட்டு பையன் காத்துக்கொண்டிருந்த போது சொன்னான்:

''போடா, இரவு எட்டு மணிக்கு வந்தாப் போதும்.''

கேள்வி கேட்காமலே சொன்னதைக் கேட்டு நடக்குமாறு முதலில் கற்றுத் தந்தவர் முதலாளிதான்.

திரைச் சீலையின் பிளவு வழியே படியைப் பார்த்தபடியே இருந்தான். காற்றில் அலையும் சுருள் முடியையும், புடைத்த முகத்தையும் காணும் நிமிஷங்களுக்காக படிக்கு அப்பாலே எதிர்நோக்கி காத்திருந்தான். அப்போது, யாரோ படியேறுவதைக் கண்டான். மில் கணக்குப்பிள்ளை பாச்சக்குட்டிபோல் தோன்றியது. ஒரு

நிமிஷம் கனவு போலிருந்தது. பின்புதான் இன்னுறென்று தெரிந்தது. பரமேஸ்வர அண்ணன்.

ஓசையுடன் மூக்கை சிந்தியபடியே சிரித்துக்கொண்டு பரமேஸ்வர அண்ணன் கூடத்திற்கு வந்தபோது சிரிக்க முயன்முன்.

''இப்பதான் வர்றீங்களா?''

''நான் நேற்று வந்தேன்—பிள்ளைகளுக்குச் சுகமில்லை. நேற்று ஆஸ்பத்திரியிலே அட்மிட் செய்திருக்கேன்.''

பிள்ளை என்று சொன்னல் அது அண்ணியைத்தான் குறிக்கும்.
''என்ன உடம்புக்கு?''

''இரண்டொரு மாசமாச்சு. என்ன சாப்பிட்டாலும் வாந்தியாயிடுது. ஆபரேஷன் தேவையென்று சந்தேகப்படருங்க.''

வராந்தாவில் புதிதாக போடப்பட்டிருந்த நாற்காலிகளில் ஒன்றை எடுத்துப் போட்டான்.

புஷ்கோட் சட்டையின் பித்தானை கழற்றிவிட்டு நெஞ்சை ஊதிவிட்டுக் கொண்டு பரமேஸ்வர அண்ணன் தலைகுனிந்து ஏதும் பேசாமல் இருந்தான்.

''காப்பி சாப்பிட்டாச்சா?''

''நான் சாப்பிட்டுட்டுத்தான் வர்றேன்.''

''உனக்கு இங்கே மெஸ் வசதியெல்லாம் இருக்கா?''

''ஒரு பையன் நேரத்துக்கு வருவான். ஹோட்டலிலிருந்து எடுத்து வருவான்.''

''உடல் நலக்கேடு பற்றி அவசியமில்லாத கேள்விகளை கேட்டான். காய்ச்சல் உண்டா? வயிற்று வலி உண்டா?'' பரமேஸ்வர அண்ணனுக்கு இடையிடையே பேசாமல் இருப்பது அவசியமாயிருந்தது. ஆஸ்பத்திரியில் சௌகரியம் எப்படி இருக்கும்? ஜெனரல் வார்டுதான்.

ஸ்பெஷல் வார்டு என்றுல் இரவு கூடவே இருக்க நேரிடும். ஸ்பெஷல் வார்டுக்கு வாடகை மற்றும் பல செலவுகள் உண்டு என்று கூறியபோது தைரியப்படுத்தினுன்.

''அதனுலே பரவாயில்லை. எப்படியோ சௌகரியப்படுத்திடுவாங்க.''

தனியாகச் சாப்பிட இப்போது விருப்பம் இல்லை. மனச் சங்கடமாயிருந்தது.

எப்போது பரமேஸ்வர அண்ணன் சொல்லத் தொடங்கு வார்? ''அறுபது மைல் தூரத்திலிருந்தும்கூட நீ ஒரு தடவைகூட வீட்டுக்கு வராதது ஏன்?''

சாப்பிடச் சொல்லி வற்புறுத்தி தூக்குப் பாத்திரத்தின் அடுக்கு களை தனித் தனியாகக் எடுத்து வைத்து கைகழுவி கூடத்திற்கு வந்தபோது அன்றைய செய்தித்தாளின் முதல் பக்கத்தை பார்த் துக்கொண்டிருந்தார் அண்ணன்.

''அப்பாகிட்டயிருந்து கடிதம் வந்துக்கிட்டு இருக்கில்லையா?''

''நேத்து நான் எழுதியிருக்கேன். பணம் அனுப்பினேன்.''

மணியார்டர் கூப்பனில் எப்போதும் எழுதும் ஒரு வாசகம் உண்டு ''லெட்டர் ஃபாலோஸ்.''

—கடிதம் பின்னாலே வந்துகொண்டிருக்கிறது.

எழுதுவது வழக்கமில்லை. உண்டிக்காரனுக்கு முறைப்படி. கொடுக்கும் வழிமுறைப்படி பணம். சம்பாதிக்கத் தொடங்கியது முதல் மணியார்டர் அனுப்பி வருகிறான்.

''நீ ஞாயிற்றுகிழமை வருவதாக அம்மா சொன்னாங்களே? நான் வந்திருந்தேன். மூணு நாலு ஞாயிற்றுகிழமை காத்திருந் தேன்.

''வரத்தான் உத்தேசித்திருந்தேன். அப்போதுதான் புரோப் ரைட்டர் படுத்த படுக்கையாகிவிட்டார். பெரும் சிக்கல். ரொம்ப பொறுப்பான நிலை ஞாயிற்றுகிழமைகூட.''

சம்பந்தா சம்பந்தமில்லாமல் ஏதெல்லாமோ சொல்லியிருப்பது போன்ற உணர்வு உண்டானபோது, தன் தடுமாற்றத்தை மறைப்பதற்காக வேண்டி ஒரு சிகரெட்பற்ற வைத்தான். புகை விட்டு முடிந்தபோதுதான் சட்டென நினைவுக்கு வந்தது. பரமேஸ்வர அண்ணன் முன்பாக முன்பு ஒருக்காலும் தைரியமாகப் புகை பிடித்ததில்லை. இப்போது முன்பாக அமர்ந்து சிகரெட் புகைந்துகொண்டேயிருந்தது.

சிகரெட் பாக்கெட்டை மரியாதைக்காக அப்பால் அகற்றினான்.

பரமேஸ்வர அண்ணன் அதை கவனித்ததாகத் தோன்றவில்லை.

''கஷ்ட நேரம்'னுதான் சொல்லணும். அம்மாவுக்கு உடல் நலம் இல்லை. எப்போதும் படுத்த படுக்கைதான்.''

''நல்ல டாக்டரிடம் காட்டப்படாதா?''

''மூஸிடம் காட்டினேன். அவர் லாசரை இரண்டு மூன்று வை அழைத்து வந்து பார்த்தார்.''

பரமேஸ்வர அண்ணன் மூக்கு கண்ணுடியை எடுத்து துடைத்தார். பாக்கெட்டிலிருந்து தாழ்ந்த தர சிகரெட் எடுத்து இரண்டு துண்டு செய்து ஒரு பகுதியைப் பற்ற வைத்து புகைவிட்டபடி முற்றத்தை பார்த்துகொண்டிருப்பதைக் கண்டபோது பரிதாபமாகத் தோன்றியது.

கடந்த சில ஆண்டுகளாக அண்ணன் திடீரென வயோதிகராக மாறிவிட்டிருக்கிறுர். காதுக்கு மேலே நரைத்துவிட்டது கையில் மயிர் இல்லாத விரல் பிளவுகளில் சிறங்கு கட்டிகளைக் காண்பதற்கு என்னவோ போலிருந்தது.

நேரத்தைப்பற்றிய உணர்வு வந்தபோது கேட்டான்:

''அண்ணி படுத்துகிடக்கிற வார்டு எது?''

''பதினுறு. மேலே இடது ஓரம்.''

வாசலில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்கிறதோ என்று பயந்தான். எந்த நிமிஷமும் இனி வந்து சேரலாம். இரண்டு மணிக்குத்தான் பைத்தியக்கார ஆஸ்பத்திரியின் ஆலோசனை சபையின் கூட்டம். அது முடிந்து திரும்பும்போது இங்கே வந்து செல்வதாக சொல்லிச் சென்றுள்ளாள்.

''அண்ணன் நேத்து ராத்திரி எங்கே தங்கியது?''

''ஆஸ்பத்திரிக்குப் பக்கத்தில் ஒரு ஹோட்டலில் அறை எடுத்துத் தங்கியிருந்தேன். ராத்திரி உன்னுடை இடத்தைத் தேடி கண்டுபிடிக்க முடியாமச் சிரமப்பட்ட பிறகுதான் வேறு வழியில்லாமல் ஹோட்டல் அறையிலே தங்க நேர்ந்தது.''

அண்ணன் வெளியே போகவில்லை என்றுல் ஒரு நல்ல சந்தர்ப்பம் வீணுகிப் போயிடுமே என்று பயந்தான்.

உள்ளே போய் சட்டை வேட்டிகளை மாட்டிக்கொண்டு அண்ணனின் பக்கத்தில் வந்து சொன்னுன்.

''நான் அவசரமாக கொஞ்சம் வெளியே போயிட்டுவர வேண்டியிருக்கு.''

அண்ணன் எழுந்தார்.

''நான் போயிட்டு வந்துடறேன்.''

அதுவரை அண்ணன் இங்கே இருக்கணும். சிரமத்துக்கு மன்னிக்கணும்.

அதற்கான பதில் எதிர்பார்த்தபடியே இருந்தது.

''இல்லை நானும் போயிட்டு வர்றேன்.''

''நான் வேலை முடிந்தவுடனேயே ஆஸ்பத்திரிக்கு வர்றேன்.'' கதவை பூட்டி வெளியேறினன். வழி பிரியும் இடத்தில் கூறினன். ''நேரே போனல் போதும் ஒன்பதாம் நம்பர் பஸ் கிடைக்கும். ஆஸ்பத்திரிக்கு முன்பாகவே இறங்கிக் கொள்ளலாம்.''

நடைபாதையிலிருந்து திருடனைப் போலப் பதுங்கி திரும்பி நடந்தான்.

பூட்டிய கதவை மீண்டும் திறந்தபோது வாசற்படிக்கும் அப்பால் கார் பிரேக் போடும் சத்தம் கேட்டு . . .

[7]

ஆஸ்பத்திரியின் வெறுப்பூட்டும் மருந்து முதலியவற்றின் துர்வாடை நோயாளிகளின் இருப்பிட மாடிகளை நினைவூட்டின.

இரும்புக் கட்டிலில் இடுப்புவரை சிவப்பு போர்வையால் போர்த்தப்பட்டுக் கிடக்கும் அண்ணியின் முகம் விளரிப்போய் இருந்தது. தளர்ந்த கண்கள், அடுத்து அருகில் சென்றபோது கலங்கத் தொடங்கியது.

அண்ணி ஆற்றுமையைப் புலப்படுத்துவாள் என்று கருதினன். ஆற்றுமையுள்ளவளாக இருக்கவில்லை. கருத்துப்போன உதடு களிலும் தளர்ந்த கண்களிலும் வேதனை நிறைந்திருந்தது.

''நல்ல ஆள்தான், நேத்திலிருந்தே உன்னை நான் எதிர் பார்த்திருந்தேன்.''

''அண்ணன் வந்தபோது எனக்குத் தெரிந்தது.'' கட்டிலின் தலைப் பகுதியின் மேலே தொங்க விடப்பட்டிருந்த சார்ட்டரியில் உள்ள காகிதங்களை அக்கரை காட்டும் பாவனையில் உற்றுப் பார்த்தான்.'' உங்களை ஸ்பெஷல் வார்டுக்கு மாற்றிடறேன். அண்ணன் கிட்டேயும் சொல்லி இருக்கிறேன். ஒய்வு கிடைக்கும் போதெல்லாம் நான் வந்து பார்க்கிறேன். ஒண்ணும் பயப்பட வேண்டாம். இங்கே நமக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து கொள்ளலாம்.''

''விவரமெல்லாம் ஓரளவு தெரியும். பாக்கியம் நிறைந்த நேரமல்லவா?''

''ஓ, என்ன பாக்கியம்?'' வெறுமனே சிரித்தான்.

''எனக்கு உன்னேட காசும் பணமும் எதுவும் வேண்டாம். விவரத்துக்கு எப்பவாவது எழுதக் கூடாதா?''

பதிலேதும் பேசவில்லை.

வெண்மையான களாக் காயும் நாவல் பழமும் சேர்த்து அண்ணிக்குக் கொடுப்பதற்காக குன்றின் சரிவில் அலைந்துதிரிந்து நடந்த காலம் எவ்வளவோ தூரத்தில் இருப்பதுபோல் தோன்றியது.

ஒன்றும் பேசாமல் நின்றபோது சொன்னாள்,

''இங்கே உட்கார்.''

கட்டிலின் காலின்மீது அமர்ந்தான்.

''உடம்பு சரியாகட்டும். சேதுவுக்குப் பக்கத்தில் ஒரு நாளாவது இந்த உயிர் இருந்துட்டுத்தான் போகும். நிறைய உங்கிட்டே பேசவேண்டிருக்கு.''

''உடம்பு சீக்கிரமே குணமாயிடும். கொஞ்ச நாள் இங்கே சுகமாகத் தங்கியிருந்துட்டுத்தான் போகணும்.''

''என்ன சுகம்! பிள்ளைகளுடைய விஷயத்தை நினைக்கும்போது கவலையாயிருக்கு.''

வார்டில் பிள்ளைகள் சுற்றிலும் நோயாளிகளைக் காண வந்தவர்களையும் சுற்றிக் கூடி நின்றார்கள். நாற்புறம் பேசி கொண்டிருக்கும் சத்தம்.

''ஒண்ணு ஒன்றரை மாசமாகி விட்டது. நான் வீட்டுக்கு வந்து. அம்மாவுக்கு சுகக்கேடு உண்டானது முதலே.''

வீட்டுக் காரியங்களையும் நாட்டு விஷயங்களையும் பேசத் தொடங்கியது முதல் வார்டில் நிலவிய ஆரவாரம் அடங்கி விட்டது. அண்ணி தோட்டக் கிணற்றில் தண்ணீர் குடிக்கச் சென்றவன் வீழ்ந்துவிட்ட கதையைக் கூறி சிரித்தாள். சிரித்த போது அவள் கண்கள் மூடிக் கொண்டன.

''மாதவ மாமா இப்போது வீட்டிலேதான் இருக்கார். உனக்கு அது தெரியாதா?''

''இல்லை. தெரியாது.''

''யூசப்பின் கடையை மாதவ மாமா வாங்கினார். பலசரக்கு வியாபாரம் செய்தார். நல்ல வியாபாரம்'னு சொன்னார்.''

''கேள்விப் பட்டேன்.''

''வடக்கோல் காலியாகி விட்டது தெரியுமில்லையா?''

தெரியாது. வியாபாரம் தொடங்கியதும் தெரியாது. என்றாலும் சொன்னான்:

''நேத்து யாரோ வந்திருந்தவுங்க சொன்னுங்க.'' ''அந்த சின்னப் பெண்ணின் திருமணம் நடந்து விட்டது. சேலத்திலோ தஞ்சாவூரிலோ எங்கேயோ ஒரு ஓர்க்ஷாப்பிலே வேலையாம்.''

சுமத்திராவா? சுமத்திராவைப்பற்றி என்ன சொல்வது என்று தெரியாது தவித்தான்.

சுமத்திராவும் தேவுவும் பாகம் பிரித்துக் கொண்டார்கள். குன்றின் புறத்தில் ஒரு வீடு கட்டி சுமத்திரா தனியாக வாழ்ந்து வருகிறுள். தேவு வடக்கு வீட்டிலே வாழ்கிறுள். மாதவ மாமா எப்போதாவது வடக்கு வீட்டுக்குப் போவார். பிள்ளைகளைப் பார்த்து வீட்டுச் செலவுக்கு ஏதாவது கொடுப்பார்.

அண்ணி பேசத் தொடங்கியபோது குன்றின் அடிவாரத்தில் ஒற்றை வீடும் சிவராத்திரி தினம் நடந்த வழக்கையும் மனக்கண்முன் கண்டான்.

ஊர்க்காரர்கள் வரிபோட்டு சிவராத்திரி நடத்திய தினத்தன்று மாதவ மாமா டீக்கடை போட்டிருந்தார். நல்ல லாபம் கொடுக்கும் வியாபாரமாக இருந்தது. டீக்கடை உதவிக்கு உண்ணி நம்பூதிரிதான் அழைக்கப்பட்டிருந்தான். அரிசி மாவு நன்ருக அரைக்கவில்லை என்று ஆட்களின் மத்தியில் வைத்து மாதவ மாமா உண்ணி நம்பூதிரியை அடித்து விட்டார். அதிகாலையில் காண வந்த தேவுவும் பிள்ளைகளும் கடையில் இருந்தார்கள். தேவு மாதவ மாமாவைக் கண்டித்தபோது அவளுக்கும் அடி விழுந்தது. அன்று இரவு வடக்கு வீட்டிலிருந்து தேம்பும் குரல் கேட்டது. மாதவ மாமா தூங்கி விட்டார்.

அம்மா வற்புறுத்திய போதிலும் மாதவ மாமா சில நாட்கள் வடக்கு வீட்டிற்குப் போகவில்லை. கண்டன் குளங்கர மேனன் மத்தியஸ்தம் செய்த பிறகு பகல்'லே எப்போதாவது போவார், பிள்ளைகளைப் பார்ப்பார்.

''சுமத்திராவுக்கு நலமில்லையா? பேய் பிடிச்சிருக்கா?''

மயானத்திற்கடுத்து வீடு கட்டியதனுல்தான் இந்நிலை என்று ஆட்கள் சொல்லுகிறுர்கள். ஒரு சமயம் ஆற்றில் குளித்து விட்டு தலை துவட்டாமல் வயல் வரப்புகள் வழியே ஆர்பாட்ட ஆரவாரத்தோடு ஓடினுள். அதுதான் ஆரம்பம். தெற்கு வயலின் தோப்புக்கருகில் ஆட்கள் மடக்கி பிடித்தபோது அவள் உணர்வு அற்றவளாக இருந்தாள்.

''யாரு அவளைப் பிடிச்சிருக்கிறது?''

''யாராக இருக்கும்?''

பையில் பால் பாத்திரமும் ரொட்டியும் ஆரஞ்சுப் பழமுமாக பரமேஸ்வர அண்ணன் வந்தபோது அண்ணி கேட்டுக்கொண்டாள்.

''முடியாதபோது கூட அங்கே எங்கேயாவது நீங்க தங்கக் கூடாதா?''

பார்வையாளர்கள் செல்ல வேண்டும். சாப்பாட்டைக் குறிக்கும் மணியடித்தபோது அண்ணனிடம் கூறினன்:

''நான் போகட்டுமா?''

''நானும் வர்றேன்.''

நாளைக்கு வந்து பார்ப்பதாக அண்ணியிடம் பயணம் கூறியபடி வெளியேறினர்கள்.

''அந்த அறையை விட்டுடுங்க. அங்கே என்னோடு தங்கிக்கலாம்.''

இரண்டரை ரூபா வாடகை. பக்கத்திலேயே இருக்கு. இங்கேயே இருந்துக்கறேன்.''

ஆஸ்பத்திரியின் கேட்டுக்கு மிக அருகாமையில் உள்ள சிறிய ஹோட்டலின் முன்பு பயணம் சொல்லிக்கொள்வதற்காக நின்ற போது அண்ணன் சொன்னர்:

''வா இங்கே போயிட்டு பிறகு போகலாம். சோர்வாக இருக்கும் உனக்கு.''

''சோர்வு ஒண்ணுமில்லே.''

அறையில் சட்டையை கழட்டி மாட்டி வைத்துவிட்டு அழுக்கடைந்த பழைய வேட்டியை எடுத்து மாற்றி கட்டிக் கொண்டு அண்ணன் கட்டிலில் இருந்தபோது அப்பாவைவிட வயோதிகனுகத் தோற்றமளித்தார்.

''எத்தனை நாள் லீவு எடுத்திருக்கீங்க?''

''இரண்டு வாரம். அதுக்கு மேலே லீவு எடுக்கும்படியா இருந்தால் 'லாஸ் ஆஃப் பே' எடுக்கணும்.''

அண்ணன் ஏதோ சொல்லத் தயாராகிக்கொண்டு இருக்கிறர் எனத் தோன்றியது. தயக்கத்தை வெளியே காட்டாதிருக்க முயற்சி செய்துகொண்டு மற்றொரு சிகரெட் எடுத்துப் பற்ற வைத்தார்.

''உனக்கு எழுதணும்'னு நெனச்சேன். எழுதியும் பயனில்லே. நீ பதிலே எழுதறது இல்லே.''

தனக்குத்தானே சலிப்பாகக் கூறிக்கொள்வதுபோல் தோன்றியது.

ஏதோ சொல்ல ஆரம்பித்தார். சொல்ல எந்த நியாயமும் இல்லை. அதனால் ஒரு மடக்குத் தண்ணீரை குடித்துவிட்டு அமைதியாக இருந்தார்.

''புஷ்போத்து விஷயத்தைப் பற்றி நீ என்ன முடிவு செஞ்சிருக்கே?''

''உம், பின்னாலே பார்த்துக்கலாம்.''

''யாருக்கும் அதிலே சங்கடமில்லை. முன்பு பலரும் பலதும் பேசினாங்க. அதனாலெல்லாம் ஏதாவது நடந்ததோ?''

''ஆகட்டும், பின்னாலே பார்க்கலாம்.''

''எப்போ?''

அதற்கு நேரிடையாகப் பதில் கூறாமல் வேலைப் பளுவைப் பற்றிப் பேசினான். சொந்தமாக பிஸினஸ் தொடங்க வேண்டும். அதற்கு மூலதனம் வேண்டும். மனதில் பல திட்டங்கள் உருவாக்கிச் சுற்றி சுழன்று கொண்டிருக்கின்றன.

எல்லாவற்றையும் கேட்டும் கூட அண்ணனின் முகத்தில் எவ்வித மாற்றமும் ஏற்படாது சலனமற்ற பாவத்தில் காட்சி யளித்தது.

''நான் சீக்கரமே வர்றேன்.''

''உம்.''

கொஞ்சம்கூட நம்பிக்கை இல்லாத நிலையில் அண்ணன் சொன்னார்.

எழுந்தான். பாக்கெட்டில் முன்னதாகத் திட்டமிட்டு வைத் திருந்த நூறு ரூபாய் நோட்டை நீட்டிக்கொண்டு சொன்னான்.

''இதை வச்சிக்கிங்க, நாளைக்கே ஸ்பெஷல் வார்டுக்கு மாற்று வதுதான் நல்லது.''

''வேண்டாம், தேவைக்குள்ள பணம் என்கிட்ட இருக்கு.''

எப்படி வற்புறுத்திக் கொடுப்பது என்பதை அறியாதவனாகத் திகைத்து நின்றான்.

''வேண்டாம். எனக்கு கஷ்டம் ஏதுமில்லை.''

நான்காக மடிக்கப்பட்ட நோட்டை திரும்ப பாக்கெட்டில் வைத்துக்கொண்டு அறையைவிட்டு வெளியேறினான்.

இரவின் ஆரம்பத்தில் கலங்கிய நிலையில் காட்சியளிக்கும் நகரத்தினிடையே தனியாக நடக்கும்போது, மயானத்திற்கு அருகில் குடிசையில் தனியாக வாழ்ந்து வரும் சுமித்திராவை

நினைத்துக்கொண்டான். நகரத்தின் நெருக்கடி மிகுந்த ஜனத் திரள் மறைந்து போய்விட்டது. நாவல் மரத்தோப்புகளும் குன்றின் அடிவாரமும் தான் அவன்முன் காட்சி அளித்தன. முழுமையாக நஷ்டம் ஆகிவிட்ட ஒரு உலகம். கிழிந்துபோன அரைக்கால் டிரௌசரைத் தன் அரைஞாண் கயிற்றோடு இறுகச் செருகிக்கொண்டு அங்கு ஓடித் திரியும் சிறுவனை மனத்திரையில் காணமுடிந்தது. உடையாத நாவல் பழத்தைக் காண குன்றின் அடிவாரம் முழுவதும் அவன் தேடி நடந்துள்ளான். கடைசியில் கண்டெடுத்து அண்ணிக்குக் கொண்டுவந்து காட்டியபோது வெளுப்பான அழகிய பற்களுக்கிடையே வைலட் நிறம் கலந்து நிற்பதைக் கண்டபோது பூரண மனத் திருப்தியோடு அவன் திரும்பிச் செல்வான் . . .

தளர்ந்தபடி காலடி எடுத்து வைத்து நடந்தபோது மீண்டும் நகரத்தின் ஆயிரம் சத்தங்கள் சுற்றிலும் சுழன்று ஒலிக்கத் தொடங்கின.

[8]

ஆறு வரண்டு போய்விட்டது.

வரண்ட மணல் திட்டுகளிடையே பாய்ந்தோடிய துண்டுகளை பின் தள்ளிக்கொண்டு நடந்து சென்று பாதையை அடைந்தான்.

வெட்டிய கருங்கற்களைக் கொண்டு புதிதாக படித்துறை அமைக்கப்பட்டுள்ளது. அதற்கு அப்பால் ஓலை வேய்ந்து உருவாக்கப் பட்ட கொட்டகையை அடுத்து ஓடுபோட்ட சிறிய இடம் தியானக் கூட்டமாக மாறியிருந்தது.

பாதை வழியே நடந்துபோகும் பதினாறு வயது இளைஞர்கள் ஆர்வத்தோடு அவனைப் பார்த்தார்கள்.

அடுத்த ஆண்டில்தான் கிராமத்துக்கு அருகிலேயே உயர்நிலைப் பள்ளி வந்தது. ஐந்தாம் வகுப்பு முடித்து, படிப்பை நிறுத்தி வியாபாரத்திலும் விவசாயத்திலும் ஈடுபடுவதுதான் பழைய வழக்க மாக இருந்தது. இப்போது எல்லோரும் தங்கள் பிள்ளைகளை உயர் நிலைப் பள்ளிக்கு அனுப்ப ஆரம்பித்து விட்டார்கள். பீடிப்புகைக் குப் பின்னால் பென்சிலைக் கொண்டு மீசை வரைந்து காலரைத் தூக்கிவிட்டு நடந்துபோகும் அவர்களைக் கண்டபோது கேலியாகத் தோன்றியது, வேதனையும் ஏற்பட்டது. கிராமத்தில் குறுக்கு வழியில் ராஜ குமாரன்கள் சர்டிபிகேட்களோடு தெருவில் அலையும் காட்சியை மனத் திரையில் கண்டான்.

அது அவ்வளவு தொலைவில் இருப்பதுபோல் தோன்றியது. நகரம் மந்திரசக்திபோல் திறந்துகொண்டிருக்கும் அதன் வாசல்களை மூடிக்கொண்டு மாபெரும் ரகசியம்போல் கண்முன்னால் கிடந்தது.

போர்டுகள் தொங்கும் முகப்புகளுக்கும் வாசற்படிகளுக்கும் அப்பால் வெப்பத்தால் எழுந்த வியர்வையைத் துடைத்துக் கொண்டு பதைபதைப்போடு நிற்பதும் ஏறிப்போவதும் இறங்கி வருவதுமாக இருந்த மனிதர்களை அருசையுடனும் பகையுணர்வோடும் பார்த்தான்.

பாதை வழியே சாவதானமாக நடந்தபோது தொடக்கத்தில் கண்டது அந்நேரத்தில் புதிதாக ஓடு வேய்ந்த வீட்டினுடைய முகப்பில் நிறுத்தியிருந்த ஆபாசமான பதுமையைத்தான். அங்கு முன்பு கூட்டமாக இருந்தார்கள்? மீன்கார மாப்பிளாவினுடைய குடிசை அதற்கு முன்பு சாலையோரத்தில் பகல் முழுவதும் அனல் பரவியிருக்கும் இருளடைந்த இடத்தைப்பற்றி நினைத்துக் கொண்டான். அவ்வீட்டுக்காரன் நொடித்துப்போய் விட்டான். அதன் கனவில் பாரத்தை ஏற்றிப்போகும் வண்டிகளின் நுகத்தடிகளிலிருந்து தற்காலிகமாகத் தப்பிப் பிழைத்த காளைமாடுகள் குளிர்ந்த இசை எழுப்பும் குடமணியோசையோடு அங்கே இளைப்பாறிக் கொண்டிருக்கின்றன.

கண்டன் குளங்கரைக்காரருடைய வீட்டுப் படியிலிருந் துநீண்ட பெரும் வரப்பு பாதையிலிருந்தது. இப்போது இருபுறமும் செதுக்கி எடுத்து கனம் குறைக்கப்பட்ட போது அங்குமிங்குமாக நெருங்கிப்போய் நிலத்தோடு நிலமாக மாறிவிட்டது. ஒற்றைக் காளை வில் வண்டி போகவேண்டி முன்பு நிர்மாணிக்கப்பட்டிருந்தது. அப்பெரிய வரப்புப் பாதை.

பிளாக் டெவலெப்மெண்ட்காரர்கள் பாதையோரத்தில் நட்டு வைத்த போர்டுகள் காணப்பட்டன. ஆனால் அவைகளை படிப்பதில்லை. கொய்யப்பட்ட வயல் வரப்புகள் புதிய மழைக்காக காத்துக் கிடந்தன. வடக்கு வீட்டிலே படி திரும்பியபோது நெஞ்சு துடிப்பின் வேகம் அதிகரிக்கச் செய்தது. இல்லை யாரும் வெளியே இல்லை. கமுகுத் தோட்டத்தின் பிளவினூடே யாராவது தென்படுகிறார்களா?

படிவரப்பைக் கடந்தபோது முத்துக்கல்லுகள் உடைந்து சிதறிக் கிடந்தன. பச்சைப்பாசி படிந்து கருத்துப் போயிருந்த வலது பக்க மதிலின் மூலை தகர்ந்துபோய் சிதைந்த நிலையில் வயல் பக்கமாக ஓலை சாய்த்துக் கிடக்கிறது. கரையான் அரித்துத் தின்ற பழைய மரக் கால்கள் கைபட்டவுடன் ஆடின.

ஓட்டை மேற்கூரைக்கு கீழே கூனிக் குறுகிக் கிடக்கும் வீட்டை கண்டபோது தலை நரைத்து கை கால்கள் தளர்ந்து ஒடுங்கிக் கிடக்கும் வயது முதிர்ந்த கிழவியின் நினைவே அவனுக்கு வந்தது. உயரமான முற்றத்தில் கிடந்த தட்டிகளை வேகமாகத் தள்ளி உள்ளே சென்றான்.

உள் முற்றத்தை அடைந்தபோது தலைமுட்டாமலிருக்க வேண்டி குனிந்து செல்ல வேண்டியதாகி விட்டது.

அப்போது வாசற்படியை வந்தடைந்து உள்ளே பார்த்துக் கொண்டிருந்த இளம் பெண்ணைக் கண்டான்.

— பத்மூ!

மூக்கொழுகிக்கொண்டு பிடிவாதம் பிடித்து நடந்த நேற்றைய பத்மூ கமுகுத் தோட்டத்தினிடையே அவளை உட்கார வைத்து விட்டு வடக்கு வீட்டிற்கு ஓடும்போது பின்னாலே சின்னம்மாவின் கூக்குரல் கேட்கும் . . .

''என்னடி? சின்னம்மா எங்கேடி?''

பரபரப்பினால் தடுமாறிய சத்தத்தோடு அவள் கூவுவாள்.

''அம்மா சேதண்ணா.''

மதிலுக்கு அருகில் கூட்டிப் பெருக்கிப் போட்டபடி இருக்கும் சாணக் குவியலுக்குள் கிண்டி கிளரி காக்காவும் கோழியும் பரப்பிய தடிப்பான புழுக்களை கொத்தித் தின்னும். உத்திரத்துடன் வைத்து நின்றபோது நினைத்துக்கொண்டான். நிலத்திலிருந்து உத்திரத்தின் முகப்பை சிறுவிரலில் தொட முயற்சி செய்துகொண்டு நிற்பான். உயரமாக ஆகிவிட்டானா என்பதை அறிய வாரத்திற்கு ஒருமுறை பயிற்சியும் செய்து வந்தான்.

துப்பியபின் விரைவாக வெளியே ஒழுகிக் கொண்டிருக்கும் எச்சிலைத் துடைத்தவாறு சின்னம்மா நடுக் கூடத்துக்கு வந்தாள்.

''பாரிப்போ எங்கு வந்திருக்கிறது? மகனே, எங்கள்ளே சிலரை உனக்குத் தெரியுமா? எவ்வளவு காலமாச்சு—''

கதவுக்கருகில் சாய்ந்து நின்றுகொண்டு அவள் அழுதபோது துரிதநடையில் கூடத்திற்கு நடந்தான். தலைச்சுமைக்காரனின் தலையிலிருந்து பெட்டிகளை இறக்கினான்.

வயது அவளிடம் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தியதாகத் தோன்றவில்லை. சுண்டு விரலைச் சுற்றிலும் இருந்த சிவப்பு நிற அடையாளமும் வளர்ந்தது. அதிகமாக நரைத்துள்ளது. பெரிதும் மெலிந்துள்ளாள். வளைந்த காலடிக்கு மேலாகவே சிவப்பு நிற அடையாளங்கள்.

''ஒண்ணு ரெண்டில்லே, எத்தனே வருஷங்களாகிவிட்டது . . . வருவே வருவேன்னு எத்தனே நாளாகக் காத்திருக்கேன்.''

மீண்டும் அழுகையில் வார்த்தைகள் முங்கிப் போனபோது அவன் உள்ளே சென்ருன். வீடும் வராந்தாவும் முன்னறையும் உள் தளமும் எல்லாம் அவன் மனதில் கற்பனே செய்து வைத்திருந்த உருவகத்தைவிடச் சற்று சிறியதாகவே இருப்பதுபோன்று ஆரம்பத்தில் அவனுக்குத் தோன்றியது.

அழுகைக்கு இடையிடையே சின்னம்மா மீண்டும் சொல்லுவது கேட்டது. "சின்னம்மாவுக்கு இனியொன்னும் அதிக காலமில்லே."

உள்ளே வாயிற்படியில் அன்பு மரணமும் கலந்த சிரிப்போடு ஒதுங்கி நிற்கும் பதமூவோடு நேற்று பயணம் புறப்பட்டுத் திரும்பி வந்த வீட்டுச் சொந்தக்காரன் என்ற முறையில் அதிகாரம் செலுத்த முயற்சி செய்துகொண்டு சொன்ஞன்.

''அடியே அந்தப் பெட்டியை மாடியறை மேலே வைக்கச் சொல்.'' அவள் வாசற்படி கடந்து சென்றபோது, பழைய கிழிந்த ஆடையை நீக்கி நல்ல நிறமுள்ள ஆடை உடுத்தியிருப்பதைக் கவனித்தான். பாக்கெட்டிலிருந்து இரண்டு ரூபாயைத் தேடி எடுத்து நீட்டிக்கொண்டு சொன்ஞன்: ''இதை அவனுக்குக் கொடுத்தனுப்பு.''

அவன் வெளியே சென்றபோது, கீழே தரையில் அமர்ந்து தேம்பலுக்கிடையே புலம்பிக் கொண்டிருக்கும் அம்மாவிடம் தாழ்ந்த குரலில் சொல்லிக் கொண்டிருப்பது கேட்டது:

''ஸ்ஸ்ஸ் . . . அழுததும் புலம்பியதும் போதும். யாரோ வர்ருங்க. அடியே'' சின்னம்மா கேட்டுக்கொண்டாள். ''உட்கார ஒரு கோரைப் பாயை எடுத்துப் போடு.''

அழுகையை நிறுத்தி பழைய உணர்வை அடைந்தபோது மாடி அறைக்கு வந்தாள்.

மாடி அறைக்கு அப்பா வரும்போது போட்டுவைக்கும் சாய்வு நாற்காலியைக் காணவில்லே. இருக்கை படியின் மேல் சொட்டையாகக் கிடந்தது. ரிப்பேர் செய்ய வேண்டியதாகப் பொடிந்து காணப்பட்டது.

''சாய்வு நாற்காலியின் ஸ்க்ரு ஆணி உடைஞ்சு போச்சு. இழுத்தா விழுந்திரும்'' பத்மூ வெட்க உணர்வு பொங்கக் கூறிஞள்.

வெளியிலிருந்து வந்தவர் முற்றத்திற்கு வந்தார். நாராயணன் நாயர், சுப்பு நாயர், சங்குண்ணி உந்திக்கொண்டிருந்த தன்

பற்களை பிடுங்கி எறிந்துவிட்டதனுல் ஆளே திடீரென அடையாளம் தெரியாமல் போய்விட்டது.

''என்ன ஊர்க்காரரங்க வழக்குகளையெல்லாம் இப்போதும் தெரிந்துகிட்டுதான் இருக்கீங்களா?''

சிரித்துக்கொண்டே வார்த்தைகளில் மதிப்பை அடக்கியவனுகக் குசலம் விசாரித்தான்.

''நாராயண நாயரே எப்படி இருக்கீங்க?''

குறுக்குப் பாதையிலிருந்து பார்த்த யாரோ ஊகமாகக் கூறியிருந்தார்கள். அதைக் கேட்டு சந்தேகத்தைத் தீர்த்துக்கொள்வதற்காக வந்திருந்தார்.

''உட்காருங்க, அந்தப் பாயை எடுத்துப் போடு.''

''பாயொன்றும் வேண்டாம்.''

குண்டும் குழியுமாக கிடந்த கூடத்தில் அவர் அமர்ந்தார். பருக்கைக் கல்லின்மேல் காலை வைத்துத் தூணில் சாய்ந்து அவன் உட்கார்ந்திருந்தபோது சின்னம்மா நினைவூட்டினுள்.

''வேட்டி தூசிபடிந்து அழுக்காகிவிடும்.''

பத்மு கொண்டுவந்த கோரைப்பாயை வாங்கவில்லை.

''ஏன் ஒரு கடிதம் கூட எழுதாமல் திடீர்னு; அப்பா நேத்து இங்கேயிருந்தார். வர்ற விவரத்தைப் பெரியவர்கூட சொல்லலையே.''

''திடீர்னு தான் நேரம் கிடைச்சுது.''

''வண்டியிலா காரிலா?''

''அக்கரைக்கு கார்லே வந்தேன்.''

''நம்முடைய ஆத்துக்கு ஒரு பாலம் கட்டணும், நீங்கள்'ளாம் எந்தெந்த திக்கிலோ போயிட்டீங்க. எவ்வளவு பெரிய ஆட்களா பார்க்கிறோம். நீங்கள்'ளாம் சேர்ந்து முயற்சி செஞ்சாக் காரு வரும்.''

வெயிலைப் பற்றியும் கமுகுத் தோட்டங்களுக்கு நேரம் வந்து குலை தள்ளாமல் இருப்பதைப் பற்றியும் அவர் பேசியபோது அனுதாபத்தோடு கூறிய வார்த்தைகளை கேட்டுக்கொண்டிருப்பது போல் நடித்துக்கொண்டிருந்தான்.

''சங்குண்ணி சொன்னுர்.''

''அப்பா போகும் நேரம் வரை நான் கூடவே இருந்தேன்.''

நகரத்தின் வெப்பம், நகரத்தின் அரிசி விலே, மர வியாபாரத்தில் லாபம் — பேசுவதற்கு விஷயமேதும் இல்லாதபோது சின்னம்மாதான் தனியாக இருக்க வேண்டும் என்பதற்காக நினேவூட்டினுள்.

''சட்டை மாற்றணும், கைகால் கழுவணும் இல்லேயா? வழி நடந்து வந்திருக்கில்லேயா?''

அவர் போவதற்காக எழுந்தபோது விசாரித்தார்:

''கொஞ்ச நாள் இங்கே இருப்பே இல்லேயா,''

''ஒண்ணும் நிச்சயமாகவில்லே.''

''சீக்கிரமாக வந்தால் எல்லோரையும் பார்த்திட்டு வரலாமே.''

''பிறகு பார்த்துக்கலாம்.''

அவர் சென்றபோது வேஷ்டி போர்த்தியவனுக பாமன் படியேறி வருவதைக் கண்டான். யாரென்று தெரியாமல் பார்த்துக் கொண்டிருந்தபோது பத்மூ சொன்னுள்.

''சின்னுன் மேனன்!''

சின்னம்மா மிக விரைவாக யாரோடு என்றில்லாமல் சொன்னுள்: "அப்படின்னு நாடு முழுவதுக்கும் தெரியணுமா? வந்து சேர்ந்தவுடனேயே ஆளுகளே காணணுமாக்கும்.''

கோபத்தோடு சின்னம்மாவுக்கு அபிமானமும் இருப்பதுபோல் தோன்றியது.

''கோரைப் பாயை எடுத்துப் போடுடீ.''

கண்டன் குளங்கரைமேனனே அனுசரிக்க வேண்டும். அவன் கூடத்தின் ஓரத்தில் மூச்சு இரைக்க நின்முன். படியேறி அதிக பிரயாசையோடு இருக்கைக் கல்லேத் தாண்டி முற்றத்தை அடைந்தபோது மூச்சு வாங்கிக்கொண்டு மேனன் கேட்டார்:

''என்னடா, தெரியுதா?''

சிரித்துக்கொண்டு தன் அபிமானத்தை வெளிக்காட்ட முயன்முன். மேல்துண்டை விசிறிக்கொண்டு வியர்வையைத் துடைத்தபடி மேனன் சொன்னுர்.

"ஏக்கத்தின் சாயல் தென்பட்டது. டாக்டர் கோபால மேனன் பூங்குளத்துக்கு வந்திருந்தபோது போய்ப் பார்த்தார். உட்கொள்ளும் மருந்தெல்லாம், பார்த்தார். நோவு எடுத்தால் இப்போது தூங்கறதில்லே.''

சின்னம்மாவிடம் சொல்லி கொஞ்சம் தண்ணீர் வாங்கிக் குடித்து பதைபதைப்பு மாறிய பின் மேனன் கேட்டார்.

“நீ இப்போ எந்த லைன்லே இருக்கே?”

“சில்லறை பிசினஸ்.”

“மரம் சம்பந்தமாகவா?”

“ஆமா.”

“சொந்தமாகவா?”

சாவதானமாக அதற்கும் உம் கொட்டினுன்.

“அப்பாவிடம் கொஞ்ச நாளா உனக்குக் கடிதம் எழுதச் சொல்லி வந்தேன். வந்திருப்பதாகக் கேள்விப்பட்டுத்தான் நான் இங்கே வந்தது!”

“என் சின்ன மகனை நீ பார்க்கலே. படிக்கவும் இல்லே. ஒன்பதாம் வகுப்பிலும் தோல்வியடைஞ்சிட்டான். அவனுக்குப் படிப்பு வாசனை இல்லே. மூணு நாலு வருஷமாக சும்மாவே இருக்கான். நீ எங்காவது அவனுக்கு ஒரு வேலை வாங்கிக் கொடுக்கணும்.”

“இந்த காலத்திலே வேலை விஷயம்—.”

முடிக்க இடந்தராமல் அவனை மேனன் சமாதானப் படுத்தலானுர்.

“இன்றைக்கே அது வேணும்ணு இல்லே. நீ இப்போ—” ஒரு நிமிஷம் அவர் நிறுத்தினுர். “அதையெல்லாம் செய்து முடிக்கக் கூடிய யாரிடத்திலும் சென்று சொல்ல எனக்கு முடியலே.”

“யோசிக்கிறேன்.”

“வீட்டிலே இல்லே, நான் மட்டும்தான் இருக்கேன்.”

“கேள்விப்பட்டேன்.”

“சாயந்தரம் அக்கரைக்குக் போகணும். அதுதான் இப்பவே வந்தேன். அவனை எப்ப அனுப்பிவைக்கட்டும்?”

“தேடிப் பார்க்கிறேன். பிறகு எழுதறேன்.”

மேனன் வெளியேறியபோது உள்ளே இருந்து ஒட்டுக் கிளாஸில் தேநீர் கொண்டுவந்து சின்னம்மா சொன்னுள்.

மூணு நேரமும் குடி; அதனுலேதான் தம்பிகளோடே தகராறு.

தேநீரை உதட்டருகில் கொண்டு சென்றபோது அதில் பாலின் மணம் வீசியது. கிளாஸை தரையில் வைத்துவிட்டு வெறுமனே இருந்தபோது சின்னம்மா ஏதும் புரியாதவளாகக் கேட்டாள்:

''சர்க்கரை போதவில்லையா? இன்னும் வேறு யாராவது வருவாங்க இதைச் சீக்கிரமா குடிச்சிடு.''

முக்கால் பாகம் குடித்துவிட்டு கிளாஸைத் திரும்பக் கொடுத்து விட்டு ஒரு சிகரெட் பற்றவைத்து வாயில்படி ஓரமாக இருந்தான்.

''காசு பணம் வேண்டாம் என்றாலும்—மீண்டும் சின்னம்மாவின் குரல் இடறியது வீடு இருக்கு. நாங்க சில பேர் இருக்கோம்ங்கிற நெனப்பு இருக்கணும். எத்தனை வருஷமாச்சுன்னு நினைவிருக்கா? ஒன்று இரண்டல்லப்பா, ஒன்பது! இதெல்லாம் நிஜம்.''

—ஒன்பது வருஷங்கள்!

ஒன்பது வருஷங்களுக்குள்ளாக நடைபெற்ற சம்பவங்களை இப்போது நினைத்துப் பார்த்துச் சொல்லத் தொடங்குவாள் என்ற பயத்துடன் எழுந்தான்.

முன்புற மாடி அறை. சாளரத்தின் இடைவெளி வழியாக நல்ல வெளிச்சம் பாயும் அறையை எட்டிப் பார்த்தபோது அங்கே பழைய பகல்களும் இரவுகளும் மயங்கிக் கிடப்பதுபோல் இருந்தது. சுவற்றில் எழுதப்பட்டிருந்த வரிகளும் முகவரிகளும் இன்னும் இருக்கின்றனவோ? விளக்கு எரிந்தால்தான் அவைகளைக் காண முடியும். அறையில் அழுக்குக் கரி படிந்த ஓட்டுப் பாத்திரத்தின் நாற்றமடிக்கும் காற்று இப்போதும் அங்கே தங்கி இருந்தது. சட்டையையும் பனியனையும் கட்டிலின் கால்களின்மேல் போட்டான். பெட்டியினின்று டவலை எடுத்து, தோளில் போட்டுக் கொண்டு சாய்வு இருக்கையில் மல்லாந்து படுத்தான்.

அறையில் அதிகமாக இருள் படர்ந்துள்ளதோ? மின்னும் காவி நிறமுள்ள நிலத்தை காண இயலவில்லையே. தனது தளர்வால் கண்கள் பூத்துப்போய் இருக்கிறதோ?

கீழேயிருந்து சின்னம்மா பத்மூவுக்கு உபதேசித்துக்கொண்டிருப்பது கேட்டது. கிழக்குத் தாழ்வாரத்திலிருந்து யாரிடமெல்லாமோ என்னவெல்லாமோ சொல்லிக்கொண்டிருந்தாள்.

''அவன் வழி நடந்து வந்து சோர்ந்துகிடக்கிறான். காரை அக்கரையிலே நிறுத்தியிருக்கான். நீ நாளைக்கு வா.''

சின்னம்மா மெது மெதுவாக மாடிப்படி ஏறி வரும் ஓசையைக் கேட்டு எழுந்து அமர்ந்தான்.

சின்னவங்களும் பெரியவங்களும் மாப்ளாமாருமாக எத்தனையோ பேரு கேள்விப்பட்டு பார்க்க வர்றாங்க. ''கருத்த பல்லிடுக்கில் புன் சிரிப்பைத் தேக்கியவளாகச் சிரித்துக்கொண்டு

வந்து கூறினுள். ஏதாவது கிடைக்காதான்னுட்டுத்தான். நீ பணத்தை வாரிக்கிட்டு வந்திருக்கேங்கிறதுதான் இவங்க எல்லாருடைய நெனப்பும்.''

மூளியாகக் கிடந்த மரப் பலகையின்மேல் சாய்ந்து நின்றவளாகச் சின்னம்மா சொன்னுள்:

''உடம்பு வலி ஒண்ணுமில்லியே.''

சின்னம்மா தனது நோய்களைப்பற்றிக் கூறினுள். சாயந்தரமானுல் காலடி தரையில் வைக்க முடியாது. அவ்வளவு வேதனை. அடிவாதம் என்று களிம்பு தடவிப் பார்த்தாயிற்று, குணமில்லை. என்ன மருந்து சாப்பிட்டாலும் சரியானபடியில்லை.

எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டு இருந்தான். பொடியை போட்டுக்கொண்டு விரலை வீசித் தட்டிவிட்டுக்கொண்டு மூக்கை ஒரு முறை தேய்த்துச் சரிபடுத்தியபடி கதவிடுக்கு வழியே வெளியே பார்த்தாள். நீண்ட நேரம் ஏதும் பேசாமல் இருந்தாள்.

நினைக்க முடியாத நேரத்தில் கேட்டாள்.

''பரமேஸ்வரனின் தந்தி வந்தபோது நீ இருந்திருக்க மாட்டே இல்லே.''

அவருக்கு நேராக முகத்தைத் திருப்பிக்கொண்டு மூடிய கண்களைக் கசக்கியவனுக மெதுவாகக் கூறினுன்.

''இல்லை.''

''உம்.''

முகம் திரும்பிப் பார்த்தபோது அவன் நனைந்திருந்தான். கண்களை துடைத்துக்கொண்டிருப்பதைக் கண்டாள்.

''வரும் வரும்னுட்டு காலை வண்டிவரைக் காத்திருந்துட்டுத் தான் சவத்தை எடுத்தாங்க.''

—மே மாத இரவு. இளங்குளிரான இரவு.

தீ பரக்கும் வெயிலிலிருந்து அந்த நாளின் நினைவு ஆரம்பிக்கிறது . . .

ஓட்டல் அறையில் கனத்துப்போயிருந்த கண் இமைகளும் கழுத்தும் ஒன்பது மணிக்கு எழும்போது வெளியே வெயிலின் கதிர்கள் சூடுபிடித்துக்கொண்டிருந்தன. பனி முடிய உணர்வுகளூடே ஒரு நினைவு விழித்தெழுந்தது. இன்றுதான் தீர்ப்பு சொல்லப்படவிருக்கிறது. அதற்கு முந்திய இரவு ஒரு நிசியாகியபோது மது மயக்கத்திலிருந்து விடுபட்டுக்கொண்டிருந்தான்.

ஒரு சமயம் பகுதி நேர கணக்குப்பிள்ளையாக நகரத்தில் வாழ்க்கை ஆரம்பித்த ஓட்டல் அறை. அந்த நினைவுள்ள பட்லர்கள் பேசிக்கொண்டார்கள்.

''பதினொலில் யார்?''

''சேது முதலாளி.''

காபி பாத்திரத்தைக் கையில் எடுத்தபோது கை நடுங்குவது போல் தோன்றியது. கீழே வைத்துவிட்டு கௌண்டரில் இருப்பவனைக் கூவியழைத்துச் சொன்னான். ''ஒரு லார்ஜ் விஸ்கி.''

பதினொரு மணிக்கு கோர்ட் கூடியது. தைரிய மூட்டுவதற்காக புதிய நண்பர்கள் பத்து மணிக்கே வந்து விடுவார்கள்.

அவள் ராத்திரி உறங்கி இருப்பாளா? டெலிபோன் அருகில் சென்றுநின்று சந்தேகப் பாவத்தோடு இருந்தபோது மணியடித்தது.

''ஹௌ ஆர் யூ?''

வலுவாக முறுக்கேறிப் போயிருந்த நரம்புகளைத் தளர்த்தும் குரல்.

''ஐயாம் ஆல்ரைட்'' என்றுகூறி சமாதானப்படுத்திக்கொள்ள முயன்றான். ''இதோ பார் என்னவானாலும் பதட்டப்படாமல் இருக்கவேண்டும்.''

''ஆர் யூ வொரிட்.''

அப்போது சிரித்தான். உயிரற்ற சிரிப்பு.

டிஸ்மிஸ் ஆர்டர் அடங்கிய ரிஜிஸ்டர்டு கவர் கையெழுத்துப் போட்டு வாங்கியபோது உள்ளடக்கம் என்ன என்பதை அறியாதவனாக இருந்தான். அதைக் கருதித்தான் நேரத்தில் வீட்டையடைந்தான். பரபரப்போடு படித்தான். அவளுக்கு நேரடியாகப் போன் செய்தான்.

''ஒரு குட் நியூஸ். நான் இனி உன் கணவரின் சம்பளக்காரன் அல்ல.''

அவன்தான் முன் அறிவிப்புக் கொடுத்தான். பம்பாயிலிருந்து தம்பியை வரவழைத்துள்ளான். முதல் நாள் முழுவதும் படுக்கைக்கருகில் தம்பியும் வக்கீலும் இருந்து தாழ்ந்த குரலில் ஆலோசனை நடத்திக்கொண்டிருந்தார்கள்.

வியாபாரத்திலிருந்து பெரும் தொகைகளை மோசடி செய்யப்பட்டுள்ளது என்ற பெயரில் கொடுத்த கேஸின் சம்மன் வந்தபோது பதறவில்லை. ஆபீஸிலிருந்து நீக்கப்பட்ட பைல்களின் கூட்டத்தி

லிருந்து புக் அட்ஜஸ்மென்டிற்காகவேண்டி சொந்த பெயரில் வரவு வைக்கப்பட்டிருந்த தொகைகள் கூட்டப்பட்டது. இரவில் வக்கீலைக் கூப்பிட்டு பேசப்பட்டது. எதிர் வழக்கு ஒரு லட்சம் ரூபாயும் லாபத்தில் பங்கும் கிடைக்கவேண்டும் என்பதாக.

மத்தியஸ்தம் பேச வந்தவரோடு சொன்னான்.

''முதலாளி அய்யா? கேஸ் நடத்தி ஜெயிக்கட்டும்.''

''முதலாளி கேஸை திரும்பப் பெறுவார். பெரியவர் உடல் நலப் பாதிப்பில் படுக்கையில் இருக்கிறாரில்லையா? தவறு யாரு பக்கம் இருக்குங்கிறது எங்களுக்குத் தெரியாது. மனிதத்தன்மையின் பேரில்—''

உரக்கச் சிரித்துவிட்டான்.

மத்தியஸ்தன் முகம் மாறிவிட்டது.

''ஏன் சிரிக்கிறே?''

''ஒண்ணுமில்லே.''

—மனிதத் தன்மையின் பேரில்!

''நாங்கள் எதைத் தீர்மானிக்கிறது?''

''எதை வேண்டுமானாலும் தீர்மானிங்க. நான் மனிதன் இல்லை என்பதுவரை.''

ஒரு இரவு லலிதாவிடம் கேட்டான்.

''உனக்கு தைரியம் இருக்கா?''

''எதுக்கு?''

''எதுக்கும்?''

''தைரியம் இல்லாமலா இங்கே வந்திருக்கேன்? ஐ தாட் ஐ வில் நெவர் கம் ஹியர்.''

''ஐ குட் நாட் ஸே நோ.''

தைரியமிருந்தால், ஒரு சூட் பைல் செய்.''

''எதற்கு?''

''டைவர்ஸ்.''

வியர்வைத் துளிகள் துளிர்த்திருக்கும் தடித்த முகம் கைகளுக் கிடையே சட்டென விளரி வெளுத்துவிட்டது. அமைதி குலைந்த போது எழுந்தான். குளியலறை சென்று ஆடை அணிந்து வெளியே வந்தபோது அவள் டிரெஸ்ஸிங் டேபிள் முன்பாக அமர்ந்து தலை மயிர் சீவிக்கொண்டிருந்தாள். ஒரு நிமிஷம்;

கண்ணுடியில் காணப்பட்ட பிரதிபிம்பத்தில் பார்வை பதிந்து நின்ற போது கண்கள் பின்வாங்கின.

குளியலறையின் பின்புறத்தில் வாசற்படிக்கு அப்பால் இருண்ட பாதையில் டிரைவர் காத்துக்கொண்டிருக்கும் காரை எடுத்த போது கவனிக்கவில்லை.

அகன்றுகொண்டிருக்கும் காலடியோசைகள் இடையிடையே ஐயப்பாட்டுடன் நிற்பதை அவனுல் நன்கு உணர்ந்துகொள்ள முடிந்தது.

தூக்கத்தில் டெலிபோன் ஓசை எழுப்பியபோது அவன் எதிர் பார்க்காதது.

''ஐயாம் ரெடி.''

''வாட்?''

''ஐயாம் ரெடி.''

அடுத்த நாள் புகழ்பெற்ற கிரிமினல் வக்கீல்.

''எக்ஸ்ட்ரிம் மென்டல் க்ரூவல்டியும் இன்கம்பாட்டபிலிட்டியும்'' பற்றி விளக்கிச் சொல்லும்போது எதிர்தரப்பைப்பற்றி எவ்விதக் கவலையும் இல்லாதவளாக அவள் கேட்டுக்கொண்டிருந்தாள்.

பதினெரு மணி.

நரம்புகள் முறுக்கேறிய நிலையில் தவித்துக்கொண்டிருந்த அந்தச் சமயத்தில் டெலிபோன் மணி அடித்தது. வக்கீலின் தாழ்ந்த குரல் கேட்டது.

''ஒரு மணியாகும் டோன்ட் வொரி.''

வெளியே வெயில் சுட்டுப் பொசுக்கிக்கொண்டிருந்தது. காலியாகக் கிடந்த வயிற்றினுள்ளே மெர்ச்சன்ட்ஸ் கிளப் சிப்பாயின் கண்களில் படாமல் ஒளித்துக் கடத்தி வரப்பட்ட வெளி நாட்டு விஸ்கியின் தீ நாக்குகள் உள்ளே ஓடிக்கொண்டிருந்தன. மயக்கத்திற்கிடையே நினைவு நீங்குவதற்கு முன்பாக வக்கீல் மீண்டும் கூப்பிட்டார்.

''பாராட்டுகள். நாம ஜெயிச்சுட்டோம்.''

சத்தமிட்டுச் சிரித்தான்.

யாருக்கு நன்றி செலுத்துவது? நமக்கு நாமேவா? வாழ்க்கை முழுவதும் இந்த நிமிடங்களுக்காக வேண்டி காத்துக்கொண்டிருப்பதாக முன்பு தனக்குத்தானே பலமுறை மனதிற்குள் கூறிக் கொண்டதுண்டு. சத்தியத்தின் முகச் சாயலை மாற்றுவதில் புகழ்

பெற்ற வக்கீல் அகங்கார குரலில் கூறினர்: மிக்க நன்றி?——எனக்காக!

எதையும் பெறவில்லை என்ற உணர்வு மனதில் சட்டென தோன்றியது. வெற்றி பெற்றவர் யார்?

டெலிபோன் தொடர்ந்து அடித்தது. அவளது தளர்ந்த குரல் கேட்டபோது என்னவோபோலிருந்தது. ''ஹலோ! ஆர் யு ஹேப்பி? சுகம்—சந்தோஷம்! உரக்கச் சிரிக்கவேண்டும்போல் தோன்றியது. அப்போதே புறப்படவேண்டும் என்பது கட்டாயச் சூழலாகிவிட்டது. கொஞ்ச நாட்களுக்கு ஆட்களிடமிருந்து சற்று விலகி இருக்கவேண்டும்போலிருந்தது.''

அன்று மாலைதான் பரமேஸ்வர அண்ணனின் தந்தி வந்தது.

அப்போது, நீர் பரப்புக்கு அப்பால் இருந்த பூங்காவிற்கு அடுத்துள்ள புகழ்பெற்ற ஹோட்டலில் போய்ச் சேர்ந்திருந்த நேரம். மூன்றும் மாடியின் பிரைவேட் வராந்தாவில் நின்று அவள் பிள்ளைகளைப் பற்றி பேசிக்கொண்டிருந்தாள்.

சொந்த ஆபீஸுக்கு வரவழைக்கப்பட்டிருந்த டிரஸ்டு கிடைத்தபோது புதிய குமாஸ்தா கூறினன்.

''ஒரு தந்தி இருக்கு.''

''எங்கிருந்து?''

அவன் பதிலேதும் கூறுமல் பதுங்குவதைக் கண்டு பதறிய வனுகக் கேட்டான்:

''திறந்து படிடா.''

''வீட்டிலிருந்துதான் முதலாளி.''

''மதர்—மதர்—எக்ஸ்பயர்ட்—''

டெலிபோனைக் கீழே வைத்துவிட்டு வரவேற்பறையில் இருக்கும் திரைச்சீலையை தள்ளிவிட்டு படுக்கையறையின் டீப்பாயிலிருந்து ஒரு சிகரெட் எடுத்துப் பற்றவைக்கும்போது அவள் கூடவே வந்து கேட்டாள்:

''என்ன விசேஷம்?''

''ஒன்றுமில்லை.''

அவள் முகத்தைப் பார்க்காமலே பதில் கூறினன். வராந்தாவிற்குட் சென்று நின்றபோது அழவேண்டும்போல் இருந்தது. இல்லை மனதில் நீர்ப்பசையில்லாமல் வரண்டுபோய் பாறையைப் போல் கெட்டிப்பட்டுக் கிடந்தது.

''டீ ஆறிப்போகிறது.''

மீண்டும் உள்ளே இருந்து நினைவூட்டினாள்.

கீழே பகல் வெளிச்சம்போல ஒளி வீசிக்கொண்டிருந்தது. விளக்குக் கம்பங்களுக்குக் கீழே யோவோரையும் வருவோரையும் பார்த்துக்கொண்டிருந்தான். அபயம் கிடைக்காத வழிப்போக்கனைப் போல மன வாசலில் அந்த வார்த்தை மீண்டும் மீண்டும் கலக்கத்தை ஊட்டிக்கொண்டிருந்தது. அம்மா இறந்துவிட்டாள்!

அறையைக் கடந்து வந்தபோது புதிய வாசனைத் திரவியம் பூசி, சுருக்கம் விழுந்திருந்த கண் இமைகளில் சோர்வு தோன்ற நிற்கும் நேற்றைய சுந்தரியின் தளர்ந்த முகத்தில் ஏக்கத்திரை படர்ந்திருப்பதைக் கண்டான்.

மற்றொரு சிகரெட்டைப் பற்றவைத்து சிகரெட் சாம்பல் கிண்ணம் வைக்கப்பட்ட டீப்பாயின்மேல் கால்களை எடுத்து வைத்தபோது மீண்டும் நினைவூட்டப்பட்டது.

''டீ ஆறிப் போ . . . போயிடுச்சு.''

''குற்றஞ்சாட்டுகிறாளோ?''

''சிங்கிள் மட்டும் கொடு.''

சத்தம் அடங்கிப்போய் விட்டதோ? அச்சம் கலந்த நாணத்துடன் அவள் முன்பில் வந்து அமர்ந்தபோது உதடுகள் துடிப்பது போலத் தோன்றியது. எதனால்? என்ன நடந்தது? வாய்விட்டுச் சொல்லாத கேள்விகள் முகத்தில் புலப்பட்டன.

விசாலமான இரட்டைக் கட்டிலின் ஒரு புறத்தில் மணம் மிகுந்த மூச்சைச் சுவாசித்துக்கொண்டு படுத்திருந்தபோது தனக்குத் தானே கேட்டுக்கொண்டான். கருங்கல் பாதையில் காலடி யோசை கேட்கும்போது அனுபவித்த செம்புப் பாத்திர சத்தம் எங்கே?

குளிர்ச்சியான மெத்தையில், குளிர்ச்சியான சதையின் ஸ்பரிசத்தில், மங்கிய இருட்டில் கால்களை மூடிக்கொண்டு படுத்திருக்கும்போது அவனறியாமல் கண்கள் நீரால் நனைந்தது. இல்லை அழவேண்டியதை அழுது தீர்க்கவில்லை. ஒருசமயம் தேம்பி விட்டதுபோல் தோன்றியதை எண்ணிக்கொண்டிருந்தபோது தாழ்ந்த குரலில் பக்கத்திலிருந்து கேள்வி எழுந்தது:

''வாட்டீஸிட் டார்லிங்?''

''ஒன்றுமில்லை. எனக்கொன்றுமில்லை.''

கணம் சூடுள்ள கைகள் மார்பில் மிருதுவாகத் தடவிக் கொடுத்தபோது மனம் நெரிந்துகொண்டிருந்தது.

''சொல்லுங்க, என்னுச்சு.''

''ஒண்ணுமில்லே.''

ஒண்ணுமில்லே. இருண்ட இந்த இரவும் கடந்து வந்த நீண்ட வழியும் ஒண்ணுமில்லே . . . காத்திருந்த நிமிஷங்களில் அனுபவித்த ஆனந்தமும் தலையணைகளின் இனிய நறுமணமும் ஒன்றுமில்லை . . . நத்திங் . . . நீ ஒன்றுமில்லை . . . நீ சொன்ன கணக்குகளும் ஒன்று மில்லை. வாடகை மிகுந்த ஹோட்டல் அறைகளும் ஒன்றுமில்லை. உனக்கு எதுவுமே புரியாது . . . நத்திங் . . . நத்திங்.

''டெல்மி, என்னிடம் சொல்லுங்க.''

''ஒன்றுமில்லை.''

இரவின் குளுமை படிந்த அந்த நிமிஷத்தில், நனையும் தலையணைகளில் தொடங்காத தேனிலவு முடிவடைகிறது.

கிளிக் கூண்டைச் சுற்றிச் சுற்றி வந்து ஐயப்பாட்டோடு நின்ற வேட்டைக்காரன் இறுதியில் மண் புற்றினை அடைந்தான். சின்னம்மா சொன்னுள்:

''ஒரு காரியத்திலே தெய்வம் அவரை வஞ்சிச்சிடுச்சு. மற்றுள்ளவங்களைக் கொண்டு அவர் அந்தக் காரியத்தை முடிக்கிற துக்கு முன்னுடி அவரு கண்ணை மூடிட்டாரு. மத்தவங்க அவருக் காகப் பிரார்த்தனைதான் செய்ய முடிஞ்சுது . . . இந்தப் பெண்ணை யாரிடமாவது பிடிச்சுக் கொடுத்துட்டா போதும். வேறு ஒண்ணும் வேண்டாம். அதுக்கப்புறம் உனக்கு எந்தக் கவலையும் வேதனையும் இருக்காது.''

வெளுத்த வைக்கோல் தும்புகளைப் பார்த்தபடி அவன் அமைதியாக இருந்தான்.

''என்ன சேது?''

''ஒண்ணுமில்லே.''

## [9]

வாசல் மாடத்தில் அந்தி நேரத் தீபத் திரியைக் கொளுத்தி வைத்துவிட்டு பத்மூ உள்ளே சென்றுள். பகற்பொழுதின் இறுதி நேர மங்கிய வெளிச்சத்தில் பாதி மறந்துவிட்ட ஒரு துக்க நிலை போல அது தோன்றியது. வடக்கு வீட்டிலிருந்து யாரோ ஒரு சிறுமி நாம தோத்திரம் சொல்லுவது கேட்டது. தெற்கு வீட்டிற்கு அப்பால் எங்கிருந்தோ ஒலிபெருக்கியிலிருந்து ஒரு பழைய சினிமா பாட்டின் இசையொலி மிதந்து வந்தது.

திருமணமாக இருக்கவேண்டும். தொடர்ந்து வடக்கு வீட்டி லிருந்து சிறுமியின் குரல் கேட்டது.

முற்றத்தில் அமைதியற்றவனுக அங்குமிங்குமாக நடக்கும் போது சின்னம்மா கேட்டாள்.

''குளிக்கிறதுன்னு வெந்நீர் போடறேன். இருட்டிலே கிணத் திலே போய்க் குளிக்கவேண்டாம்.''

கிணற்றங் கரையில் நான்கு மடல் ஓலே வைத்துக் கட்ட பல முறை சொல்லியும் செய்யாத வேலேக்காரன் தாமியைக் குற்றப் படுத்திப் பேசினுள்.

''குளிக்கலே, கையும் காலும் கழுவினுல் போதும்.''

முற்றத்தின் மேல் ஓரத்திலிருந்து பார்த்தபோது இல்லத்தின் வயல் பரப்பில் இருள் படர்ந்து வருவது தெரிந்தது. நரைபோல் தோன்றிய மேற்கூரைக்குக் கீழே யாரும் குடியிருக்கவில்லே என்பது பார்த்த ஒற்றைப் பார்வையிலேயே தோன்றியது. கரி படிந்த சமையற்கட்டின் கட்டைக்கு அப்பாலிருந்து சிம்னி விளக்கின் வெளிச்சம் தெரிந்தது.

இல்லத்திற்குப் போகும் வழி காடாகக் கிடந்தது. வீணுகிக் கிடந்தன வேலிகள்.

மங்கிய வெளிச்சத்தினூடே யாரோ நடப்பதுபோல் இருந்தது. அருகே வந்தபோது அது உண்ணி நம்பூதிரி என்பது தெரிந்தது.

உண்ணி நம்பூதிரி மொத்தத்தில் திரை திரையாகக் காட்சி யளித்தான். அறுபது வயதைத் தாண்டியவன் போன்ற தோற்றம். மடித்துக் கட்டியிருந்த அழுக்கு வேட்டியை தாழ இறக்கி திருத்த மாகக் கட்டிக்கொண்டு உள்ளே அருகில் வந்து சிரித்தான்.

''எப்படி இருக்கே உண்ணி நம்பூதிரி?''

''வந்திருப்பது இப்பதான் தெரிஞ்சுது.''

''உட்காரு.''

வெளி முற்றத்தில் மாடத்துக்குச் சமமாக உண்ணி நம்பூதிரி உட்கார்ந்தான். மாடவிளக்கு மிகவும் மங்கலாக எரிந்தது.

பத்மூ ராந்தல் விளக்கை ஏற்றிக்கொண்டு வந்து வெளி முற்றத்தில் கீழாக கட்டித் தொங்க விட்டுச் சென்ருள். அதன் வெளிச்சத்தில் உண்ணி நம்பூதிரியின் முகத்தைக் கண்டபோது பயமாக இருந்தது. நரையேறியிருந்த குறுந்தாடியும் கருத்துத் தேய்ந்த பற்களும் சீவப்படாது கிடந்த வைக்கோல் பிரி போன்ற முடியுமாகக் காட்சியளித்தான். தனியாக வருவோர் கண்டால் பயத்தால் பாதை மாறிப் போவார்கள்.

உண்ணி நம்பூதிரி] இடையிடையே அவனைப் பார்ப்பான். உடனே தலையைக் கீழே தாழ்த்திக்கொள்வான்.

''உற்சவங்களுக்கெல்லாம் போறதில்லையா. நம்பூதிரி?''

''இல்லே,''

உண்ணி நம்பூதிரி ஏதாவது பேசுவான் என்று காத்திருந்தான். ஏதாவது சொல்லி உரக்க வாய்விட்டுச் சிரிக்கவேண்டும்போல் இருந்தது. மங்கிய இருட்டில் மயானக் காட்டில் சாமி இருப்பது போல் அவன் ஆடாமல் அசையாமல் அசைவற்று இருந்தான்.

''உண்ணி நம்பூதிரிக்கு எத்தனை பிள்ளைகள்?''

''மூணு'' சிறிது நேர அமைதிக்குப் பிறகு உண்ணி நம்பூதிரி சொன்னான்.

''மூணும் பொண்ணுங்க.''

அந்தர்ஜன இல்லத்தர்களின் கோயிலில் பன்னிரண்டு ஆண்டு களுக்குப் பின்னர் இப்போதுதான் உற்சவம் நடந்தது. நேரத்தே போய்விட்டான். பெரும் மதிற் சுவரின் தொடக்கத்தில் கற்பூர வாடை பரவியிருந்தது. கற்பூரத்தைப் பார்த்துக்கொண்டிருந்த உண்ணி திடீரென மயங்கிய நிலையில் காணப்பட்டான். பிடி தளர்ந்து கீழே சாய்ந்தான்.

கீழே வீழ்வதைப் பார்த்தான் . . . பார்த்துக்கொண்டு நிற்கும் போதே . . .

உள்ளே வாசற்படியிலிருந்து சின்னம்மா தாழ்ந்த குரலில் உருப்போடலானாள்: அம்மா, மகமாயி!

மீண்டும் கவலையோடு நிசப்தமாக தீச்சைப் பிடித்துக்கொண்டு நின்றபோது சின்னம்மா கேட்டாள்:

''செலுத்த வேண்டியதைச் செலுத்தியாச்சா நம்பூதிரி?''

''பதினைந்து கொடுத்துட்டேன். இன்னும் பத்துத் தரணும்.''

உண்ணி நம்பூதிரியும் உதவி கேட்க வந்திருக்கவேண்டும் என்று ஊகிக்கலானான். போகும்போது பத்து ரூபாய் கொடுக்கவேண்டும் என்று மனதிற்குள் எண்ணிக்கொண்டான். அப்போது உண்ணி நம்பூதிரி எழுந்து நடந்து அவனுக்கு அருகே வந்தான். மண்ணின் மணமும் வெற்றிலை பாக்கு மென்றுகொண்டிருப்பதனால் ஏற்பட்ட வாடையும் வியர்வை நாற்றமும் அடித்துக்கொண்டிருந்தது.

''எப்போ போவீங்க?''

''முடிவு செய்யலே.''

''பிறகு—''

உண்ணி நம்பூதிரி ஐயப்பாட்டோடு நிறுத்தியபோது வினயத்தோடு கேட்டான்.

''சொல்லு, கூச்சப்படவேண்டாம்.''

''சேது மாதவனுடன் வந்தால் அங்கே எங்கேயாவது ஒரு வேலை வாங்கித்தர முடியுமா?''

''உண்ணி நம்பூதிரிக்கா?''

''உம்.''

உண்ணி நம்பூதிரி அப்போது சிரிக்க முயன்முன். ''இங்கே இல்லத்தின் வேலையைப் பார்க்கிறது யாரு?''

உண்ணி நம்பூதிரி சிரித்தான். பழைய வெடிச் சிரிப்பு இல்லை. தடுமாறும் சத்தத்தை மறைக்க வேண்டி பெரு முயற்சி செய்து சிரிப்பதுபோல் தோன்றியது.

''பார்க்கிறது காரியம் இருந்தால்தானே? கோவிந்தன் கையிலிருந்து ஒரு மணி நெல்லு கிடைக்கல்லே. பாக்கு பறிப்பு—அதெல்லாம் ஒரு கதை.''

என்ன சொல்வதென்று ஆலோசித்துக்கொண்டு ஐயப்பாட்டோடு நிற்கும்போது உண்ணி நம்பூதிரி சொன்னுன்: ''எந்த வேலையா இருந்தாலும் பரவாயில்லே.''

தன் முன் நெருங்கி நின்ற அவன் கண்கள் கலங்குவதைக் கண்டபோது ஒரடி பின்வாங்கிக்கொண்டு கூறினுன்.

''ஆகட்டும் நம்பூதிரி, போய் வா, நான் பார்க்கிறேன்.''

முற்றத்திற்கு அப்பால் கரும் இருளடைந்து கிடக்கும் பாதையில் செல்லும் உண்ணி நம்பூதிரியின் கரிய உருவம் மறையலாயிற்று.

''பத்தாயம் முதலாவதாக எல்லாத்தையுமே வித்துக்கிட்டிருக்காங்க. வீட்டிலே இருப்பவர்களைப் போய் பார்க்கணும். வேலைக்காரர்களைவிட கஷ்ட வாழ்க்கை'' தனக்குள் கூறிக்கொண்டான்.

சின்னம்மா கனைத்த சத்தம் கேட்டபோது புழக்கடைக் கல்லில் ஏறி நின்று கை கால்களைக் கழுவினுன்.

''சாப்பிடறியா?''

''பசி இல்லே.''

மாதவன் வர சாதாரணமாகச் சற்று தாமதமாகும். மாலை நேரத்திலேதான் வியாபாரம் சூடு பிடித்து நடக்கும்.

ஆனுல், மாதவ மாமா வழக்கத்திற்குச் சற்று முன்னதாகவே கடையை மூடிவிட்டு வந்திருக்க வேண்டும். ஓசை

எழும்பும் செருப்பை கழற்றி வைத்துவிட்டு வராந்தா பக்கத்தில் இருந்தபோது சாவிக்கொத்து ஓசையெழுப்பியது.

மாதவ மாமா கொஞ்சம் பெருத்திருந்தார். காலருள்ள கம்பெனி பனியனும் தோளில் சிவப்புக்கரை போடப்பட்ட மேல் துண்டும் காணப்பட்டன. லேட்டரை அடித்து பீடி பற்றவைத்த போது முன்புறப் பல் விழுந்திருப்பது தெரிந்தது.

''அப்போது ஏன்டா, வரும்போது பிள்ளைகளையும் கூட்டிக் கிட்டு வரலே?''

''பிள்ளைகளா? என் பிள்ளைகளா?'' மற்றொரு கோர்ட் தீர்ப்புக் காக அவன் காத்திருந்தான். அவன் வீடு வந்து சேரும்போது கூப்பிடும் குரலுக்காக அவன் ஏங்கிக் கிடந்தான்.

மாதவ மாமா குடும்பத்தைக் குறித்துக் கேட்கிறார் போலும். அதனால் ஏதோ தட்டுத் தடுமாறிப் பதில் கூறினான்.

சிரமமா இருந்தது. புறப்படும்போது—திடீரென்று.

''சரக்கு வாங்க நான் இடையிலே வருவேன். உன் இருப்பிடம் எனக்குச் சரியாத் தெரியாது. அப்பப்போ வரும்போது தேடிப் பார்த்திருக்கேன். ஆனால் தேடிப் பிடிக்க முடியலே.''

மாதவ மாமா பனியனைக் கழற்றி, குளியல் துண்டை வாங்கிக் கொண்டு கிணற்றடியை நோக்கி நடக்கும்போது கூறினார்.

''ஆற்றிலே ஒரு சொட்டு தண்ணி இருக்க வேண்டாமா? காலம் ரொம்பக் கெட்டுப் போச்சு.''

பத்மூ சின்னம்மாவைக் கூப்பிட்டாள். வாசலுக்கு இடப்புற மாக நின்றுகொண்டு அவள் தணிந்த குரலில் சந்தேகம் கேட்டது காதில் விழுந்தது. ''பப்படத்தை துண்டுபோட்டு வறுக்கவா? பொறிக்கவா?'' சின்னம்மா குழம்பு வைக்குமாறு கூறிவிட்டு அவளுடனேயே சமையற்கட்டை நோக்கி நடந்தாள்.

நேற்று மாலை இதே சமயத்தில் கேலம் மேனனின் ஹவுஸ் வாமிங் பார்ட்டி நடந்தது. . . ரங்கூனில் குண்டு விழுந்த காலத்து கதைகளை சுவையாக விவரிப்பதைக் கேட்டுக்கொண்டு இருந்தான். கண்கள் இடையிடையே மூலையில் ரேடியோவை அடுத்திருந்த சோபாவுக்கு நீண்டு சென்றது. நிசப்தமாக சாடையை அவனுக்கு புரியவைக்கப் பெரும் பிரயாசைப்படும்படி இருந்தது.

காலையில் டீப்பாயிலிருந்து கார் சாவியை எடுத்து கையில் தரும்போது கண்களில் ஏக்கம் தேங்கியிருந்தது.

அவள் கேட்டாள்:

''வருவீங்களா?''

வார்த்தைகள் குறைந்து போனபோது தேவைக்குச் சற்று கூடுதலாகப் பேசத் தொடங்கியிருந்தாள். பொருளற்ற வார்த்தைகளை வாரிச் சேர்த்து மாலை கோர்ப்பதுபோல எவ்வளவு வேண்டுமானாலும் பேசினாள் முன்பு. சொல்லச் சொல்லி இறுதியில்—

''நீங்கள் என்ன சொல்றீங்க?''

''ஒன்றுமில்லை!''

''மைகாட், சரி நேரம் எவ்வளவோ ஆயிடிச்சே?''

இப்போது வார்த்தைகள் அவசியமான விசேஷ சந்தர்ப்பங்களில் மட்டும் எழுந்தருளக்கூடிய சுலபமாக உடைந்து போகக்கூடியவைகளைக் கண்ணாடிப் பெட்டிக்குள் வைத்துப் பாதுகாப்பது போல வார்த்தைகள் அளவோடும் கவனத்தோடும் கையாளப்படுமளவுக்கு மாற்றமடைந்துவிட்டன.

நகரத்தில் புதிதாக ஆரம்பிக்கப்பட்டுள்ள ஹோட்டலில் தொடக்கமாக காபரே நடத்திய இரவுகளின் கருத்த நினைவுகள் மனதில் தேங்கிக் கிடந்தன.

தனது நினைவுகளையும் படித்துக்கொண்டிருக்கும் பாவனையில் எவ்வித அறிகுறிகளையும் வெளியே காட்டிக்கொள்ளாமல் பேசிக் கொள்வேன். இஃப் யூ டோண்ட் மைண்ட். இல்லேன்னா நான் பிஸினஸ் மேனேடு சொல்லிக்கிறேன். தலைவேதனை. தலைவேதனை இப்போது ஒருவகையில் உதவிகரமானதுதான், பன்ஷில் இன் டிஸ்கைஸ் தாங்க் காட். சுகமில்லாததை வெளிக்காட்டாமல் சிரிக்க சென்ற ஆண்டே படித்திருந்தான்.

''கெட் ரெடி.''

காரோடிக் கொண்டிருக்கும்போது நகரத்திற்கு நிறையப் பணத்தோடு வந்திருக்கும் மேனன் தம்பதிகளைப்பற்றி அவன் பேசினான். திருமதி மேனனின் இரண்டாவது மனைவி என்று கூறினான்.

வீடு நகர நெரிசலுக்கு அப்பால் இருந்தது. கடற்காற்றின் குளுமையும் அலைகளின் இரைச்சலும் காதுகளில் ஒலித்தது. இளம் பச்சை விளக்குகளைக் கடந்து கார் நிறுத்துமிடத்தை அடைந்த போது அங்கே கார்கள் நிரம்பி வழிந்தன.

வெளியே காலெடுத்து வைத்தபோது வரிசையாக நிற்கும் கார்களில் ஒன்றை ஆர்வத்தோடு நோக்கிய வண்ணம் அவன் கூறினான்.

''மோரீஸ் எக்ஸ்போர்ட் இம்போர்ட் யாருடையதோ?''

''தெரியலே.'' அவன் மனதிற்குள் அதன் விலையைப்பற்றி மதிப்பிட்டிருக்க வேண்டும்.

பொருளற்ற உபசார வார்த்தைகள், அறிமுகப்படுத்தல்கள். திருமதி மேனன் ஜின் மதுபானம் நிறைந்த கிளாஸைக் கையி லெடுத்துக்கொண்டு எல்லா இடங்களுக்கும் ஓடிக்கொண்டிருந்தாள். அவள் மேசை அருகிலிருந்து பேசும்போது மகளோ என்று எண்ணத் தோன்றும். பைஜாமா குர்த்தாவும் அணிந்த பதினாறு வயதுடைய வளின் மகள் சிகரெட் டின்னை கொண்டுவந்து திறந்துவைத்தாள்.

வெளியே சீறிக்கொண்டு வந்து நின்ற சிவப்பு ஸ்போர்ட்ஸ் காரிலிருந்து யாரோ இறங்கினார்.

வந்திருப்பவரை வரவேற்க வாசலை நோக்கிச் சென்றபோது மனைவியை நோக்கினார். மகிழ்ச்சி முகத்திலிருந்து மறைவதை நன்கு காண முடிந்தது.

''ஐ ஆம் ஆல்ரைட்.''

கூட்டுப் புருவமும் தடித்த உதடுகளும் கையில் இரும்பு வளை காப்பும் உள்ள உயரமான ஆள். தன் உயரத்தைப் புலப்படுத்து வான் போன்று வாசற்படியைக் கடக்கும்போது குனிந்து வந்தபின் அவன்பால் கவனம் முழுவதும் ஈர்க்கப்படுவதுபோல் தோன்றியது.

மேனன் அறிமுகப்படுத்தினார். மார்வாடிகளின் கம்பெனிக்கு புதிதாக வந்த இஞ்சினியர் இந்திரஜித்.

அவனே தன்னை அறிமுகப்படுத்தும்போது கூறினான்.

''நான் இந்திரஜித். ஆனால் உங்களை ஏமாற்றப் போகிறேன். நான் இராவணனின் மகன் அல்ல.''

அடுத்திருந்த டாக்டருக்கும் தனக்கும் இடையில் அவன் இடம் பிடித்து 'சியேர்ஸ்' கூறி கிளாஸை உயர்த்தியபோது உள்ளுக்குள் அசூசை தோன்றியது. அவனுடைய வார்த்தைகளில் நோட்டத் தில் காலடியோசையில் ஆத்ம விசுவாசம் நிறைந்து பொங்குவது போல் தோன்றியது.

கிளாஸ்கள் காலியாவதும் நிறைவதுமாக இருந்தது. ஸ்டீரியோவிலிருந்து இசை வழிந்துகொண்டிருந்தது. சிரிப்புகளின் ஒலி பெருகியது. அடுத்து வந்து பேசுபவர்கள் சொல்வதைக் கேட்கும்போதுகூட மனைவியைக் கவனிக்கலானார். மெது மெதுவாக.

கண்களின் தாக்கீதை அவள் காணாததுபோல் நடித்தாள்.

பாதி தீர்த்த கிளாஸ் இரண்டாவதோ மூன்றாவதோ? மேஜை மேலிருந்து தீப்பெட்டி எடுக்கும் பாவனையில் நடந்து போகும் போது அவன் முன்பிலிருந்து முணுமுணுத்தாள் ''கேர்ஃபுல்.''

பார்ட்டியை முடித்துவைப்பதை திருமதி மேனன் அறிவாள். அவன் ஆணையிட்டான்.

''சர்க்குலேட்.''

எல்லோரும் இடம் மாறி இருக்க வேண்டும்.

பிளவர் மில் முதலாளி சிந்தியும் மேனனும் வெளியே நடக்கும் போது வேண்டினுள்:

''வாங்க கொஞ்சம் சுத்தமான காற்றைச் சுவாசிக்கலாம்.'' கிளாஸ்களை கையில் கொடுக்கும்படி மேனன் வற்புறுத்தினர். முற்றத்தின் அருகிலிருந்து அங்கே உருவாக்கப்படவிருக்கும் நீச்சல் குளத்தைப் பற்றி மேனன் ஆவேசத்தோடு வர்ணித்தார். கடல் இரைச்சல் பின்னல் எங்கிருந்தோ தெளிவற்றுக் கேட்டுக் கொண்டிருந்தது. நெடுந் தொலைவிலுள்ள கோயில் உற்சவத் தொடக்க ஓசை போன்று.

மொட்டை மாடி அறைக்கு ஏறிய குழாத்திலிருந்து யாரோ ''ஒன் டு திரி. . . ஐ லவ் யூ'' சத்தம் போட்டுக் கூப்பிடும் ஒலி கேட்கிறது.

நேரமாவதைப் பற்றி பேசத் தொடங்கும்போதெல்லாம் மேனன் இரவு நேரத்தின் சுருக்கத்தைப் பற்றியே நினைவூட்டினர்.

மீர் சந்தானியின் உதவியோடு டைனிங் ஹாலுக்கு திரும்பி வந்தபோது திருமதி மேனனின் கைகளில் தன் விரல்களை ஓட விட்டுக்கொண்டிருந்த மத்திய வயதுக்காரன் இன்சூரன்ஸ்காரர் அடையாளக் குறிப்புக் காட்டி:

''எங்கே?''

''ஓ டோன்ட் பி ஏ பெஸ்ட். லிவ் ஹர் ஃப்ரீ.''

அவர்கள் வார்த்தைகள் குழறின. நேராக நிற்காத தலை இடையிடையே நிமிர்ந்து விழுந்தது. தடுமாற்றத்தோடு முன்னே சென்றபோது அங்கங்கே சிறிய குழாம்கள் இருப்பதைக் காண முடிந்தது.

''என்னுடைய மிஸிஸ்ஸைப் பார்த்தீங்களா?''

''கவலைப்பட வேண்டாம்.''

யாரோ சிரித்தார்கள். தனக்குப் பரபரப்பு இல்லை என்று காட்டுவதற்காக இரண்டு மூன்று நிமிடங்கள் அவர்களுடனேயே தங்கி நின்று கவனியாதவன் போல் பின்வாங்கினன்.

இறுதியில் மொட்டை மாடியிலிருந்த அறையில் கண்டபோது, இரும்பு வளைகாப்புப் போட்டிருந்த கை கழுத்தைச் சுற்றிக் கொண்டிருப்பதைக் கண்டான்.

வளைவாக இருந்த மாடிப்படிகளில் இறங்கும்போது குளிரால் உறைந்துபோன மனதோடு பார்த்துக்கொண்டு நின்முன். இடரும் காலடிகள். தவறி அவள் கீழே விழுந்துவிடுவாள் எனத் தோன்றியது. அலுமினியக் கைப்பிடியை பற்றும் கைவிரல்கள் தளர்ந்து பிடியை விட்டால் இருபத்தைந்து படிகளுக்குக் கீழே அடி மட்டத்தில் விழுந்துவிடுவாள் என்ற அச்சத்தோடு காத்துக் கொண்டு நின்முன். . .

காரின் கதவடைக்கும் ஓசை கேட்டுத் தனக்குத்தானே திடுக்கிட்டான். நாளுகவா கதவடைத்தேன்?

தேம்பல் சப்தத்தைக் கேட்காதவன் போல் நடித்தான். முக்குவர்களின் குடிசைகளையும் இடையிடையே கண் சிமிட்டிக் கொண்டிருந்த விளக்கு கம்பங்களையும் கடந்து நகர வீதியை அடைந்தபோது உயிரோட்டமாக விளங்கிய ஒளி விளக்குகள் விரைந்து மறைந்தன. அடுத்தத் திருப்பத்தில் . . . அதற்கு அடுத்தத் திருப்பத்தில் செல்லும்போது ஆக்ஸிலேட்டரை இறுகப் பிடித்திருக்கும் கையை நெகிழ்த்தி சிரிக்கவேண்டும் போல இருந்தது. சிரிப்பின் இறுதியடையா அலைகள் சக்கரங்களுக்கிடையேயும் மோகவுணர்வுக்கிடையேயும் சீறி அடங்கும் நிமிடங்கள்.

இடதுபுறத்திலிருந்து வந்த தேம்பல் ஓசை அடங்கி பீதி கலந்த பெருமூச்சு வெளிப்பட்டது.

வழி தவற வாய்ப்புக் கிடைக்காதபடி அவள் விரைந்து காப்பாற்றப்பட்டதைக் காணும் அவன் தனக்குள்ளாகவே சிரித்துக் கொண்டான்.

''உங்களுக்குப் பைத்தியம்.''

''யெஸ் நம்ம எல்லோருக்கும், இந்த காருக்கும்கூட.''

மீண்டும் சிரித்தான்.

இறுதியில் அவளுடைய வாசற்படியை சென்றடைந்தான். பயணம் இங்கே இறுதிக் கட்டத்தை அடைகிறது. அவளுடைய கலையழகு நிறைந்த தோட்டத்தினூடே அவளுடைய வாசற் கதவைத் திறந்து அவளுடைய படுக்கையறையை அடைந்தான். அவளைப் படுக்கையில் கிடத்தி அருகில் நின்றுகொண்டிருந்தான்.

காலையில் மஞ்சளும் கறுப்பும் கலந்த வண்ணம் பூசிய பழைய டாக்சி ஒன்று வாசற்படிக்கருகில் வந்து நின்றபோது கேள்வியேதும் எழவில்லை. பணியாள் வேகமாகக் கொண்டுவந்து வைத்த தோல் பெட்டியைச் சீட்டில் வைக்கும்போது ஒரு கேள்வி பயவுணர்வோடு வெளிப்பட்டது. இல்லை எங்கே பயணம் என்பதை சொல்ல வேண்டிய நிலை வரவில்லை.

* * *

''கிருஷ்ணு, குருவாயூரப்பா, காப்பாத்தணும்.'' விபூதியைப் பூசிக்கொண்டே வராந்தாவில் இறங்கி நின்ற மாதவ மாமா கேட்டார்: ''நீ ஏன் இருட்டிலே இருக்கே?''

''ஊஹூம் ஒண்ணுமில்லே.''

எழுந்தான்.

''சாப்பிட வா. இலே போட்டு ரொம்ப நேரமாயிடிச்சு.''

பத்மூ ராந்தல் விளக்கை எடுத்துக்கொண்டு கூடவே வந்தாள்.

அடுக்களைத் தலத்தில் சாப்பிட உட்கார்ந்திருந்தபோது சின்னம்மா சொன்னுள்:

''நல்ல மீன் எதுவுமே கிடைக்கல்லே எப்படியோ இந்தச் சின்ன மீனுகதான் கிடைச்சுது.''

''வலேக்காரங்ககிட்டே காலேயிலேயே சொல்லணும். நீ நாளேக்கு இருப்பதாக இருந்தால் நான் சொல்லிவைக்கிறேன்.''

இருப்பேன் என்ருே இருக்கமாட்டேன் என்ருே சொல்லவில்லே.

முருங்கைக்கீரையில் பருப்புப் போட்டு வைக்கப்பட்டிருந்த குழம்பு பிடித்திருந்தது. பீங்கானில் பத்மூ மீண்டும் கொண்டுவந்து நிறைத்தாள்.

இரண்டாவது முறை சோறு போட வந்த சின்னம்மாவை வேண்டாம் என விலக்க முயன்றும் அவள் சம்மதிக்கவில்லே.

''மோர் சோறு கொஞ்சம்.''

கை கழுவிவிட்டு கூடத்தை நோக்கி நடந்தான். பத்மூ கூடத்தில் கிடந்த மாதவ மாமாவின் சாய்வு நாற்காலியை எடுத்து நிமிர்த்திப் போட்டாள். சின்னம்மா கூறினுள்: ''மாடியறையில் படுக்கை விரிச்சுப் போட்டிருக்கேன். படுக்கச் சொல்லு. விளக்கு கொண்டுபோய் வச்சிரு.''

''இன்னும் வைக்கல்லே.''

''அப்பாவோட பொண்ணில்லேயா?''

''போறேன்.''

''அப்பாவுக்கு ரொம்ப முடியாம ஆயிடிச்சு. அடிக்கடி போய்ப் பார்க்கறியா, தொடர்ந்து பத்மூவை கூப்பிட்டுச் சொன்னுள். பெண்ணே, நீ நல்லா சாப்பிட்டுட்டு ஒரு பக்கமா படுத்துக்கோ. நான் ராத்திரி ஒண்ணும் சாப்பிட முடியாது. குன்ம நோயின் உபத்திரவம் இப்போ ரொம்ப அதிகமாயிடிச்சு.''

பொடியை வழித்து எடுத்து மூக்கினுள் திணித்த சின்னம்மா கீழே கூடத்தில் காலை நீட்டி உட்கார்ந்திருந்தாள். பீடியை முழுக்க புகைத்துவிட்டு மீதியை முற்றத்தில் வீசி எறிந்துவிட்டு படுக்கையில் கொட்டாவி விட்டுக்கொண்டு நீண்டு நிமிர்ந்து கிடந்த மாதவ மாமா குறட்டைவிடும் சத்தம் கேட்கத் தொடங்கியது.

''புஷ்போத்து தங்கமணி பம்பாயில் இருக்காள். உனக்கும் தெரிந்திருக்கும்.''

இருட்டிலும் தன் முகத்தைப் பார்த்துவிடுவாளோ என்று பயந்து திரும்பி நின்றான். தனது இதயம் வேகமாக அடித்துக் கொள்வதைக் கேட்க முடிந்தது.

''ரொம்ப அதிர்ஷ்டசாலி. இரண்டாவது குழந்தைப் பிரசவத் துக்காக ஊருக்கு வந்திருந்ததாகக் கேள்விப்பட்டேன்.''

நடுங்கும் கால்களை மெதுவாய் அடியெடுத்து வைத்து இடிந்து இடக்கும் மதிற் சுவர் அருகில் சென்று நின்றான். பக்கத்திலிருந்த வாழைத்தோட்டத்தில், இருட்டில் வாழை இலைகளும் காற்றும் கூத்தாட்டம் போட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்துக் கொண்டு நின்றான்.

இனி ஏதும் பேசாமலிருக்க வேண்டுமென்று பிரார்த்தனை செய்து கொண்டான்.

''நீ ஒரு தடவை குழந்தைகளோடு வரணும். அவளை ஒரு முறை நான் பார்க்க வேண்டாமா.

''வர்றேன்.''

வரண்ட தொண்டையிலிருந்து ஓசை எழுப்ப மிகவும் பிராயாசைப்பட்டான்.

''ஒரு விளக்கு கொடு, படுக்கறேன்.''

''ராந்தல் எடுத்தா. உள்ளே வேறே விளக்கு வச்சுக்கோ.''

மாடியறையில் ராந்தலின் திரியை இறக்கி வைத்து விட்டுப் படுத்துக் கொண்டான். மண்கூஜாவில் குடிக்க தண்ணீர் கொண்டு வந்து அலமாரியின் உள்ளே வைத்து சாத்தி விட்டு சின்னம்மா மீண்டும் ஏதோ சொல்வதற்காக நின்று கொண்டிருந்தாள். துக்கம் வந்து விட்டதுபோல் பாவனை செய்தான். தனிமையிலானபோது விளக்கை அணைத்தான்.

வெளியே மழைச் சாரலுக்கு மேகம் குவிந்து கொண்டிருப்பது போல் தோன்றியது. வாழைத் தோட்டத்திலிருந்து மழைத்துளி களின் ஓசை பெருகி வருவதைக் கேட்பதற்காகக் காத்து கிடந்

தான். மழை பெய்யவில்லை. குன்றின் சரிவில் எங்கிருந்தோ குள்ள நரி ஊளையிடும் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது.

சிறிய சாளரத்தின் வழியாக குளிர்ந்த காற்று வேகமாய் பாய்ந்து வீசியது. பழைய இருட்டில் இரவின் தொட்டிலில் கண்கள் மூடிக்கொண்டு வெறுமனே படுத்திருக்கும் போது உள்ளம் சுகமடைவது போல் தோன்றியது. தூக்க மாத்திரைகள் நினைவுகளை மாய்க்கும் இரவுகளையும் நினைவு ரம்பத்தால் அறுபடும் பகல் நேரங் களையும் பற்றி சிந்திப்பதில்லை என்று உறுதிசெய்து கொண்டான்.

காலையில் பல ஆண்டுகளுக்குப் பிறகு கோயிலுக்குப் போய் பிரார்த்தனை செய்ய வேண்டும் என்று மனதிற்குள் முடிவு செய்து கொண்டான். சிறுவனாக இருந்த காலத்தில் பிரார்த்தனை செய்தது. மீண்டும் கோயில் பக்தனாக சென்று நிற்கும் போது,

எதைப்பற்றிப் பிரார்த்திப்பது?

இல்லை பிரார்த்திக்க ஏதுமில்லை. பிரார்த்திக்க வேண்டியது மனதில் உண்டு. மீண்டும் ஒரு முறை, ஒரேமுறை, வாய்ப்புத் தந்தால் கிடைக்காத வரங்களை கூட கெடுத்துக்கொண்டு அடை பட்டு கிடக்கும் கோயில்களுக்கு வெளியே நிற்கிறான்.

—ஒருமுறை, மீண்டும் ஒருமுறை—!''

தளர்வோடு திரும்பிப் படுத்தான், கண்களைத் திறந்தான். சிறிய சாளரத்தின் வழியாக நிலவு பொலிவதைக் கண்டபோது உத்வேகம் மிக்கவனாக எழுந்தான். அற்புதம் போல கனவு போல காணும் உலகெல்லாம் நிலவு ஒளி பொலிகிறது. பல ஆண்டு களுக்கப்பால் ஏதோ சாளரத்தின் அருகில் வந்து தட்டி யெழுப்பிய நினைவு . . .

எழுந்து பெஞ்சுப் பலகையின் மீது கைகளை ஊன்றி சாய்ந்து கிடந்தபடி வெளியே நோக்கினான். ஆகாயத்தில் ஆயிரமாயிரம் மந்தாரைப் பூக்கள் சிமிட்டிக் கொண்டிருந்தன. தலைவிரி கோலமாக ஆடிக்கொண்டிருக்கும் தென்னந் தோப்பினூடே சொப்பன மந்த காசம் போல நிலவின் மென்மை பொலிந்து கொண்டிருப்பதைக் கண்டான். காலியாகக் கிடக்கும் களத்து முற்றத்தில் அச்சமூட்டும் அழகு பொங்கியிருந்தது. வாழைத் தோப்பில் நிழல் சுற்றுப்பாடு களுக்கிடையே வெள்ளை நிற குருத்து இலைகள் அசைந்தாடிக் கொண்டிருந்தன.

இங்கிருந்து வரண்டு கிடக்கும் ஆற்று மணலில் நிலவொளி வீழ்வதைக் காண வழியில்லையே என்பதை எண்ணிப்பார்த்த போது அவனுக்கு வேதனையாக இருந்தது. சற்று தூரத்திலுள்ள இல்லப் பரம்புக்குச் செல்லும் வழியில் மரவள்ளி கிழங்குத்

தோட்டத்தைச் சுற்றியுள்ள கொட்டச் செடிகளுக்கிடையே இரவு ஓடி ஒளிந்து கொண்டுள்ளது. காற்றில் மரவள்ளிச் செடிகள் அங்கு மிங்கும் அலையும்போது ஜடாமுடியுடன் இருக்கும் ராட்சசியின் உருவம் தான் அவன் நினைவுக்கு வந்தது.

சிறுவனாக இருந்த காலத்தில் கதைகளை மனது அசைபோடத் தொடங்கியபோது பயம் தோன்றியது. பலா மரத்தடியில் கந்தர் வனும் மேற்பரப்பில் கருநீலியும் இல்லப்பரம்பில் பிரம்மராட்சனும் நிலாவில் பயணம் தொடங்குகிறார்கள்.

மீண்டும் படுத்துக் கொணடான். உரக்கம் தன்னைத் தழுவும் போதெல்லாம் திடுக்கிட்டு விழிக்கலானான்.

பெட்டியில் உள்ள சிறிய தகர டப்பாவில் உள்ள குப்பிகளில் ஒன்றில் தூக்க மாத்திரைகள் இருந்தன. எழுந்து அதனை எடுக்கச் சோம்பலாக இருந்தது.

மனதிற்குள் உருப்போட்டான்:

''அர்ஜுனன் பல்குணன் பார்த்தன் விஜயனும் புகழ்பெற்ற பெயர்களும் பிறகு கிரீடமும் . . .''

மீண்டும் மீண்டும் ஜபித்தபோது தனது சத்தம் கேட்கத் தொடங்கியபோது சமாதானமானான் . . .

. . .எங்கோ வாசற்கதவு திறக்கும் சத்தம் கேட்டபோது கண் விழித் தெழுந்தான். கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தபோது வெளியே பகலின் வெளிச்சம் பளிச்சென்று கண்களில் பட்டது.

சத்தமில்லாமல் மாடிப்படி இறங்கி கீழே சென்றபோது யாரும் எழுந்திருக்கவில்லை. உடுத்தியிருந்த வேட்டியை அவிழ்த்துப் போர்த்திக் கொண்டு மாதவ மாமா குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தார்.

மேற்குப் புற வழியாக குன்றின் சரிவை நோக்கி நடந்தான்.

பழைய வழிகள் மாறியிருக்கிறது. நாவல் மரங்கள் இருந்த குன்றின் சரிவில் கள்ளிக்காடாக கிடந்த பகுதி உழவு செய்யப்பட்டு கிழங்கு நடத் தயாராக இருந்தது.

அதனை அடுத்து இலையுதிர் போல் நின்றிருந்த தேக்கமரங்கள் வெட்டப்பட்டிருந்தன. கரையான் புற்றுக்கள் நிறைந்திருந்த பகுதி யில் முளைத்திருந்த செடிகளின் இலைகளைத் தடவிக்கொண்டும் தட்டிக்கொண்டும் சென்றான்.

குடைப்பனைகளுக்கு அப்பால், உயரம் குறைந்த மண் சுவர்கள் மீது வைக்கோல் வேய்ந்த மேற் கூரைகளைக் கண்டான்.

சாணி மெழுகிய முற்றத்தில் காலடி விழுந்து வைத்தபோது திகைப்பேதும் தோன்றவில்லை. வெறிச்சோடிக் கிடந்த வராந்தா வின் பின் பகுதியில் இருந்த வாசற்படியை நோக்கி நின்றபோது கூப்பிட எண்ணினன். பின்னல் காலடியோசை கேட்டுத் திரும்பினன். ஒருவித நடுக்கத்தோடு பார்த்தான், சுமித்திரா.

காவிநிறமுள்ள ஈரமுண்டு கொண்டு போர்த்திக் கொண்டிருந்த சுமித்திரா குளித்து வந்திருந்தாள். தலை முடியின் நுனியிலிருந்து தண்ணீர் சொட்டிக் கொண்டிருந்தது.

ஒட்டிய கன்னங்களுக்கு மேலே வந்து நிற்கும் எலும்புகளின் மறைவில் விழித்துப் பார்த்த கண்களிலிருந்து பார்வையை பின் வாங்கியபோது சுமித்திரா கூறினள்:

''இன்று பூசை. விடியற்காலையில் ஆத்துக்குப் போயி குளிச்சுட்டு வந்தேன்.'' அவன் அமைதியாக நின்றன்.

''உட்காருங்க.''

முன்னே சென்று கதவைத் திறந்து அவள் உள்ளே போன போது அவன் அங்கே இருக்கவில்லை. திண்ணைக்கருகில் சென்று நின்றன்.

அவள் வெளியே வந்தபோது ஒருவித பாவபேதமும் காட்டாமல் கேட்டாள்!

''ஏன் இருக்கல்லே?''

அவளுக்குப் புரியவில்லையோ?

அவளது நீல நிறம் கலந்த உதடுகள் சத்தமில்லாமல் எதையோ முணுமுணுத்துக் கொண்டிருப்பதுபோல் தோன்றியது. நனைந்த நெற்றியில் அகலமாகப் பூசப்பட்டிருந்த திருநீறு தெளிவாக வெளி பட்டுக் கொண்டிருந்தது. வாரிச்சுருட்டிக் கட்டப்பட்டிருந்த தலை முடியிலிருந்து துருத்திக் கொண்டிருந்த ஜடை நுனியிலிருந்து இப் போதும் நீர் தங்கியிருந்தது.

''சுமித்திரா!''

அவளது முணுமுணுக்கும் உதடுகள் ஒரு நிமிஷம் சலனமில்லாது இருந்தன. மீண்டும் முன்புபோல முணுமுணுக்கலாயிற்று.

''நீ இங்கே தனியாகவா இருக்கே?''

''கடவுளும் இருக்கார்.''

''அதையல்ல நான் கேட்டது. உனக்கு இங்கு ஒத்தாசைக்கு?''

''கடவுள் உண்டு.''

பரிகாசம் செய்கிருளா? எலும்பு தள்ளிக்கொண்டிருக்கும் கையிலும் கழுத்துக் கீழே துருத்திக் கொண்டிருக்கும் எலும்புகளின் மீதும் கண்ணேட்டம் விட்டபடி கேட்டான்.

''நீ சுகமில்லாமல் இருந்தேன்னு கேள்விப்பட்டேன்.''

''சும்மா.''

''சுமித்திரா!''

வாடிய தும்பைப் பூவின் நிறமுள்ள முகத்தின் கண்கள் ஒரு நிமிஷம் விரிந்தன. பலதும் சொல்ல வேண்டும் போல் இருந்தது. நாக்கின் நுனிவரை வந்த வார்த்தைகள் வெளிப்படாமலே கனத்து மடிந்துவிட்டன.

''உனக்கு என் மேலே வெறுப்பா?''

அப்போது சுமித்திரா சிரித்தாள். பல ஆண்டுகட்கு முன்பு கேட்ட ஒரு சிரிப்பின் ஒலி இதயமெங்கும் பரவி மகிழ்வித்தது.

''எனக்கு—எனக்கு உன் மீது விருப்பமே.''

சுமித்திரா மீண்டும் சிரித்தாள்.

''விருப்பம்'' அவன் திண்ணையில் சாணி அடர்ந்திருந்த பக்கமாகக் கண்களைத் தாழ்த்தியபோது சுமித்திரா சொல்வது கேட்டது. ''சேதுவுக்கு எப்போதும் ஒரு ஆளிடம் விருப்பம் உண்டு. சேதுவிடம் மட்டுமே அது.''

அவன் திரும்பிப் பார்த்தபோது சுமித்திரா சிரித்துக்கொண்டே கேட்டாள்:

''இல்லையா?''

அவன் பதிலேதும் கூறவில்லை.

சுவர் ஓரமாக அமர்ந்து, தான் அவன் முன்பு இருக்கும் உணர்ச்சியற்றவளாக சுமித்திரா ஜபிக்கத் தொடங்கினுள்.

அவன் தொண்டையைக் கனைத்தான்.

''நான் ஏதாவது செய்ய வேண்டுமென்ருல்.''

''நாராயணு, நாராயணு . . .''

ஜபிக்கும் சத்தம் உயரலாயிற்று.

அவன் சில நிமிடங்கள் அமைதியாக நின்றுவிட்டு தலை தாழ்த்தியவனுகத் திரும்பி நடந்தான்.

ஆற்றின் மீது போடப்பட்டிருந்த இரும்பு பாலத்தில் பாரமேற்றிய வண்டிகள் போய்க்கொண்டிருந்தன.

[10]

இரவுப் பனி நீர் திவலைகளால் நனைந்து போயிருந்த மணல் திட்டில் நீல நிற மேகங்கள் தவழ்ந்து கொண்டிருந்தன.

இளஞ்சூடான இளவெயிலில் வெறிச் சோடிக் கிடந்த ஆற்றுப் பக்கமாக அவனது நீண்ட நிழல் பின்னால் ஒத்துப் பார்க்க இயலா வண்ணம் அளவு மாறிக் கொண்டிருந்தது.

தூரத்தில் மர உச்சிகளிடையே உயரத்தில் உதயத்தைக் கண்டு கொண்டிருந்த கோபுரங்களை நோக்கி தளர்ந்த நிலையில் காலடி வைத்து நடந்து போய்க் கொண்டிருந்தபோது நினைத்துக் கொண் டான். உதயத்தைப்பற்றிக் கவிதை எழுதவேண்டுமென்று ஆரம்பத் தில் எண்ணினேன். சிதலமடைந்திருந்த கோவில் மதிற் சுவரினூடே கடந்துவரும் வெளிச்சத்தின் ஆரம்பக் கதிர்களைப் பற்றி . . . ஒளியின் விரல்களால் கண்திறக்கும் காண முடியாத தாமரைக் குளத்தைப்பற்றி . . .

பழைய அறையின் உட்புறச் சுவற்றில் பென்சில் கொண்டு குறித்திருந்த இரண்டு வரிகள்—தொடக்கம் எப்படி இருந்தது? நினைத்துப் பார்க்க இயலவில்லை. வரண்டுபோன ஆறுபோல மனம் வெறிச்சோடிக் கிடந்தது.

மறையாத மணலில் திட்டுகளிடையே படியும் காலடிகளை வலிந்து வலிந்து எடுத்து வைத்து நடக்கும்போது ஏமாற்றம் மனத்தை நிறைத்துக் கொண்டிருந்தது. நினைத்துப் பார்க்க முடிய வில்லை.

சுமைக்கார புலையனின் ஒரே மாதிரியான காலடியோசை களைக் கேட்டான்.

தூரத்தில் இரும்புப்பாலமும் தண்டவாளங்களும் கிடக் கின்றன . . . மலை வெள்ளம் உருவாக்கிய ஆறு, எனது அன்பின் ஆறு, பின்னால் இரத்தம் சுண்டிய சடலம் போல சலனமற்றுக் கிடந்தது.

---

1970ஆம் ஆண்டுக்கான சாகித்திய அக்காதெமி பரிசு பெற்ற மலையாள நாவல் 'காலம்.' ஒரு எளிய மத்திய தரக் குடும்ப இளைஞனின் வாலிப உணர்வுகள், கானல் நீராகக் காட்சி தந்த சமுதாயக் கோணல் நிலைகள், அவனது எதிர் நீச்சல்களும் தோல்விகளும் அவன் வாழ்வில் பதித்துச் சென்ற சுவடுகளை, யதார்த்த அடிப்படையில் விளக்கும் சுவையான இலக்கியப் படைப்பே 'காலம்.'

ஆசிரியர் எம். டி. வாசுதேவன் நாயர் இன்றைய நவீன முன்னணி மலையாள இலக்கியப் படைப்பாளிகளுள் ஒருவர். எழுத்தாளர், பத்திரிகையாளர், திரைப்பட இயக்குனர். நாவலாசிரியரும், சிறுகதை எழுத்தாளருமான இவரது பல நூல்கள் பிற மொழிகளில் வெளி வந்துள்ளன.

உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில், பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை, மன்னர் சுத்தோதனனுக்கு நிமித்தகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து இந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்தரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.—நாகார்ஜுன மலைச் சிற்பம் (கி. பி. இரண்டாம் நூற்றாண்டு).

பட உதவி: நேஷனல் மியூஸியம், புது தில்லி.

அட்டைப் பட அமைப்பு: திரு. அருண்

ரூ. 35